# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை



வெளியிடுவோர் :

ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமி ஸச்சிதாநந்தா திருப்புகழ் ஸபை

சென்னை-600 001

## அருணகிரி ஜயந்தி

ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் மூல நக்ஷத்ரத்தன்று *வள்ளிமலையில் அருணகிரிநாத ஸ்வாமிகளின் ஜயந்தி விழா கொண்டாடப் பெறுகின்றது. அதுவே வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் ஜயந்தி விழாவும் ஆகும்.

## குருபூஜை

ஆண்டுதோறும் கார்த்திகை மாத சுக்லபக்ஷ அச்வினி (த்ரயோதசி)யில் வள்ளிமலை ஸ்வாமிகளின் குருபூஜை விழா வள்ளிமலையில் வெகு விமரிசையாகத் திருப்புகழ்ப் பாராயணம், அபிஷேகம், ஆராதனை, அன்ன தானாதிகளுடன் கொண்டாடப் பெறுகின்றது.

## திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா

ஆண்டுதோறும் டிஸம்பர் 31, ஜனவரி 1 தேதிகளில் திருத்தணிகையில் ஸ்வாமிகளாலேயே முதன்முதலில் 1917-ல் தொடங்கப்பெற்ற திருப்புகழ்த் திருவிழா திருப்புகழ்ப் பாராயணம், அபிஷேகம், அன்ன தானாதிகளுடன் கொண்டாடப் பெறுகின்றது.

---

*வள்ளிமலை, சென்னையிலிருந்து பெங்களூர் செல்லும் மார்க்கத்தில் 76-ஆம் மைலில் உள்ள திருவலத்திலிருந்து வடக்கே 6 மைலில் உள்ளது. சென்னையிலிருந்து ரயில் அல்லது பஸ் மூலம் முறையே காட்பாடி அல்லது வேலூர் சென்று பின் பஸ் மூலமும், அல்லது சென்னையிலிருந்து பஸ் மூலம் ராணிப்பேட்டை அல்லது திருவலம் சென்று அங்கிருந்து பொன்னை செல்லும் பஸ் மூலமும் வள்ளிமலையை அடையலாம்.

Super Power Press, Madras-1.

உ 15/3/2008

கணபதி துணை
வேலும் மயிலும் துணை

# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை

(8 அநுபந்தங்களுடன் கூடியது)

வெள்ளி விழாப் பதிப்பு

★

மானஸிக பூஜை முறையாகத் தொகுத்தருளியவர் :

## ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்தா ஸ்வாமிகள்

[பிங்கள ஆடு பங்குனி மீ 11 உ வெள்ளிக்கிழமை
பங்குனி உத்தர தினத்தன்று (24—3—78)
ஸபையின் வெள்ளி விழாவில்
வெளியிடப் பெற்றது]

★

வெளியிடுவோர் :

ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமி ஸச்சிதாநந்தா திருப்புகழ் ஸபை,

292, லிங்கச் செட்டித் தெரு, சென்னை 600 001.

முதற் பதிப்பு : டிஸம்பர் — 1957 — 1000 ப்ரதிகள்
இரண்டாம் பதிப்பு: ஜனவரி — 1961 — 2500 ப்ரதிகள்
வள்ளிமலை ஸ்வாமிகள் நூறுவது ஜயந்தி விழாக் குழுவின் பதிப்பு (பாராயணத் திருமுறைப் பகுதி மட்டும்)
நவம்பர் — 1970 — 5000 ப்ரதிகள்
,, — 1973 — 3000 ப்ரதிகள்
மூன்றும் பதிப்பு : நவம்பர் — 1975 — 1000 ப்ரதிகள்
நான்காம் பதிப்பு : மார்ச் — 1978 — 2000 ப்ரதிகள்

★

கிடைக்குமிடங்கள் :

1. ஸ்ரீ வள்ளிமலை சுவாமி ஸச்சிதாநந்தா திருப்புகழ் சபை,
292, லிங்கச் செட்டித் தெரு, சென்னை-600 001.

2. திரு. G. வேம்பு,
13, ஹனுமார் கோயில் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை-600 033.

3. ஸ்ரீ சங்கர நாராயண ராவ்,
புத்தக வியாபாரம், ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்,
திருமுல்லைவாயில், சென்னை-600 062.

★

மனோரமா அச்சகம், ராயப்பேட்டை, சென்னை-600 014,
&
ஸூப்பர் பவர் ப்ரஸ், சென்னை-600 001.

# பொருளடக்கம்

# Memorandum of Association of Sri Vallimalai Swami Satchidananda Thiruppugazh Sabha (Regd.)

1. The name of the Association shall be "Sri Vallimalai Swami Satchidananda Thiruppugazh Sabha."

2. The Association is formed to have the following objects carried out.

**Revised Objects of the Sabha Confirmed upto 24/10/1966.**

(a) To maintain and administer Sri Vallimalai Thiruppugazh Ashram, the Samadhi of Sri Thiruppugazh Satchidananda Swamigal.

(b) To provide amenities for devotees who visit Vallimalai Thiruppugazh Ashram.

(c) To encourage and promote the propagation and diffuse Thiruppugazh and spiritual knowledge as expounded by Sri Vallimalai Thiruppugazh Swamigal by conducting Bhajans and Discourses.

(d) To do the Annual Gurupuja of Sri Satchidananda Swamigal at Thiruppugazh Ashram, Vallimalai Hills.

(e) To do the Annual Thiruttani Thiruppugazh Thiruvizha at Thiruttani on 31st December and 1st January each year inclusive of Abhishekam.

(f) To do all such other lawful things as are necessary or incidental or conducive to the attainment of the abovesaid objects.

உ

குருநாதர் துணை

# முன்னுரை

கூட்டு புகழ்ச்சச்சி தாநந்தர் கோத்தபுகழ்ப்
பாட்டுநிறை பாரா யணமுறையைக்—கேட்டவர்கள்
கண்டவர்கள் காதலிப்பர் கண்டு பயில்பவர்கள்
விண்டிடுவர் தீய வினை. (—தணிகைமணி வ.சு.செ)

திருப்புகழ் முருகனுக்கு உரிய புகழ் நூல். இந்நூல் 600 ஆண்டுகளுக்கு முன்னர் திருவண்ணாமலையில் எழுந்தருளி யிருந்த ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகளால் அருளப்பட்டது. (1975 இல் அவரது அறுநூறும் ஆண்டு ஜயந்தி விழா பாரத நாடெங்கும் கொண்டாடப் பெற்றது. பாரத அரசாங்கம் அவரது திருவுருவம் பொறிக்கப் பெற்ற 50 பைசா தபால் தலையை வெளியிட்டது).

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரால் அருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிக்கும் திருப்புகழை
ஏத்தினவர் ஈடேறு வார்.

என அபியுக்தர்களாலும், தாயுமானவர், சிதம்பரஸ்வாமிகள் முதலிய மெய்ஞ்ஞானிகளாலும் பாராட்டப் பெற்றது இத் திருப்புகழ். இதன் உண்மையையும் பெருமையையும் உணர்ந்து சென்னை, தென்னாடு, வடநாடு முதலிய பல இடங்களிலும் அத் திருப்புகழை ஓதியும், ஓதுவித்தும் பொருளுக்கேற்ற இசையிற் பாடியும், பாடுவித்தும் பரவச் செய்து வந்த பெரியார் **வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமி சச்சிதாநந்தா** அவர்கள் என்பதை அனைவரும் அறிவர். அகத்திய முனிவர், தேவாரத்திலிருந்து ஒரு திரட்டு அளித்ததுபோல் திருப்புகழாதிய நூல்களினின்றும் நித்ய பாராயணத்துக்காக ஒரு திரட்டைத் "**திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை**" என்னும் பெயருடன் அவர் வெளியிட்டிருந்தார்.

மானஸிக பூஜை முறையாக முதலில் ஸங்கல்பம், தீபம், குரு ஸ்துதி, அடியார் துதி, விநாயகர் துதி, இவற்றுடன் தொடங்கி, முருகனை அழைத்தல், தரிசனம், அபிஷேகம், அர்ச்சனை, தூபம், தீபம், நைவேத்தியம், தீபாராதனை,

நமஸ்காரம், அறியாமை கூறி அருள் வேண்டல், மந்திர ஜெபம், தெய்வயானையம்மை, வள்ளியம்மை துதிகள், பின்னர், ஜயமங்களம், வாழ்த்து, போற்றி என அமைந்த ஒரு பகுதியும், பிறகு புனர்பூஜை போலச் சிவகுமாரனின் சீர் பாதத்தைத் துதித்து ஆரம்பித்து நம் குறைகளைக் கூறி மகுடங்களால் ஆண்டவனை வழிபடுதலாகிய ஒரு பகுதியும் கொண்டு முடிகிறது இத் திருமுறை. எல்லாத் திருப்புகழ் களையும் பாட நேரம் காணுதார் இம் முறையைக் கைக் கொண்டாலே போதுமானது. மிகுந்த நியம நிஷ்டைகள் இதற்குத் தேவையில்லை என்றுலும் மன ஒருமைப்பாடும் பக்தியும் மிகமிக அவசியமானவை. ' அர்ச்சனை பாட்டே யாகும்' என்றார் 'சேக்கிழார். 'பாட்டே அர்ச்சனை' யாவதை இங்கு நாம் காண்கிறோம்.

ஸ்வாமிகளின் ஜீவிய காலத்திலேயே இத் திருமுறை நான்கு முறை வெளிவந்தது 22—11—1950 இல் ஸ்வாமிகள் விதேஹ கைவல்ய ஸமாதி அடைந்தார். வள்ளிமலைக் குகையில் அவரது ஸமாதிக் கட்டிடத்தின் மேல் தக்ஷிணு மூர்த்தி விக்ரஹமும், வேலும் ப்ரதிஷ்டை செய்யப் பெற்றன.

ஸ்வாமிகளின் ஸமாதிக்குப் பின்னர், அவருடைய அடியார்களாகிய நாங்கள் அவர் பெயரால் ஒரு ஸபையைச் சென்னையில் 20—2—1953இல் நிறுவி, அவர் பாடிவந்தமுறை யைப் பின்பற்றி ஆங்காங்கு பாராயணங்கள் செய்து வரு கின்றோம். (வள்ளிமலையிலுள்ள ஸமாதியைத் தினசரி பூஜை யுடன் பாதுகாத்தல், ஆண்டுதோறும் அவரது குருபூஜையை வள்ளிமலையில் நிகழ்த்துதல், திருத்தணியில் டிஸம்பர்—31, ஜனவரி-1 தேதிகளில் திருத்தணித் திருப்புகழ்த் திருவிழாவை அபிஷேகம், அன்னதானங்களுடன் கொண்டாடுதல் முதலிய வற்றையும் நடத்தி வருகின்றோம்.)

பழைய பதிப்புகள் எல்லாம் கிடைக்காமற் போன நிலையில், பாராயணத் திருமுறைப் பகுதியோடு ஸ்வாமிகள் விரும்பிப் பாடும் சில பாடல்கள் சேர்க்கப்பட்டுச் சில அநுபந்தங்களுடன் ஸபையின் முதற் பதிப்பு 4—12—1957 இல் வெளி வந்தது. பிறகு இன்னும் அதிகமான பாடல்கள்

சேர்க்கப்பட்டு, அநுபந்தங்களுடன் ஸபையின் இரண்டாம் பதிப்பு 14—1—1961 இல் வெளி வந்தது.

பிறகு ஸ்வாமிகளின் நூறுவது ஜயந்தி விழாக்குழுவின் சார்பாக வடதிருமுல்லை வாயில் வைஷ்ணவி ஆலய ஸ்தாபகர் ஸாது பார்த்தஸாரதி என்னும் தவத்திரு ஸ்வாமி அண்ணா நந்தா அவர்கள் பாராயணத் திருமுறைப் பகுதியை மட்டும் ராக தாளங்களுடன் 1970-இல் வெளியிட்டார்கள். மறு படியும் அதே பதிப்பை இரண்டாம் முறையாக 1973-இல் அவர்களே வெளியிட்டார்கள். மீண்டும் 17—11—1975-இல் அதே பதிப்பு ஸபையின் மூன்றும் பதிப்பாக வெளியிடப் பெற்றது. அதிகமான பாடல்கள் கொண்ட ஒரு புத்தகத் தைத் திருப்புகழ் அன்பர்கள் விரும்பியதால் இப் பதிப்பு வெளிவரலாயிற்று. ஸபையின் வெள்ளி விழா ஆண்டில் வெளியிடப் பெறுதலால் இது வெள்ளி விழாப் பதிப்பு ஆகின்றது. இது ஸபை வெளியிடும் நான்காம் பதிப் பாகும். பொருளடக்கத்தினின்றும் இப் பதிப்பில் அடங்கி யுள்ள விஷயங்கள் தெரியவரும்.

அநுபந்தம் 1 இல் 41 பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. எல்லாப் பாடல்கட்கும் சந்தம் தரப்பட்டுள்ளது. கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி (மூலம் மட்டும்) அநுபந்தம் 2, 3 ஆக உள்ளன. பாராயணத் திருமுறையில் சேராத, 9 திருவகுப்புகள் அநுபந்தம் 4-இல் இடம் பெற்றுள்ளன. அருணகிரியார் பாடிய வேல், மயில், சேவல் விருத்தப் பாடல்களில் சிலவும் அநுபந்தம் 5 ஆக உள்ளன. ஸ்வாமி களின் நூறுவது ஜயந்தி விழா மலர்-4 பாகம் 1 இல் இடம் பெற்ற திருப்புகழ் அர்ச்சனை (108), திருப்புகழ்ப் போற்றி (16) இவை இரண்டும் பக்தர்கள் உபயோகித்துப் பயன் பெறவேண்டி இப் பதிப்பிற் சேர்க்கப்பட்டுள்ளன. அநு பந்தம்—1 இல் காணப்படும் சில பாடல்கள் எங்கள் குருநாதரால் அதிகமாக விரும்பிக் கையாளப் பெற்றவை. அவற்றிற்கு ஸ்வாமிகள் கையாண்ட ராகங்களை அன்பர்கள் அறிய விரும்புவர் ஆதலின் அவை தனியே தரப்பெற்றுள்ளன. (பாராயணத் திருமுறைப் பகுதியில் ஸ்வாமிகளின் ராகங்கள் ஆங்காங்கே அச்சாகியுள்ளன).

# முன்னுரை

பக்கம் III இல் உள்ள பழைய முகவுரையை அன்பர்கள் படித்தறிவது முக்யம். ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள், எங்கள் குருநாதர் ஆகியோரது சரித்திரச் சுருக்கங்களும் பக்தர்கள் அறிய வேண்டியவையே. ஸ்வாமிகள் மீது பக்தர்கள் பாடிய பாக்களும் அநுபந்தம்—3 இல் உள்ளன.

'சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லு வார்' என்ற திருவாசகம் — சிவபுராண வாக்கின்படி, சொல்லின் பொருளை அறிவதற்கு அனுகூலமாகச் சந்தம் கெடாமல் பதப்பிரிப்பு செய்துள்ள பாடல்களைக் கொண்ட சிறந்த பதிப்பு இது என்பதைப் புத்தகத்தை வாங்கிப் படித்த பின்னரே அடியார்கள் உணர முடியும். ஆகவே இத் திருப்புகழ்ப் புத்தகத்தைச் சபையார்களும் மற்ற திருப்புகழ் அடியார்களும் வாங்கி ஆதரவு தருவார்கள் என்று நம்புகிறோம். பிறவிப் பிணியும், மற்ற உடல், உள்ளப் பிணிகளும் நீங்க விழையும் அன்பர் கூட்டம், இந்நூலை முறையே ஓதி உய்ய முருகப் பெருமான் திருவருள் பாலிப்பாராக.

குறைந்த செலவில் அச்சாகும் முறையில் முந்தைய பதிப்பின் போது எடுக்கப்பட்ட அட்டை வார்ப்பு (Matrix) களைத் தந்துதவிய ஸ்ரீ ஸ்வாமி அண்வாநந்தா அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்தப் பதிப்பை அழகுற அச்சிட்டுத் தந்த 'ஸூப்பர் பவர் ப்ரஸ்' நிறுவனத்தார்க்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

பாரீர்! திருப்புகழ்ப் பாரா யணமுறையைத்
தேரீர்! அதன்பெருமை தேர்ந்து பொருள்—ஓரீர்! பின்
அந்த முறையை அநுதினமும் கொள்ளாமல்
எந்த முறைகொள்ளு வீர்?

(—தணிகைமணி வ. சு. செ. பிள்ளையவர்கள்)

சென்னை-1.
19—3—1978

ஸ்ரீ வள்ளிமலை சுவாமி
ஸச்சிதாநந்தா திருப்புகழ் சபையார்

உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# முகவுரை

"திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை" என்னும் இந் நூல் வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளால், அவர் வள்ளிமலை மேல் 12 வருஷங்கள் தவமிருந்ததன் பயன்களுள் ஒன்றாகப் பெரும்பாலும் அருணகிரியாரின் பாடல்களையும், வேறும்சில பாடல்களையும் கொண்டு தொகுக்கப் பெற்றது; இதனை ஸ்வாமிகள் ஒரு 'மாநஸிக பூஜை முறை' யாகவே அமைத்துள்ளார்; இதனை அவ்வப் பாடல்களின் தலைப்புக்கள், உரிய கீழ்க்குறிப்புக்கள் இவற்றைக் கண்டே தெளிந்தறியலாம்; இத் திருமுறை, இதற்கு முன் ஸ்வாமிகளின் ஜீவ்ய காலத்திலேயே அவராலும், அவருக்குப் பின் அவர் பெயராலமைந்த திருப்புகழ் ஸபையாராலும் பல பதிப்புக்களாக வெளியிடப் பெற்றுள்ளது; ஆயினும் ராகம், தாளம், சந்தம், பாக்களின் இலக்கண அமைப்புகள், தலைப்புக்கள், முக்கியக் கீழ்க்குறிப்புக்கள் ஆகிய சிறப்பு அம்சங்களோடு முதன் முறையாக, இத் திருமுறை வள்ளிமலை ஸ்வாமிகளின் நூறுவது ஜயந்தி விழா வெளியீடுகளுள் இரண்டாம் மலராக இப்போது வெளியிடப்படுகின்றது; இந்நூலைப் பாராயணம் செய்யும்முறை தனியே அடுத்த பக்கத்தில் விளக்கப் பெற்றிருக்கிறது; இந்நூலிற் கையாண்டுள்ள 12 கந்தரந்தாதிப் பாக்களின் பதவுரையும், கருத்துரையும் பிற்சேர்க்கையாம் அரும்பதவுரைக் குறிப்புக்களின் இடையே தொடர் எண் வரிசையில் விரவி வரல் காணலாம்.

திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுர் மரபில் வந்த ஒரம்மையார் தேவாரத்துக்குப் பண் வகுத்தது போல, நம் ஸ்வாமிகள் திருப்புகழுக்கு வள்ளியம்மை அருளால் பாடல்களின்பொருள்களுக்கேற்ப, இசை வகுத்துள்ளார். அங்ஙநம் ஸ்வாமிகள் கையாண்ட ராக, தாளங்களையே பெரும்பாலும் பின்பற்றி இத் திருமுறை வெளியிடப்பட்டுள்ளது; அவற்றையே அனைவரும் பின்பற்றித்தான் ஆகவேண்டும் என்ற கட்டாயம் சிறிதும் இல்லை; எந்தப் பாட்டையும் எந்த ராகத்திலும், எந்தத் தாளத்திலும் பாடலாம்; ஆனாலும் ஸ்வாமிகளிடம் பக்திபூண்ட அன்பர்கள் யாரும் முயன்று மீறமாட்டார்கள் என்பது எம் நம்பிக்கை.

இந் நூலை நம்மால் இயன்றவரை பக்தியுடன் நித்ய பாராயணம் செய்வதும், இதைப் பிறருக்கும் இசையுடன் போதித்துப் பரப்புவதும், இதனை நாம் வாங்குவதோடு பிறரும் வாங்கிப் பயிலச் செய்து நிறைய விளம்பரப் படுத்துவதுமே ஸ்வாமிகளின் நூறுவது ஜயந்தி விழாவில் (30-11-1970) நாம் அவருக்குச் செய்யும் நன்றிக் கடனாக அமையும் என்பது எம் கருத்து; இதனை அனைவரும் ஆமோதித்து ஆவன செய்வார்கள் என நம்புகிறோம்.

## இந் நூற்பயன்

குருப்புகழ்சேர் வள்ளிமலை ஸச்சிதா நந்தகுரு கோத்துத் தந்த<br>
திருப்புகழ்ப்பா ராயணமெய்த் தவநெறிச்செந் திருமுறையைத் தினமும் பக்தி<br>
விருப்புடனே பாடிவழி பாடியற்றும் மெய்த்தொண்டர் வீடு பேறும்<br>
இருப்புறுமிவ் விகவுலகிற் பதினாறு பேறுமுறல் எளிதாம் அன்றே.

தேவியின் அன்பும் அருளும்.

ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்,<br>
திருமுல்லைவாயில்,<br>
சென்னை-62, 1-1-1970.<br>
ஸௌம்ய ஸ்ரீ மார்கழி 17

ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் நூறுவது ஜயந்தி விழாக் குழுவின் சார்பில்

**ஸாது பார்த்த ஸாரதி.**

# இந் நூலைப் பாராயணம் செய்யும் முறை

**எண்கள் - தினமும் பாராயணம் செய்யவேண்டிய பாடல் எண்கள்**

| | | |
|---|---|---|
| 1. | ஞாயிற்றுக் கிழமை | 1-28, 51-63, 71-121-அ, 127. |
| 2. | திங்கட் கிழமை | 1-24, 29-32, 51-62, 64, 71-121-அ, 127. |
| 3. | செவ்வாய்க் கிழமை | 1-24, 33-36, 51-62, 65, 71-123, 126, 127. |
| 4. | புதன் கிழமை | 1-24, 37-40, 51-62, 66, 71-121அ, 127. |
| 5. | வியாழக் கிழமை | 1-24, 41-44, 51-62, 67, 68, 71-121அ, 127. |
| 6. | வெள்ளிக் கிழமை | 1-24, 45-48, 51-62, 69-121அ, 124-127. |
| 7. | சனிக் கிழமை | 1-25, 29, 33, 37, 41, 42, 45, 49-86, வேல் மாறல், 88-121அ, 127. |

அமாவாசை, க்ருத்திகை, ஸங்கடஹர சதுர்த்தி, க்ரஹணம் போன்ற விசேஷ தினங்களில் சனிக்கிழமைக்குரிய பாராயண முறையைத் தழுவலாம். சனி தவிர்ந்த மற்றைய கிழமைகளில் மேற்கூறிய விசேஷ தினங்கள் வருமானால் அக்கிழமைக்குரிய படைவீட்டு முதல் திருப்புகழை ஆரம்பித்து முறையே பாடி(ச் சனிக்கிழமை முறையில் காட்டியது போல் 25, 29,33,37,41,42,45 பாடல்களை) ஆரம்பிக்கும் கிழமைக்கு முன் கிழமைப் படைவீட்டு முதல் திருப்புகழ் வரை சொல்லி, க்ஷேத்ரக் கோவைப் பாடலை (49) ஓதவும்.

உதாரணம்:-செவ்வாய்க்கிழமையில் அமாவாசை வந்தால்-

1-24,33,37,41,42,45,25,29,49-62,65-70, 63, 64, 71-123, (87-க்குப் பதிலாக வேல் மாறல்), 126,127. ஷை பாராயணத்தில் படைவீடுகளின் வரிசை திருவாவினன்குடி, ஏரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலை, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் என மாறும்.

# இத் திருமுறையில் அடங்கியுள்ள ஸ்தலங்களின் அட்டவணை

## (எண்கள் - பாட்டின் எண்கள்)

## (1) ஆறுபடை வீடு:

ஆறு படைவீடு - (பொது) 21, (அந்) 22.

1. திருப்பரங்குன்றம் - 25,26, 63.
2. திருச்செந்தூர் - 29, 30, 31, 64, 83(அந்), 84 (வகுப்), 107 (அலங்).
3. திருவாவினன்குடி - பழநி - 33, 34, 35, 57, 65, 71, 75, 78, 96, 125 (வகுப்).
4. திரு ஏரகம் (ஸ்வாமிமலை) - 37, 38, 39, 66, 79, 123 (வகுப்).
5. குன்றுதோறாடல் - (பொது) 41, 67.
   - கதிர்காமம் - 123 (வகுப்).
   - கொங்கணகிரி - 80.
   - திருச்சிராப்பள்ளி - 123 (வகுப்).
   - திருச்செங்கோடு - 20 (அலங்), 24 (அலங்), 86 (அலங்), 116 (அந்), 125 (வகுப்).
   - திருத்தணி - 42, 43, 68, 77, 82, 87 (வகுப்), 90 (வகுப்), 99 (கந்தபுரா), 106 (வகுப்), 118,123 (வகுப்), 125 (வகுப்), 127 (வகுப்).
   - வள்ளிமலை 70, 125 (வகுப்).
   - விராலிமலை - 52.
6. பழமுதிர்சோலை - 45, 46, 47, 69, 100 (கந்த புரா), 120 (அந்).

## (2) பஞ்ச பூத ஸ்தலங்கள்:

1. காஞ்சீபுரம் - 99 (கந்த புரா), 103 (கந்த புரா).
2. திரு அருணை (திரு அண்ணாமலை) 12 (அந்), 16 (அந்).
3. சிதம்பரம் - 18 (வகுப்), 36.

## (3) பிற ஸ்தலங்கள்:

(திரு) இடைக்கழி - 123 (வகுப்), 125 (வகுப்).
குற்றாலம் - 123 (வகுப்).
சிறுவை - (சிறுவாபுரி) - 32.
சீகாழி - 115 (அந்),121.
பெரிய மடம் - 76.

## (4) க்ஷேத்ரக் கோவை - 49.

## (5) பொதுப் பாடல்கள்-27, 28, 40, 44, 48, 50, 54, 56, 58, 60, 62, 72, 74, 101, 104, 111.

## (6) விநாயகர் பாடல்கள்:

10 முதல் 16 வரை

---

*குறியீட்டு விளக்கம் :—

அந். - கந்தரந்தாதி. அலங். - கந்தரலங்காரம்.
கந்தபுரா. - கந்தபுராணம். வகுப். - திருவகுப்பு.
பிற எண்கள் திருப்புகழ் எண்கள்.

# *ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகளின் சரித்ரச் சுருக்கம்

'அருணகிரி' எனப் பெயர்பெற்ற திருவண்ணுமலை நடு நாட்டில் உள்ளதொரு சிவக்ஷேத்ரம்; அது பஞ்சபூத ஸ்தலங்களுள் தேயு ஸ்தலம்; 'ஸ்மரணுத் அருணுசலே' என்றபடி நினைத்த மாத்ரையில் முக்தியளிக்க வல்லது; திருமாலும் ப்ரம்மனும் அடிமுடி தேடியும் அண்ணுத (எட்டாத)வாறு சிவ பெருமான் ஜோதிமலை வடிவமாய் உயர்ந்து நின்றருளிய ஸ்தலம். இத்தகைய திவ்ய க்ஷேத்ரத்தில் 'அடியார் செய்தவப் பயனுல்' அருணகிரிப் பெருந்தகையார் அவதாரம் செய்தருளினுர். (இவர் கணிகையர் குலத்தில் 'முத்து' என்ற பெயருள்ள தாய்க்கு, 'ஆதி' என்ற தமக்கையாரின் பின்னர்த் தோன்றினுரென்றும், சிறு வயதில் காமாதுரனுக உலக ஆசைகளிற் சிக்குண்டு உழன்று கடைசியில் தம் தமக்கையார் கூறிய சொற்களால் மநம் நொந்து நல்வழிக்குத் திரும்பினுர் என்றும் கூறுவாருமுளர்.)

இவர் இளமையில் தென்மொழி, வடமொழி இரண்டையும் கற்று அவற்றிற் கைதேர்ந்தவரானுர்; இவர் திருமூலர், திருவள்ளுவர், நக்கீரர், திருஞாந ஸம்பந்தர் முதலான நால்வர் முதலியோரது நூல்களை நன்கு கற்றுணர்ந்தவர் என்பதும் புராணம், இதிஹாஸம் முதலியவற்றையும் கற்று வல்லமை பெற்றவரென்பதும் இவரது நூல்களிலிருந்து தெரிய வருகின்றன; இளமையிலிருந்தே இவருக்குத் தெய்வபக்தி அதிகம் உண்டு. இதற்கு இடையூருகக் காமம் இவருக்கு அதிகமாகத் துன்பத்தைத் தந்தது. அதனுல் வாலிபத்தில் மாதர் வலையில் வீழ்ந்து, மிகவும் உழன்று, நோயுற்றுக் கடைசியில் சரீரத்திலும், வாழ்க்கையிலும் வெறுப்புக் கொண்டவராய்த் தற்கொலை

---

*இவரது சரித்ரத்தின் உண்மை விவரங்கள் எங்கும் கிடைக்கவில்லையாதலால் இவரது வாக்கினின்று கிடைத்த ஆதாரங்களைக் கொண்டே ஒருவாறு ஈண்டு இச்சரித்ரச் சுருக்கம் எழுதப்பட்டுள்ளது.



## ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள்

(கலி விருத்தம்)

வரைக்குள் உயர்வுற் றதிருத் தணிமால்
வரைக்கோர் அறுபான் ஒருநால் மகிழ்பா
உரைத்தார் அருணா சலஉத் தமர்தா
மரைத்தாள் இணைமா முடிமேல் வணைவாம்.

(—அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்)

செய்துகொண்டு தம் உயிரை விட்டுவிட முடிவு கட்டினார். உடனே திருவருணைக் கோயில் வல்லாள கோபுரத்தின் உச்சியில் ஏறிக் குதித்து உயிரை மாய்த்துக்கொள்ள விழுந்தபோது முருகவேள் இளநகை முகத்தராய், மயில்மேல் வந்து, காட்சி கொடுத்து, இவரைக் கையில் ஏந்திக்கொண்டு, கீழே விழா வண்ணம் காப்பாற்றித் தடுத்தாட்கொண்டார். *மேலும், இவரை 'அருணகிரிநாத!' எனப் பெயரிட்டழைத்து (†திருமூல நாதர் போல) 'நாத'னும் பட்டத்தையும் அளித்து, ஸ்பர்சத்தினால் இவர் உடல் நோய் ஆதியவற்றைப் போக்கிக், கடைக்கண்ணால் தீக்ஷை செய்து, திருநீறு தந்து, ஜபமாலை கொடுத்துத், திருவடி தீக்ஷை செய்து, மவுநோபதேசம் ஈந்து, 'எம்மீது திருப்புகழ் பாடுக!' என்றும் மொழிந்தருளினார். அருணகிரியார் சற்றுத் தயங்கலும், ஆண்டவனே இவர் நாவில் ஆறெழுத்தை வேலால் எழுதிவிட்டு, 'முத்தைத்தரு' என அடியெடுத்துக் கொடுத்துப் புகழ் பாடும்படிக் கட்டளையிட்டார். குஹப் பெருமானது திருவருளுக்கு முற்றிலும் பாத்திரராகிவிட்ட அருணகிரியார், வாக்கு ஸித்திபெற்று உடனே அப்பாட்டை முற்றிலும் பாடி முடித்துவிட்டார்; தம்மை ஆட்கொண்ட முருகவேளை, "ஆடக விசித்ர கந கோபுர முகப்பில் அருணபுரியில் நிற்கும் அடையாளக்காரனும்........ குறத்தி திருவேளைக்காரனே" எனத் திருவகுப்பில் குறிப்பிடுகின்றார். அந்த ஆண்டவன் இன்றும் அண்ணாமலையில் 'கோபுரத்திளையனார்' என்ற பெயருடன் காட்சி தந்துகொண்டிருக்கின்றார்.

பெரிய முருக பக்தராகிவிட்ட அருணகிரியார், தென் திசை ஸ்தலங்களையெல்லாம் தர்சித்துத் திருப்புகழ் பாடிக் கொண்டே வருகையில் திருச்சிராப்பள்ளிக்கடுத்த வயலூரை வந்தடைந்தார்; முருகவேளைத் துதிக்கும் ஆற்றல் வேண்டி

---

* இவற்றின் விவரங்களை அவர் வாக்கிலிருந்தே அறிய வேண்டின், டாக்டர் (D. Litt) திரு. வ. சு. செங்கல்வராயப்பிள்ளையவர்கள் எழுதியுள்ள "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்ற புத்தகத்தில் பக்கங்கள் 2 முதல் 17 வரை பார்க்க. அந்நூல் முழுவதையும் படித்தறிந்தால் அவர் வரலாற்றுக்கு அகச்சான்றுகள் (Internal evidences) அனைத்தையும் காணலாம்.

† திருமூலநாதர்க்கும் அருணகிரிநாதர்க்கும் உள்ள ஒற்றுமை நயங்களைத் திரு. வ. சு. செ. பிள்ளையவர்கள் எழுதியுள்ள 'அருணகிரிநாதரும் திருமூலநாதரும்' என்ற புத்தகத்தினின்று தெளிந்தறிக.

அவ்வூர்க் கணபதியையும், அக்நீச்வரரையும் வழிபட்டார். வயலூர்ப் பொய்யாக் கணபதியார் அவருக்கு, "மயில், கடப்ப மலர், வேல், சேவல், முருகபிரானது இரு சீரடி, அவரது பன்னிரு தோள்கள், வயலூர் – இவை அனைத்தையும் வைத்துத் திருப்புகழ் பாடுக!" என அநுக்ரஹம் செய்தார். அவ்வண்ணமே மற்ற ஸ்தலத் திருப்புகழ்ப் பாக்களிலும் வயலூரையும் மறவாது வைத்துப் பாடினுர் அவர். அவ்வூர்க் கணபதியை "அருளிற்சீர் பொயாத கணபதி திருவக்கீசன் வாழும் வயலி" என்று தம் திருப்புகழில் வாழ்த்திப் "பக்கரை.... செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே" என்று அவருக்கு நன்றியும் பாராட்டினுர். அக்நீச்வரரும் அருணகிரியார் கனவில் தோன்றித் திருப்புகழ் பாடுதற்கு வேண்டிய 'அநுக்ரஹ ஸத்வத்தை'யும் அருள் செய்தார். வயலூர் முருகவேள் திரும்பவும் அவருக்குத் திருவடி தீக்ஷை செய்து, அவரை 'விராலிமலைக்கு வா!' என அழைத்து அங்கே தர்சநம் தந்தருளினுர்.

இங்ஙநம் தென்திசை யாத்ரையை முடித்துக்கொண்டு அருணுசலத்தைத் திரும்பவும் வந்தடைந்தார் அருணகிரியார். அப்போது அவர் புகழ் நாடெங்கும் பரவியிருந்தது. ஸம்பந்தாண்டான் என்பானெருவன் அக்காலத்தில் திருவண்ணுமலையில் ஆட்சிபுரிந்து வந்த ப்ரபுடதேவ ராஜனுக்கு மிகவும் வேண்டியவனுயிருந்து வந்தான். அவன் சந்தக்கவிச்சிங்கமாம் நம் அருணகிரியண்ணலைக் கண்டு பொருமை கொண்டு, அரசனிடம் அவரைப் பற்றிக் கோள்மூட்டி, ஒரு சூழ்ச்சி செய்தான். அருணகிரிநாதரும், தானும் ராஜ ஸபையில் வந்து, இருவரும் தத்தமது இஷ்ட தெய்வங்களைத் தபோ பலத்திஞல் உலகறிய வரவழைத்துக் காட்ட வேண்டுமென்றும், அங்ஙநம் வரவழைத்துக் காட்ட இயலாது இருவரில் எவர் தோற்றுப் போகின்றனரோ அவர் நாடு கடத்தப்பட வேண்டும் என்றும் ஒரு சூழ்ச்சி ஏற்பாட்டைச் செய்து, அருணகிரியாருக்கும் ஓலை அனுப்பிவிட்டான். என்ன தவம் செய்தும், ஆணவம் மிகக் கொண்டிருந்த தேவி பக்தனுன ஸம்பந்தாண்டானுல்தேவியை ஸபையில் வரவழைக்க இயலவில்லை. ஆனுல் ஆண்டவன் அருளையே திடமாக நம்பி. அந்த ஏற்பாட்டுக்கு ஒருவாறு

இசைந்த அருணகிரியார், ராஜஸபையில் வந்து 'அதலசேடனூ ராட' என்ற (1056) திருப்புகழைப் பாடி, 'ப்ரபுடதேவ மாராஜன் உளமும் ஆட வாழ்தேவர் பெருமாளே! மயிலும் ஆடி நீ ஆடி வரவேணும்!' என வேண்டி, முருகப் பெருமானை ஸபை நடுவிலே உலகறிய வரவழைத்துக் காட்டி, அரசன் முதலியோருக்கும் தர்சநம் தந்தருளச் செய்தார். தோற்றுப் போன ஸம்பந்தாண்டான் நாடு கடத்தப்பட்டான். அருணகிரியாரும் குஹனருளை வியந்து பாராட்டி, அரசனுக்கு உகந்தவராக ஆனூர்.

**அங்ஙநம் கலபமயில் மீது காட்சி கொடுக்க வந்தருளிய கந்தக் கடவுள், கருணைக் கடவுளாய் இன்றும் திருவருணையில் பெரிய கோயிற் ப்ராகாரத்தில் உள்ளதொரு 'கம்பத்திளையனர் கோயில்'** என்று வழங்கும் சிறிய கோயிலில் வீற்றிருக்கின்றூர். மயிலில் வந்து முருகவேள், உலகறிய அவருக்குக் காட்சி தந்ததைச்

> "சயிலம் எறிந்தகை வேற்கொடு மயிலினில் வந்தெனை ஆட்கொளல்
> ஜகம்அறி யும்படி காட்டிய குருநாதா-" (திருப்.331.)

என்றும்,

> "உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில்
> ஒருநொடி தனில்வரு மயில்வீரா" (திருப். 755.)

என்றும் பாராட்டியுள்ளார் அருணகிரியார்.

பின்னர், வடதிசை, கீழ்த்திசை, மேற்றிசைகளிலுள்ள பல ஸ்தலங்களையும் தர்சிக்கச் சென்றூர். ஆங்காங்கு நாற்றிசையிலுமுள்ள பலபல ஸ்தலங்களிலும்ஆண்டவனூல், வேற்பொறி, மயிற்பொறி பொறிக்கப் பெறுதல்—ஆதிய விசேஷ தீக்ஷைகள், காட்சிகள் அருளப்பெற்றுப், பல அற்புதங்களை நிகழ்த்திப், 'புகலியில் வித்தகர் போல, அமிர்தகவித்தொடை'— 16,000 பாடி முடித்தார். தொங்கலோடு கூடிய விசேஷச் சந்தப் பாவகைக்கு ஆதிகர்த்தா அவரே. சந்தப் பாக்கள் பாவகைகளுள் பாடுதற்கு மிகவும் அரியவை. அதிலும் ஆண்டவன் அருளால் எழுந்த அந்தச் சந்தப்பாக்களின் பெருமை சொல்லும் தரத்ததோ? ஒரு சப்த பரிமாண அழகும், மந்த்ரத்தைப் போன்ற மஹத்வமும், 'நெருப்பையும் எரிக்கும்' வல்லமையும்பெற்ற 'இருப்பவல் திருப்புகழைப்' படிப்பவர்க்கும், பாடுபவர்க்கும்,

கேட்பவர்க்கும்தான் அதன் அருமை பெருமைகள் தெரிய வரும். அதை ஒரு 'தாள நூல்' என்றே சொல்லிவிடலாம். ஆண்டவன் புகழும், அருளும் ததும்பிப் பொங்கும் அத் திருப்புகழிற் சொல்லாத தெய்வங்களும் இல்லை; இல்லாத விஷயங்களும் இல்லை. ஸமரஸ நோக்கும், சாதுர்ய வாக்கும், எங்ஙநமாயினும், முருகன் ஒருவனையே முடிவில் வழுத்தி முடிக்கும் (அறக்கறப்பினுள் நன்னெறியாம்) முறையும் அமைந்து திகழும் அவ்வற்புதப் பாக்கள் 1320-தாம் இதுவரை கிடைத்துள.

நாற்றிசையிலும் நாதன் புகழைப் பரப்பிவரும் நாளில், *திருச்செந்தூர்க்கருகில், அருணகிரிநாதரோடு, அவரது ஸமகாலப் புலவரான வில்லிபுத்தூரார் வாது செய்ய வந்தார். அவர் கையில், தம்மிடம் வாதில் தோற்றவர்களுடைய காதைக் கொய்யும் கருவி (குறடா) ஒன்றுண்டு. அருணகிரியார் ஆண்டவன் அருள் துணை செய்யுமாயின் அச்சம் ஏன் என்று திடங்கொண்டு, தாம் ஒரு யமக அந்தாதி பாடுவதாகவும் அதற்கு வில்லிபுத்தூரார் உரை சொல்லிவரவேண்டுமென்றும் கூறிக் 'கந்தரந்தாதி' என்ற நூலைப் பாடியருளினார். அதில் 'திதத்தத்தத்' எனத் தொடங்கும் 54-ஆவது செய்யுளைப்பாடவும், அப்பாடற்கு உரை கூற இயலாது வில்லிபுத்தூரார் திகைத்து விழிக்கவும், நம் அருணகிரிநாத ஸ்வாமிகளே அப்பாடற்கு உரை கூறி முடித்தனர். வாதில் தோற்றவரது காது கொய்யப்பட வேண்டும் எனும் ஏற்பாட்டின்படி, உடனே வில்லிபுத்தூரார் குறடாவை அவரிடம் கொடுத்துத் தம் காதைத் கொய்யச் சொல்லவும், 'கருணைக் கருணகிரி' என்று போற்றப்படும் நம் ஸ்வாமிகள், அன்று முதல் வேறு புலவர் எவர் காதையும் கொய்யாதிருக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டுக், குறடாவைப் பறித்தெறிந்துவிட்டு, அவர் காதையும் கொய்யாது விடுத்தருளினர்.

அருணகிரியார் தமது நண்பர்களான காவேரி சேவகன் என்னும் கலிசைச் சேவகனுரையும், ஸோமநாதனுரையும் திருப்புகழில் வியந்து பாராட்டியிருக்கின்றார்.

---

* வாது, திருச்செந்தூரிலே நடைபெற்ற தென்பாரும், திருவண்ணாமலையில் தான் நடைபெற்றது தென்பாரும் உளர்.

இங்ஙநம் திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரலங்காரம் இவற்றையெல்லாம் பாடி 'வாக்கிற் கருணகிரி' என்று புகழ் பெற்ற நம் ஸ்வாமிகள் கடைசியில் திருவண்ணுமலையை யடைந்த போது, முன்பு அவரிடம் தோற்றும், திரும்பவும் எவ்வாறே அரசனிடம் வந்து சேர்ந்த ஸம்பந்தாண்டான் மீண்டும் ஸ்வாமிகள்பாற் பொருமை கொண்டு, அவரைக் கற்பக லோகப் பாரிஜாதப் பூவைப் பூவுலகுக்குக் கொணருமாறு கட்டளையிடும்படி அரசனிடம் வேண்டினன். அவன் சூழ்ச்சி யால் அரசனும் அவ்வாறே கேட்டுக்கொள்ள, நம் ஸ்வாமி களும் திருவருணைக் கோபுரத்தில் ஒருபுறத்தே தம் உடலைச் சேமித்து வைத்து விட்டு இறந்து கிடந்த ஒரு கிளியின் உட லில் பரகாய ப்ரவேசம் என்னும் ஸித்தியால் புகுந்துகொண்டு வானுலகு சென்று பாரிஜாதப் பூவைப் பறித்துக் கொண்டு வந்து பூவுலகடைந்தார். அதற்குள் பொருமையாளனும் ஸம் பந்தாண்டான் அவரது தேஹத்தைத் தேடிக் கண்டு பிடித்து அவர் இறந்து விட்டாரென அரசனிடம் சொல்லி, அவ்வுடலை எரித்து விடும்படி செய்தான்; ஸ்வாமிகளும் தம் உடலை. வைத்த இடத்திற் காணுதவராய், அதுபற்றிச் சிறிதும் வருந் தாமல் அதே கிளி ரூபத்தில் தணிகையாண்டவன் திருக்கை யில் அமர்ந்து, 'கந்தரநுபூதி', 'திருவகுப்பு' இவை இரண்டை யும் பாடியருளினர் என்றும், கிளி உருவில் இன்றும் பார்வதி தேவியின் கையில் வீற்றிருக்கின்றுரென்றும் பலபடக் கூறுவர்.

I. அருணகிரியாரது வாழ்க்கைத் தத்வங்கள் :—

1. ஆண்டவனை அடையப் பக்தியே முக்யமான வழி; வெறும் பக்தியல்ல; ஆசை கலந்த பக்தி. (உதாரணம்) "ஆசைகூர் பக்தனேன்......ஞாந வாஸம் வீசிப் ப்ரகாசியா நிற்ப......அணிவேனே"-திருப். 1211

2. தம்மை ஆட் கொண்ட குமரப் பெருமானைத் துதிக் கையில் மற்ற தெய்வங்களையும் பாராட்டிப் பாக்கள் தோறும் வைத்துப் பாடிய ஸமரஸ நோக்கு.

3. ஜாதிபேதம் இல்லாத நிலையே இறைவன் திருவடிப் பக்திநிலை (உ-ம்) "ஜாதிகுலமும் இலதன்றி அன்பர் சொ(ன்)ன வியோமம்"-திருப். 501.

4. தமிழிலேயே அதிகப்பற்றுதல் இருந்த போதிலும் தம் காலத்தில் வழங்கி வந்த வடமொழிக்கும் மஹத்வம் தந்து தம் நூல்களில் வட மொழியையும் வெகுவாகக் கலந்தே பாடியுள்ளமை.

5. ஸித்திகளெல்லாம் தாம் கைவரப் பெற்றும், அவை தமக்கு வேண்டாமென்று ஒதுக்கி ''வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர் சீலமேத்திய ஸித்தப் ப்ரஸித்தரே'' என முருகன் திருப்புகழைக் கற்றவரே ஸித்தருள் மேலான ஸித்தர் என்று புகழ்ந்து, மற்ற ஸித்திகளைக் கைக்கொள்ள வேண்டாம் என்றது. (சித்து வகுப்புப் பார்க்க; திருவகுப்பு-16)

6. ஸ்வாஸ பந்தந யோகங்கள் எல்லாம் அநாசார கர்ம யோகங்கள்; அவை சுற்று வழிகள்; பரம யோகந்தான் பலன் தருவது. (உ-ம்)

(அ) ''அருள் பெறு அநாசார கரும யோகி ஆகாமல்... ஆரியாசார பரம யோகி ஆமாறு..........அருள்வாயே'' —திருப். 1047.

(ஆ) ''அசட்டு யோகி ஆகாமல்.....சிவச்சொரூப மாயோகி எனஆள்வாய்''—திருப். 497.

(இ) ''ஐந்து பூதமும்.....சிவயோகம்.....குருபர ஸம்ப்ரதாயமொடேயும் நெறியது பெறுவேனோ''—திருப். 357.

(ஈ) ''காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் *வீட்டிற் புகுதல் மிக எளிதே''-கந். அலங். 85.

(உ) துருத்தி போல வாயுவைக் கும்பித்துப் ப்ராணாயாம முறையில் உடலைப் பாழ்படுத்திக் கொள்வதைவிட, அறுமுகப் பெருமான் உபதேசங்கட்குச் செவிசாய்த்துச் சிவயோகம் பயில்வதே நலம்.-கந். அலங். 71.

7. ஸமய வாதங்கள், ஸமயப் பூசல்கள், தர்க்க விவாதங்கள் இவை வேண்டாம்.(உ-ம்)

''ஷட்கோல ஸமயிகள் ஸங்கற்பித் தோது வெகுவித கலைஞாந ஸம்பத்துக் கேள்வி அலம் அலம்''- திருப். 945.

* வீடு - 'பரம ஞாந வீடு'-திருப். 1052.

8. பக்தி கலவாது 'வேதாகமமோதும் தலம்', படாடோபமும் பயங்கரமும் மிக்க வழிபாட்டு முறை இவற்றிலெல்லாம் மருள வேண்டாம்-திருப். 1130.

9. சிவ நூலின் தந்த்ரங்களைக் கற்றது போதும்; அவையெல்லாம் வம்பு எனக் கருதி அவற்றிலும் முக்திக்குச் சுருக்கமான வழியை நாடினர் அருணகிரியார். "வம்பிற் சுற்றுது பரகதி அருள்வாயே"-திருப். 945.

III. அவரது உபதேசங்களுட் சில:—

1. 'ஈதலே அறம்' ஆதலின் தர்மம் செய்து வாழ வேண்டும். "தானம் என்றும் இடுங்கோள்"; "நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்"-(கந்.அலங். 16; 18.)

2. தும்மினும், (இருமினும், கொட்டாவி விடினும், ஏப்பம் விடினும்) அப்போதெல்லாம் 'குமர சரணம்' என்று கூறி ஆண்டவனை வாழ்த்த வேண்டும். "தும்மிக்குமர சரணம் என்னீர்; உய்விர்"-கந். அந். 97.

3. 'ஆறுமுகம்' என ஆறுமுறை கூறியும் (திருப். 161), 'கழுமலம், கற்பகவூர், செருத்தணி' என்ற ஸ்தலப் பெயர்களை உச்சரித்தும் (கந். அந். 29) திருநீறிட்டுக் கொள்ள வேண்டும்.

4. 'வேலு மயிலுந் துணை' என்பதே மந்த்ரம். அதுவே தனி வழிகளிலும் துணைசெய வல்லது.

"ஆடும் பரிவேல் அணி *சேவல் எனப் பாடும் பணியே பணியா அருள்வாய்!"—கந். அநு. 1. உரை.

'வேலு மயிலும் நினைந்தவர் தம் துயர் தீர அருள்தரு கந்த'—திருப். 920.

"பயந்த தனி வழிக்குத் துணை வடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே"—கந். அலங். 70.

5. யமபயத்தையும் நீக்க வல்ல 'அவிரோத ஞானச் சுடர்வடிவாளை'க் கைக் கொள்ள வேண்டும்-கந். அலங். 25.

6. இறைவனுடைய திருநாமங்களை ஓதிச் சரணடைதல் வீண் போகாது. "வேண்டாமை ஒன்றை அடைந்து. . . .

* சேவல் - காவல் (துணை).

வேந்தா! கடம்பு புனைந்தருள் சேந்தா! சரண் சரண் என்பது வீண்போம தொன்றல'' - திருப். 1187.

(பிற உபதேசங்களை "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் நூலினின்றும், மூன்ரும் பாகம் திருப்புகழ் ஆராய்ச்சி—தலைப்பு 15-இல் நின்றும் அறியலாம்.)

இன்னம் பலவிதமான உபதேசங்களையும் அவர் எடுத்துக் கூறுகிருர். திருப்புகழாதிய நூல்களைக் கற்றறிந்தவர்கட்கே அவை விளங்கும்.

III. அருணகிரியார் அருளிய நூல்கள்:—

1. திருப்புகழ்.
2. கந்தரந்தாதி.
3. கந்தரலங்காரம்.
4. கந்தரநுபூதி.
5. திருவகுப்பு.

(மேலும் அவராலேயே இயற்றப்பட்டனவாகக் கருதப் படுவன.)

1. திருவெழு கூற்றிருக்கை
2. வேல் விருத்தம்
3. மயில் விருத்தம்.
4. சேவல் விருத்தம்.

(அருணகிரிநாத ஸ்வாமிகள் சரித்ரச் சுருக்கம் முற்றும்.)

## *ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சரித்ரச் சுருக்கம்

'கொங்கு மலிதரு கொங்கு நாட்'டின்கண் கோயம்புத்தூர் ஜில்லாவில் 'திருநணு' என்பது ஒரு சிவஸ்தலம். அதற்குப் 'பவாநி முக்கூடல்' என்றும் பெயருண்டு. அத்தலத்துக் கருகில் 'பூநாச்சி' என்ெருரு க்ராமம். அவ்வூரில் ப்ராம்மண குலோத்தமராகிய ஸ்ரீ சிதம்பர ஜோஸ்யர் என்பவர் ஸ்ரீமதி லக்ஷ்மியம்மாளை மணந்து இல்லறம் நடத்திவந்தார். அவர்கட்கு வெகுநாட்களாக மக்கட்பேறு இல்லை. ஒருநாள் லக்ஷ்மியம்மாள் ஏதோ வேலை செய்துகொண்டிருக்கையில் ஒரு நாக ஸர்ப்பம் அவரருகில் வந்து மண்டலமிட்டு ஆடிக்கொண்டிருந்

---

*இவரது விரிவான சரித்ரம் தனியே திரு. ஆர். கல்யாண ஸுந்தரமய்யர் அவர்களால் 'வள்ளிமலை வள்ளல்' என்ற நூலாக எழுதப்பட்டிருக்கிறது.

தது. அதுகண்டு அவ்வம்மையார் கற்பூரம் ஏற்றிக் காண்பிக்கவும், அந் நாகம் உடனே ஓடி மறைந்தது. அருகிலுள்ள ''நாககிரி'' என்னும் திருச்செங்கோட்டு மலைக்குத் தம்மை வாவென்று அழைக்கத்தான் வந்ததோ அந் நாகம் என்று எண்ணினார் அவ்வம்மையார். அதன் பிறகு அவ்வம்மையாரும் அவர் கணவருமாக இருவரும் விரத ஆசார நியமங்களுடன் 12 அமாவாஸைகள் திருச்செங்கோட்டுக்குச் சென்று ஆண்டவனைத் தரிசித்து வந்தார்கள். இச்செய்கையின் பயனாக அவர்கட்கு ஒரு பெண் மகவு பிறந்தது. அக்குழந்தைக்கு நாககிரியின் (திருச்செங்கோட்டின்) ஞாபகார்த்தமாக ''நாகம்மாள்'' எனப் பெயரிட்டு வளர்த்து வந்தனர். அதன் பிறகு லக்ஷ்மியம்மாள் ஓர் ஆண்மகவை 25-11-1870-இல் ஈன்றருளினார். அக்குழந்தைக்குத் திருச்செங்கோட்டு ஈச்வரர் பெயரால் ''அர்த்தநாரி'' என்று பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர்.

அர்த்தநாரி இளம் ப்ராயத்திலேயே தம் தந்தையாரை இழந்துவிட்டார். அதன்பின் அவரை அவருடைய மாமன் வளர்த்து வந்தார். இளமையில் பள்ளிக்கனுப்பியும் அங்குச் சரிவரப் படிக்காமல், குஸ்தி, சிலம்பவித்தை முதலியன கற்றுக்கொள்வதில் காலங் கழித்தார். அவரது 9-ஆம் வயதில் அவருக்குத் திருமணம் ஆயிற்று. அதன் பின் குடும்பத்தை நிர்வஹிக்க யாரும் இல்லாததால், குடும்பத்தைக் காப்பாற்றும் பொருட்டு, நன்கு படிக்காதவராயினும், அர்த்தநாரிக்கு ஏதாவதொரு வேலை பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அவரது அத்தை பிள்ளை மைசூரில் அரண்மனையில் (Head Cook) தலைமைச் சமையற்காரராக வேலை பார்த்து வந்தார். அவரை அணுகி ஏதாவது உத்யோகம் கேட்கலாமென்று க்ராமத்தை விட்டுக் கால்நடையாகவும், புகைவண்டி மூலமாகவும் மைஸூரை அடைந்தார். மைஸூரைச் சேர்ந்து தம் அத்தானிடத்தில் மாதம் 9 ரூபாய் சம்பளத்திற்கு உதவிச் சமையற்காரராக வேலைக்கமர்ந்தார். சில காலத்திற்குள், சமையல் வேலையில் கைதேர்ந்தவராகி, மைஸூர் அரசரின் (Touring Cook) யாத்ரைச் சமையற்காரராக நியமிக்கப்பட்டார்; அரண்மனையில் இருந்தபோது அரண்மனையைச் சேர்ந்த

பயில்வான்களிடம் குஸ்தி, சிலம்பம் முதலியன கற்று, அவற்றிலும் கைதேர்ந்தவராஞர். இதுவரையில் அவருக்குத் தெய்விக விஷயங்களில் சிறிதும் புத்தி செல்லவே இல்லை. சிறுவயதிலும் சரி, பின்னரும் சரி அவருக்குக் கல்வியில் ஊக்கம் சிறிதும் இல்லை.

தமது 22-ஆம் வயதில் மூத்த மனைவி இருக்கும்போதே இரண்டாம் தாரம் திருமணம் செய்துகொண்டார் அர்த்தநாரி. இரண்டாம் கல்யாணம் சற்று விசித்ரமாகவே நடைபெற்றது. மைஸூரில் ஒரு ஸமயம் ஒரு கல்யாணத்திற்கு விருந்தாளியாகச் சென்றிருந்தபோது, அங்கே திருமண மாப்பிள்ளைக்குத் தாலிகட்டும் நேரத்திற்குச் சற்று முன்பு 'காக்கை வலிப்பு' நோய் வந்துவிடவே அக்கல்யாணத்தை நிறுத்த வேண்டாமென்று பெண்ணின் பெற்றோர்கள் விருந்தாளியாய் வந்த அர்த்தநாரியை அழைத்து அவருக்கு அதே மணப் பந்தலில் அப் பெண்ணை மணம் முடித்து வைத்துவிட்டார்கள். சில வருஷங்கட்குள், முதல் தாரமும், அவருடைய மூன்று குழந்தைகளும் இறந்து போயினர்.

1907-இல் திடீரென்று இரண்டாம் தாரத்தினுடைய இரண்டு பெண் குழந்தைகளும் ஒரே ஸமயத்தில் தூணைச்சுற்றி விளையாடுகையில் மூர்ச்சையுற்று விழுந்து இறந்துபோயின. இத்தனை நாட்கள் கவலையற்றும், தெய்வ நினைப்பு இல்லாமலும் இருந்த நம் அர்த்தநாரிக்கு இந்நிகழ்ச்சி ஒரு பெரிய துக்கத்தையும், ஸம்ஸாரத்தில் ஒரு வெறுப்பையும் ஏற்படுத்துவிட்டது. இது போதாமல், தீராத குன்ம நோய் (வயிற்றுவலி) அவரைப் பீடித்து வாட்டியது. அரசர் இவர்மீது அதிகப் ப்ரியத்துடன் இருந்ததால், அர்த்தநாரிக்கு நாட்டு வைத்யம், ஆங்கில வைத்ய முறைகளிலெல்லாம், அந்தக் குன்ம நோய் போகச் சிகிச்சைகள் பல செய்தார். செய்தும், அவை பயன்படவில்லை. நோயின் துன்பம் பொறுக்கமுடியாது போக, அர்த்தநாரி தெய்வத்தைச் சிறிது சிறிதேனும் நினைக்கத் தருணம் வாய்த்தது. மைஸூர் ராஜ்யத்திலுள்ள தலைக்காடு முதலிய க்ஷேத்ரங்கட்குச் சென்று, சிவபெருமானிடம் தம் நோயைப் போக்கியருளும்படிப் ப்ரார்த்தித்துக்கொண்டார் அர்த்தநாரி. இவையெல்லாம் செய்தும் நோய் தீரவில்லை.

இப்படியிருக்க, ஒருநாள் மைஸூர் அரண்மனையில் வேலை செய்யும் கொத்தன் ஒருவன், ' நீ ஏன் பழநியாண்டவரைப் போய்த் தர்சிக்கக்கூடாது? அவர் உன் நோய் எல்லாவற்றையும் தீர்த்துவிடுவாரே' என்று கேட்டான். உடனே அர்த்தநாரி, மஹாராஜாவிடம் விடை பெற்றுக்கொண்டு தமது இரண்டாம் மனைவியையும், பிழைத்திருக்கும் நரஸிம்மன் என்னும் பெயருள்ள ஒரே ஆண் குழந்தையையும் அழைத்துக்கொண்டு கால்நடையாகவும், புகைவண்டி மூலமும், 1907-ஆம் வருஷம் டிஸம்பர் மாதம் பழநிக்கு யாத்ரை புறப்பட்டார். 1908-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 18-ஆம் தேதி பழநியை வந்தடைந்தார்; அன்றே பழநியாண்டவரை முதல் முதலில் தர்சித்தார்; பழநியாண்டவர்க்கு அபிஷேக தீர்த்தங்கள் கொண்டு வருதல் முதலிய தொண்டுகளில் ஈடுபட்டார். அவர் மனைவியார் கோயிலுக்குத் தும்பைப் பூப் பறித்துக் கொடுத்தல், கோயிலைப் பெருக்குதல், மெழுகுதல் முதலிய தொண்டுகளில் ஈடுபட்டிருந்தார். பழநிப் பெருமானுடைய அபிஷேகப் பாலையும், அவருக்கு நிவேதநம் செய்யப்பட்ட பழத்தையுமே 48 நாட்கள் உணவாகக் கொண்டார் அர்த்தநாரி. ''பவரோக வைத்தியநாத''ராம் பழநி வேலர் அவரது பக்தித் திறத்தையும், அவர் தம்மையே த்யாகம் செய்து பூரண சரணாகதி அடைந்துவிட்டதையும் கண்டு, பல வைத்ய நிபுணர்களாலும் தீர்க்க முடியாத குன்ம நோயைத் தம் கருணையினால் தீர்த்தருளினார். 1908-ஆம் ஆண்டு முதல் 1912-ஆம் ஆண்டுவரை பழநிவேளுக்குப் பணிவிடைகள் செய்துகொண்டும், பிக்ஷையெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டும் பழநியிலேயே வாழ்ந்து வந்தார்.

இப்படியிருந்தபோது உத்ஸவ காலத்தில் ஒருநாள் மதுரைத் தேவதாஸி ஒருத்தி பழநிக்கு வந்து 'வங்கார மார்பிலணி' என்னும் திருப்புகழைப் பாடி ஆண்டவன் முன்பு நடநம் ஆடினாள். அப்பாடலில் '*சிங்கார ரூபமயில் வாகந நமோ

''*சிங்கார ரூபமயில் வாகந! நமோநமென
கந்தா! குமாரசிவ தேசிக! நமோநமென
ஸிந்தூர பார்வதி ஸுதாகர! நமோநமென விருதோதை—
சிந்தான ஜோதிகதிர் வேலவ! நமோநமென
கங்காள வேணிகுரு வானவ! நமோநமென
திண்சூரர் ஆழிமலை தூள்படவை வேலைவிடு முருகோனே''
(திருப்புகழ்)

நம'' என்ற 5-ஆம் அடியைப் பாடுங்கால் நம் அர்த்தநாரிக்கு மநம் லயித்துப்போய்க் கண்ணில் தாரை தாரையாகக் கண்ணீர் வர, மெய்ம்மறந்து போய்விட்டது. இதுவரையில் கந்நட தேசத்தில் வாழ்ந்து தமிழே சிறிதும் அறியாத அர்த்தநாரிக்கு அந்தத் தமிழ்ப்பாட்டைக் கேட்ட மாத்ரத்தில் ஒரு தெய்விக உணர்ச்சி எழுந்தது என்றால் அது தெய்வத்தின் திருவருளே யாகுமன்றோ! எப்படி ஸ்ரீ ரமண மஹரிஷிகளுக்கு 'அருணா சலம்' என்ற சொல்லைக் கேட்டமாத்ரத்தில் அருள் கிடைத் ததோ அவ்வாறே அர்த்தநாரிக்கும் அப் பாட்டைக் கேட்ட மாத்ரத்தில் தெய்வத்தின் திருவருள் கிட்டிவிட்டது. அதுவே அவரைத் தெய்வம் ஆட்கொண்ட ஸந்தர்ப்பம் என்று நாம் சொல்ல வேண்டும். திரும்பி மைஸூர் அரண்மனைக்குப் போய் உத்யோகம் பார்க்கும் எண்ணம் அவருக்கு மறந்தே போய் விட்டது. குடும்பத்தைப் பற்றிய எல்லாக் கவலைகளும் நீங்கி விட்டன. ஸதா தெய்வத்தினிடத்திலேயே சிந்தனை ஏற்பட்டு விட்டது. திருப்புகழைப் பாடித் தெய்வத்தைத் துதிக்க வேண்டுமென்ற ஆவல் பிறந்துவிட்டது. அங்குள்ளவர்களால் மேற்கூறிய பாடல் திருப்புகழில் உள்ளதென்றறிந்து, திருப் புகழ்ப் புத்தகத்தைச் சென்னையிலிருந்து வரவழைத்து, 'மணி' என்னும் பெயருள்ள சிறு பையன் ஒருவனிடம் தமிழ் கற்று அதைப் படிக்க ஆரம்பித்தார்; அப்போது அவருக்கு வயது 42. பிறருதவியிருந்த போதிலும், தமிழ் அதிகம் தெரியாத அவருக்குப், படிப்பதற்கு மிகவும் கடினமான திருப்புகழைப் படிப்பதற்கும், பாடுவதற்கும் முருகன் திருவருளே பெரும் பாலும் துணை செய்தது. அவருடைய பக்தியையும், சாரீரத் தையும் கண்டு அவர் பாடுவதைக் கேட்க ஜனங்கள் வெகுவா கக் கூடினர். அப்போது அவரை 'மைஸூர் ஸ்வாமி' என்று பழநி மக்கள் அழைப்பது வழக்கம். அங்கு ஷஷ்டிதோறும் அடியார்களிடமிருந்து பெற்ற தநத்தைக் கொண்டு ஸமாரா தனைசெய்து, அந்த தாந கைங்கர்யத்தில் ஈடுபடுவது வழக்கம்.

அவருக்குத் தாம் ஒரு பெரியவரை அண்டி ஸந்யாஸம் வாங்கிக்கொள்ள வேண்டும் என்றொரு இச்சை ஏற்பட்டது. ச்ருங்கேரி மடத்து ஸ்வாமிகளான ஸ்ரீ நரஸிம்ம பாரதி அவர் கள், அப்போது கோயம்புத்தூருக்கு வந்திருந்தார்கள். பழநி

யிலிருந்து கோவை சென்று அந்த ஸ்வாமிகளை ஸந்தித்து அவரிடம் தீக்ஷைகேட்டார் நம் ஸ்வாமிகள். நரஸிம்ம பாரதி ஸ்வாமிகள் அவருக்குத் தீக்ஷை கொடுக்க இயலாதென மறுத்து விட்டார். அதனால் அவருக்குத் தகுதியில்லையென்பது காரணமாகாது. அவருக்குத் தீக்ஷா குருவாகக் கடவுள் வேறொருவரை நியமித்திருக்கும்போது அவர் எப்படி அர்த்தநாரிக்குக் குருவாக வாய்க்க முடியும்? ஆனாலும், அவர் அர்த்தநாரிக்கு வானப்ரஸ்தாச்ரம விதிகளை வகைப்பட எடுத்துக்கூறி, அந்த ஆச்ரமத்தையும் அளித்தருளினார். அப்போது ஊரில் தமக்கு ஸொந்தமாயிருந்த ஸொல்ப நிலத்தையும், (திருமணமாகா) தம் உடன்பிறந்தாள் பேரில் எழுதி வைத்து வந்து விட்டார்.

இவ்வாறிருக்கையில், பழநியிலிருந்து திருவண்ணாமலைக்குப் போகும்படிப் பழநியாண்டவர் உத்தரவளித்தார். தமிழ் நாட்டிலும், இலங்கையிலும் சில க்ஷேத்ரங்களைத் தர்சித்துக் கொண்டு, 24-12-1912-இல் திருவண்ணாமலை க்ஷேத்ரத்தை வந்தடைந்தார். அச்சமயம், திருவண்ணாமலையில் ஸ்ரீ ரமண மஹரிஷிகளின் பெயர் ப்ரஸித்தமாகியிருந்தது. அன்பர்களும், பக்தர்களும் வெளிநாட்டிலிருந்து அவரைப்பார்க்க வருபவர்களும் அதிகமாகிக்கொண்டே வந்தனர். அர்த்தநாரி, திருவண்ணாமலையை அடைந்து மலைமேலிருக்கும் ஆச்ரமத்தில் ஸ்ரீ ரமண மஹரிஷிகளைத் தர்சிக்கப் போனார். அவர் மஹரிஷிகளைத் தர்சித்த நிகழ்ச்சியை அவருடைய ஸொந்த வார்த்தைகளில் கூறுவதே நலம்:

''மஹரிஷியைத் தர்சிககக் காத்துக் கொண்டிருந்த சிறு கூட்டத்தோடு நானும் ஆச்ரமத்தின் வாசலிற் சேர்ந்து கொண்டேன். சிறிது நேரங் கழித்து மஹரிஷிகள் ஆச்ரமத்தின் உள்ளே யிருந்து வெளியே வந்தார் சில நிமிஷங்கள் கோவணாண்டியாய் ஒரு கையில் தடியை ஊன்றிக் கொண்டு நின்றார். நான் அவரைப் பார்த்தேன ; அவரும் என்னைப் பார்த்தார் திடீரென்று ஸாக்ஷாத் பழநியாண்டவர் ரூபமாய் என் கண்களுக்கு அவர் தோன்றினார். எனக்கு என் தேஹத்தில் மயிர்க் கூச்செரிதல் ஏற்பட்டது. ஆநந்தம் பொறுக்க முடியாமல் கண்ணீர் வார்த்தேன்.

வார்த்தை ஒன்றும் எழும்பவில்லை. நான் மெய்ம்மறந்து உட்கார்ந்து கொண்டேன் ”

என்பதுவே அவர் அந்நிகழ்ச்சியைப் பற்றிக் கூறியதாகும். அர்த்தநாரியும் மனைவி மைந்தரோடு சில மாதங்கள் திருவண்ணாமலையில் இருந்துகொண்டு, பழநியிற் செய்ததுபோல் அவ்வாச்ரமத்தில் ரமணருக்குப் பணிவிடைகள் செய்து வந்தார். தாம் புதிதாகக் கற்றுக்கொண்ட திருப்புகழ்ப் பாடல்களையும் அவர் முன்பு பாடினார். அவர் பாடியது கேட்டு மஹரிஷிகளும் மிகவும் ஸந்தோஷப்பட்டுப், பாடினதில் இருந்த சில தவறுகளைத் திருத்தித் தந்தார்

சில மாதங்களுக்குப் பின் திருவண்ணாமலையிலிருந்து புறப்பட்டு 3, 4 வருஷங்கள் வடஇந்தியா முழுதும் யாத்ரை செய்தார். 1914-ஆம் வருஷம் மே மாதம் திருவண்ணாமலைக்கு மறுபடியும் திரும்பினார். ஆச்ரமத்தில் 15 தினங்கள் தங்கியிருந்தபோது, ஒருநாள் மஹரிஷிகள் அவரை 'மலையை விட்டுக் கீழே இறங்கிப் போ!' என்று சொன்னார். அவருக்கு அடக்க முடியாத துக்கம் ஏற்பட்டது. ''நம்மைப் போவென்று சொல்லுகிறாரே! நாம் என்ன பிழை செய்துவிட்டோம்? அல்லது நமது நடவடிக்கைகளில் அவருக்கு ஏதாவது அத்ருப்தி ஏற்பட்டு விட்டதா என்ன?'' என்றெண்ணிக்கொண்டு, அவர் வார்த்தையைக் கேட்டு நடக்கக் கடமைப்பட்டவராயும், அவரைக் காரணம் கேட்கக்கூடத் தைர்யம் இல்லாதவராயும், மலையின் கீழே இறங்கிப்போனார். அவ்வாறு இறங்கிவரும் ஸமயத்தில், ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அவர் வழியில் குறுக்கே நின்றுகொண்டு, ''உன் மந்த்ரம் திருப்புகழ் அல்லவா? அர்த்தநாரீ!'' என்று அவரைக் கேட்டார். நம் அர்த்தநாரி ஆச்சர்யப்பட்டுக் கொஞ்ச நேரம் பதில் சொல்ல முடியாமல் நின்றார். ஏனென்றால், சேஷாத்ரி ஸ்வாமியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தும், தூரத்திலிருந்து பார்த்திருக்கிறாரே யொழிய அருகில் இருந்து பேசியதே கிடையாது. பிறகு 'ஆமாம்' என்று பதிலளித்தார். பின்னர், சேஷாத்ரி ஸ்வாமிகள் அவரைக் கையாற் கட்டிக்கொண்டு, அன்பு காட்டி, உபதேசம் அளித்தார். சேஷாத்ரி ஸ்வாமிகள் அளித்த உபதேசம் ஸாதாரணமாக ஒரு குரு தன் சிஷ்யனுக்கு அளிக்கும் உபதேசம்



ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

(ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமிகளுக்கு உபதேச குரு)

தோற்றம் :
22—1—1870

ஸமாதி :
4—1—1929

(கலி நிலைத்துறை)

வீடாத் தகைசேர் அருணாசல வீதி தோறும்
ஓடாத் திரிந்தே உலகோர்தமக் குய்தி தந்த
வாடாப் புகழ்சேர் சிவஞாநம் நிறைந்த வாய்மைச்
சேடாத் திரிப் பேர்த் திருவாளரைச் சிந்தை செய்வாம்.

(டாக்டர்-தணிகைமணி-வ. சு. செங்கல்வராய பிள்ளை)

போன்றது அல்ல. அவர், அவர் காதில் ஒரு பீஜாக்ஷரத்தையும் ஓதவில்லை. ஆனால் சேஷாத்ரி ஸ்வாமிகள் அவருடைய நிலையையறிந்து, ஆதிசங்கரர் பாடிய 'சிவ மாநஸ பூஜா ஸ்தோத்ரத்'தில் 4-ஆவது ச்லோகத்தைச் சொல்லி அதனுடைய அர்த்தத்தையும் அவருக்கு விவரித்துச் சொன்னார். அந்த ச்லோகம் பின்வருமாறு:—

''ஆத்மாத்வம், கிரிஜாமதி: ஸஹசரா: ப்ராணா: சரீரம் க்ருஹம், பூஜாதே விஷயோப போகரசனா, நித்ரா ஸமாதி ஸ்திதி: | ஸஞ்சார: பதயோ: ப்ரதக்ஷிணவிதி: ஸ்தோத்ராணி ஸர்வாகிர: யத்யத்கர்ம கரோமி தத்தத் அகிலம் சம்போ தவாராதநம்''|| (''நீயே எனது ஆத்மா; தேவியே என் புத்தி; உன்னுடன் இயைவன என் ப்ராணுதிகள்; என் சரீரமே உன் உறைவிடம்; நான் ஈடுபடும் விஷயங்களும் அநுபவிக்கும் போகங்களும் உன் பூஜையாகும்; நித்ரையே ஸமாதி நிலை; என் காலின் நடைகள் அனைத்துமே உன்னைப் ப்ரதக்ஷிணம் செய்வது; பேசுவதெல்லாம் உன் ஸ்தோத்ரமாகும்; நான் எந்தெந்தக் காரியங்கள் செய்கிறேனே அவையனைத்தும், சம்புவே! உன் ஆராதனையாகும்'' என்பதே இதன் பொருள்.)

மேலும், ''நீ இனி பாஹ்ய பூஜை செய்தால் மட்டும் போதாது; உன் எண்ணங்களும், கார்யங்களும் உனக்காக என்று கருதுவதை விட்டு, அனைத்தும் தெய்வத்தின்பொருட்டு என்ற மநோநிலையை ஸ்திரமாகக் கொள்வாயாயின், 'நான்–பிறர்' என்ற பேதங்களெல்லாம் அற்ற உயர்ந்த பதவியை அடைவாய்!'' என்றும்அநுக்ரஹம் செய்து, திருப்புகழில் இதற்கு ஸமமான கருத்துள்ள பாடல் ஏதேனும் உள்ளதா எனவும் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் கேட்டார். நம் அர்த்தநாரியும் * இதையொத்த கருத்துள்ள, ''எனதியானும் வேறாகி எவரும் யாதும் யானும் இதய பாவ நாதீதம் அருள்வாயே'' என்ற (''அமல வாயு'' 1048) திருப்புகழின் 7, 8-வது வரிகளைக்

* இதே கருத்தைப் பின்வரும் திருப்புகழ்களிலும் காணலாம்:-

(1) ''ஆராதன'' எனத் துவங்கும் 1130-வது திருப்புகழ்.

(2) ''ஆசைகூர்'' எனத் துவங்கும் 1211-வது திருப்புகழ்.

(3) ''ஸோஹமது தந்து எனையாள்வாய்''-என்னும் (''வாதினையடர்ந்த'' எனத் துவங்கும் 444- வது திருப்புகழின் ஏழாவது) அடி.

கூறிப் பொருளையும் விளக்க, ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் அதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷப்பட்டுத், ''திருப்புகழ் மஹா மந்த்ரம்; அதுவே உனக்குப் போதுமானது; வேறு நூல்கள் எதுவும் நீ படிக்கவேண்டாம்; வள்ளிமலைக்குச் சென்று அங்கேயே தவஞ் செய்துகொண்டிரு; பின்னர் நான் அங்கு வந்து சேர் கிறேன்'' என்று சொல்லியனுப்பிவிட்டார்.

பகவான் நாதப்ரும்மமாக இருக்கின்றார் என்பதும், நாதோபாஸனை செய்து இறைவனைப் பலர் அடைந்துள்ளனர் என்பதும் யாவரும் அறிந்த விஷயமே. இறைவனை வழிபடும் போது தெய்வங்கட்குரிய மந்த்ரங்களை அம்மந்த்ரங்களின் பொருளையறியாமலேயே சாதாரணமாகச் சொற்களை மட்டும் திரும்பத் திரும்ப உச்சாரணம் செய்தே நாதோபாஸனை செய்வார்கள். ஆதலால் மந்த்ர சாஸ்த்ரங்களை அப்யஸிக்கும் போது அதன் பொருளும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டு மென்பது அவ்வளவு அவச்யமில்லாமற் போகின்றது. மேலும், மந்த்ர சாஸ்த்ரங்கட்கு ஒரு சப்த பரிமாண அழகு உண்டு. திருப்புகழ், பாக்களுள் சிறந்ததும் இயற்ற அரியதுமான அழகிய சந்தப் பாக்களால் ஆனது. பொதுவாக, எல்லாப் பாவகைகளிலும் இலக்கணத்தோடு கூடிய ஒரு சப்த பரிமா ணம் இருந்தபோதிலும், சந்தப்பாக்களிலிருக்கும் சப்த பரி மாண அழகு வேறு எந்தப் பாவகையிலும் இல்லை. சந்தப் பாக்களால் அமைந்த திருப்புகழில் நாதலயத்திற்கு வேண்டிய சப்த பரிமாண அழகும், உபாஸனா க்ரமத்திற்கு வேண்டிய தான இறைவனின் புகழும் அடங்கியுள்ள காரணத்தினால்தான் அதனையறிந்து ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் திருப்புகழை 'மஹா மந்த்ரம்' என்றனர். மேலும் மநத்தை ஸ்திரப்படுத்துவது மந்த்ரம் எனப்படும். நம் அர்த்தநாரியின் மநமானது ஸ்திரப் பட்டு, லயித்து மகிழ்ந்தது 'வங்கார மார்பிலணி' என்னும் திருப்புகழில்தான். ஆதலால், அர்த்தநாரியின் மநத்தை ஸ்திரப்படுத்தி மகிழ்வித்த திருப்புகழ், 'மஹாமந்த்ரம்' என் பதில் சிறிதும் ஸந்தேகமில்லை. மேலும் திருப்புகழைப் பாடல் களின் பொருளுக்கேற்ப ராக தாளங்கள் அமைத்துப், பாட வேண்டிய முறையிற் பக்தியோடு பாடி அநுபவிப்பவர்களுக்

குத்தான் திருப்புகழின் அருமை பெருமைகள் வெளியாகுமே யன்றிப் பிறருக்கு வெளியாகா.

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் உபதேசம் கிடைத்த பின்னர்தான், ஸ்ரீ ரமண மஹரிஷிகள் நம் அர்த்தநாரியைக் கீழே போகும்படிச் சொன்னதன் காரணம் அவருக்கு விளங்கிற்று. தண்டபாணியாகக் காட்சியளித்ததோடு, திருப்புகழிற் சிக்கலான இடங்கட்கும் பொருள் விளக்கினதால், ஸ்ரீ ரமண மஹரிஷிகளே நம் அர்த்தநாரிக்குக் குருவாக அமைந்தார். ஆனாலும், அர்த்தநாரியை விட மஹரிஷிகள் வயதில் இளையவர் ஆதலால், அந்த வயது முறையையொட்டிச் சேஷாத்ரி ஸ்வாமிகளிடமிருந்து நேர்முகமான உபதேசம கிட்டுமாறு செய்தார் போலும் மஹரிஷிகள். இங்ஙனம் ஸ்ரீ மஹரிஷிகள், ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆகிய இருவரையுமே அர்த்தநாரி தமக்குக் குருவாகக் கொண்டார்.

அடுத்தபடியாக, ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் 'வள்ளிமலைக்குப் போய்த் தவஞ்செய்!' என்று நம் அர்த்தநாரிக்கு உபதேசித்த காரணத்தையும் ஆராய்வோம். வள்ளிமலை ஆறுபடை வீடுகளுள் தனிப்படை வீடு அன்று. நம் தேசத்தில் முருக பக்தர்கள் அதிகமாக இந்த க்ஷேத்ரத்தைச் சென்று பார்ப்பதுமில்லை. சேஷாத்ரி ஸ்வாமிகளுக்கு, அர்த்தநாரியை ஆண்டவர் எதற்காக ஸ்ருஷ்டித்துள்ளார் என்பது தெரியும். அருணகிரிநாதர் திருச்செங்கோட்டை அடைந்து தர்சநம் செய்தபொழுது அவரது திருப்புகழ் ப்ரஸித்தப்பட்டு ஜநங்களால் நான்கு திக்குகளிலும் பாடப்பட்டு வந்தது. திருச்செங்கோட்டு ஆண்டவன் பேரில் அருணகிரியார் தனி அன்பு காட்டியுள்ளார். கந்தரநுபூதியில் திருச்செங்கோடு என்ற ஒரு ஸ்தலத்தையே அருணகிரியார் பாடியுள்ளார். கந்தர் அலங்காரத்தில் செங்கோட்டு வேலை 'மறவேன் உனைநான்' என்றார்; அத்தலத்தில் தாம் பாடிய திருப்புகழில்........................"பூர்வ-

பச்சிம தக்ஷிண உத்தர திக்குள
பக்தர்கள் அற்புதம் — எனஓதும்;
சித்ர கவித்துவ சத்த மிகுத்த
திருப்புக ழைச்சிறி — தடியேனும்—

செப்பென வைத்துல கிற்பர வத்தெரி
சித்த அநுக்ரஹம் மறவேனே;"

என்று பாடி உலகில் திருப்புகழைப் பரவ வைத்தமைக்கு நன்றியையும் தெரிவித்துள்ளார்.*

அருணகிரியார் காலத்தில் திருப்புகழ் நன்கு பரவியிருந்த போதிலும், அவர் காலத்திற்குப் பிறகு இடைக்காலத்தில் மக்கள், திருப்புகழின் பெருமையை உணராது அதைக் 'காம ரஸப் பாட்டு' என எண்ணியோ, ஏதனாலோ ஓதாது விடுத்திருந்தனர். நம் அர்த்தநாரி அவதரித்து, மறைந்துகிடந்த மாணிக்கமாய் இருந்த திருப்புகழைக் குன்றின் மேலிட்ட விளக்குப்போல் ஞான ஒளியும், புகழொளியும் வீசிப் பரவும்படிச் செய்தார். இவ்வாறு பின்னரும் ஒருகாலத்தில், ஒரு மஹான் **திருச்செங்கோட்டு வேலர் திருவருளால் தோன்றித் தாம் பாடிய திருப்புகழை நான்கு திக்குகளிலும் பரவச் செய்ய வருவார் என்பதை முன்னரே தெரிந்துகொண்டுதானே, அருணகிரியார்** "திருப்புகழை..... பரவத் தெரிசித்த அநுக்ரஹம் மறவேனே" என்று திருச்செங்கோட்டு வேலவனிடம் நன்றி தெரிவித்தருளினார் என்றும் தோன்றுகிறது.

தமக்கு நன்றி தெரிவித்த அருணகிரியாரது திருப்புகழ், என்றும் நிலையாகப் புகழொடு உலகிற் பரவியிருக்கச் செய்ய வேண்டுமென்பது செங்கோட்டு வேலர் திருவுள்ளம்போலும்! இடைக்காலத்தில் மக்களால் உணர்ந்து நன்கு போற்றப்படாதிருந்த திருப்புகழை மீண்டும் உலகிற் பரப்புவதற்கு நம் அர்த்தநாரியைக் கருவியாக உபயோகிக்க எண்ணி (அர்த்தநாரியின் பெற்றோர்கள்) தம் தலத்தை வழிபட்டதன் பயனாகவும், திருப்புகழைப் பரப்பத் தாம் அனுப்பிய தூதனாகவும் நம் அர்த்தநாரியை இப்பூவுலகில் தோற்றியருளினார் ஆண்டவர்.

---

* "ஆபாத னேன்மிகப் ப்ரஸித்தி பெற்றிவ் வுலகேழும்—
[illegible]னாக நாம அற்புதத் திருப்புகழ்
தேனூற ஓதி, எத்திசைப் புறத்தினும்
ஏடேவு ராஜ தத்தினைப் பணித்ததும்........
......எனக்கருக் ரஹித்ததும் மறவேனே". (திருப். 1132)

என்பதையும் ஒப்பு நோக்குக.

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகட்கோ திருப்புகழிலும் அதிகப் பழக்கம் கிடையாது; அர்த்தநாரியிடத்திலும் முன்பின் சிறிதும் பழக்கம் இல்லை. அப்படியிருந்தும், அவர் அத் திருப்புகழின் மஹத்வத்தை நன்கு அறிந்தவராய், அருணகிரியார் வாக்குப் பொய்யாகாத வண்ணம் திருப்புகழை மீண்டும் பரப்புவதற்கு ஒரு கருவியாக ஆண்டவனால் தோற்றுவிக்கப்பட்டவரே நம் அர்த்தநாரி என்பதைத் தம் ஞாந உணர்ச்சியினால் அறிந்துதான், நம் அர்த்தநாரி அந்தக் கார்யத்தைச் செவ்வனே நிறைவேற்றும் பொருட்டுக் கைக்கொள்ள வேண்டிய அத் திருப்புகழ் நன்னெறியையே அவருக்கு உபதேசித்தருளினார் போலும் என்று தோன்றுகிறது.

அர்த்தநாரீச்வரர் திருவருளாற் பிறந்து, அவர் பெயரையே அடைந்து, பின்னர்க் குன்ம நோயினால் துன்பப்பட்டுப் பழநியடைந்து, ஆண்டவன் அருளால் அங்குக் குன்ம நோய் நீங்கப்பெற்றுத், தீவிர முருக பக்தனாக மாறி, அத் தலத்திலேயே ஒரு தாளி திருப்புகழ் பாடத், தம் மநம் அதில் லயித்துப் போய்ப் பின்னர்ப் பழநியிலிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு, அருணகிரியார் அவதரித்ததும், அருள் பெற்றதுமான திருவண்ணாமலைக்கு வந்து, அங்கு ஸ்ரீ ரமண மஹரிஷிகளைப் பார்த்து, அவர் தண்டபாணியாகக் காட்சியளிக்கக் கண்டு, ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளிடம் 'வள்ளி மலைக்குப் போ!' என்றும் 'திருப்புகழே மஹா மந்த்ரம்' என்றும் உபதேசம் பெற்றது முதலானவற்றை ஆலோசித்துப் பார்த்தால், அர்த்தநாரி, எந்தெந்த இடங்களில் தமிழ் பேசப்படுகின்றதோ அந்தந்த இடங்களிலெல்லாம் முருக பக்தியைத் திருப்புகழாற் பரவச் செய்யவே அவதாரம் செய்தார் என்பது சிறிதும் ஸந்தேகமின்றித் தெளிவாகின்றது.

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் "வள்ளி மலைக்குப் போய்த் தவஞ் செய்துகொண்டு இரு; நானும் அங்குவந்து சேருகிறேன்" என்று உபதேசித்ததால், அர்த்தநாரி வள்ளி மலையை அடைந்து, 7-6-1916-இல் வள்ளிமலைக் கோயில் கும்பாபிஷேகத் திருப்பணியில் தாமும் கலந்துகொண்டார்.

வள்ளிநாயகி பிறந்து வளர்ந்த இடம் வள்ளிமலை. அவள் முருகன்பால் ஸந்மார்க்கத்தை அநுஷ்டித்துச் சிறந்த பக்தி

புடையவளாகி முருகப் பெருமானுடைய பேரன்புக்குப் பாத்திரமானாள். அவளுடைய களங்கமற்றதும், 'யான், எனது' அற்றதுமான தூய பக்திநிலையைக் கண்டு முருகப் பெருமான் வலிய, தம் பாத தாமரைகள் நோவத் திருத்தணிகையிலிருந்து நடந்து வந்து வேடனாகியும், வேங்கை மரமாகியும், செட்டியாகியும், விருத்தனாகியும், பல லீலைகள் செய்து அவளை மணந்த இடம் வள்ளிமலை. இங்ஙனம் முருகவேளை ஆகர்ஷித்த மலையாகிய வள்ளிமலையையே தமது தவத்திற்கு உகந்த இடமாகக்கொண்டு, அந்த மலையில் பர்வதராஜன் குன்று என்ற இடத்தை அர்த்தநாரி தமது இருக்கையாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். 1916 ஆ ஜூன் முதல் 1929 ஆ ஜூன் வரை அர்த்தநாரி சில காலங்கள் மலைமேலும், சில காலங்கள் யாத்திரையிலும், இன்னும் சில காலங்கள் சென்னையிலுமாக, ஆங்காங்குத் திருப்புகழைப் பாடிப் பரப்பிக் காலங் கழித்துக் கொண்டு வந்தார்.

பர்வதராஜன் குன்றுக்கிணையாகத் தவத்திற்குகந்த இடம் வேறு கிடைப்பது மிகவும் அரிது. மலைமேல் தவம் செய்வதற்கும், வாஸம் செய்வதற்கும் உகந்த அநேக குகைகள் உள்ளன. சுனைகளில் நல்ல தீர்த்தம் கிடைக்கும். நிழல் கொடுக்கப் பெரிய மரங்கள் உண்டு. முருகனுடைய வாகநமான மயில்கள் பல கண்ணுக்குக் களிப்பூட்டும். பல நூற்றாண்டுக் கணக்காகப் பலப் பல யோகியர் தவம் செய்த இடம் அது. புத்த ஸந்யாஸிகள் பலரும் தவம் செய்த இடங்கள் தனியே உள்ளன. மஹான்களின் ஸமாதிகள் மரத்தடிகளிலும் குகையடிகளிலும் காணக் கிடக்கின்றன. சிறுத்தை, குரங்கு, கீரி, ஸர்ப்பம் முதலியவைகளும் மனிதர்க்கு அஞ்சாமல் ஸஞ்சரிக்கின்றன. நள்ளிரவில் நிசப்தமாயிருக்கிற காலத்தில், ஸித்தர்கள் பாடக் கேட்கலாம். அர்த்தநாரியினுடைய 'ருத்ர ஜதி' என்ற வாத்யத்தைத் திருடிக்கொண்டு போய்க்கூட அந்த ஸித்தர்கள் சில ஸமயங்களில் பாடியிருக்கிறார்களாம்.

அர்த்தநாரி மைஸூரிலிருந்து பழநிக்குப் போய்ச் சேர்ந்த காலங்களில், அவருக்கு அங்கெல்லாம் 'மைஸூர் ஸ்வாமிகள்' என்றும், சென்னைக்கு வந்து போய்க்கொண்டிருந்த ஸமயங்

யாளில் 'முருகப் ப்ரம்மம்' என்றும், வள்ளிமலையில் நீடித்த தவ வாழ்க்கை நடத்திய பிறகு 'வள்ளிமலை ஸ்வாமிகள்' என்றும், 'ஸச்சிதானந்த ஸ்வாமிகள்' என்றும், 'திருப்புகழ் ஸ்வாமிகள்' என்றும் பெயர்கள் வழங்கி வந்தன. இனி அவரை ஸ்வாமிகள் என்றே குறிப்பிடுவோம்.

சென்னையில் ஸ்வாமிகள் 292, லிங்க செட்டித் தெருவில் இருந்த ஸ்ரீமான் வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் வீட்டில்தான் இறங்கித் தங்குவது வழக்கம். பிள்ளையவர்கள் தமிழில் மிகவும் வல்லவர்; சிறந்த முருக பக்தர்; ஆனாலும் இக்காரணங்களைக் கொண்டுதான் ஸ்வாமிகள் அங்கே தங்கினார் என்று சொல்லமுடியாது. ஸ்ரீமான் பிள்ளையவர்களின் தகப்பனார் ஸ்ரீமான் வ. த. ஸுப்ரம்மண்ய பிள்ளையவர்கள்தான் அருணகிரியாரின் திருப்புகழ்ப்பாக்கள் அனைத்தையும் சேகரித்து முதன் முதல் அச்சிட்டார். அவ்வாறு 1320 பாக்கள் தாம் 16,000-க்குள் இதுவரையும் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன; பழநியில் தாஸ் பாடினதைக் கேட்டவுடன், சென்னையில் அவர்களது விலாஸத்தைத் தெரிந்துகொண்டு அங்கிருந்துதான் ஸ்வாமிகள் திருப்புகழ்ப் புத்தகங்களை வரவழைத்துக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார். இக்காரணத்தைக் கொண்டே ஸ்வாமிகள் 'அருணகிரியார்க்குகந்த இடம் இது; திருப்புகழின் தாயகம்' என அவர்கள் இல்லத்தைக் கருதி அங்கே தங்குவதில் விருப்பங் கொண்டார்.

ஆங்கில வருஷந்தோறும் முதல் தேதி, உத்யோகஸ்தர்கள் துரைமார்களைப் பார்க்கப் பூவும், பழமும் கையிலேந்திக் கொண்டு போவது அக்கால வழக்கம். அதுகண்டு பொறாத நம் ஸ்வாமிகள், அந்தத் தினத்தில் தணிகைத் துரையைத் தர்சிப்பதுவே ஸரியானது என்று போதித்து 6 அடியார்களைக் கூட்டிக்கொண்டு 1917-ஆம் ஆண்டு டிஸம்பர் 31-ஆம் தேதியிலும், 1918-ஆம் ஆண்டு ஜநவரி 1-ஆம் தேதியிலும் தணிகையாண்டவனைத் தர்சிக்கச் சென்று, அருணகிரியார் ''திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும் திருத்தணி'' என்று பாடியதற்கேற்பத் திருப்புகழ் பாடிக்கொண்டே மலையேறித் திருப்புகழ்த் திருவிழாவை ஆரம்பித்து வைத்தார் அது இப்போது மேன் மேலும் பெருகி, வருஷா வருஷம் பல்லாயிரக் கணக்கில் ஜநங்

கள் கூடிச் செய்யும் முருககோஷம் வான் அளாவும் அளவுக்குப் பெருவிழாவாகித் திருத்தணிகையைச் சிவலோகமாகச் செய்து விட்டது.

'திருப்புகழைப் பரப்புக!' என்று இறைவன் குரு மூலமாகத் தமக்குக் கொடுத்த கட்டளையை நிறைவேற்ற ஆரம்பித்தார் ஸ்வாமிகள். வள்ளி மலைமீது அவர் பாடிய திருப்புகழின் நாதம் எங்கும் பரந்து நிறைந்து விளங்கலாயிற்று. அங்கிருந்த க்ராமவாஸிகள் படித்தறியாதவர்களாயிருந்தும் அவர் பாடிய திருப்புகழைக் கேட்கவும், கற்கவும், பாடவும் ஆரம்பித்தார்கள். பஜனைக் கோஷ்டிகள் பல, மலைமேல் ஆரம்பமாயின. இரவு முழுதும் குகைக்குள் திருப்புகழ்ப் பஜனைகள் நடக்கும். நாளாக,நாளாக நாடெங்கும் திருப்புகழைப் பரப்பச் சென்னை, செந்தூர், தணிகை முதலிய தென்னாட்டு ஊர்களிலும், கல்கத்தா, பம்பாய் முதலிய வடநாட்டு ஊர்களிலும், ஸ்வாமிகள் யாத்ரை செய்து திருப்புகழ்ப் பஜனை ஸபைகள் பல ஆங்காங்கு நிறுவித் திருப்புகழைப் பரப்பினார். அருணகிரியார் செங்கோட்டில் பாடிய பாடலில் கூறியவாறு, திருப்புகழ் மறுபடியும் 'பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர திக்குள பக்தர்கள் அற்புதம்' என ஓதுமாறு பரவத் தொடங்கியது. அருணகிரியார் 'இடக்கடக்கு மெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித் தெழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா!' (253) என்று திருத்தணித் திருப்புகழிற் பாடினாற்போல, மறுபடியும் திருப்புகழுக்கு உயிர்நிலைப் பலம் வள்ளிமலையிலிருந்துதான் ஏற்பட்டது.

ஸ்வாமிகள், ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளது உபதேசத்தைப் பூரணமாக நிறைவேற்றிவிட்டார். தம்மை ஆட்கொண்ட முருகப் பெருமானைத் திருப்புகழ் பாடுபவர்கள் ஒவ்வொருவருள்ளத்திலும், தர்சிக்கும் ஆற்றல் அவருக்கு ஏற்பட்டது. 4-1-1929-இல் சேஷாத்ரி ஸ்வாமிகள் மஹா ஸமாதி அடைந்தார். அச்சமயம் நம் ஸ்வாமிகள் திருவண்ணாமலைக்கு வந்து ஸமாதி கார்யங்களிற் கலந்துகொண்டார். பின்னரும் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தமக்குச் சொல்லியிருந்த வார்த்தைகளை—அதாவது 'நீ வள்ளிமலைக்குப் போ! நான் அங்கு வந்து சேருவேன்'—என்றதை ஞாபகப்படுத்திக் கொண்டு அவர் உடனே வள்ளி மலைக்குச் சென்று, அம்மலை மீது 12 வருஷங்கள்

(மலையை விட்டுக் கீழிறங்காமல்) அரிய தவம் செய்ய ஆரம்பித்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளும் அங்குத் தோற்றம் தர வந்து சேர்ந்தார். அவர் வந்தமை எங்ஙனம் என்று விளக்குவாம்.

திருவண்ணாமலையிலிருக்கையில், அநேகமாகச் சேஷாத்ரி ஸ்வாமிகள் சுடுகாட்டில்தான் தவம் செய்வது வழக்கம். அச்சுடுகாட்டிலிருந்த ஒரு வெட்டியான் அவர்மீது மிகவும் அன்பு வைத்திருந்தான். அவன், அவர் மறைந்த பின்னர் மிகவும் துக்கப்பட்டுக்கொண்டிருந்த காலத்தில் அவன் கனவில் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தோன்றி 'வள்ளிமலைக்குச் சென்றால் என்னை அங்கே பார்க்கலாம்' என்று சொன்னார். அவன் அவ்வாறே வள்ளிமலையைத் தேடிவந்து, அங்கு ஒரு கீரிப் பிள்ளையைப் பார்க்க, அது சேஷாத்ரி ஸ்வாமிகளாக மாறி அவனுக்கு ஒரு நிமிஷம் தோற்றம் கொடுத்தது. இதை வள்ளிமலை ஸ்வாமிகளும் அறிந்து, அக் கீரிக்குப் 'பெரியவர்' என்று பெயரிட்டு அவருக்குத் தினமும் வெல்ல அன்னம் நைவேத்யம் செய்து வந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளோ பெரிய ஸித்தர்; அவருக்கு அஷ்டமா ஸித்திகளும் எளியனவே; நம் ஸ்வாமிகட்கும் அந்த அஷ்டமா ஸித்திகளும் கைவந்தன. அநேக அற்புதச் செயல்கள் அவருடைய அடியார்கள் கண ஏற்பட்டன.

ஸ்வாமிகட்கு இளமையில் அதிக ஸங்கீத ஞானம் கிடையாது. ஆனாலும் அவர் திருப்புகழுக்கு ராக, தாளங்கள் அமைத்துள்ளார். இதை யோசித்தால் அவர் பூஜித்த வள்ளித் தாயாகிய 'பொங்கி' திருப்புகழைப் பாடக் கேட்டும், இந்த ஸித்தர்கள் பாடக் கேட்டுமே, அவ்வம்மையினுடைய திருவருளால் திருப்புகழுக்கு ராக, தாள நிர்மாணங்கள் அவரால் செய்ய முடிந்தது என நாம் ஊகிக்கலாம். வள்ளித் தாயைப் 'பொங்கி' என்றும் பெயரிட்டு ஸ்வாமிகள் வணங்கிவந்தார்.

சில ஸமயங்கள் ஸ்வாமிகள் அந்த ஆஹாரமின்றி யாரையும் பாராமல் குகைக்குள்ளேயே நிர்விகல்ப ஸமாதியில் இருந்துவிடுவார்; திருப்புகழ்ப் பஜனைகளும் அங்கேயே அப் பன்னிரண்டு வருஷங்களிலும் நடைபெற்றன. சென்னையிலிருந்து பக்தர்கள் பலர் வர ஆரம்பித்தார்கள். ஸ்வாமிகள் தவஞ் செய்த இடம் ஓர் ஆச்ரமமாகிவிட்டது. வந்தவர்கட்கெல்லாம் ஸ்வாமிகளால் அந்நம் அளிக்கப்பட்டது. பசுக்கள்

கள் கூடிச் செய்யும் முருககோஷம் வான் அளாவும் அளவுக்குப் பெருவிழாவாகித் திருத்தணிகையைச் சிவலோகமாகச் செய்து விட்டது.

'திருப்புகழைப் பரப்புக!' என்று இறைவன் குரு மூலமாகத் தமக்குக் கொடுத்த கட்டளையை நிறைவேற்ற ஆரம்பித்தார் ஸ்வாமிகள். வள்ளி மலைமீது அவர் பாடிய திருப்புகழின் நாதம் எங்கும் பரந்து நிறைந்து விளங்கலாயிற்று. அங்கிருந்த க்ராமவாஸிகள் படித்தறியாதவர்களாயிருந்தும் அவர் பாடிய திருப்புகழைக் கேட்கவும், கற்கவும், பாடவும் ஆரம்பித்தார்கள். பஜனைக் கோஷ்டிகள் பல, மலைமேல் ஆரம்பமாயின. இரவு முழுதும் குகைக்குள் திருப்புகழ்ப் பஜனைகள் நடக்கும். நாளாக,நாளாக நாடெங்கும் திருப்புகழைப் பரப்பச் சென்னை, செந்தூர், தணிகை முதலிய தென்னாட்டு ஊர்களிலும், கல்கத்தா, பம்பாய் முதலிய வடநாட்டு ஊர்களிலும், ஸ்வாமிகள் யாத்ரை செய்து திருப்புகழ்ப் பஜனை ஸபைகள் பல ஆங்காங்கு நிறுவித் திருப்புகழைப் பரப்பினார். அருணகிரியார் செங்கோட்டில் பாடிய பாடலில் கூறியவாறு, திருப்புகழ் மறுபடியும் 'பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர திக்குள பக்தர்கள் அற்புதம்' என ஓதுமாறு பரவத் தொடங்கியது. அருணகிரியார் 'இடக்கடக்கு மெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித் தெழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா!' (253) என்று திருத்தணித் திருப்புகழிற் பாடினாற்போல, மறுபடியும் திருப்புகழுக்கு உயிர்நிலைப் பலம் வள்ளிமலையிலிருந்துதான் ஏற்பட்டது.

ஸ்வாமிகள், ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளது உபதேசத்தைப் பூரணமாக நிறைவேற்றிவிட்டார். தம்மை ஆட்கொண்ட முருகப் பெருமானைத் திருப்புகழ் பாடுபவர்கள் ஒவ்வொருவருள்ளத்திலும், தர்சிக்கும் ஆற்றல் அவருக்கு ஏற்பட்டது. 4-1-1929-இல் சேஷாத்ரி ஸ்வாமிகள் மஹா ஸமாதி அடைந்தார். அச்சமயம் நம் ஸ்வாமிகள் திருவண்ணாமலைக்கு வந்து ஸமாதி கார்யங்களிற் கலந்துகொண்டார். பின்னரும் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தமக்குச் சொல்லியிருந்த வார்த்தைகளை—அதாவது 'நீ வள்ளிமலைக்குப் போ! நான் அங்கு வந்து சேருவேன்'—என்றதை ஞாபகப்படுத்திக் கொண்டு அவர் உடனே வள்ளி மலைக்குச் சென்று, அம்மலை மீது 12 வருஷங்கள்

(மலையை விட்டுக் கீழிறங்காமல்) அரிய தவம் செய்ய ஆரம்பித்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளும் அங்குத் தோற்றம் தர வந்து சேர்ந்தார். அவர் வந்ததமை எங்ஙனம் என்று விளக்குவாம்.

திருவண்ணுமலையிலிருக்கையில், அநேகமாகச் சேஷாத்ரி ஸ்வாமிகள் சுடுகாட்டில்தான் தவம் செய்வது வழக்கம். அச் சுடுகாட்டிலிருந்த ஒரு வெட்டியான் அவர்மீது மிகவும் அன்பு வைத்திருந்தான். அவன், அவர் மறைந்த பின்னர் மிகவும் துக்கப்பட்டுக்கொண்டிருந்த காலத்தில் அவன் கனவில் ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் தோன்றி 'வள்ளிமலைக்குச் சென்றால் என்னை அங்கே பார்க்கலாம்' என்று சொன்னார். அவன் அவ்வாறே வள்ளிமலையைத் தேடிவந்து, அங்கு ஒரு கீரிப் பிள்ளையைப் பார்க்க, அது சேஷாத்ரி ஸ்வாமிகளாக மாறி அவனுக்கு ஒரு நிமிஷம் தோற்றம் கொடுத்தது. இதை வள்ளிமலை ஸ்வாமிகளும் அறிந்து, அக் கீரிக்குப் 'பெரியவர்' என்று பெயரிட்டு அவருக்குத் தினமும் வெல்ல அன்னம் நைவேத்யம் செய்து வந்தார். சேஷாத்ரி ஸ்வாமிகளோ பெரிய ஸித்தர்; அவருக்கு அஷ்டமா ஸித்திகளும் எளியனவே; நம் ஸ்வாமிகட்கும் அந்த அஷ்டமா ஸித்திகளும் கைவந்தன. அநேக அற்புதச் செயல்கள் அவருடைய அடியார்கள் காண ஏற்பட்டன.

ஸ்வாமிகட்கு இளமையில் அதிக ஸங்கீத ஞானம் கிடையாது. ஆனாலும் அவர் திருப்புகழுக்கு ராக, தாளங்கள் அமைத்துள்ளார். இதை யோசித்தால் அவர் பூஜித்த வள்ளித் தாயாகிய 'பொங்கி' திருப்புகழைப் பாடக் கேட்டும், இதர ஸித்தர்கள் பாடக் கேட்டுமே, அவ்வம்மையினுடைய திருவருளால் திருப்புகழுக்கு ராக, தாள நிர்மாணங்கள் அவரால் செய்ய முடிந்தது என நாம் ஊகிக்கலாம். வள்ளித் தாயைப் 'பொங்கி' என்றும் பெயரிட்டு ஸ்வாமிகள் வணங்கிவந்தார்.

சில ஸமயங்கள் ஸ்வாமிகள் அந்ந ஆஹாரமின்றி யாரையும் பாராமல் குஹைக்குள்ளேயே நிர்விகல்ப ஸமாதியில் இருந்துவிடுவார்; திருப்புகழ்ப் பஜனைகளும் அங்கேயே அப் பன்னிரண்டு வருஷங்களிலும் நடைபெற்றன. சென்னையிலிருந்து பக்தர்கள் பலர் வர ஆரம்பித்தார்கள். ஸ்வாமிகள் தவஞ் செய்த இடம் ஓர் ஆச்ரமமாகிவிட்டது. வந்தவர்கட்கெல்லாம் ஸ்வாமிகளால் அந்நம் அளிக்கப்பட்டது. பக்கங்கள்

ஆச்ரமத்தில் போற்றப்பட்டன. அவற்றிற்குத் திருப்புகழி லிருந்தே கோபூஜை விதியை ஸ்வாமிகள் ஏற்படுத்தினர். ஸ்வாமிகளைச் சுற்றி, அடியார்கள் குடும்பம் பெரியதாக ஆக ஆரம்பித்து விட்டது. அடியார்கள் தங்கள் மனக் கவலைகள் நீங்கவும், வ்யாதிகள் தீரவும், அநுக்ரஹத்தை எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள். கர்ப்ப ஸ்த்ரீகள் ஸுகப் ப்ரஸவமாகும் பொருட்டு அங்குச் சென்று தங்குவார்கள். வ்யாதி தீராத குழந்தைகளையும் அங்குக் கொண்டு வந்து விடுவார்கள். புத்ர பாக்யம் பெற வேண்டி அம் மலைக்கு வருபவர்களும் உண்டு. அடியார்களின் குறைகள் அம்மலைமேல் தீர்க்கப்பட்டன. ''அஹங்காரத்தை விடுவதுதான் த்யாகம்; கார்யத்தை விடுவது த்யாகமில்லை'' என்று அடிக்கடி ரிஷீகேசம் ஸ்ரீ சிவாநந்த ஸ்வாமிகள் சொன்னது போல், நம் ஸ்வாமிகளது வாழ்க்கை அதனுடைய உண்மையை நன்றாக எல்லார்க்கும் விவரித்துக் காட்டியது.

1947-ஆம் வருஷத்திலிருந்து மஹா ஸமாதியானது (22-11-50) வரைக்கும் ஸ்வாமிகள் பெரும்பாலும் சென்னை யில்தான் வஸித்து வந்தார். ஸித்திகளையெல்லாம் சென்னை யில் காட்டவே இல்லை. இதற்குக் காரணம் அறியாதவர்கள் சிலர் 'ஸ்வாமி ஸ்தூலமாகிவிட்டார்' என்று தவறான அபிப் ராயங் கொண்டார்கள். ஆனால் அந்த மூன்று வருஷங்கள் தான் அவர் மிகவும் உந்நத ஸ்திதியில் குழந்தைபோல இருந் தார் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. யாரிடத்திலும் வித்யாஸம் பாராட்டாமல் எல்லார் மீதும் அன்பு செலுத்திக் கொண்டும், எல்லாருடைய அன்புக்கும் பாத்திரராக இருந்து கொண்டும், போகுமிடங்களில் எல்லாம் ஒரு ஸந்தோஷத்தை யும், சாந்தத்தையும் உண்டுபண்ணிக் கொண்டும் இருந்தார். முருகன் தம்மைத் த்யாநம் செய்த வள்ளியை எப்படித் தேடிக் கொண்டு போனாரோ அப்படியே ஸ்வாமிகளும் தம்மை அடி யார்கள் வந்து அடைந்து மர்யாதை செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்காமல் அவரவர்களின் வீட்டுக்குத் தாமே போய் அவர்கட்கு ஸந்தோஷத்தையளித்துக் கொண்டு வந்தார்.

1948-ஆம் வருஷத்திலேயே 'இந்தத் தேஹத்துடன் வெகு நாட்கள் இருக்கமாட்டோம்' என்று அவர் தெரிந்துகொண்டு



## வடதிருமுல்லைவாயில் — ஸ்ரீ வைஷ்ணவி தேவி

(வள்ளி அலங்காரம்)

(கட்டளைக் கலித்துறை)

சேருங்கள்! ஒன்றாக எல்லீரு மாய்என் திருஅழகைப்
பாருங்கள்! பார்த்து விழிவாயால் அள்ளிப் பருகிமகிழ்
கூருங்கள்! நும்குறை தீருங்கள்! வந்து குடியிருங்கள்!
வாருங்கள்! என்பாய்! **வடமுல்லை வாயில்வாழ்**
**வைஷ்ணவியே!**

(—அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்)

விட்டார். தாம் தம் அடியார்கட்குச் செய்ய வேண்டியவுதவிகளைச் சுறுசுறுப்பாகச் செய்யத் தொடங்கினார். தம் பக்தர் குழாத்தைச் சேர்ந்த ஒரு கன்னிகையைக் கல்யாணம் செய்து கொடுப்பதோ, ஓர் அடியவனுக்கு வேலை வாங்கித் தருவதோ, தாம் பூஜித்த இஷ்ட தெய்வத்தைப் ப்ரதிஷ்டை செய்வதோ, இம்மாதிரியான கார்யங்களிலெல்லாம் ஈடுபட்டு அவற்றை முடித்து வைத்தார்.

ஸ்வாமிகளால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு, 'வைஷ்ணவி' என்றும், 'பொங்கி' என்றும் அழைக்கப்பட்ட ஸ்ரீ தேவி தற்போது வடதிருமுல்லைவாயிலிற் குடிகொண்டு அநேகம் பக்தர்களை வசீகரித்து அருள் புரிந்துகொண்டிருக்கிறாள்.

14-4-1950-இல் ஸ்ரீ ரமண மஹரிஷிகள் மஹா ஸமாதியடைந்தார். ஸ்வாமிகள் தமது இரண்டு குருமார்களும் மறைந்த பிறகு, தாமும் அவர்களுடன் சேர வேண்டுமென்றெண்ணி 22-11-1950-இல் தம் தேஹத்தை உதறிவிட்டுக் கைவல்ய ஸமாதி அடைந்தார். வள்ளிமலையில் எந்தக் குஹையில் அவர் அதிக காலம் தவம் செய்து திருப்புகழ் பாடிக் காலங் கழித்தாரோ, அதே குஹையில் அவர் திருமேனி ஸமாதி செய்யப்பட்டது.

ஸ்வாமிகள் இருந்த காலத்து எவ்வாறு, படர வழியின்றிப் பரதவிக்கும் கொடி போன்ற அடியார்களுக்குக் கொழுகொம்பாக நின்று பேருதவி புரிந்து வந்தனரோ அவ்வாறே தம் உடல் மறைந்த பின்னரும் தோன்றாத் துணைவராக இன்றும், நாளையும், என்றும் பற்றுக்கோடாக இருந்து பக்தர்களை ரக்ஷித்து வருவது ப்ரத்யக்ஷம்.

ஸ்வாமிகள் திருப்புகழாதிய நூல்களிலிருந்து தொகுத்த நூல்கள்:—

1. பாராயணத் தவநெறித் திருமுறை. (மகுடங்களுடன்)
2. வேல்மாறல்.
3. மெய்க்காவல்.
4. கோபூஜை.
5. அநுஷ்டானத் திருப்புகழ்.
6. மநத்துக்கும் அறிவுக்கும் தர்க்கம்.

7. பாராயணக் குண்டு.
8. வள்ளி கல்யாணம்.
9. மார்கழிப் பாராயணத் திருமுறை.

ஸ்ரீ ரமண மஹரிஷிகளை ஓர் அடியார் கேட்டார், "நான் தெய்வத்தை அறிந்தால் அதனால் மற்றையோர்க்கு என்ன பயன்?" என்று. "மற்றவர்கட்குச் செய்யும் ஸஹாயத்தில் இதைவிட உயர்ந்தது வேறொன்றுமில்லை" என்று மஹரிஷிகள் பதில் சொன்னார்.

உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளிடத்திலும் இறைவன் விளங்குகிறான் என்ற உண்மை, தெய்வத்தை அறிந்த ஒருவனுக்கு நன்றாகத் தெரிந்துவிடுகின்றது. அப்போது தெய்வத்தினிடம் அவன் காட்டவேண்டிய அன்பையே, தெய்வ ஸொரூபமாகிய ஏனைய ஜீவராசிகளிடத்தும் காட்டித், தன் த்யானத்தாலும், மநத்தாலும், சரீரத்தாலும், உபதேசத்தாலும் இன்னும் எல்லா வழிகளிலும் அவர்களுக்கு அவன் உதவி புரிகிறான் என்பது மஹரிஷிகளின் பதிலால் தெரிகின்றது. ஆதலால், மஹான்களுடைய சரித்ரங்களிலிருந்து நாம் முக்யமாக அறிந்துகொள்ள வேண்டிய கருத்து என்னவென்றால், அவர்கள் மற்றையோர்மீது செலுத்தின அன்புதான். அன்பில்லாவிடில் உலகம் ஏது?

அன்பே தெய்வம்; தெய்வமே அன்பு!

(ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமிகளின் சரித்ரச் சுருக்கம் முற்றும்)

---

குறிப்பு :- இப் புத்தகத்தில் அருணகிரியார், வள்ளிமலை ஸ்வாமிகள் ஆகிய இருவரின் சரித்ரச் சுருக்கங்களிலும் அச்சிடப்பெற்றுள்ள திருப்புகழ் எண்கள் திரு. வ. த. ஸுப்ரமண்யப் பிள்ளையவர்களின் பதிப்பெண்கள்.

உ

கணபதி துணை

வேலு மயிலுந் துணை





# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை

[வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள் அவர்கள் தொகுத்தருளியது]

ராகம்: - நாட்டை] 1. ஸங்கல்பம் [நேரிசை வெண்பா

(அபியுக்தர் பாட்டு)

ஆனைமுக வற்கிளைய ஐயா! அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை-யான்நினைந்து
போற்றிடவும் நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலம்
சாத்திடவும் ஓதிடவும் தா!

நாட்டை] 2. கந்தரநுபூதி [கலிவிருத்தம்

'மயில், வேல், சேவல்' எனப் பாடும் பணி பெற

'ஆடும் பரிவேல் அணிசேவல்' எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்!
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியானை ஸஹோதரனே!

நாட்டை] 3. தீபம் [கட்டளைக் கலித்துறை

(கந்தரந்தாதி)

தீவினை யற்ற சினந்தீர் அகத்துள்மெய்த் தீப(ம்) நந்தம்
தீவினை யற்றவ நந்தா தெடுத்தனம் செந்தினைமேல்
தீவினை யற்ற புனமான் கொழுநன் செழுங்கநகத்
தீவினை யற்ற அடியார்க் கருள்பெருஞ் செல்வனுக்கே.

4. ✱அருணகிரிநாத ஸ்வாமிகள் வணக்கம் [சை
நாட்டை அல்லது மாயாமாளவ கௌளம்]

அந்தாதி இல்லா இறைவனுக் கந்தாதி அன்றுரைத்தும்
நந்தா வகுப்பலங் காரம் அவற்கே நனிபுனைந்தும்
முந்தா தரவில் அவன்புகழ் பூதியும் முற்றுஞ்சொன்ன
எந்தாய்! அருண கிரிநாத! என்னைநீ ஏன்றருளே!

ஆரபி] 5. ✱திருப்புகழ் ஸுப்ரம்மண்ய நாயனூர் வணக்கம் [ஆதி

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

தில்லைமூ வாயிரவர் தம்பெருமை சொல்லும்
திருப்புகழின் அழகதனைக் கண்டுகளி கொண்டே
எல்லையில்லாப் பேரின்பத் தோடேடு தேடி
எந்தைதிருப் புகழதனிற் பதின்மூன்று நூறிங்(கு)
ஒல்லைஅச்சிட் டுலகினருக் குதவியபே ராளர்
உயர்குணஸுப் பிரமணியர் நிறைதவத்துச் சீலர்
நல்லரவர் சீர்பாதம் நாளும்நினைந் தேத்தி
நாடிவரு வினைகளவை ஓடிடவெல் வோமே.

நாதநாமக்ரியா] 6. ✱ஸச்சிதாநந்த குரு வணக்கம் [ஆதி

(ஆசிரியப்பா)

வள்ளி மலையே வாழிட மாக
வதிந்து மகிழ்ந்த வள்ளால்! போற்றி!
செந்தமிழ் நாடெலாம் திரிந்து பரிந்தே
திருப்புகழ் செப்பிய திறத்தோய்! போற்றி!
பழநி யாண்டவர்த் தொழுபவ! போற்றி!

தணிமலை முருகனைப் பணிபவ! போற்றி!
அடியார் தமதடிப் பொடிசூ டியஎம்
ஸச்சிதா நந்த ஸாமீ! போற்றி!
திருப்புகழ் அடியார் திருவடிச் சென்னியார்
எனப்பெயர் பூண்ட இன்பனே! போற்றி!

✱பாடல்கள் 4-முதல் 7-வரை தணிகைமணி, - ராவ்'ஹுதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். ஏ. அவர்கள் பாடித் தந்தவை.

பக்திப் பயிரைப் பண்புற வளர்த்த
வித்தக முகிலே! வேதிய! போற்றி!
வேல்மாறல் தந்த விறலோய்! போற்றி!
திருப்புகழ்க் குபேர! செல்வனே! போற்றி!
'மயிலையும் அவன்கை அயிலையுங் கடைக்கண் 15

இயலையும் நினைக்க எல்லீரும் வாரீர்!'
எனஅறை கூவும் எழில்வீர! போற்றி!
திருப்புகழ் யோகீ! திருப்புகழ் ஞாநீ!
அருளுக! அருளுக! அல்லல்நோய் அறவே
வழங்குக! வழங்குக! மயிலோன் ப்ரஸாதமே. 20

மாண்டு] 7. *ஷை [ஆதி

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

பச்சைமால் மருகன் கீர்த்தி பகர்திருப் புகழை நாளும்
இச்சையால் ஓதும் நாவன் எம்பிராற் காவி யாகும்
இச்சையாள் வள்ளி பாத இருதயன் எங்கள் ஆசான்
ஸச்சிதா நந்தன் பாத சரணமே சரண் எமக்கே.

## 8. அடியார் வணக்கம்

(அபியுக்தர் பாட்டு)

நாட்டை அல்லது ஷண்முகப்ரியா] [கட்டளைக்கலித்துறை

தருப்புகழ் வல்ல ஸுரர்மகள் நாயகன் சங்கரற்குக்
குருப்புகழ் வல்ல குமரேசன் ஷண்முகன் குன்றெறிந்தோன்
மருப்புகழ் வல்ல அருண கிரிப்பெயர் வள்ளல்சொன்ன
திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளிஎன் சென்னியதே.

## 9. கலைமகள் வணக்கம்

வள்ளிமலை ஸ்வாமிகள் கனவிற் கேட்டது)

ஆநந்தபைரவி] [கட்டளைக்கலித்துறை

வெள்ளைக் கலைச்சி விதிநா இடத்திநல் வெண்கமலக்
கிள்ளைக் கரத்திஸங் கீதாம்ரு தத்தி கிளிமொழிச்சி
எள்ளத் தனையும் இகழாப் புகழ்வாக் கினிக்கஎன்றன்
உள்ளத் திருந்தே உதவிசெய்! வாலையாம் உத்தமியே.

---

'வள்ளிமலை வள்ளல் பக்கம் 124-பார்க்க.'

## ஆண்டவர் அருள் வணக்கம்

ஆநந்தபைரவி] 10. வழிபாடு மறவாமை [ஆதி

தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன தனதான

நினது திருவடி சக்திம யிற்கொடி
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழம் அப்பமும் நிகழ்பால்தேன்-

நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்
நிறவில் அரிசிப ருப்பவல் எட்பொரி
நிகரில் இனிகத லிக்கனி வர்க்கமும் இளநீரும்;

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர ஜலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக-

மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வனஜ பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே!

ஸிம்மேந்த்ர மத்யமம்]

தெனன தெனதென தெத்தென னப்பல
சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளும் உறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை-

செரும உதரம்நி ரப்புசெ ருக்குடல்
நிரைய அரவம்நி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் ஜெகஜேஜே!

எனவெ துகுதுகு துத்தென ஒத்துகள்
துடிகள் இடிமிக ஒத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிம் எனத்தவில் எழும்ஓசை-

இகலி அலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரும் நிசிசர ரைப்பெலி யிட்டருள் பெருமாளே-

## கணபதி துதி

### 11. கந்தரநுபூதி-காப்பு

நாட்டை அல்லது கரஹரப்ரியா] [கலிவிருத்தம்

நெஞ்சக் கனகல் லு(ம்)நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்ஷண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக கரஆ னைபதம் பணிவாம்.

### நாட்டை] 12. கந்தரந்தாதி-காப்பு [கட்டளைக்கலித்துறை

வாரணத் தானை அயனைவிண் ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென் றோன்மைந் தனைத்துவஜ
வாரணத் தானைத் துணைநயந் தானை வயல்அருணை
வாரணத் தானைத் திறைகொண்ட யானையை வாழ்த்துவனே.

### நாட்டை] 13. மலர்கொடு பணிய [ஆதி

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான

'கைத்தல(ம்) நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன்! அடிபேணிக்-
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ!
கற்பகம்!' எனவினை கடிதேகும்;
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே;
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே-
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா;
அத்துயர் அதுகொடு ஸுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி-
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

நவரோஸ் அல்லது ஆநந்தபைரவி] 14. அருள்பெற [ஆதி

தந்ததனத் தானதனத் தனதான

உம்பர்தருத் தேநுமணிக் கசிவாகி-
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி;
இன்பரசத் தேபருகிப் பலகாலும்-
எனறன்உயிர்க் காதரவுற் றருள்வாயே;
தம்பிதனக் காகவனத் தணைவோனே-
தந்தைவலத் தால்அருள்கைக் கனியோனே;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே-
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே.

மோஹநம்] 15. அருள் மறவாமை [ஆதி

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனும் உக்ரதுர கமு(ம்)நீபப்-
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்;
திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்-
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பென எனக்கருள்கை மறவேனே;
இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடன்நெய்
எட்பொரி அவற்றுவரை இளநீர்வண்-
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழம் இடிப்பல்வகை தனிமூலம்;
மிக்கஅடி சிற்கடலை பக்ஷணம் எனக்கொள்ஒரு
விக்கிந ஸமர்த்தனெனும் அருளாழி-
வெற்ப!குடி லச்சடில விற்பரமர் அப்பரருள்
வித்தக! மருப்புடைய பெருமாளே.

ஹரிகாம்போதி] 16. கந்தரந்தாதி-காப்பு [கட்டளைக்கலித்துறை

உண்ணு முலையுமை மைந்தா சரண்அம் பரர்உயிர்சேர்
உண்ணு முலையுமை மைந்தா சரணம் அருணைவெற்பாள்
உண்ணு முலையுமை மைந்தா சரணந் தனமும்ஒப்பில்
உண்ணு முலையுமை மைந்தா! சரணம் சரண்உனக்கே.

கேதாரகௌளம்] 17. உலக உபதேசம் [ஷ்

(கந்தரலங்காரம்)

தடுங்கோள்! மனத்தை; விடுங்கோள்! வெகுளியைத்
[தானம்என்றும்
இடுங்கோள்! இருந்த படிஇருங் கோள்!எழு பாரும்
[உய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்கத் தொளைக்க
[வைவேல்
விடுங்கோன் அருள்வந்து தானே உமக்கு வெளிப்படுமே.

கேதாரகௌளம்] 18. கடைக்கணியல் வகுப்பு [ஆதி

தனதன தனந்த தத்த தனதன தனந்த தத்த
தனதன தனந்த தத்த தானனு

எடுப்பு

[வாருமே! நீங்கள் வாருமே! பெருத்த பாருளீர்! நீங்கள்
வாருமே! வந்து மயிலையும் அவன் திருக்கை
அயிலையும் அவன் கடைக்கண் இயலையும் நினைந்
திருக்க வாருமே! நீங்கள் வாருமே! நீங்கள் வாருமே!]

அலைகடல் வளைந்து டுத்த எழுபுவி புரந்தி ருக்கும்
அரசென நிரந்த ரிக்க வாழலாம்
அளகைஅர சந்த னக்கும் அமரர்அர சந்த னக்கும்
அரசென அறஞ்செ லுத்தி ஆளலாம்
அடைபெறுவ தென்று முக்தி அதிமதுர செந்த மிழ்க்கும்
அருள்பெற நினைந்து ஸித்தி ஆகலாம்
அதிரவரும் என்று முட்ட அலகில்வினை சண்டை நிற்க
அடல்எதிர் புரிந்து வெற்றி ஆகலாம்)
இலகிய நலஞ்செய் புஷ்ப கமும்உட னிறம் வெளுத்த
இபஅர செனும்பொ ருப்பும் ஏறலாம்
இருவர்அவர் நின்றி டத்தும் எவர்எவர் இருந்தி டத்தும்
ஒருவன்இவன் என்று ணர்ச்சி கூடலாம்
எமபடர் தொடர்ந்த ழைக்கில் அவருடன் எதிர்ந்துள் உட்க
இடிஎன முழங்கி வெற்றி பேசலாம்
இவைஒழிய வும்ப லிப்ப தகலவிடும் உங்கள் வித்தை
யினைஇனி விடும்பெ ருத்த பாருளீர்;

கல்யாணி] (வாருமே)

மூலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகென வண்டி ரைபப
முகைஅவிழ் கடம்ப டுத்த காரினுன்

முதலிபெரி யம்ப லத்துள் வரைஅசல மண்ட பத்துள்
முநிவர்தொழ அன்று நிர்த்தம் ஆடினன்

முனைதொறு முழங்கி ஒற்றி முகில்என இரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட கோழியான்

முதியவுணர் அன்று பட்ட முதியகுடர் நன்று சுற்று
முதுகழுகு பந்தர் இட்ட வேலினன்

மலைமருவு பைம்பு னத்தி வளரும்இரு குன்றம் ஒத்தி
வலிகுடி புகுந்தி ருக்கும் மார்பினன்

மழலைகள் விளம்பி மொய்த்த அறுவர்முலை உண்டு முற்றும்
வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினன்

மலைஇறை மடந்தை பெற்ற ஒருமதலை என்று தித்து
மலைஇடிய வுந்து ணித்த தோளினன்

மயிலையும் அவன்தி ருக்கை அயிலையும் அவன் கடைக்கண்
இயலையும் நினைந்தி ருக்க வாரும்.

## 19. முருகன் நாம விசேஷம்

(கந்தரலங்காரம்)

காம்போதி அல்லது கானடா] [கட்டளைக் கலித்துறை

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமான்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலம்அடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே.

## 20. உலகுக்கு உபதேசம்

தோடி] [ஷை

(ஷை)

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச்
[செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

## அறுபதி துதி

சுருட்டி] 21. ஆறு திருப்பதியை ஓதுக [ஷே

(கந்தரந்தாதி)

திருவாவி னன்குடி பங்காளர் எண்முது சீருரைச
திருவாவி னன்குடி வானோர் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி ஏரகங் குன்றுதொ ருடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே.

சுருட்டி] 22. அடிமையாக [கண்டஜாதி த்ரிபுடை

தானதனத் தனதனன தனதான

ஈனமிகுத் துளபிறவி அணுகாதே-
யானும்உனக் கடிமைஎன வகையாக;
ஞானஅருட் டனைஅருளி வினைதீர-
நாணம்அகற் றியகருணை புரிவாயே;
தானதவத் தினின்மிகுதி பெறுவோனே-
சாரதிஉத் தமிதுணைவ! முருகோனே;
ஆனதிருப் பதிகம்அருள் இளையோனே-
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே.

## ஸ்வாமி வரவு

ஹம்ஸத்வநி] 23. வினை பொடிபட [கட்டளைக்கலித்துறை.

(கந்தரந்தாதி)

சீகர சிந்துர வுத்தவெஞ் சூர ஜெய!புயவ
சீகர சிந்துர வல்லிசிங் கார! சிவ...த!சு
சீகர! சிந்துர கந்தர வாகன் சிறைவிடும்சு
சீகர! சிந்துர மால்வினைக் குன்றைச் சிகண்டிகொண்டே.

### 24. பிரார்த்தனை-இறப்பதற்கு முன் காத்தருள்!

(கந்தரலங்காரம்-கட்டளைக் கலித்துறை)

(அந்தந்த வாரத்து முதற் பாட்டுக்கு ஏற்ற ராகத்தில் பாடவும்)

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ்
[செழுஞ்சுடரே!
வைவைத்த வேற்படை வானவனே! மறவேன் உனை நான்
ஐவர்க் கிடம்பெறக் கால்இரண் டோட்டி அதில்இரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே!

### ஆதிவாரம் (ஞாயிற்றுக் கிழமை)-திருப்பரங்குன்றம்

ஆநந்தபைரவி] 25. பாவம் ஒழிய [த்ரிபுடை

தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன தனதான

கனகந்திரள் கின்ற பெருங்கிரி
தனில்வந்து தகன்தகன் என்றிடு
கதிர்மிஞ்சிய செண்டை எறிந்திடு கதியோனே-
கடமிஞ்சி அநந்த விதம்புணர்
கவளந்தனை உண்டு வளர்ந்திடு
கரியின்துணை என்று பிறந்திடு முருகோனே;
பனகந்துயில் கின்ற திறம்புனை
கடல்முன்பு கடைந்த பரம்பரர்
படரும்புயல் என்றவர் அன்புகொள் மருகோனே-
பலதுன்பம் உழன்று கலங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவம்இன்று கழிந்திட வந்தருள் புரிவாயே;

ஹிம்மேந்த்ர மத்யமம்]

அனகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட இன்புடன்
அழலுந்த நகுந்திறல் கொண்டவர் புதல்வோனே-
அடல்வந்து முழங்கி யிடும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்டம் நெரிந்திட வருசூரர்;
மனமுந்தழல் சென்றிட அன்றவர்
உடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில்வென்தனில் வந்தரு ளுங்கன பெரியோனே-
மதியுங்கதி ருந்தட வும்படி
உயர்கின்ற வனங்கள் பொருந்திய
வளமொன்று பரங்கிரி வந்தருள் பெருமாளே;

நீலாம்பரி] 26. காலன் வரும்போது காட்சி பெற [ஆதி

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான

உனைத்தி னந்தொழு திலன்உன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடுன் அடிஇணை
உறப்ப ணிந்திலன் ஒருதவம் இலன்உன
[தருள்மாறு-

உளத்துள் அன்பினர் உறைவிடம் அறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன்
[மலைபோலே;

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலிதன் உழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு
[பொருபோதே-

கலக்கு றுஞ்செயல் ஒழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தில் என்பயம் அறமயில் முதுகினில்
[வருவாயே;

மோஹநம்]

வினைத்த லந்தனில் அலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெய் உகுதசை கழுகுண
விரித்த குஞ்சியர் எனும்அவு ணரைஅமர்
[புரிவேலா-

மிகுத்த பண்பயில் குயில்மொழி அழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தந ம்ருகமத புயவரை
[உடையோனே;

தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநி வரர்தொழ
[மகிழ்வோனே-

தெனத்தெ னந்தன எனவரி அளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனில்உறை சரவண பெருமானே

முகாரி] **27. அடியார்களுடன் வரும்தரிசனம்பெற** [த்ரிபுடை; ஆதி

*தனதான தந்ததன தனதான தந்ததன*
*தனதான தந்ததன தனதான*

சிவஞாந புண்டரிக மலர்மாது டன்கலவி
சிவபோக மன்பருக அறியாமல்-
ஜெகமீது மூன்றுமல வடிவாய் இருந்துபொது
திகழ்மாதர் பின்செருமி அழிவேனோ;
தவமா தவங்கள்பயில் அடியார் கணங்களொடு
தயவாய் மகிழ்ந்துதினம் விளையாடத்-
தமியேன் மலங்களிரு வினைநோய் இடிந்தலற
தநிநாளும் வந்ததென்முன் வரவேணும்;

மோஹநம்]

உவகாரி அன்பர்பணி கலியாணி எந்தையிடம்
உறைநாய கம்கவுரி சிவகாமி-
ஒளிர்ஆனை யின்கரமில் மகிழ்மாது ளங்கனியை
ஒருநாள் பகிர்ந்தஉமை அருள்பாலா;
அவமே பிறந்தஎனை இறவாமல் அன்பர்புகும்
அமுதால யம்பதவி அருள்வோனே-
அழகா! நகம்பொலியு மயிலா! குறிஞ்சிமகிழ்
அயிலா! புகழ்ந்தவர்கள் பெருமாளே.

ஆரபி] **28. யமன் வரும்போது துயர் கெட வர** [ஆதி

*தனந்த தானந் தனதன தானன தனதான*

இசைந்த ஏறுங் கரிஉரி போர்வையும் எழில்நீறும்-
இலங்கு நூலும் புலிஅதள் ஆடையும் மழுமானும்;
அசைந்த தோடும் சிரமணி மாலையும் முடிமீதே-
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா;
உசந்த சூரன் கிளையுடன் வேர்அற முனிவோனே-
உகந்த பாசம் கயிறொடு தூதுவர் நலியாதே;
அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்-
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே.

## ஸோமவாரம் (திங்கட்கிழமை) - திருச்செந்தூர்

### ...த்யமாவதி] 29. தரிசநம் பெற [ஆதி

தந்ததன தந்தனந் தந்ததன தந்தனந்
தந்ததன தந்தனந் தந்ததான

தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையும்
தண்கழல் சிலம்புடன் கொஞ்சவேநின்-
தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநல்
ஸந்தொஷம் அணைந்துநின் றன்புபோலக்;
கண்டுற கடம்புடன் சந்தமகு டங்களும்
கஞ்சமலர் செங்கையும் சிந்துவேலும்-
கண்களு முகங்களும் சந்திர நிறங்களும்
கண்குளிர என்றன்முன் ஸந்தியாவோ;
புண்டரிகர் அண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கிஎழ வெங்களங் கொண்டபோது-
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும் வளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையும் சிந்தைகூரக்;
கொண்டநட நம்பதம் செந்திலிலும் என்றன்முன்
கொஞ்சிநட நங்கொளும் கந்தவேளே-
கொங்கைகுற மங்கையின் சந்தமணம் உண்டிடும்
கும்பமுநி கும்பிடும் தம்பிரானே.

### ஹரிகாம்போதி] 30. மயில்மீது வந்தருள் [ஆதி

தந்ததன தான தானத் தான
தந்ததன தான தானத் தான
தந்ததன தான தானத் தான தனதான

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே-
முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை ஆளத் தானு முனைமீதே;
திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடும்-
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேஎப் போது வருவாயே?

அந்தண்மறை வேள்வி காவற் கார!
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார!
அண்டர்உப கார! சேவற் கார! முடிமேலே-

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார!
குன்றுருவ ஏவும் வேலைக் கார!
அந்தம்வெகு வான ரூபக் கார! எழிலான!

ஸிந்துரமின் மேவு போகக் கார!
விந்தைகுற மாது வேளைக் கார!
செஞ்சொல்அடி யார்கள் வாரக் கார! எதிரான-

செஞ்சமரை மாயு மாயக் கார!
துங்கரண சூர சூறைக் கார!
செந்தில்நகர் வாழும் ஆண்மைக் கார! பெருமாளே.

## ஆரபி] 31. அகப்பொருள் [ஆதி

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

* விறல்மாரன் ஐந்து மலர்வாளி சிந்த
மிகவானில் இந்து வெயில்காய-

மிதவாடை வந்து தழல்போல ஒன்ற
வினைமாதர் தம்தம் வசைகூறக்!

குறவாணர் குன்றில் உறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்-

குளிர்மாலை யின்கண் அணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ?

மறிமான் உகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா-

மலைமாவு சிந்த அலைவேலை அஞ்ச
வடிவேல் எறிந்த அதிதீரா!

அறிவால் அறிந்துன் இருதாள் இறைஞ்சும்
அடியார் இடைஞ்சல் களைவோனே-

அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே.

---

* திருமணம் ஆகாத கன்னிப் பெண்கள் இப்பாடலைத் தினமும் பக்தியுடன் ஓதி வந்தால் விரைவில் திருமணம் ஆகும் எனச் சுவாமிகள் உபதேசிப்பது வழக்கம்.

ஸிந்துபைரவி] 32. தரிசனம் பெற [ஆதி

தந்ததன தனதான தந்ததன தனதான
தந்ததன தனதான தனதான

அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ்மீற அருளாலே-
அந்தரியொ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனும் உமையாளும் மகிழ்வாக;
மண்டலமு முநிவோரும் எண்டிசையில் உளபேரும்
மஞ்சினனும் அயனாரும் எதிர்காண-
மங்கையுடன் அரிதானும் இன்பமுற மகிழ்கூற
மைந்துமயி லுடன்ஆடி வரவேணும்;
புண்டரிக விழியாள! அண்டர்மகள் மணவாள!
புந்திநிறை அறிவாள! உயர்தோளா!
பொங்குகட லுடன்நாகம் விண்டுவரை இகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா;
தண்டரள மணிமார்ப! செம்பொன்எழில் செறிரூப!
தண்டமிழின் மிகுநேய! முருகேசா-
ஸந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே.

## மங்களவாரம் (செவ்வாய்க்கிழமை)-திருவாவினன்குடி

காம்போதி] 33. ஞானிகளோடு இணங்க [ஆதி

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தனதான

மூல மந்திரம் ஓதல் இங்கிலை
ஈவ திங்கிலை நேயம் இங்கிலை
மோநம் இங்கிலை ஞாநம் இங்கிலை மடவார்கள்-
மோகம் உண்டதி தாகம் உண்டப
சாரம் உண்டப ராதம் உண்டிடு
மூகன் என்றொரு பேரும் உண்டருள் பயிலாது;
கோல முங்குண ஈன துன்பர்கள்
வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பியி லேவி ழுந்திட நினைவாகிக்-
கூடு கொண்டுழல் வேனை அன்பொடு
ஞாந நெஞ்சினர் பால் இணங்கிடு
கூர்மை தந்தினி ஆள வந்தருள் புரிவாயே;

பீலி வெந்துயர் ஆலி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டருள் எழுதேடு-

பேணி அங்கெதிர் ஆறு சென்றிட
மாற னும்பிணி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு ஏற வென்றிடு முருகோனே!

ஆலம் உண்டவர் ஜோதி அங்கணர்
பாகம் ஒன்றிய வாலை அந்தரி
ஆதி அந்தமும் ஆன சங்கரி குமரேசா-

ஆர ணம்பயில் ஞாந புங்கவ!
சேவ லங்கொடி ஆன பைங்கர!
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே.

நாட்டைக் குறிஞ்சி] 34. ஞாநம் பெற [ஜம்பை

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன தனதான

சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரம் இரு
செவிமீதி லும்பகர்செய் குருநாத-

சிவகாம ஸுந்தரிதன் வரபால! கந்த! நின
செயலேவி ரும்பிஉளம் நினையாமல்!

அவமாயை கொண்டுலகில் விருதா அலைந்துழலும்
அடியேனை அஞ்சலென வரவேணும்-

அறிவாக மும்பெருக இடரான தும்தொலைய
அருள்ஞாந இன்பம்அது புரிவாயே!

காம்போதி]

நவநீத மும்திருடி உரலோடெ ஒன்றும்அரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே-

நவலோக மும்கைதொழும் நிஜதேவ லங்கிருத!
நலமான விஞ்சைகரு விளைகோவே!

தெவயானை அம்குறமின் மணவாள! ஸம்ப்ரம்உறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா-

திருவாவி னன்குடியில் வருவேள்! ஸ வுந்தரிக!
ஜெகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே.

ஹரிகாம்போதி] 35. மயில் மீது காட்சி பெற [த்ரிபுடை

தனதத்தன தான தந்தன
தனதத்தன தான தந்தன
தனதத்தன தான தந்தன தனதான

மகர்தற்கரி தான செந்தமிழ்
இசையிற்சில பாடல் அன்பொடு
பயிலப்பல காவி யங்களை உணராதே-
பவளத்தினை வீழி யின்கனி
அதனைப்பொரு வாயம டந்தையர்
பசலைத்தன மேபெ றும்படி விரகாலே;
ஸகரக்கடல் சூழும் அம்புவி
மிசைஇப்படி யேதி ரிந்துழல்
சருகொத்துள மேஅ யர்ந்துடல் மெலியாமுன்-
தகதித்திமி தாகி ணங்கிண
எனஉற்றெழு தோகை அம்பரி
தனில்அற்புத மாக வந்தருள் புரிவாயே;
நுகர்வித்தக மாகும் என்றுமை
மொழியிற்பொழி பாலை உண்டிடு
நுவல்மெய்ப்புள பாலன் என்றிடும் இளையோனே-
நுதிவைத்த கராம லைந்திடு
களிறுக்கரு ளேபு ரிந்திட
நொடியிற்பரி வாக வந்தவன் மருகோனே;
அகரப்பொருள் ஆதி ஒன்றிடு
முதல்அக்கரம் ஆன தின்பொருள்
அரனுக்கினி தாமொ ழிந்திடு குருநாதா-
அமரர்க்கிறை யேவ ணங்கிய
பழநித்திரு வாவி னன்குடி
அதனிற்குடி யாய்இ ருந்தருள் பெருமாளே.

காதநாமக்ரியா] 36. தரிசநம் பெற [ஆதி

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான

நாடா பிறப்புமுடி யாதோ எனக்கருதி
நாயேன் அரற்றுமொழி வினையாயின்-
நாதா! திருச்சபையின் ஏறுது சித்தமென
நாலா வகைக்கும்உன தருள்பேசி;
வாடா மலர்ப்பதவி தா! தா! எனக்குழறி
வாய்பாறி நிற்கும்எனை அருள்கூர-

வாராய்! மனக்கவலை தீராய்! நினைத்தொழுது
வாரேன் எனக்கெதிர்முன் வரவேணும்;

சூடா மணிப்பிரபை ரூபா! கனத்தஅரி
தோலா ஸனத்தி உமை அருள்பாலா-

தூயா! துதித்தவர்கள் நேயா! எமக்கமிர்த
தோழா! கடப்பமலர் அணிவோனே!

ஏடார் குழற்சுருபி ஞானா தனத்திமிகும்
ஏராள் குறத்திதிரு மணவாளா-

ஈசா! தனிப்புலிசை வாழ்வே! ஸுரர்த்திரளை
ஈடேற வைத்தபுகழ் பெருமாளே.

## புதவாரம் (புதன்கிழமை)-திருவேரகம்

தோடி] 37 ஸபையில் இறைவன் வர [ஆதி

தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன தனதான

எந்தத் திகையினு மலையினும் உவரியின்
எந்தப் படியினு முகடினும் உளபல
எந்தச் சடலமும் உயிர்இயை பிறவியின் உழலாதே-

இந்தச் சடமுடன் உயிர்நிலை பெறநளி
நம்பொற் கழல்இணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமனம் உருகிநல் சுருதியின்
முறையோடே!

ஸந்தித் தரஹர சிவசிவ சரண்என
கும்பிட் டிணைஅடி அவைஎன தலைமிசை
தங்கப் புளகிதம் எழஇரு விழிபுனல் குதிபாயச்-

சம்பைக் கொடிஇடை விபுதையின் அழகுமுன்
நந்தத் திருநடம் இடுசரண் அழகுற
சந்தச் சபைதனில் எனதுளம் உருகவும் வருவாயே;

தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை உவரியு மறுகச லரிபேரி-

துன்றச் சிலைமணி கலகல கலின்என
சிந்தச் சுரர்மலர் அயன்மறை புகழ்தர
துன்புற் றவுணர்கள் நமன்உல குறவிடும்
அயில்வேலா!

கந்தச் சடைமுடி கனல்வடி வடல்அணி
எந்தைக் குயிர்எனு மலைமகள் மரகத
கந்தப் பரிமள தநகிரி உமைஅருள் இளையோனே-
கஞ்சப் பதம்இவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடிஇடை புணர்அரி மருக! நல்
கந்தப் பொழில்திகழ் குருமலை மருவிய பெருமாளே.

ஹரிகாம்போதி] 38. ஆண்டருள [கண்டஜாதி த்ரிபுடை

தனதனன தனதனன தான தந்தனந்
தனதனன தனதனன தான தந்தனந்
தனதனன தனதனன தான தந்தனந் தனதான

ஒருவரையும் ஒருவர்அறி யாம லுந்திரிந்
திருவினையின் இடர்கலியொ டாடி நொந்துநொந்
துலையில்இடு மெழுகதென வாடி முன்செய்வஞ்
சனையாலே-
ஒளிபெறவெ எழுபுமர பாவை துன்றிடுங்
கயிறுவிதம் எனமருவி ஆடி விண்பறிந்
தொளிருமின்ல் உருவதென ஓடி அங்கம்வெந்
திடுவேனை;
கருதிஒரு பரமபொருள் ஈது என்றுஎன்
செவிஇணையின் அருளிஉரு வாகி வந்தஎன்
கருவினையொ டருமலமும் நீறு கண்டுதண் தருமாமென்-
கருணைபொழி கமலமுகம் ஆறும் இந்துளந்
தொடைமகுட முடியும்ஒளிர் நூபு ரஞ்சரண்
கலகலென மயிலின்மிசை ஏறி வந்துகந்
தெனைஆள்வாய்;
திரிபுரமு மதன்உடலும் நீறு கண்டவன்
தருணமழ விடையன்நட ராஜன் எங்கணும்
திகழ்அருண கிரிஸொருபன் ஆதி அந்தம்அங் கறியாது-
சிவயநம நமசிவய கார ணன்சுரந்
தமுதம்அதை அருளிஎமை ஆளும் எந்தைதன்
திருவுருவில் மகிழ்எனது தாய் பயந்திடும்
புதல்வோனே;
குருகுகொடி யுடன்மயிலில் ஏறி மந்தரம்
புவநகிரி சுழலமறை ஆயி ரங்களும்
குமரகுரு எனவலிய சேடன் அஞ்சவந் திடுவோனே-
குறமகளின் இடைதுவள பாத செஞ்சிலம்
பொலியஒரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையில் மருவுகுரு நாத! உம்பர்தம் பெருமானே.

மத்யமாவதி] 39. ஐக்கிய நிலைபெற [ரூபகம்

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான

இருவினை புனைந்து ஞான விழிமுனை திறந்து நோயின்
இருவினை இடைந்து போக மலமூட—
இருள்அற விளங்கி ஆறு முகமொடு கலந்து பேதம்
இலைஎன இரண்டு பேரும் அழகான;
பரிமள ஸுகந்த வீத(ம்) மயம்என மகிழ்ந்து தேவர்
பணியவின் மடந்தை பாத மலர் வப்—
பரிவுகொ டநந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து பாட
பருமயி லுடன் குலாவி வரவேணும்;
அரிஅயன் அறிந்தி டாத அடிஇணை சிவந்த பாதம்
அடிஎன விளங்கி ஆடு நடராஜன்—
அழலுறும் இரும்பின் மேனி மகிழ்மர கதம்பெண்
[ஆகம்
அயல்அணி சிவன்பு ராரி அருள்சேயே;
மருவலர்கள் திண்ப ஞுர முடிஉடல் நடுங்க ஆவி
மறலிஉண வென்ற வேலை உடையோனே—
வளைகுல மலங்கு காவி ரியின்வட புறஞ்சு வாமி
மலைமிசை விளங்கு தேவர் பெருமாளே.

ஸிந்துபைரவி] 40. சுவாமி வர [ஆதி

தத்தனத் தத்ததன தத்தனத் தத்ததன
தத்தனத் தத்ததன தனதான

தத்துவத் துச்செயலொ டொட்டில்பட் டக்குருகு
ஸத்துவிட் டப்படிபொல் அடியேனும்—
ஸச்சில்உற் றுப்படியில் விட்டுவிட் டுக்குளறி
ஸத்துவத் தைப்பிரிய விடும்வேளை;
சுத்தமுத் தப்பதவி பெற்றநற் பக்தரொடு
தொக்குசற் றுக்கடையன் மிடிதீரத்—
துப்புமுத் துச்சரண பச்சைவெற் றிப்புரவி
சுற்றவிட் டுக்கடுகி வரவேணும்;
வித்தகத் திப்பவள தொப்பைஅப் பற்கிளைய
வெற்றிசத் திக்கரக முருகோனே—
வெற்பும்எட் டுத்திசையும் வட்டம்இட் டுச்சுழல
விட்டபச் சைச்சரண மயில்வீரா;

தவநெறித் திருமுறை

கத்தர்நெட் டுச்சடையர் முக்கணக் கக்கடவுள்
கச்சியப் பர்க்கருள்செய் குருநாதா-
கற்பதத் தைக்குருகி உற்பதத் துக்குறவர்
கற்பினுக் குற்றுபுணர் பெருமாளே.

## குருவாரம் (வியாழக்கிழமை)—குன்றுதோருடல்

காம்போதி] 41. மனோலயம் பெற [ஆதி

தன்ன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தந்ததான

தறையில் மானுடர் ஆசையி னுல்மடல்
எழுது மால்அருள் மாதர்கள் தோதக
ஸரஸர் மாமலர் ஓதியி னுல்இரு கொங்கையாலும்-
தளர்மின் நேர்இடை யால்உடை யால்நடை
அழகி னுல்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ;
பறவை யானமெய்(ஞ்) ஞாநிகள் மோநிகள்
அணுகொ ணுவகை நீடும் இராசிய
பவந பூரக ஏகிகம் ஆகிய விந்துநாதம்-
பகரொ ணுதது சேரஒ ணுதது
நினையொ ணுதது ஆனத யாபர
பதிய தானஸ மாதிம நோலயம் வந்துதாராய்;
சிறைவி டாதநி சாசரர் ஸேனைகள்
மடிய நீலக லாபம் அதேறிய
திறல்வி நோத!ஸ மேள!த யாபர! அம்புராசித்-
திரைகள் போல்அலை மோதிய சீதள
குடக காவிரி நீள்அலை சூடிய
திரிசி ராமலை மேல்உறை வீர!கு றிஞ்சிவாழும்;
மறவர் நாயக! ஆதிவி நாயகர்
இளைய நாயக! காவிரி நாயக!
வடிவின் நாயக! ஆனைதன் நாயக! எங்கள்மானின்-
மகிழும் நாயக! தேவர்கள் நாயக!
கவுரி நாயக னார்குரு நாயக!
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே.

## 42 அகப்பொருள் — தரிசநம் பெற

காம்போதி அல்லது சாரங்கா] [ஆதி அல்லது ஜம்பை

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்த தனதான

வெற்றிசெய உற்றகழை விற்குதைவ ளைத்துமதன்
விட்டகணை பட்ட விசையாலே-
வெட்டவெளி யிற்றெருவில் வட்டபணை யிற்கனல்வி
ரித்தொளிப ரப்பு மதியாலே
பற்றிவசை கற்றபல தத்தையர்த மக்கும்இசை
பட்டதிகி ரிக்கும் அழியாதே-
பக்தியை எனக்கருளி முக்தியை அளித்துவளர்
பச்சைமயில் உற்று வரவேணும்;
நெற்றிவிழி பட்டெரிய நட்டமிடும் உத்தமர்நி
னைக்குமனம் ஒத்த கழல்வீரா-
நெய்க்கமல மொக்குமுலை மெய்க்குறவி இச்சைஉற
நித்தம்இறு கத்த ழுவுமார்பா!
எற்றியதி ருச்சலதி சுற்றியதி ருத்தணியில்
எப்பொழுதும் நிற்கு(ம்) முருகோனே-
எட்டசலம் எட்டநில முட்டமுடி நெட்டசுரர்
இட்டசிறை விட்ட பெருமாளே.

## 43 முகதி பெற

பூர்வகல்யாணி] [ஸங்கீர்ண த்ரிபுடை

தனன தந்த தத்த தனன தந்த தத்த
தனன தந்த தத்த தனதான

எனை அடைந்த குட்டம் வினைமி குந்த பித்தம்
எரிவ ழங்கு வெப்பு வலிபேசா-
இகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
டிருமல் என்று ரைக்கும் இவையோடே-
மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே-
மருவி யென்ற னக்கு மரக தஞ்சி றக்கு(ம்)
மயிலில் வந்து முக்தி தரவேணும்;
நினைவ ணங்கு பக்தர் அனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா-
நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கு முருகோனே





## ஸ்ரீ திருத்தணிகேசர்

(கட்டளைக் கலித்துறை)

ஆவிக்கு மோசம் வருமா(று) அறிந்துன் அருட்பதங்கள்
ஸேவிக்க என்றும் நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய் !
வாவித் தடவயல் சூழும் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடிஉடை யானே !, அமர சிகாமணியே !

(—கந்தர் அலங்காரம்-104)

தினைவி ளங்கல் உற்ற புன்இ ளங்கு றத்தி
செயல் அறிந்த ணைக்கு மணிமார்பா-
திசைமு கன்தி கைக்க அசுரர் அன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமானே.

யமுனா கல்யாணி] 44. வரம் பெற [ஆதி

தனனத் தத்தன தனதான
பரவைக் கெத்தனை விசை தூது-
பகரற் குற்றவர் எனமாண் உன்:
மரபுக் குச்சித ப்ரபுவாக-
வரமெத் தத்தர வருவாயே;
கரடக் கற்பகன் இளையோனே-
கலைவிற் கட்குற மகள்கேள்வா;
அரனுக் குற்றது புகல்வோனே-
அயனைக் குட்டிய பெருமானே.

## சுக்ரவாரம் (வெள்ளிக்கிழமை) பழமுதிர்சோலை

மோஹநம்] 45. வாழ [ஆதி

தனதன தான தனதன தான
தனதன தான தனதான

அகரமும் ஆகி அதிபனும் ஆகி
அதிகமும் ஆகி அகமாகி-
அயன்என ஆகி அரிஎன ஆகி
அரன்என ஆகி அவர்மேலாய்;
இகரமும் ஆகி எவைகளும் ஆகி
இனிமையும் ஆகி வருவோனே-
இருநில மீதில் எளியனும் வாழ
எனதுமுன் ஓடி வரவேணும்;
மகபதி ஆகி மருவும் வலாரி
மகிழ்களி கூரும் வடிவோனே-
வனம்உறை வேடன் அருளிய பூஜை
மகிழ்கதிர் காமம் உடையோனே;
ஜெககண ஜெகு தகுதிமி தோதி
திமிஎன ஆடு மயிலோனே-
திருமலி வான பழமுதிர் சோலை
மலைமிசை மேவு பெருமானே.

மத்யமாவதி அல்லது ஸ்ரீராகம்] 46. நடநம காண [ஆதி

தானதன தான தந்த தனதான

காரணம தாக வந்து புவிமீதே-
காலன்அணு காதி சைந்து கதிகாண;
நாரணனும் வேதன் முன்பு தெரியாத-
ஞாநநட மேபு ரிந்து வருவாயே;
ஆரமுதம் ஆன தந்தி மணவாளா-
ஆறுமுகம் ஆறி ரண்டு விழியோனே;
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா-
சோலைமலை மேவி நின்ற பெருமாளே

காவடிச்சிந்து அல்லது ஆநந்தபைரவி] 47. வினை தீர [ஆதி

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

சீலம்உள தாயர் தந்தை மாதுமனை ஆன மைந்தர்
சேருபொருள் ஆசை நெஞ்சு தடுமாறித்-
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாம் இதென்று
தேடினது போக என்று தெருவூடே;
வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்-
வாழுமயில் மீது வந்து தாள்இணைகள் தாழும் என்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே;
சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழும் இஞ்சி
சேண்நிலவு தாவ செம்பொன் மணிமேடை-
சேரும்அம ரேசர் தங்கள் ஊர்இதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா;
ஆலவிட மேவு கண்டர் கோலமுடன் நீடு மன்றுள்
ஆடல்புரி ஈசர் தந்தை களிகூர-
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த!
ஆதிமுத லாக வந்த பெருமாளே.

காம்போதி] 48. ஞாந வீடு பெற [ஜம்பை

தன்தான தான தந்த தனதான தான தந்த
தனதான தான தந்த தனதான

மன(ம்)நூறு கோடி துன்பம் நொடிமீதி லேநி னைந்து
மதன்ஊட லேமு யங்கி அதிருப-

மடமாதர் ஆசை கொண்டு புவிமீதி லேமயங்கி
மதிசீர் எலாம் அழிந்து கொடிதான;
வினைமூடி யேதி ரிந்து புவிமீதி லேஉ ழன்று
விரகால்மெ யேத ளர்ந்து விடுநாளில்-
விசையான தோகை துங்க மயிலேறி ஓடி வந்து
வெளிஞாந வீடு தந்து அருள்வாயே;
தினைவேடர் காவல் தங்கு மலைகா டெலாம் உழன்று
சிறுபேதை கால் பணிந்த குமரேசா-
திரைஆழி ஸேது கண்டு பொருராவ ணேசை வென்ற
திருமால் முராரி தங்கை அருள்பாலா;
முனிவோர்கள் தேவர் உம்பர் சிறையாக வேவ ளைந்த
முதுசூரர் தானை தங்கள் கிளையோடு-
முடிகோடி தூள்எ ழுந்து கழுகோடு பாற ருந்த
முனைவேலி னுல்எ றிந்த பெருமாளே.

## * சனிவாரம் (சனிக்கிழமை)—ஆறுபடைவீடு

செஞ்சுருட்டி] 49. க்ஷேத்ரக் கோவை [ஆதி

துதி

தந்த தானன தானன தந்தன
தந்த தானன தானன தந்தன
தந்த தானன தானன தந்தன தனதான

கும்ப கோணமொ டாரூர் சிதம்பரம்
உம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் மாயூரம் அம்பெறு சிவகாசி-
கொந்து லாவிய ராமே சுரந்தனி
வந்து பூஜைசெய் நால்வேத தந்திரர்
கும்பு கூடிய வேளூர் பரங்கிரி தனில்வாழ்வே;
ஜெம்பு கேசுரம் ஆடானை இன்புறு
செந்தில் ஏடகம் வாழ்சோலை யங்கிரி
தென்றல் மாகிரி நாடாள வந்தவ! ஜெகநாதம்-
செஞ்சொல் ஏரகம் மாஆவி னன்குடி
குன்று தோறுடன் மூதூர் விரிஞ்சைநல்
செம்பொன் மேனிய சோணாடு வஞ்சியில்
[வருதேவே;

---

* சனிவாரந் தோறும் ஆறுபடை வீட்டுப் பாடல்களையும் ஓதவேண்டிய முறையை இப்புத்தகத்தின் முகவுரையிற் காண்க.

கம்பை மாவடி மீதேய ஸுந்தர
கம்பு லாவிய காவேரி ஸங்கமு
கம்சி ராமலை வாழ்தேவ தந்திர! வயலூரா-
கந்த மேவிய போரூர் நடம்புரி
தென்சி வாயமு மேயாய்! அகம்படு
கண்டி யூர்வரு ஸாமீ! க டம்பணி மணிமார்பா!
எம்பி ராடுஞ்டு வாதாடு மங்கையர்
உம்பர் வாணிபொன் நீள்மால் ஸவுந்தரி
எந்த நாள்தொறும் ஏர்பாக நின்றுறு துதிஓதும்-
இந்தி ராணிதன் மாதோடு நன்குற
மங்கை மானையு மாலாய்ம ணந்துல
கெங்கு மேவிய தேவால யந்தொறு பெருமாளே.

ஹம்ஸத்வநி] 50. மயில்மேல் வரவேணும் [ஆதி

தன்ன தான தானன தனன தான தானன
தன்ன தான தானன தனதான

அதல சேட ஞர்ஆட அகில மேரு மீதா
அபின காளி தான்ஆட அவளோடன்(று)-
அதிர வீசி வாதாடும் விடையில் ஏறு வார்ஆட
அருகு பூத வேதாளம் அவைஆட!
மதுர வாணி தான்ஆட மலரில் வேத ஞர்ஆட
மருவு வானு ளோர்ஆட மதிஆட-
வநஜ மாமியார்ஆட நெடிய மாம ஞர்ஆட
மயிலும் ஆடி நீஆடி வரவேணும்;
கதைவி டாத தோள்வீமன் எதிர்கொள் வாளி யால்நீடு
கருத் லார்கள் மாஸேனை பொடியாகக்-
கதறு காலி போய்மீள விஜயன் ஏறு தேர்மீது
கநக வேத கோடூதி அலைமோதும்!
உததி மீதி லேசாயும் உலக மூடு சீர்பாத
உவணம் ஊர்தி மாமாயன் மருகோனே-
உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜன்
உளமும் ஆட வாழ்தேவர் பெருமாளே.

தரிசநம்

மோஹநம்] [கட்டளைக் கலித்துறை

51. தன் ஆநந்தம் கூறினது

(கந்தரலங்காரம்)

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண் டேன்செயல் மாண்டடங்கப்

புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனம்எற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மாநந்த ஸாகரத்தே.

மோஹநம்] குரு தரிசநம் [கண்டஜாதி ஏகம் அல்லது ஆதி

## 52. திருவுருவத் தயாநம

தானன தான தான தனதன
தானன தான தான தனதன
தானன தான தான தனதன — தன்தான

சீரான கோல கால நவமணி
மாலாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் ஸேவை செயுமுக — மலர்ஆறும்-

சீராடு வீர மாது மருவிய
ஈராறு தோளும் நீளும் வரிஅளி
சீராக மோது நீப பரிமள — இருதாளும்;

ஆராத காதல் வேடர் மடமகள்
ஜீமூதம் ஊர்வ லாரி மடமகள்
ஆதார பூத மாக வலம்இட — முறைவாழ்வும்-

ஆராயும் நீதி வேலு மயிலுமெய்(ஞ்)
ஞாநாபி ராம தாப வடிவமும்
ஆபாத னேனு(ம்) நாளு(ம்) நினைவது பெறவேணும்;

ஏராரு மாட கூட மதுரையில்
மீதேறி மாறி ஆடும் இறையவர்
ஏழேழு பேர்கள் கூற வருபொருள் — அதிகாரம்-

ஈடாய ஊமர் போல வணிகரில்
ஊடாடி ஆல வாயில் விதிசெய்த
லீலாவி சார! தீர! வரதர! — குருநாதர்;

கூராழி யால்முன் வீய நினைபவன்
ஈடேறு மாறு பாநு மறைவுசெய்
கோபால ராயன் நேயம் உள்திரு — மருகோனே-

கோடாமல் ஆர வார அலைஎறி
காவேரி ஆறு பாயும் வயலியில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை — பெருமாளே.

53 தரிசநப் பாடல

யதுகுல காம்போதி அல்லது ஆரபி] [கட்டளைக் கலித்துறை

(கந்தரலங்காரம்)

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் உள்ளங் குளிரக் குதிகொண்டவே.

ஆரபி] 54 முக்தி பெற [தரிபுடை

தானதன தானந் தனத்த தானதன தானந் தனத்த
தானதன தானந் தனத்த தனதான

ஆராதனர் ஆடம் பரத்து மாறுதுஜ வாலம் பனத்தும்
ஆவாஹன மாமந் திரத்து மடலாலும்-
ஆரூர்தெச மாமண் டபத்தும் வேதாகமம் ஓதுந் [தலத்தும்
ஆமாறெரி தாம்இந் தனத்து(ம்) மருளாதே:
நீராளக நீர்மஞ் சனத்த நீள்தாரக வேதண்ட மத்த
நீநான்அற வேறின்றி நிற்க நியமாக-
நீவாஎன நீஇங் கழைத்து பாராவர ஆநந்த சித்தி
நேரேபர மாநந்த முக்தி தரவேணும்;
வீராகர சாமுண்டி சக்ர பாராகண பூதங் களிக்க
வேதாளஸ மூகம் பிழைக்க அமராடி-
வேதாமுறை யோஎன் றரற்ற ஆகாசக பாலம் பிளக்க
வேர்மாமர மூலந் தறித்து வடவாலும்;
வாராகரம் ஏழுங் குடித்து மாசூரொடு போர்அம் பறுத்து
வானாஸன மேலுந் துணித்த கதிர்வேலா-
வானாடர சாளும் படிக்கு வாவாஎன வாஎன் [றழைத்து
வானோர்பரி தாபம் தவிர்த்த பெருமாளே.

நீலாம்பரி] ஆவாஹநம [கட்டளைக் கலித்துறை

55 இறைவன் (நம்) உள்ளத்திருக்க

(கந்தரந்தாதி)

செயதுங்க பத்திரி போற்றும் பகீர திகர! செவ்வேற்
செயதுங்க பத்திரி சூடுங் குறத்தி திறத்த! தண்டஞ்
செயதுங்க பத்திரி புத்திரி பாதத்தர் செல்வ! தென்பாற்
செயதுங்க பத்திரி யத்திரி யாதிரென் சிந்தையிலே.

## புஷ்பாலங்காரம்

நீலாம்பரி] 56. ஞான பூஜை [ஆதி

தானன தத்த தானன தத்த
தானன தத்த தனதான

ஆசைகூர் பக்த னேன்மனோ பத்மம்
ஆனபூ வைத்து நடுவேஅன்-
பானநூ லிட்டு நாவிலே சித்ரம்
ஆகவே கட்டி ஒருஞான
வாசம்வீ சிப்ர காசியா நிற்ப
மாசில்ஓர் புத்தி அளிபாட-
* மாக்ருதா புஷ்ப மாலைகோ லப்ர
வாளபா தத்தில் அணிவேனோ;

காவடிச் சிந்து அல்லது காபி]

மூசுகா னத்து மீதுவாழ் முத்த
மூரல்வே டிச்சி தனபாரம்-
மூழ்குநீ பப்ர தாபமார் பத்த!
மூரிவே ழத்தின் மயில்வாழ்வே!
வீசுமீ னப்ப யோதிவாய் விட்டு
வேகவே தித்து வருமாசூர்-
வீழமோ திப்ப ராரைநா கத்து
வீரவேல் தொட்ட பெருமானே.

### அர்ச்சனை

செஞ்சுருட்டி] 57. அருள் பெற [ஆதி

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன தனதான

நாத விந்துக லாதீ! நமோநம
வேத மந்த்ர ஸொரூபா! நமோநம
ஞான பண்டித ஸாமீ! நமோநம வெகுகோடி-
நாம சம்புகு மாரா! நமோநம
போக அந்தரி பாலா! நமோநம
நாக பந்தம யூரா! நமோநம பரசூரர்
சேத தண்டவி நோதா! நமோநம
கீத கிண்கிணி பாதா! நமோநம
தீர ஸம்ப்ரம வீரா! நமோநம கிரிராஜ-
தீப மங்கள ஜோதீ! நமோநம
தூய அம்பல லீலா! நமோநம
தேவ குஞ்சரி பாகா! நமோநம அருள்தாராய்;

---

* 'மாத்ருகா' என்றும் பாடம்.

ஈத லும்பல கோலால பூஜையும
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத ஸேவையும் மறவாத-

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மநோகர!
ராஜ கெம்பிர நாடாளும் நாயக! வயலூரா!

ஆத ரம்பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி-

ஆதி யந்த உலாஆசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

## தூபதீபம்

ஆரபி] 58 வினை தீர [ஆதி

தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன தனதான

நாலி ரண்டித ழாலே கோலிய
ஞால முண்டக மேலே தான்இள
ஞாயி றென்றுறு கோலா காலனும் அதின்மேலே-

ஞால முண்டபி ரானா தாரனும்
யோக மந்திர மூலா தாரனும்
நாடி நின்றப்ர பாவா காரனும் நடுவாக!

மேலி ருந்தகி ரீடா பீடமும்
நூல் அறிந்தம ணீமா மாடமும்
மேத கும்ப்ரபை கோடா கோடியும் இடமாக-

வீசி நின்றுள தூபா தீபவி
சால மண்டப மீதே ஏறிய
வீர பண்டித! வீரா சாரிய! வினைதீராய்;

ஆல கந்தரி மோடா மோடிகு
மாரி பிங்கலை நாநா தேசிஅ
மோகி மங்கலை லோகா லோகிஎ வுயிர்பாலும்-

ஆன ஸம்ப்ரமி மாதா மாதவி
ஆதி அம்பிகை ஞாதா வானவர்
ஆட மன்றினில் ஆடா நாடிய அபிராமி•

*கால சங்கரி சீலா சீலித்ரி*
*சூலி மந்த்ரஸ பாஷா பாஷிணி*
*காள கண்டிக பாலீ மாலினி* — *கலியாணி-*

*காம தந்திர லீலா லோகினி*
*வாம தந்திர நூலாய் வாள்சிவ*
*காம சுந்தரி வாழ்வே! தேவர்கள்* — *பெருமானே.*

## நைவேத்யம்

### 59. பிறவி ஒழியும் வகை

கானடா அல்லது திவ்யப்ரபந்தம் போல்] [கட்டளைக் கலித்துறை

(*கந்தரந்தாதி*)

*தினைவேத் திஅன்புசெய் வேந்தன் பதாம்புயத் திற்*
*[பத்திபுந்*
*தினைவேத் தியம்உகந் தேற்றினர் மாற்றினர் பாற்றி*
*[னம்தீத்*
*தினைவேத் தியர்நெறி செல்லாத இந்தியத் தித்தியினத்*
*தினைவேத் தியங்குயிர் கூற்றுறில் ஊசிடுஞ் சீஉடம்பே.*

## தீபாராதனை

கானடா] — 60. பலன் உற — [ஆதி

*தாஞு தனதன தாஞு தனதன*
*தாஞு தனதன* — *தனதான*

*மூலா நிலம்அதின் மேலே மனதுறு*
*மோகா டவிசுடர்* — *தனை நாடி-*

*மோநா நிலைதனை நாநா வகையிலு*
*மோதா நெறிமுறை* — *முதல்கூறும்;*

*லீலா விதம்உன தாலே கதிபெற*
*நேமா ரகசிய* — *உபதேசம்-*

*நீடு ழிதன்நிலை வாடா மணிஒளி*
*நீதா பலம்அது* — *தருவாயே;*

*நாலா ருசிஅமு தாலே திருமறை*
*நாலா யதுஜெப* — *மணிமாலை-*

*நாடாய் தவர்இடர் கேடா! ஹரிஹரி*
*நாரா யணர்திரு* — *மருகோனே;*

சூலா திபர்சிவ ஞாநார் யமனுதை
காலார் தரவரு குருநாதா—
தோதீ திகுதிகு தீதீ ஜெகஜெக
ஜோதீ நடமிடு பெருமானே.

## நமஸ்காரம்

### 61. அடைக்கலம் புகுதல்

நாதநாமக்ரியா] [கட்டளைக் கலித்துறை

(கந்தரலங்காரம்)

மைவருங் கண்டத்தர் மைந்த! கந் தா! என்று
[வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற
[கல்வியும்போய்ப்
பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே.

## அறியாமை கூறி அருள்வேண்டல்

### 62 ஞாநம் பெற

நாதநாமக்ரியா] [ரூபகம்

தானன தான தனதன தானன தான தனதன
தானன தான தனதன தனதான

ஆசார ஈனன் அறிவிலி கோபாப ராதி அவகுணன்
ஆகாத நீசன் அநுசிதன் விபரீதன்—
ஆசாவி சார வெகுவித மோகாச ரீத பரவசன்
ஆகாசம் நீர்மண் அனல்வளி உருமாறி;
மாசான நால்எண் வகைதனை நீநான் எனுத அறிவுளம்
வாயாத பாவி இவன்என நினையாமல்—
மாதாபி தாவின் அருள்நல மாறும காரில் எனைஇனி
மாஞாந போதம் அருள்செய நினைவாயே;
வீசால வேலை சுவறிட மாசூரர் மார்பு தொளைபட
வேதாள ராசி பசிகெட அறைகூறி—
மேகார வாரம் எனஅதிர் போர்யாது தானவர் எமபுர
மீதேற வேல்கொ டமர்செயும் இளையோனே;
கூசாது வேடன் உமிழ்தரு நீராடி ஊன்உண் எனும்உரை
கூறுமன் ஈய அவன்நுகர் தருசேடம்—
கோதாம் எனுமல் அமுதுசெய் வேதாக மாதி முதல்தரு
கோலோக நாத! குறமகள் பெருமானே.

## ஞாயிற்றுக்கிழமை—திருப்பரங்குன்றம்

யமுனகல்யாணி] 63. அன்பு உற [ஆதி

தந்தனந் தந்தத் தனதான

ஸந்ததம் பந்தத் தொடராலே-
ஸஞ்சலந் துஞ்சித் திரியாதே;
கந்தனென் றென்றுற் றுனைநாளும்-
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ;
தந்தியின் கொம்பைப் புணர்வோனே-
சங்கரன் பங்கிற் சிவைபாலா;
செந்தில்அம் கண்டிக் கதிர்வேலா-
தென்பரங் குன்றிற் பெருமாளே.

## திங்கட்கிழமை—திருச்செந்தூர்

பூர்வகல்யாணி] 64 காட்சி பெற [ஜம்பை

தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத் தனதான

அந்தகன்வ ருந்தினம் பிறகிடச்
சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் குணமாள-
அந்திபகல் என்றிரண் டையும்ஒழித்
திந்திரிய ஸஞ்சலங் களைஅறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்;
செந்திலை உணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை அறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடம் தெளிதாத் தணியாத-
சிந்தையும் அவிழ்ந்தவிழ்ந் துரைஒழித்
தென்செயல் அழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ
கொந்தவிழ் சரண்சரண் சரண்எனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்-
குன்றிடிய அம்பொனின் திருஅரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணின்எனக்
[illegible]டலம் அசைந்திளங் குழைகளிற் [illegible]ரபைவீசத்;

தந்தன தனந்தனந் தனஎனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கவின்கலின் கலின்எனத் திருவான-

சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி! ஜகந்தொழும் சரவணப் பெருமானே.

## செவ்வாய்க்கிழமை—பழநி

காம்போதி] 65. ஆண்டருள [ஜம்பை

தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன தனதான

சுருதிமுடி மோநம்சொல் சிற்பரம ஞானசிவ
ஸமயவடி வாய்வந்த அத்துவிதம் ஆனபர
சுடர்ஒளிய தாய்நின்ற நிட்களஸொ ரூபமுதல்
ஒருவாழ்வே-

துரியநிலை யேகண்ட முக்தர்இத யாகமலம்
அதனில்விளை யாநின்ற அற்புதஸு போதஸு க
ஸு யபடிக மாஇன்ப பத்மபத மேஅடைய
உணராதே!

கருவில்உரு வேதங்கு சுக்கிலநி தாநவளி
பொருமஅதி லேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதஅரி யாவஞ்ச கக்கபட மூடிஉடல்
வினைதானே-

கலகம்இட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிஜம்
எனஉழலு மாயம் ஜெனித்தகுகை யேஉறுதி
கருதசுழ மாம்இந்த மட்டைதனை ஆளஉன்
தருள்தாராய்;

ஒருநியம மேவிண்ட ஷட்ஸமய வேதஅடி
முடிநடுவு மாய்அண்ட முட்டைவெளி ஆகிஉயிர்
உடல்உணர்வ தாய்எங்கும் உற்பனம் அதாகஅமர்
உளவோனே-

உததரிச மாம்இன்ப புத்தமிர்த போகஸுகம்
உதவும்அம லாநந்த சத்திகர மேஉணர
உருவிரண வாமந்த்ர கர்த்தவியம் ஆகவரு
குருநாதா!

பருதிகதி ரேகொஞ்சும் நற்சரண நூபுரம்அ
தசையநிறை பேர்அண்டம் ஒக்கநடம் ஆடுகன
பதகெருவி தா! துங்க வெற்றிமயில் ஏறும்ஒரு
திறலோனே-
பணியும்அடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வா! ஒன்று வற்கரமும் ஆகிவளர்
பழநிமலை மேல்நின்ற ஸுப்ரமணி யா! அமரர்
பெருமாளே.

## புதன்கிழமை — ஸ்வாமிமலை

யமுனாகல்யாணி] 66. மோக்ஷ முக்திபெற [ஆதி

தானனத் தனந்த தனதான
காமியத் தழுந்தி இளையாதே-
காலர்கைப் படிந்து மடியாதே;
ஓம்எழுத்தில் அன்பு மிகஊறி-
ஓவியத்தில் அந்தம் அருள்வாயே;
தூமமெய்க் கணிந்த ஸுகலீலா-
சூரனைக் கடிந்த கதிர்வேலா;
ஏமவெற் புயர்ந்த மயில்வீரா-
ஏரகத் தமர்ந்த பெருமாளே.

## வியாழக்கிழமை- குன்றுதோறாடல் (பொது)

காவடிச் சிந்து மெட்டு] 67. இடர் அற [ஆதி

தனனந் தனன தந்த தனதான
அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்-
அபயம் புகுவ தென்று நிலைகாண;
இதயந் தனில் இருந்து க்ருபையாகி-
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே;
எதிர்அங் கொருவர் இன்றி நடமாடும்-
இறைவன் தனது பங்கில் உமைபாலா;
பதினங் கிலும் இருந்து விளையாடிப்-
பலகுன் றிலும் அமர்ந்த பெருமாளே.

## குன்றுதோரூடல் - சிறப்பு திருத்தணிகை

முகாரி] 68. கதி பெற [ஆதி

தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன தனதான

தாக்கம ருக்கொரு சாரையை வேரெரு
ஸாக்ஷி அறப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ர வழிக்கதி தூரனை வேர்விழு தவமூழ்குந்-

தாத்பர்யம் அற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றுனை யேகரு தாதிகல்
சாற்று தமிழ்க்குரை ஞாளியை நாள்வரை [தடுமாறிப்;

போக்கிடம் அற்றவ்ரு தாவனை ஞாநிகள்
போற்றுதல் அற்ற துரோகியை மாமருள்
பூத்தம லத்ரய பூரியை நேரிய புலையனைப்-

போக்கிவி டக்கட னோ! அடி யாரொடு
போய்ப்பெறு கைக்கிலை யோ! கதி யானது
போர்ச்சுடர் வஜ்ரவை வேல்மயி லா! அருள் [புரிவாயே!

மோஹநம்]

மூக்கறை மட்டைம ஹாபல காரணி
சூர்ப்பந கைப்படு மூளி உதாஸனி
மூர்க்க குலத்திவி பீஷணர் ஸோதரி முழுமோடி-

மூத்த அரக்கன் இராவண னோடியல்
பேற்றிவி டக்கம லாலய ஸீதையை
மோட்டன் வளைத்தொரு தேர்மிசை யேகொடு [முகிலேபோய்;

மாக்கன சித்திர கோபுர நீள்படை
வீட்டில் இருத்திய நாள்அவன் வேர்அற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே-

வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கமு நீர்தரு நீள்சுனை
வாய்த்த திருத்தணி மாமலை மேவிய பெருமாளே.

## வெள்ளிக்கிழமை —தென் பழமுதிர் சோலை

செஞ்சுருட்டி] 69 தன்குறை கூறல் [ஆதி

தானன தனந்த தானன தனந்த
தானன தனந்த தனதான

வாதினை அடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து தெளியேனே-
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபதம் அணிந்து பணியேனே;
ஆதியொடும் அந்தம் ஆகிய நலங்கள்
ஆறுமுகம் என்று தெரியேனே-
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயில் என்ப [illegible]யேனே;
நாதமொடு விந்து ஆனஉடல் கொண்டு
நானிலம் அலைந்து திரிவேனே-
நாகம்அணி கின்ற நாதநிலை கண்டு
நாடிஅதில் நின்று தொழுகேனே;
ஜோதிஉணர் கின்ற வாழ்வுசிவம் என்ற
ஸோஹமது தந்து எனை ஆள்வாய்-
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே.

## வட பழமுதிர்சோலை வள்ளிமலை

தோடி] 70. திருவடியைப் பெற [ஆதி

தய்யதன தான தய்யதன தான
தய்யதன தானத் தனதான

ஐயும்உறு நோயும் மையலும் அவாவின்
ஐவரும் உபாயப் பலநூலின்-
அள்ளல்கட வாது துள்ளிஅதில் மாயும்
உள்ளமும்இல் வாழ்வைக் கருதாசைய;

பொய்யும்அக லாத மெய்யைவளர் ஆவி
உய்யும்வகை யோகத் தணுகாதே-
புல்லறிவு பேசி அல்லல்படு வேனை
நல்லஇரு தாளிற் புணர்வாயே;
மெய்ய!பொழில் நீடு தையலைமு நாலு
செய்யபுய மீதுற் றணைவோனே-
வெள்ளைஇபம் ஏறு வள்ளல்கிளை வாழ
வெள்ளமுது மாவைப் பொருதோனே;
வையம்முழு தாளும் ஐய!மயில் வீர!
வல்லமுருகா!முத் தமிழ்வேளே-
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

ஸஹானா] **71. அருள் பெற** [சாபு

தனதான தந்தனத் தனதான

அபகார நிந்தைபட் டுழலாதே-
அறியாத வஞ்சரைக் குறியாதே;
உபதேச மந்திரப் பொருளாலே-
உனைநான் நினைந்தருட் பெறுவேனோ;
இபமா முகன்தனக் கிளையோனே-
இமவான் மடந்தைஉத் தமிபாலா;
ஜெபமாலை தந்தஸற் குருநாதா-
திருவாவி னன்குடிப் பெருமாளே.

முகாரி] **72. ஐக்கிய நிலை பெற** [ஆதி

தனனு தனத்ததன தனனு தனத்ததன
தனனு தனத்ததன தனதான

இருநோய் மலத்தைசிவ ஒளியால் மிரட்டிஎனை
இனிதா அழைத்தெனது முடிமேலே-
இணைதாள் அளித்துஉனது மயில்மேல் இருத்திஒளிர்
இயல்வேல் அளித்துமகிழ் இருவோரும்;
ஒருவா கெனக்கயிலை இறையோன் அளித்தருளும்
ஒளிர்வேத கற்பகநல் இளையோனே-
ஒளிர்மா மறைத்தொகுதி ஸுரர்பார் துதித்தருள்
உபதேசி கப்பதமும் அருள்வாயே;

கருநோய் அறுத்தெனது மிடிதூள் படுத்திவிடு
கரிமா முகக்கடவுள் அடியார்கள்-
கருதா வகைக்குவரம் அருள்ஞான தொப்பைமகிழ்
கருணு! கடப்பமலர் அணிவோனே;
திருமால் அளித்தருளும் ஒருஞான பத்திநியை
திகழ்மார் புறத்தழுவும் அயில்வேலா-
சிலைதூள் எழுப்பிகவ டவுஞ்ஞரை வெட்டிஸுரர்
சிறைமீள விட்டபுகழ் பெருமாளே.

ஹம்ஸத்வநி] [கட்டளைக் கலித்துறை

### 73. திருவடி என் சென்னியது

(கந்தரந்தாதி)

செப்புங் கவசங் கரபா லக!தெய்வ வாவிஅம்பு
செப்புங் கவ!சங் கரிமரு கா!எனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார் கணுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன் பாதம்என் சென்னியதே.

ஹம்ஸத்வநி] 74 திருவடி மறவாமை [ஆதி

தானன தனன தானன தனன
தானன தனன தனதான

தோரண கநக வாசலில் முழவு
தோல்முர சதிர முதிராத-
தோகையர் கவரி வீச வயிரியர்
தோள்வலி புகழ மதகோப;
வாரண ரதப தாகினி துரக
மாதிரம் நிறைய அரசாகி-
வாழினும் வறுமை கூரினும் நினது
வார்கழல் ஒழிய மொழியேனே;
பூரண! புவந காரண! சிவரி
பூதர புளக தநபார-
பூஷண! நிருதர் தூஷண! விபுதர்
பூபதி நகரி குடியேற;
ஆரண வனஜ ஈர்இரு குடுமி
ஆரியன் வெருவ மயிலேறும்-
ஆரிய! பரம ஞானமும் அழகும்
ஆண்மையும் உடைய பெருமாளே.

ஆநந்தபைரவி] 75. அடிமையாக [சதுச்ர மட்டியம்; ஆதி

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

திமிர உததி அனைய நரக
ஜெனனம் அதனில் விடுவாயேல்-
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியும் அணுகாதே;
அமரர் வடிவும் அதிக குலமும்
அறிவும் நிறையும் வரவேநின்-
அருள தருளி எனையு மனதொ
டடிமை கொள்ளவும் வரவேணும்;
ஸமர முகவெல் அஸுரர் தமது
தலைகள் உருள மிகவேநீள்-
ஜலதி அலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே;
வெமர வணையில் இனிது துயிலும்
விழிகள் நளிநன் மருகோனே-
மிடறு கரியர் குமர! பழநி
விரவும் அமரர் பெருமானே.

## தீக்ஷை

யமுனா கல்யாணி] 76. தீக்ஷை பெற [ஆதி

தனதனன தானதன தத்தன தாத்த
தனதனன தானதன தத்தன தாத்த
தனதனன தானதன தத்தன தாத்த தனதான

கலகவிழி மாமகளிர் கைக்குளே யாய்ப்பொய்
களவுமதன் நூல்பலப டித்தவா வேட்கை
கநததநமு மார்பும்உறல் இச்சையால் ஆர்த்து
[கழுநீரால்-

கமழ்நறை ஜவாதுபுழு கைத்துழாய் வார்த்து
நிலவரசு நாடறிய கட்டில்போ( .) டார்க்கெவ்
கருமம்அறி யாதுசிறு புத்தியால் வாழ்க்கை
[கருதாதே

தலம்அடைசு சாளரமு கப்பிலே காத்து
நிறைபவுசு வாழ்வரசு ஸத்யமே வாய்த்த
தெனஉருகி ஓடிஒரு சற்றுளே வார்த்தைதடுமாறித்-
தழுவிஅநு ராகமும்வி ளைத்துமா யாக்கை
தனையும்அ நாளையும் அவத்திலே போக்கு
தலைஅறிவி லேனைநெறி நிற்கநீ தீக்ஷை தரவேணும்;
அலகில்தமி ழால்உயர்ஸ மர்த்தனே! போற்றி!
அருணைநகர் கோபுரவி ருப்பனே! போற்றி!
அடல்மயில் நடாவியப்ரி யத்தனே! போற்றி!
[அவதாந-
ஆறுமுக ஸுவாமிஎனும் அத்தனே! போற்றி!
அகிலதலம் ஓடிவரு நிர்த்தனே! போற்றி!
'அருணகிரி நாத!' எனும் அப்பனே! போற்றி!
[அஸுரேசர்;
வெல(ம்)மடிய வேல்விடுக ரத்தனே! போற்றி!
கரதலக பாலிகுரு வித்தனே! போற்றி!
பெரியகுற மாதணைபு யத்தனே! போற்றி!
[பெருவாழ்வாம்-
பிரமன்அறி யாவிரத தக்ஷிண மூர்த்தி
பரசமய கோளரித வத்தினால் வாய்த்த
பெரியமட மேவியஸு கத்தனே! யோக்யர்
[பெருமாளே.

## நோயற்ற வாழ்வு

ஸாவேரி] **77. நோயற** [ஆதி

தனதன தான தனதன தான
தனதன தான தனதான

இருமல் உரோகம் முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமேநீர்-
இழிவு விடாத தலைவலி சோகை
எழுகள மாலை இவையோடே;
பெருவயி றீளை எரிகுலை சூலை
பெருவலி வேறும் உள்நோய்கள்-
பிறவிகள் தோறும் எனைநலி யாத
படிஉன தாள்கள் அருள்வாயே;

வரும்ஒரு கோடி அஸுரர் பதாதி
மடிய அநேக இசைபாடி-
வரும்ஒரு கால வயிரவர் ஆட
வடிசுடர் வேலை விடுவோனே;
தருநிழல் மீதில் உறைமுகில் ஊர்தி
தருதிரு மாதின் மணவாளா-
ஜலமிடை பூவின் நடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.

## குறைவற்ற செல்வம்

யமுனா கல்யாணி] 78 இகபர ஸுகம் பெற [ஆதி

தனதனன தாத்த தனதான

வசனமிக ஏற்றி மறவாதே-
மனதுதுயர் ஆற்றில் உழலாதே;
இசைபயில்ஷ டாக்ஷ ரம்அதாலே-
இகபரஸெள பாக்யம் அருள்வாயே;
பசுபதிசி வாக்யம் உணர்வோனே-
பழநிமலை வீற்ற ருளும்வேலா;
அஸுரர்கிளை வாட்டி மிகவாழ-
அமரர்சிறை மீட்ட பெருமாளே.

மத்யமாவதி] 79 முத்தம் பெற [ஆதி

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான

ஜெகமாயை உற்றென் அகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்பம் உடலூறித்-
தெசமாத முற்றி வடிவாய் நிலத்தில்-
திரமாய் அளித்த பொருளாகி;
மகவாவின் உச்சி விழிஆன னத்தில்
மலைநேர் புயத்தில் உறவாடி-
மடிமீ தடுத்து விளையாடி நித்தம்
மணிவாயின் முத்தி தரவேணும்;

முகமாயம் இட்ட குறமாதி னுக்கு
முலைமேல் அணைக்க வருநீதா—
முதுமா மறைக்குள் ஒருமா பொருட்குள்
மொழியே உரைத்த குருநாதா;
தகையா தெனக்குன் அடிகாண வைத்த
தனிஏர கத்தின் முருகோனே—
தருகாவி ரிக்கு வடபாரி சத்தில்
ஸமர்வேல் எடுத்த பெருமாளே.

நீலாம்பரி] 80. அருள் வேண்டல் [ஆதி

தந்ததன தத்ததன தந்ததன தத்ததன
தந்ததன தத்ததன தனதான

ஐங்கரனை ஒத்தமனம் ஐம்புலம் அகற்றிவளர்
அந்திபகல் அற்றநினை(வு) அருள்வாயே—
அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ் வழுத்திஉனை
அன்பொடு துதிக்கமனம் அருள்வாயே;
தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முக்திபெற
சந்திர வெளிக்குவழி அருள்வாயே—
தண்டிகை கனப்பவுசு எண்டிசை மதிக்கவளர்
ஸம்ப்ரம விதத்துடனெ அருள்வாயே;

காவடிச்சிந்து மெட்டு]

மங்கையர் ஸுகத்தைவெகு இங்கிதம் எனுற்றமனம்
உன்றனை நினைத்தமைய அருள்வாயே—
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரக்ஷபுரி
வந்தணைய புத்தியினை அருள்வாயே;
கொங்கில்உயிர் பெற்றுவளர்தென்கரையில் அப்பர்அருள்
கொண்டுஉடல் உற்றபொருள் அருள்வாயே—
குஞ்சர முகற்கிளைய கந்தன்என வெற்றிபெறு
கொங்கண கிரிக்குள்வளர் பெருமாளே.

## 81. முருகன் பெருமை—கருணை

(கந்தரலங்காரம்)

மோஹனம் அல்லது செஞ்சுருட்டி] [கட்டளைக் கலித்துறை

நாள்என் செயும்வினை தான்என் செயும்எனை நாடிவந்த
கோள்என் செயும்கொடுங் கூற்றென் செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

## பகையற்ற வாழ்வு

**செஞ்சுருட்டி] 82. திருப்புகழின் பெருமை-திருப்புகழ் ஓத [ஆதி**

*தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந்*
*தனத்தன தனத்தந் தனதான*

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவர் உயிர்க்கும் சினமாகச்-
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்;
நினைத்ததும் அளிக்கும் மனத்தையும் உருக்கும்
நிசிக்கரு அறுக்கும் பிறவாமல்-
நெருப்பையும் எரிக்கும் பொருப்பையும் இடிக்கும்
நிறைப்புகழ் உரைக்கும் செயல்தாராய்;
தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி-
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்குந்
தளத்துடன் நடக்குங் கொடுசூரர்;
சினத்தையும் உடற்சங் கரித்த மலைமுற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா-
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்
திருத்தணி இருக்கும் பெருமாளே.

**சங்கராபரணம்] 83. கோளறு பாடல் [கட்டளைக் கலித்துறை**

*(கந்தரந்தாதி)*

சேயவன் புந்தி வநவாஸ மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கல்நிசாச ராந்தக! சேந்த! என்னிற்
சேயவன் புந்தி பனிப்பாநு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே.

**சங்கராபரணம்] 84. தேவேந்த்ர ஸங்க வகுப்பு [ஆதி**

*தனதன தனதன தனதன தனதன*
*தனதன தனதன*
*தானந்தன தந்தன தானந்தன தந்தன*

*தரணியில் அரணிய முரண்இர ணியன்உடல்
தனைநக நுதிகொடு
சாடோங்கு நெடுங்கிரி யோடேந்து பயங்கரி

---

* இவ்வகுப்பை ஆநந்த பைரவி ராகத்திலும், த்ரிபுடை தாளத்திலுங் கூடப் பாடுவதுண்டு.

தவநெறித் திருமுறை

டமருக பரிபுர ஒலிகொடு நடம்நவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்த பரம்பரை

சரிவளை விரிஜடை எரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குசம் என்றிரு தாளாந்தர அம்பிகை

தருபதி ஸுரரொடு சருவிய அஸுரர்கள்
தடமணி முடிபொடி
தான்ஆம்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி;

இரணகி ரணமட மயில்ம்ருக மதபுள
கிதஇள முலைஇள
நீர்தாங்கி நுடங்கிய நூல்போன்ற மருங்கினள்

இறுகிய சிறுபிறை எயிறுடை யமபடர்
எனதுயிர் கொளவரின்
யான்ஏங்குதல் கண்டெதிர் தான்ஏன்று கொள்நுங்குயில்

இடுபலி கொடுதிரி இரவலர் இடர்கெட
விடுமன கரதல
ஏகாம்பரை இந்திரை மோஹாங்க ஸுமங்கலை

எழுதிய படம்என இருள்அறு சுடர்அடி
இணைதொழு மவுநிகள்
ஏகாந்தஸு கந்தரு பாசாங்குச ஸுந்தரி;

கரணமு மரணமு மலமொடும் உடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சநி நஞ்சுமிழ

கனல்எரி கணபண குணமணி அணிபணி
கருவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

கனைகழல் நினையலர் உயிர்அவி பயிரவி
கவுரி கமலைகுழை
காதார்ந்த செழுங்கழு நீர்தோய்ந்த பெருந்திரு

கரைபொழி திருமுக கருணையில் உலகெழு
கடல்நிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன்;

அரண்நெடு வடவரை அடியொடு பொடிபட
அலைகடல் கெடஅயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்குமரன்குகன்

அறுமுகன் ஒருபதொ டிருபுயன் அபிநவன்
அழகிய குறமகள்
தார்வேய்ந்த புயன்பகை யா(ம்)மாந்தர்கள் அந்தகன்

அடல்மிகு கடதட விகடித மதகளி
றநவர தமும்அக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்

அதிபதி எனவரு பொருதிறல் முருகனை
அருள்பட மொழிபவர்
ஆராய்ந்து வணங்குவர் தேவேந்திர ஸங்கமே.

## தரிசநப் பாடல்

நாட்டை அல்லது ஆநந்தபைரவி] 85 முருகன் தரிசநம் [கட்டளைக் கலித்துறை

(கந்தரலங்காரம்)

ஓலையும் தூதரும் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்குக்
காலையும் மாலையும் முன்னிற்கு மேகந்த வேள்மருங்கிற்
சேலையும் கட்டிய சீராவும் கையிற் சிவந்தசெச்சை
மாலையும் சேவற் பதாகையும் தோகையும் வாகையுமே.

## துணை

### 86. முருகன் பெருமை—உலகுக்கு உபதேசம்

ஷ

நாட்டை அல்லது ஷண்முகப்ரியா] [கட்டளைக் கலித்துறை

விழிக்குத்துணைதிரு மென்மலர்ப்பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே.

ஷண்முகப்ரியா] 87. வேல் வகுப்பு ★ [ஜம்பை

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தான

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிகர் ஆகும் (திரு)

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கஜக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கஅரம் ஆகும் (திரு)

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் (திரு)

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும்; (திரு)

சங்கராபரணம்]

ஸுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்கும்உறும்
இடுக்கண்வினை சாடும் (திரு)

சுடர்ப்பரிதி ஒளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் (திரு)

துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கொர்துணை ஆகும் (திரு)

சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய உறுக்கிஎழு
மறத்தைநிலை காணும்; (திரு)

---

★ இவ் வகுப்பின் ஆரம்பத்திலும் முடிவிலும் 'திருத்தணியில்' எனத் துவங்கும் கடைசி அடியை இருமுறை ஓதுக. இவ் வகுப்பின் ஒவ்வோர் அடியின் முடிவிலும் 'திருத்தணியில்' எனத் தொடங்கும் கடைசி அடி முழுவதையும் கூறுவது வழக்கம்.

இவ் வகுப்பிலிருந்து வள்ளிமலை ஸ்வாமிகளால் தொகுக்கப்பெற்ற "வேல் மாறல்", தனிப் புத்தகமாக ஸபையாரால் அச்சிடப் பெற்றுள்ளது.

⊙ இவ்வகுப்பு முழுவதையும் சங்கராபரண ராகத்தில் பாடுவதும் உண்டு.

அடாணா]
தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிகர் ஆகும் (திரு)

தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும் (திரு)

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும்இரு புறத்தும்அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும் (திரு)

சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை எனச்சிகை யில்
விருப்பமொடு சூடும்; (திரு)

மோஹநம்]
திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் (திரு)

திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டின்இடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் (திரு)

சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் (திரு)

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன்என துளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே. (திரு)

அடாணா] 88 வேலின் ஆற்றல் [கட்டளைக் கலித்துறை
(கந்தரலங்காரம்)

தேரணி யிட்டுப் புரம்எரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடகம் நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

அடாணா] 89. வேல் வாங்குக [நேரிசை வெண்பா
(திருமுருகாற்றுப்படை-வெண்பா)

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா!-முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

அடாணா] 90. ★வேல் வாங்கு வகுப்பு [ரூபகம்

[இவ் வகுப்பின் ஆரம்பத்திலும் முடிவிலும்
'வேல் வாங்கவே' என்று 64 முறை ஓதுக]

தன்தன தந்தன தனதன தந்தன தந்தன
தானந்தன தானந்தன

திடவிய நெஞ்சுடை அடியர் இடும்பை கெடும்படி
†தீயாம்குறை போய்ஆழ்ந்தது*

ஜெயஜெய என்றிசை பரவிய †எங்கள் கொடுங்கல்
தேசாந்தர மேசாய்ந்தது*

†செயல்உரை நஞ்சுறழ் மயல்உறு நெஞ்சினர் வஞ்சகர்
தீமான்கதர் தாம்ஏங்கினர்*

சிகர தரங்கித மகரம் நெருங்கு †பெருங்கடல்
தீமூண்டுதன் வாய்மாண்டது*

தெரியலர் சென்றடை †திசைகளில் எண்கரி சிம்பெழ
மாறும்கிரி நூறும்தொளை*

சிகர நெடுங்கிரி குகைகள் திறந்து திகந்தமும்
†லோகாந்தமும் நீர்தேங்கின*

†சிறையுள் அழுந்திய குறைகள் ஒழிந்து ஜெயங்கொடு
தேவேந்திரர் சேண்ஆண்டனர்*

திரிபுவ நங்களும் ஒருபயம் இன்றி வளம்கெழு
†சீர்பூண்டற நேர்பூண்டன;*

விடவச னம்சில பறையும் †விரிஞ்சன் விலங்கது
கால்பூண்டுதன் மேல்தீர்ந்தனன்*

விகஸித ஸுந்தர விதரண ஐந்தரு வெந்தெழில்
†வீவான்பொழில் பூவாய்ந்தது*

விழைவு தரும்பத †சசிதன் விளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள்வாழ்ந்தனள்*

†வெருவி ஒதுங்கிமை யவர்எவ ரும்சிறை வென்றித
மேலாம்படி யேமீண்டனர்*

விழியொர் இரண்டொரு பதுசதம் நின்றெறி †கண்டகன்
மேல்வாங்கிளை கால்சாய்ந்தது*

---

★இவ் வகுப்பை முதன் முறை முழுதும் பாடி முடித்து, இரண்டாம் முறை மடக்குச் சொல்லும் போது †இக் குறியிட்ட இடங்களிலிருந்து அவ்வடி முழுவதையும் சொல்லி இருமுறை 'வேல் வாங்கவே'.எனச் சொல்லிப் பாடி முடிப்பது வழக்கம்.

இவ் வகுப்பில் *இக் குறியிட்ட இடங்களில் மட்டும் 'வேல் வாங்கவே' என 4 தடவைகள் முதன்முறை பாடும் போது ஓதுக; முழு வகுப்பையும் பாடி முடித்து மறுமுறை மடக்குச் சொல்லும் போது 2 தடவைகள் 'வேல் வாங்கவே' என ஓதுக.

வெளிமுழு தும்திசை முழுதும் விழுங்கி எழுங்கன
†சூர்மாண் டற வேர்மாய்ந்தது*
†விபுதர் பயம்கெட நிருதர் தளம்கெட விண்கெடு
மேடாம்படி பாடோங்கின*
மிடைகுறள் வெம்கொடி †கழுகு பருந்து விருந்தென
ஊன் ஆர்ந்தகல் வான் ஆர்ந்தன;*

[காம்போதி]

அடவி படும்ஜடை மவுலியில் வெம்பணி அம்பணி
யாமாங்கதர் வாமாங்கனே
அநுபவை அம்பிகை அநுதினை அம்பைத்ரி யம்பகி
ஆசாம்பரை பாசாங்குசை
அநகை அசஞ்சலை அதிகுண ஸுந்தரி அந்தரி
கூாலாந்தகி மேலாம்திரு
அமலை அலங்க்ருதை அபிநய பங்குரை சங்கிநி
மான் ஆம்கணி ஞானாங்குரை
அணிமுக பந்திகொள் சிறுபொறி சிந்த விளைந்தழல்
வாய்கான்றிடு நாகாங்கதை
அபய வரம்புரி உபய கரம்திகழ் அந்தணி
யுமாங்குறி தாய்மாண்பினள்
அதுலை தரும்திரு மதலை* இபம்கொள் பயம்கொடு
பாய்மாண்கலை வாய்மாண்புன
அணிகுற மின்புணர் †தணிகையில் அந்தணன் இந்திர
ராஜாங்கம தாராய்ந்தவன்*
[illegible]வை இடும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடாம்புடை நாடாண்டகை
வளைகரு தும்குரு பதியொடு தம்பிய ரும்பட
வேபாண்டவர் தேரூர்ந்தவன்
வளைவில் வளர்ந்திடை மகளிர் குவிந்து தடம்குடை
வார்பூந்துகில் வார்பூம்புயல்
வரைநிரை கன்றினம் முழுதும் மயங்கிய பண்கெழு
வேய்வைந்திய வாயான்கழல்
மருதிடை சென்றுயர் சகடு தடிந்தடர் வெம்புலி
வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்
மதகயி லம்பொரு வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமான்பகை கோமான்திரு

மருகன்* நிரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய்காங்கெயன்*
†மகபதி தன்பதி பகைகிழி யும்படி அன்றடல்
வாள்ஓங்கிய வேல்வாங்கவே.*

91. வேலின் பெருமை-திருமுருகாற்றுப்படை-வெண்பா

மோஹநம் அல்லது அடாணு] [நேரிசை வெண்பா

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் · வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
தொளைத்தவேல் உண்டே துணை.

## ஆக்ஞை

### 92. மயிலின் ஆற்றல்

(கந்தரலங்காரம்)

மோஹநம் அல்லது ஹம்ஸாநந்தி] [கட்டளைக் கலித்துறை

தடக்கொற்ற வேள்மயி லே! இடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்தும்நின் றோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்தும் கதிர்க்கப் புறத்தும் கநகசக்ரத்
திடர்க்கப் புறத்தும் திசைக்கப் புறத்தும் திரிகுவையே!

## நூற்பயன்

### 93 கந்தர் அலங்கார நூலின் பெருமை

மோஹநம் அல்லது பிலஹரி] [கட்டளைக் கலித்துறை

சலங்காணும் வேந்தர் தமக்கும்அஞ் சார் யமன்
/சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழிஅணு கார்துஷ்ட நோய்அணு கார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கந்தன்
/நன்னூல்
அலங்கார நூற்றுள் ஒருகவி தான்கற் றறிந்தவரே.

## 94. திருப்புகழின் ப்ரபாவம்

(அபியுக்தர் பாட்டு)

மோஹநம் அல்லது பியாகடை] [கட்டளைக் கலித்துறை

மடங்கல் நடுங்கும் தனைச்சுடும் ஈதென்று மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலா யுதம்என் றஸுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலா யுதம்என் றுரகனும்கீழ்க்
கிடங்கில் நடுங்கும் மயிலோன் திருப்புகழ் கேட்டளவே.

மோஹநம்] **95.** எண்சீரடி ஆசிரிய விருத்தம் [ஜம்பை

(வண்ணப்பா)

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே-
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே;
கூறும்அடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே-
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே;
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே—
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே;
ஆறுமுகம் ஆனபொருள் நீஅருளல் வேண்டும்-
ஆதி* அம ராவதி அமர்ந்தபெரு மாளே!

மோஹநம்] **96** உனை எவர் புகழ்வார்? [ஜம்பை

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தந்ததான
ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி-
ஆகம்அணி மாதவர்கள் பாதமலர் சூடும்அடி
யார்கள்பத மேதுணை யென்றுநாளும்;
ஏறுமயில் வாகன! குகா! சரவ ணா! எனது
ஈச! என மானம்உன தென்று(ம்) ஓதும்-
ஏழைகள் வியாகுலம் இதேதென விளுவில்உனை
எவர்புகழ் வார்? மறையும் என்சொலாதோ!
நீறுபடு மாழைபொரு மேனியவ! வேல! அணி
நீலமயில் வாக! உமை தந்தவேளே-
நீசர்கள் தமோடெனது தீவினை எலா(ம்)மடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா;

* 'அருணாசலம்', 'தணிகாசலம்' என்றும் பாடம்.

சீறிவரு மாறவுணன் ஆவிஉணும் ஆனைமுக
தேவர்துணை வா! சிகரி அண்டகூடம்-
சேரும்அழ கார்பழநி வாழ்குமர னே! பிரம
தேவர்வர தா! முருக! தம்பிரானே.

## தேவிமார் துதி

யதுகுலகாம்போதி] 97 தெய்வயானையம்மை துதி [ஆதி
(தணிகாசல புராணம்-எண்சீரடியாசிரிய விருத்தம்)

சங்கரிதன் மருமகளைச் சங்கரிதன் மகளைச்
சங்கரிக்கும் சங்கரனை மாமன்எனும் தயலை
வெங்கரிதந் திடுபிடியை விண்ணவர்கோன் ஸுதையை
விண்ணவர்கள் பணிந்தேத்தும் விண்ணுலகத் [தணங்கைப்
பைங்கழுநீர் விழியாளைப் பைங்கழுநீர் நிறமே
படைத்தாளைப் பைங்கழுநீர் செங்கரங்கொண் [டாளைச்
செங்கமலை தரும்அமுதைக் கந்தர்இடத் தமரும்
தெய்வயானையைத்தொழுது திருவருள்பெற் [றிடுவாம்.

குறவஞ்சி மெட்டு] 98 வள்ளியம்மை துதி [ஆதி
(ஷை)

மாதவனோர் மாதவனை மாதவம்செய் திடலும்
வநமானை வந்தெதிர்ந்த மலர்மானைப் புணரப்
பூதலமங் கையர்உருவாய் அவதரித்து வள்ளிப்
பொருப்புறையும் பொருப்பர்மனை விருப்பமுடன் [வளர்ந்து
தீதகலும் தினைகாத்து வேங்கைஉரு எடுத்த
செவ்வேளை அவ்வேலை சேர்ந்திருகை கோளும்
காதலுடன் புரிந்திறைவன் வலப்பாகத் தமரும்
கன்னிஎனும் வள்ளிகழல் உன்னிவழுத் திடுவாம்.

99. தணிகையின் பெருமை
(கந்த புராணம்)

கேதாரம் அல்லது ஆநந்த பைரவி] [கலிநிலைத்துறை

விரைஇ டங்கொளும் போதினுள் மிக்கபங் கயம்போல்
திரைஇ டங்கொளும்நதிகளிற் சிறந்தகங் கையைப்போல்
தரைஇ டங்கொளும் பதிகளிற் காஞ்சியந் தலம்போல்
வரைஇ டங்களிற் சிறந்ததித் தணிகைமால் வரையே.

சுருட்டி] **100. பழமுதிர்சோலைத் துதி** [கலி விருத்தம்

(கந்த புராணம்)

எழமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதிர் இளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

சுருட்டி] **101. ஜய மங்களம்** [ஆதி

தனன தாத்தன தானு தானன
தனன தாத்தன தானு தானன
தனன தாத்தன தானு தானன தனதான

நிருத ரார்க்கொரு காலா! ஜேஜெய!
ஸுரர்கள் ஏத்திடு வேலா! ஜேஜெய!
நிமல னார்க்கொரு பாலா! ஜேஜெய! விறலான-
நெடிய வேற்படை யானே! ஜேஜெய!
எனஇ ராப்பகல் தானே நான்மிக
நினது தாட்டொழு மாறே தான்இனி உடனேதான்;
தரையின் ஆழ்த்திரை ஏழே போல்எழு
பிறவி மாக்கட லூடே நான்உறு
சவலை தீர்த்துன தாளே சூடிஉன் அடியார்வாழ்-
வவையின் ஏற்றிஇன் ஞானா போதமும்
அருளி ஆட்கொளு மாறே தான்அது
தமிய னேற்குமு னேநீ மேவுவ தொகுநாளே;
திருவின் நாட்டர சாள்வான் வேணுவின்
உருவ மாய்ப்பல நாளே தான்உறு
தவசி னாற்சிவன் நீபோய் வானவர் சிறைதீர-
ஸகல லோக்கிய மேதான் ஆளுறும்
அஸுர பார்த்திப னோடே சேயவர்
தமரை வேற்கொடு நீறு யேபட விழமோதென்(று);
அருள் ஏற்றம ரோடே போயவர்
உறையு மாக்கிரி யோடே தானையும்
அழிய வீழ்த்தெதிர் சூரோ டேஅமர் அடலாகி-
அமரில் வீட்டியும் வானோர் தான்உறு
சிறையை மீட்டர னார்பால் மேவிய
அதிப ராக்ரம! வீரா! வானவர் பெருமானே.

## 102. வாழி (கந்த புராணம்)

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

ஸௌராஷ்ட்ரம் அல்லது மத்யமாவதி] [ஆதி

ஆறிரு தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க!சீர் அடியார் எல்லாம்.

மோஹநம்] **103. * போற்றி (ஷை)** [ஆதி

(ஷை)

மூவிரு முகங்கள் போற்றி! முகம்பொழி கருணை போற்றி!
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி! காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி! அன்னான்
சேவலும் மயிலும் போற்றி! திருக்கைவேல் போற்றி!
[போற்றி!

## தீபம்

மோஹநம்] **104. ஒளிபெற** [த்ரிபுடை

தானந்த தானந் தாத்த தானந்த தானந் தாத்த
தானந்த தானந் தாத்த தனதான

†ஏகாந்த வீரம் போற்றி! நீலாங்க யாரம் போற்றி!
ஏடார்ந்த நீபம் போற்றி! மூகில்தாவி-

ஏரேழுங்கல் ஏழுஞ் சாய்த்த நான்மூன்று தோளும்
[போற்றி!

யார்வேண்டி னாலும் கேட்ட பொருள்ஈயும்;

த்யாகாங்க சீலம் போற்றி! வாய்ஓய்ந்தி டாதன் றார்த்து
தேசாங்க சூரன் தோற்க மயிலேறிச்-

சேவேந்தி தேசம் பார்க்க வேல்ஏந்தி மீனம் பூத்த
தேவேந்த்ர லோகங் காத்த பெருமாளே.

(அடியேன் மோஹாந்த காரந் தீர்க்க
வேதாந்த தீபங் காட்டி யருள்வாயே!)

---

*பாடல் 103 முதல் 127 வரை உள்ள பாராயணப் பகுதியை ஸ்வாமிகள் 'புஷ்ப பூஜை' என்பது வழக்கம்.

†இது 'நாகாங்க' எனத் தொடங்கும் (1257) திருப்புகழ்ப் பாடலின் பின்பாதி.

நமஸ்காரம்

## 105. கதிஇன்மை கூறல்

(கந்தரலங்காரம்)

நந்யாசி அல்லது சங்கராபரணம்] [கட்டளைக் கலித்துறை

தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்திஇரு
காலால் எழுப்பி வளைமுது கோட்டிக்கைந் நாற்றிநரம்
பாலார்க்கை இட்டுத்தசைகொண்டுமேய்ந்த அகம்பிரிந்தால்
வேலாற் கிரிதொளைத்தோன்இரு தாள்அன்றி வேறில்லையே.

சங்கராபரணம்] 106. சீர்பாத வகுப்பு [ஜம்பை

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான தானதன
தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான தானதன

உததிஇடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கநகரத சதகோடி ஸூரியர்கள்
உதயம்என அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவின் இருள்அகல ஒருஜோதி வீசுவதும்*
உடலும்உடல் உயிரும்நிலை பெறுதல்பொருள் /எனஉலகம்
ஒருவிவரு மநுபவந சிவயோக ஸாதனையில்
ஒழுகும்அவர் பிறிதுபர வசம்அழிய விழிசெருகி
உணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்*
உருஎனவும் அருஎனவும் உளதெனவும் /இலதெனவும்
உழலுவன பரஸமய கலைஆர வாரம்அற
உரைஅவிழ உணர்வவிழ உளம்அவிழ உயிர்அவிழ
உளபடியை உணரும்அவர் அநுபூதி ஆனதுவும்*
உறவுமுறை மனைவிமக வெனும்அலையில் எனதிதய
உருவுடைய மலிநபவ ஜலராசி ஏறவிடும்
உறுபுணையும்* அறிமுகமும்* உயர்அமரர் மணிமுடியில்
உறைவதுவும்* உலைவிலதும்* அடியேன் மநோரதமும்*
இதழிவெகு முகககந நதிஅறுகு தறுகண்அர
இமகிரண தருணஉடு பதிசேர் ஜடாமவுலி
இறைமகிழ உடைமணியொ டணிஸகல மணிகலென
இமயமயில் தழுவும்ஒரு திருமார்பில் ஆடுவதும்*

இமையவர்கள் நகரில்இறை குடிபுகுத நிருதர்வழி
றெரிபுகுத உரகர்பதி அபிஷேகம் ஆயிரமும்
எழுபிலமும் நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்*
இனியகனி கடலைபய றுடியல்பொரி அமுதுசெயும்
இலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடுவதும்*
எறுழிபுலி கரடிஅரி கரிகடமை வருடைஉழை
இரலைமரை இரவுபகல் இரைதேர் கடாடவியில்
எயினர்இடும் ..தண் அதனில் இளகுதினை கிளிகடிய
இனிதுபயில் சிறுமிவளர் புனமீ துலாவுவதும்;*
முதலவினை முடிவில்இரு பிறைஎயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட
முடுகுவதும்* அருள்நெறியில்உதவுவதும்* நினையும்அவை
முடியவரு வதும்* அடியர் பகைகோடி சாடுவதும்*
மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல நீவரமும்
முருகுகமழ் வதும்* அகில முதன்மைதரு வதும்* விரத
முநிவர்கரு தரியதவ முயல்வார் தபோபலமும்*
முருக! சர வண! மகளிர் அறுவர்முலை நுகரும்அறு
முக! குமர! சரணம் என அருள்பாடி ஆடிமிக
மொழிகுழற அழுதுதொழு துருகுமவர் விழிஅருவி
முழுகுவதும்* வருக! என அறைகூவி ஆளுவதும்*
முடியவழி வழிஅடிமை எனும்உரிமை அடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடும் ஆசுகவி
முதலமொழி வனநிபுண மதுபமுகர் இதமவுந
முகுளபரி மளநிகில கவிமாலை சூடுவதும்;*

அல்லது அடாணு]

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவிஒரு விசைஆதி மூலம்! என
வருகருணை வரதன்இகல் இரணியனை நுதிஉகிரின்
வகிரும்அடல் அரிவடிவு குறளாகி மாபலியை
வலியசிறை யிட வெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகில் நிருதன்இரு பதுவர்கு பூதரமும்

மகுடம்ஒரு பதுமுறிய அடுபகழி விடுகுரிசில்
மருகன்*நிசி சரர்தளமும் வருதார காஸுரனும்
மடியமலை பிளவுபட மகரஜல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேலன்* நீலகிரி
மருவுகுரு பதி*யுவதி பவதிபக வதிமதுர
வசநிபயி ரவிகவுரி உமையாள் த்ரிசூலதரி
வநஜைமது பதிஅமலை விஜயைதிரி புரைபுநிதை
வநிதைஅபி நவைஅநகை அபிராம நாயகிதன்
மதலை*மலை கிழவன்*அநு பவன்*அபயன்* உபயசதுர்
மறையின்முதல் நடுமுடிவின் †மணநாறு சீறடியே.

சீர்பாதம் சென்னியுறத் தீவினை அழிந்தது

107. தன் அநுபவம் கூறினது *(கந்தரலங்காரம்)*

**மோஹநம் அல்லது பெஹாக்]** [கட்டளைக் கலித்துறை

சேல்பட் டழிந்தது செந்தூர்வயல்பொழில்தேம்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்புமவன்
கால்பட்டழிந்ததிங் கென்தலை மேல்அயன் கையெழுத்தே.

**மோஹநம்]** 108. ‡அருணகிரிநாத ஸ்வாமிகள் வணக்கம [ஷை

அந்தாதி இல்லா இறைவனுக் கந்தாதி அன்றுரைத்தும
நந்தா வகுப்பலங் காரம் அவற்கே நனிபுனைந்தும்
முந்தா தரவில் அவன்புகழ் பூதியும் முற்றும்சொன்ன
எந்தாய்! அருண கிரிநாத! என்னைநீ ஏன்றருளே.

108-அ. ‡ஈண்டு, (பக்கம்-2-பாட்டு-5) ஸுப்ரம்மண்ய நாயனார் வணக்கத்தை ஓதவும்.

**நாண்டு]** 109. ‡ஸச்சிதாநந்த குரு வணக்கம் [ஆதி

*(அறுசீரடியாசிரிய விருத்தம்)*

சின்னமாம் ஏக் தாரை திருக்கையில் ஏந்தி இந்தச்
சென்னைமா காணம் எல்லாம் திருப்புகழ் என்னுந் தேனைச்
சொன்னமா மாரிபோலச் சுவைஅமு தொழுகச் சொல்லும்
தன்னைநே ரில்லா ஸச்சி தாநந்தன் பதங்கள் போற்றி.

---

†மணநாறு சீறடியே' என்ற இத்தொடரை இந்த (சீர்பாத) வகுப்பில்; *இக் குறி யிட்ட இடங்களில் எல்லாம் ஓதுவது வழக்கம்.

‡பாக்கள் 108, 108-அ, 109-க்கு ஆசிரியர் ராவ பஹதூர் - தணிகை மணி - டாக்டர் (D. Litt.) வ. சு. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ, அவர்கள்.

ஆநந்தபைரவி] 110. அடியார் வணக்கம் [கட்டளைக்கலித்துறை
(அபியுக்தர் பாட்டு)

தருப்புகழ் வல்ல ஸுரர்மகள் நாயகன் சங்கரற்குக்
குருப்புகழ் வல்ல குமரேசன் ஷண்முகன் குன்றெறிந்
[தோன்
மருப்புகழ் வல்ல அருண கிரிப்பெயர் வள்ளல்சொன்ன
திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளிஎன் சென்னியதே.

யமுனா கல்யாணி] 111. அநுபூதி விளங்க [ஆதி

தான தனத்த தனதான

நாளு மிகுத்த கசிவாகி-
ஞான நிருத்தம் அதைநாடும்;
ஏழை தனக்கும் அநுபூதி
ராசி தழைக்க அருள்வாயே;
பூளை எருக்கு மதிநாக-
பூணர் அளித்த சிறியோனே;
வேளை தனக்(கு)உ சிதமாக-
வேழம் அழைத்த பெருமாளே.

பரஸ்] 112. திருவருள் பெற [ஆதி
(கந்தரநுபூதி-கலி விருத்தம்)

ஆதா ரம்இலேன் அருளைப் பெறவே
நீதான் ஒருசற் றும்நினைந் திலையே!
வேதா கமஞா நவிநோ தமநோ
தீதா! ஸுரலோ கசிகா மணியே!

மோஹநம்] 113. கவலை நீங்க (ஷ) [ஆதி

எந்தா யும்எனக் கருள்தந் தையும்நீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்!
கந்தா! கதிர்வே லவனே! உமையாள்
மைந்தா! குமரா! மறைநா யகனே!

மோஹநம்] 114. குரு தரிசநம (ஷ) [ஆதி

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய்! அருள்வாய்! குகனே!

மநச் சாந்தி

மோஹநம்] 115. நெஞ்சுக்கு உபதேசம் [கட்டளைக் கலித்துறை
(கந்தரந்தாதி)

செல்வந் திகழு மலநெஞ்ச மே! அவன் தெய்வமின்னார்
செல்வுந் திகழும் நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழும் திருக்கையில் வேல்தினை காத்தசெல்வி
செல்வந் திகழும் மணவாளன் நல்குந் திருவடியே.

கருட்டி] 116. திருப்புகழ் கேட்டதன் பயன் [ஷ
(ஷ)

செவிக்குன்ற வாரண நல்கிசை யூட்டவன் சிந்தையம்பு
செவிக்குன்ற வாரணம் அஞ்சலென் றுண்டது நீண்ட
கன்மச்
செவிக்குன்ற வாரண வேலா யுதஞ்செற்ற துற்றனகட்
செவிக்குன்ற வாரண வள்ளிபொற் றுள்மற்றென்
[தேடுவதே.

பாராயண ஸமர்ப்பணம்

யமுனு
கல்யாணி] 117. அறத்தை—மெய்ம்மையைப் பற்றுக [ஆதி
(கந்தரநுபூதி—கலிவிருத்தம்)

யாமோ தியகல் வியுமெம் அறிவும்
தாமே பெறவே லவர்தந் ததனால்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
நாமே நடவீர்! நடவீர்! இனியே.

மாநம் அலையா உறுதி வேண்டல்

ஆரபி] 118. அறிவு பெற [ஆதி

தனத்த தத்தத்தனத் தனதான

நினைத்த தெத்தனையிற் றவறுமல்-
நிலைத்த புத்திதனைப் பிரியாமற்;
கனத்த தத்துவமுற் றழியாமற்-
கதித்த நித்தியசித் தருள்வாயே;
மனித்தர் பக்தர்தமக் கெளியோனே-
மதித்த முத்தமிழிற் பெரியோனே;
ஜெனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்த ணிப்பதியிற் பெருமாளே.

மோஹநம் அல்லது ஆரபி] 119. *மகுடங்கள் [சுததாநிலை-
(பல்சந்தக் கதம்பம்) ரகச்-

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்த! மலை
விருத்த! என துளத்தில்உறை கருத்த! மயில்
நடத்து குக! (நின்)வேலும் மயிலும் நினைந்தவர்தம்
துயர்தீர அருள்தரு கந்த! நின் அருள்தாராய்!

பணியும்அடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவண பவா! நின் அருள்தாராய்!

தலைஅறிவி லேனைநெறி நிற்கநீ தீக்ஷை தரவேணும்!
அடியவர் இச்சையில் எவைஎவை உற்றன
அவைதரு வித்தருள் பெருமாளே!
நின் அருள்தாராய்!

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்ட வெறுதத்வு பெருமாளே!
நின் அருள்தாராய்!

வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டும் அளவில் உதவும் பெருமாளே!
நின் அருள்தாராய்!

---

*இத் தொகுப்பு வள்ளிமலை ஸ்வாமிகளால் அருணகிரிநாதரின் நூல்களிலின்று உயிர் போன்ற மிக முக்கியமான 'வேண்டுகோள் அடி'களைக் கொண்டு ஆக்கப் பெற்றது.

சிவமார் திருப்புகழை எனுநாவி னிற்புகழ
சிவஞான சித்திதனை அருள்வாயே!
கலியாண ஸுபுத்திர னாக
குறமாது தனக்கு விநோத
கவினான புயத்தில் உலாவி விளையாடிக்-
களிகூரும் உனைத்துணை தேடும்
அடியேனை ஸுகப்பட வேவை!
கடனாகும் இதுக்கன மாகு(ம்) முருகோனே!
பலகாலும் உனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே-
பதியான திருத்தணி மேவு
சிவலோகம் எனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத! பெருமாளே!
சலமான பயித்திய மாகி தடுமாறித்
தவியாமல் பிறப்பையும் நாடி
அதுவேரை அறுத்துனை ஓதி
தலமீதில் பிழைத்திட வேநின் அருள்தாராய்!
ஆபத்தில் அஞ்சல் என்ற பெருமாளே!
நின் அருள்தாராய்!

ஸகலதுக் கமும்அறச் சகலஸற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைன்மபெற் றுனதுபொற்
சரணம்எப் பொழுதும்நட் பொடுநினைத் திடஅருட்
டருவாயே!

நினைத்த காரியம் அநுக்கூல மேபுரி பெருமாளே!
நின் அருள்தாராய்!

ஏழைக் கிரங்கும் பெருமாளே! நின் அருள்தாராய்!
ஏழைகள் வியாகுலம் இதேதென விளவில்உனை
எவர்புகழ் வார்? மறையும் என்சொலா தோ?
ஆறுமுகம் ஆனபொருள் நீஅருளல் வேண்டும்!
ஆதி *அருணாசலம் அமர்ந்த பெருமாளே!

---

* 'அருணாசலம்' என்னும் பாடத்தை ஸ்வாமிகள் மகுடம் முழுதும் கைக் கொண்டனர்.

குறிஞ்சி வாழும் மறவர் நாயக! ஆதி விநாயகர்
இளைய நாயக! காவிரி நாயக!
வடிவின் நாயக! ஆனை தன் நாயக! எங்கள் மானின்-
மகிழும் நாயக! தேவர்கள் நாயக!
கவுரி நாயக ஞர்குரு நாயக!
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே!
*(ஆறுமுகம்..................பெருமாளே)

சிவத்தின் ஸ்வாமி மயில்மிசை நடிக்கும் ஸ்வாமி எமதுளே
சிறக்கும் ஸ்வாமி ஸொருபமி தொளிகாணச்-
செழிக்கும் ஸ்வாமி பிறவியை ஒழிக்கும் ஸ்வாமி பவமதை
தெறிக்கும் ஸ்வாமி முநிவர்க ளிடமேவும்;
தவத்தின் ஸ்வாமி புரிபிழை பொறுக்கும் ஸ்வாமி குடிநிலை
தறிக்கும் ஸ்வாமி அஸுரர்கள் பொடியாகச்-
சதைக்கும் ஸ்வாமி எமைபணி விதிக்கும் ஸ்வாமி சரவண
தகப்பன் ஸ்வாமி எனவரு பெருமாளே!
கலக்குண் டாகு புவிதனில் எனக்குண் டாகு பணிவிடை
கணக்குண் டாதல் திருவுளம் அறியாதோ!
(ஆறுமுகம்..................பெருமாளே)

திக்குமுகில் ஆடஅரி ஆடஅயன் ஆடசிவன்
ஒத்துவிளை யாடபரை ஆடவரர் ஆடபல
திக்கஸுரர் வாடஸுரர் பாடமறை பாடஎதிர்
களமீதே-
எத்திசையும் நாடியம ஞர்நிணமொ டாடபல
மிக்கநரி ஆடகழு தாடகொடி ஆடஸமர்
எற்றிவரு பூதகணம் ஆடஒளி ஆடவிடு வடிவேலா!
(ஆறுமுகம்..................பெருமாளே)

ஜடில் தரவிஷ தரபணி தரதர
பரசு தரசசி தரகசி தரவித
தமரு கமிருக தரவநி தரசிர தரபாரத்-

* (ஆறுமுகம்.....பெருமாளே) இவ்வாறு அச்சிடப் பெற்ற இடங்களில் 'ஆறுமுகம் ஆறுமுகம் ஆன பொருள் நீஅருளல் வேண்டும் ஆதி தணிகாசலம் அமர்ந்த பெருமாளே' என்று ஓதவும்.

தரணி தரதநு தரவெகு முககுல
தடிநி தரசிவ ஸுத! குண தர! பணி
சயில! விதரண! தருபுர சசிதரு மயில்வாழ்வே!
(ஆறுமுகம்..................பெருமாளே)

சவலை அறிவினர் நெறியினை விடஇனி அடியேனுக்(கு)
இசைய இதுபொருள் எனஅறி வுறஒரு
வசநம் உறஇரு வினைஅற மலம்அற
இரவு பகல்அற எனதற நினதற அநுபூதி-
இனிமை தரும்ஒரு தனிமையை மறைகளின்
இறுதி அறுதி யிடஅரிய பெறுதியை
இருமை ஒருமையில் பெருமையை வெளிபட
(ஆறுமுகம்..................பெருமாளே)

அசல குலபதி தரும்ஒரு திருமகள்
அமலை விமலைகள் எழுவரும் வழிபட
அருளி அருணையில் உறைதரும் இறையவள்அபிராமி-
அநகை அநுபவை அநுதயை அபிநவை
அதல முதல்எழு தலம்இவை முறைமுறை
அடைய அருளிய பழையவள் அருளிய சிறியோனே!
இனி அடியேனுக்கிசைய.......வெளிபட
(ஆறுமுகம்..................பெருமாளே

வசுவ பசுபதி மகிழ்தர ஒருமொழி
மவுநம் அருளிய மகிமையும் இமையவர்
மரபில் வநிதையும் வநசரர் புதல்வியும்
[வடிவேலும்-
மயிலும் இயல்அறி புலமையும் உபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவும் இளமையும் வளமையும் அழகிய
[பெருமாளே!
இனி அடியேனுக் கிசைய.......வெளிபட
(ஆறுமுகம்..................பெருமாளே)

நாரதன் அன்று ஸஹாய மொழிந்திட
நாயகி பைம்புனம் அதுதேடி-

நாணம் அழிந்துரு மாறிய வஞ்சகம்
நாடியெ பங்கய பதம்நோவ;
மார சரம்பட மோஹ முடன்குற
வாணர் குறிஞ்சியின் மிசையேபோய்-
மாமுநி வன்புணர். மான்உத வும்தனி
மானை மணஞ்செய்த பெருமாளே!
(ஆறுமுகம்........பெருமாளே)

செண்ப காடவி யினும்இத னினும்உயர்
சந்த னாடவி யினும்உறை குறமகள்
செம்பொன் நூபுர கமலமும் வளைஅணி புதுவேயும்;
இந்து வாண்முக வநஜமும் ம்ருகமத
குங்கு மாசல யுகளமு மதுரித
இந்த ளாம்ருத வசநமு முறுவலும் அபிராம-
இந்த்ர கோபமும் மரகத வடிவமும்
இந்த்ர சாபமும் இருகுழை யொடுபொரும்
இந்த்ர நீலமும் மடலிடை எழுதிய பெருமாளே!
(ஆறுமுகம்..........பெருமாளே)

ஆடிய மயிலினை ஒப்புற்று
பீலியும் இலையும் உடுத்திட்டு
ஆரினும் அழகு மிகப்பெற்று யவனாளும்-
ஆகிய இதண்மிசை உற்றிட்டு
மான்இனம் மருள விழித்திட்டு
ஆயுத கவண்ஒரு கைச்சுற்றி விளையாடும்;
வேடுவர் சிறுமி ஒருத்திக்கு
யான்வழி அடிமை எனச்செப்பி
வீறுள அடியிணை யைப்பற்றி பலகாலும்-
வேதமும் அமரரு மெய்ச்சக்ர
வாளமும் அறிய விலைப்பட்டு
மேருவில் மிகவும் எழுத்திட்ட பெருமாளே!
(ஆறுமுகம்......... பெருமாளே)

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவிஒரு விசைஆதி மூலம்என

வருகருணை வரதன்இகல் இரணியனை நுதிஉகிரின்
வகிரும்அடல் அரிவடிவு குறளாகி மாபலியை

வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகில் நிருதன்இரு பதுவாகு பூதரமும்

மகுடம்ஒரு பதுமுறிய அடுபகழி விடுகுரிசில்
மருக!* நிசி சரர்தளமும் வருதார காஸுரனும்

மடியமலை பிளவுபட மகரஜல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேல!* நீலகிரி

மருவுகுரு பதி!* யுவதி பவதிபக வதிமதுர
வசநிபயி ரவிகவுரி உமையாள் த்ரிசூலதரி

வநஜைமது பதிஅமலை விஜயைதிரி புரைபுநிதை
வநிதைஅபி நவைஅநகை அபிராம நாயகிதன்

மதலை!* மலை கிழவ!* அநு பவ!* அபய!* உபயசதுர்
மறையின்முதல் நடுமுடிவின் மணநாறு சீறடியே!*

அந்தண்மறை வேள்வி காவற் கார!
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார!
அண்டர்உப கார! சேவற் கார! முடிமேலே-

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார!
குன்றுருவ ஏவும் வேலைக் கார!
அந்தம்வெகு வான ரூபக் கார! எழிலான;

ஸிந்துரமின் மேவு போகக் கார!
விந்தைகுற மாது வேளைக் கார!
செஞ்சொல்அடி யார்கள் வாரக் கார! எதிரான-

செஞ்சமரை மாயு மாயக் கார!
துங்கரண சூர சூறைக் கார!
செந்தில்நகர் வாழும் ஆண்மைக் கார! பெருமாளே!

(அடியேன்) முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாமல்-

(அடியேனுக்கு) முந்தை வினையே வராமற் போக......
செம்பொன்மயில் மீது லேளப் போது வருவாயே!

(வந்து) இனி அடியேனுக்கிசைய........வெளிபட

(ஆறுமுகம்.......பெருமாளே)

---

* இக்குறியிட்ட இடங்களில் 'ஆறுமுகம்....பெருமாளே' என்ற முழு அடியையும் ஓதவும்.

வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை
ஜோதி கார்த்திகை பெற்ற விளக்கொளியே!
(எங்கள்) வினைப்பகை அறுத்து (யாங்கள் நினைத்ததும்
[முடித்து
(எங்கள்) மனத்துயர் கெடுத்தெனை (எங்களை)
வளர்த்தருள் க்ருபைக்கடலே!
(ஆறுமுகம்.......பெருமாளே)
(மகுடங்கள் முற்றும்)

120 பழமுதிர் சோலையின் பெருமை

(கந்தரந்தாதி)

மோஹநம் அல்லது ஆநந்த பைரவி] [கட்டளைக் கலித்துறை

திசாமுக வேதனை யன்பாற் கரன்திங்கள் தங்கவை
திசாமுக வேதனை ஈறிலும் ஈறிலர் சீறு(ம் அம்பேச
திசாமுக வேதனை வெந்கண்ட வேலன் தினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதண் கார்வரை சேர்பவரே.

கல்யாணி] 120-அ. கதி, மதி பெற [சுத்தாங்கம்

*மனதாலே இறந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டுப்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றக்கதொர் ஊதியம் நீதர இசைவாயே!

கல்யாணி] 121. துதிக்க [ஆதி

தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன தனதான

சருவி இகழ்ந்து மருண்டு வெகுண்டுறு
ஸமயமும் ஒன்றிலை என்றவ ரும்பறி
தலையரும் நின்று கலங்க விரும்பிய தமிழ்கூறும்-
சலிகையும் நன்றியும் வென்றியு மங்கள
பெருமைக ளும்கன மும்குண மும்பயில்
சரவண மும்பொறை யும்புக ழும்திகழ் தனிவேலும்;

* 'இது 'விடுங்கைக்' என்னும் (631) திருப்புகழ்ப் பாடலின் 4-ஆம் அடி.

ஜி து துலங்க சிகண்டியில் அண்டரும்
உருகி வணங்க வரும்பத மும்பல
விதரண மும்திற மும்தர மும்தினை புனமானின்-

ம்ருகமத குங்கும கொங்கையில் நொந்தடி
வருடி மணந்து புணர்ந்தது வும்பல
விஜயமும் அன்பில் மொழிந்து மொழிந்தியல்
[மறவேனே;

கருதிஇ லங்கை அழிந்துவி டும்படி
அவுணர் அடங்கம டிந்துவி ழும்படி
கதிரவன் இந்து விளங்கி வரும்படி விடுமாயன்-

கடகரி அஞ்சி நடுங்கி வருந்திடு
மடுவினில் வந்துத வும்புயல் இந்திரை
கணவன் அரங்க முகுந்தன் வரும்சக டறமோதி;

மருது குலுங்கி நலங்க முனிந்திடு
வரதன் அலங்கல் புனைந்தரு ளும்குறள்
வடிவன் நெடுங்கடல் மங்கஓர் அம்புகை
தொடுமீளி-

மருக! பு ரந்தர னும்தவம் ஒன்றிய
பிரமபு ரந்தனி லும்'குகன்' என்பவர்
மனதினி லும்பரி வொன்றி அமர்ந்தருள்
பெருமாளே.

ஆரபி] 121-அ. சந்தத் தமிழ் பாட [சுத்தாங்கம்

*நிதிபொங் கப்பல தவங்க ளால்உனை
மொழியும் புத்திகள் தெரிந்து நான்உனை
நிகர்சந் தத்தமிழ் சொரிந்து பாடவும் (நின்)
அருள்தாராய்!

122 முருகன் கருணை

(கந்தரலங்காரம்)

நாதநாமக்ரியா] [கட்டளைக் கலித்துறை

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையும்அங்கு வாழவைப் போன்வெய்ய
[வாரணம்போல்

கைதான் இருப துடையான் தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே.

---

* இது, 'மதியஞ்சத்' என்னும் (860) திருப்புகழ்ப் பாடலின் 4-ஆம் அடி.

123. *திருவேளைக்காரன் வகுப்பு (செவ்வாய்க் கிழமை)

நாதநாமக்ரியா] [ஆதி

தானதன தத்ததன தானதன தத்ததன
தானதன தத்ததன தானத் தானன

ஆனபய பக்திவழி பாடுபெறு முக்திஅது
வாகநிகழ் பக்தஜன வாரக் காரனும்

ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
ஒருடன் உணக்கைபரி தீமைக் காரனும்

ஆகமம்வி ளைத்தகில லோகமும் நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றுமதி வேகக் காரனும்

ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கிஅநு
பூதிஅடை வித்ததொரு பார்வைக் காரனும்

ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கஅம
ராவதிபு ரக்கும்அடல் ஆண்மைக் காரனும்

ஆடகவி சித்ரகந கோபுரமு கப்பில்அரு
ணைபுரியில் நிற்கும்அடை யாளக் காரனும்

ஆயிரமு கத்துநதி பாலனும் அகத்தடிமை
ஆனவர்தொ டுத்தகவி மாலைக் காரனும்

ஆறுமுக வித்தகனும் ஆறிரு புயத்தரசும்
ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும்

யான்எனதெ னச்சருவும் ஈனஸம யத்தெவரும்
யாரும்உணர் தற்கரிய நேர்மைக் காரனும்

யாதும்நிலை அற்றலையும் ஏழுபிற விக்கடலை
ஏறவிடும் நற்கருணை ஓடக் காரனும்

ஏரகம் இடைக்கழி சிராமலை திருப்பழநி
ஏர்அணி செருத்தணியில் வாஸக் காரனும்

ஏழையின் இரட்டைவினை யாயதொர் உடற்சிறைஇ
ராமல்விடு வித்தருள்நி யாயக் காரனும்

---

*பல்லவி: 'வேளைக்காரனே திரு வேளைக்காரனே குறத்தி வேளைக்காரனே வேடிச்சி வேளைக்காரனே வள்ளிக்கு வேளைக்காரனே முருகன் மேதகு குறத்தி திரு வேளைக் காரனே'. (இதை இவ்வகுப்பின் தொடக்கத்திலும் முடிவிலும் இருமுறை ஓதவும்.)

*இவ்வகுப்பை 122-எண்ணுள்ள பாடலை ஓதி ஆரம்பித்துப் பாடி, 126-எண்ணுள்ள பாடலை ஓதி முடிப்பதும், ஒவ்வோர் அடியின் முடிவிலும் 'முருகன் மேதகு குறத்தி திரு வேளைக் காரனே' என ஓதுவதும் வழக்கம்.

யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாய்எனஅ ழைத்துருகு நேயக் காரனும்

ஏதம்அற நிச்சயம நோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் காரனும்

ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானைஅள விற்றுவளும் ஆசைக் காரனும்

ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்கும்இனை
யோனும்அறி விற்பெரிய மேன்மைக் காரனும்

வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியில் உதித்தமுக மாயக் காரனும்

வாரணப திக்குதவு நாரணன் உவக்குமரு
மானும்அய னைக்கறுவு கோபக் காரனும்

'வாழி'என நித்தமற வாதுபர விற்சரண
வாரிஜம் அளிக்கும்உப காரக் காரனும்

மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவுள் ஆயக் காரனும்

வாள்எயிற துற்றபகு வாய்தொறும் நெருப்புமிழும்
வாஸுகி எடுத்துதறும் வாசிக் காரனும்

வாளகிரி யைத்தனது தாளில்இடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்

மாசில்உயி ருக்குயிரு மாசில்உணர் வுக்குணர்வும்
வானில்அணு வுக்கணுவு பாயக் காரனும்

வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
ஹாடவியில் நிற்பதொர்ஸ ஹாயக் காரனும்

மீனவனு மிக்கபுல வோரும்உறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் காரனும்

வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்

வேலைதுகள் பட்டுமலை சூரன்உடல் பட்டுருவ
வேலைஉற விட்டதனி வேலைக் காரனும்

மீன்உலவு க்ருத்திகை குமாரனும் நினைக்கும்அவர்
வீடுபெற வைத்தருள்உ தாரக் காரனும்

மேனைஅரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும் அரக்கர்குல சூறைக் காரனும்

ம்வதியர்வெ றுக்கையும் அநாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்
வேடுவர்பு னத்தில்உரு மாறிமுநி சொற்படிவி
யாகுலம னத்திஞெடு போம்விற் காரனும்
மேவியபு னத்திதணில் ஒவியம் எனத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.

124 தன் ஆநந்தம் கூறினது
(கந்தரலங்காரம்)

காவடிச்சிந்து மெட்டு] [கட்டளைக் கலித்துறை

நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்;மரிப் பார்வெறுங்
கர்மிகளே.

காவடிச்சிந்து மெட்டு] [ஆதி

125 *வேடிச்சி காவலன் வகுப்பு (வெள்ளிக் கிழமை)

தனதன தத்ததன தனதனன தத்ததன
தனதனன தத்ததன . தானத்த தானதன

உதரகம லத்தினிடை முதியபுவ நத்ரயமும்
உகமுடிவில் வைக்கும்உமை யாள்பெற்ற பாலகனும்
உமிழ்திரை பரப்பிவரு வெகுமுக குலப்பழைய
உதகமகள் கைக்கல்வரு ஜோதிச் சடாநநனும்
உவகையொடு க்ருத்திகையர் அறுவருப் எடுக்கஅவர்
ஒருவர்ஒரு வர்க்கவண் டோரர்புத்ரல் ஆனவனும்
உதயரவி வர்க்கம்நிகர் வனகிரண விர்த்தவிதம்
உடையசத பத்ரநவ பீடத்து வாழ்பவனும்

---

*பல்லவி 'காவலனே காவலனே காவலனே காவலனே காவலனே காவலனே வேடிச் காவலனே' (இதை இவ்வகுப்பின் தொடக்கத்திலும் முடிவிலும் இருமுறை ஓதவும்.)

*இவ் வகுப்பை 124-எண்ணுள்ள பாடலை ஒதி ஆரம்பித்துப் பாடி, 126-எண்ணுள்ள பாடலை ஒதி முடிப்பதும், ஒவ்வோர் அடியின் முடிவிலும் 'வேடிச்சி காவலனே' என ஓதுவதும் வழக்கம்.

உறைசரவ ணக்கடவுள் மடுவில்அடர் வஜ்ரதரன்
உடையமத வெற்புலைய வேதித்த வீரியனும்

உரைபெற வகுத்தருணை நகரின்ஒரு பக்தன்இடும்
ஒளிவளர் திருப்புகழ்ம தாணிக்கு பாகரனும்

உரககண சித்தகண கருடகண யக்ஷகணம்
உபநிடம் உரைத்தபடி பூஜிக்கும் வானவனும்

ஒருவனு மகிழ்ச்சிதரு குருபரனும் உத்தமனும்
உபயம்உறும் அக்நிகர மீதிற்ப்ர பாகரனும்

அதிமதுர சித்ரகவி நிருபனும் அகத்தியனும்
அடிதொழு தமிழ்த்ரயவி நோதக் கலாதரனும்

அவரைபொரி எட்பயறு துவரைஅவல் சர்க்கரையொ
டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்

அவுணர்படை கெட்டுமுது மகரஜல வட்டமுடன்
அபயமிட விற்படைகொ டாயத்தம் ஆனவனும்

அருணையில் இடைக்கழியில் உரககிரி யிற்புவியில்
அழகிய செருத்தணியில் வாழ்கற்ப காடவியில்

அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறிஎன இமைப்பொழுதின் வாழ்வித்த வேதியனும்

அரிபிரம ருக்குமுதல் அரியபர மற்குயரும்
அருமறை முடிப்பைஉப தேசித்த தேசிகனும்

அமலனும் எனக்கரசும் அதிகுணனும் நிர்க்குணனும்
அகிலபுவ நத்தமர ஸேனைக்கு நாயகனும்

அநுபவனும் அற்புதனும் அநுகுணனும் அக்ஷரனும்
அருமனம் ஒழிக்கும்அநு பூதிச் சுகோதயனும்

இதம்அஹிதம் விட்டுருகி இரவுபகல் அற்றஇடம்
எனதறஇ ருக்கைபுரி யோகப் புராதநனும்

எனதுமன ஸிற்பரம ஸுகமவுந கட்கமதை
யமன்முடி துணிக்கவிதி யாவைத்த பூபதியும்

எழுமையும் எனைத்தனது கழல்பரவு பக்தன்என
இனிதுகவி அப்படிப்ர ஸாதித்த பாவலனும்

இமையவர் முடித்தொகையும் வநசரர் [பொருப்புமென
திதயமு மணக்கும்இரு பாதச் சரோருஹனும்

எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரஅதி பாரப் புயாசலனும்

எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளிமுகி யைப்பொருத ராவுத்தன் ஆனவனும்

எழுபரி ரதத்திரவி எழுநிலமொ டக்கரிகள்
இடர்பட முழக்கிஎழு சேவற் பதாகையனும்

இணைஇலியும் நிர்ப்பயனும் மலம்இலியும் நிஷ்களனும்
இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்

**மோஹநம்]**

மதுகையொடு சக்ரகிரி முதுகுநெளி யப்புவியை
வளையவரும் விக்ரம கலாபச் சிகாவலனும்

வலியநிக ளத்திஞெடு மறுகுசிறை பட்டொழிய
வனஜமுநி யைச்சிறிது கோபித்த காவலனும்

வருஸுரர் மதிக்கஒரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்

வரதனும் அநுக்ரஹனும் நிருதர்குல நிஷ்டுரனும்
மநுபவந சித்தனு மநோதுக்க பேதநனும்

வயிர்ஒலிசை முழக்கமிகு மழைதவழ் குறிச்சிதொறும்
மகிழ்குரவை யுட்டிரியும் வேடிக்கை வேடுவனும்

மரகத மணிப்பணியின் அணிதழை உடுத்துலவும்
வநசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்

மதநன்விடு புட்பசர படலம்உடல் அத்தனையும்
மடல்எழுதி நிற்குமதி மோகத் தபோதநனும்

வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதணில்
மயில்என இருக்கும்ஒரு வேடிச்சி காவலனே.

### 126. தன் ஆநந்தம் கூறினது

**மோஹநம் அல்லது நாதநாமக்ரியா]** **[கட்டளைக் கலித்துறை**

**(கந்தரலங்காரம்)**

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற
[பேதைகொங்கை

விரும்பும் குமரனை மெய்யன்பி னால்மெல்ல மெல்லஉள்ள
அரும்பும் தனிப்பர மாநந்தம் தித்தித் தறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக்
[கைத்ததுவே.

## 127. திருக்கையில் வழக்க வகுப்பு (4-ஆம் அடி)

மோஹநம் அல்லது மத்யமாவதி] [ஆதி

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலச்சர வணத்தறு முகப்பொருள்
ஜெகத்ரய முகிழ்த்தஉ தரத்திரி புரைக்கொரு
திருப்புதல்வன் உற்பல கிரிப்பெயர் தரித்தருள்
திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.*

(திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை முற்றும்)



"ஆடும்பரி வேல் அணிசேவல்"

(உதவி: திரு. கா. ரா. முருகேசம் பிள்ளை.)

* பாராயணம் முடிந்தவுடன் இவ்வனம் கூறி அடியார்களுக்கு ஸ்வாமிகள் திருநீறு அளித்தல் வழக்கம்.

அருணகிரிநாதர் அருளிய



## திருஎழு கூற்றிருக்கை

### துதி

ஓருரு வாகிய தாரகப் பிரமத்
தொருவகைத் தோற்றத் திருமர பெய்தி
ஒன்றாய் ஒன்றி இருவரிற் றோன்றி
மூவா தாயினை:
இருபிறப் பாளரின் ஒருவன் ஆயினை;

ஓராச் செய்கையின் இருமையின் முன்னாள்
நான்முகன் குடுமி இமைப்பினிற் பெயர்த்து
மூவரும் போந்து இருதாள் வேண்ட
ஒருசிறை விடுத்தனை

ஒருநொடி யதனில் இருசிறை மயிலின்
முந்நீர் உடுத்த நானிலம் அஞ்ச
நீவலஞ் செய்தனை.
நால்வகை மருப்பின் மும்மதத் திருசெவி
ஒருகைப் பொருப்பன் மகளை வேட்டனை;

ஒருவகை வடிவினில் இருவகைத் தாகிய
மும்மதன் தனக்கு மூத்தோன் ஆகி
நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்
அறுகு சூடிக் கிளையோன் ஆயினை:

ஐந்தெழுத் ததனில் நான்மறை உணர்த்தும்
முக்கட் சுடரினை இருவினை மருந்துக்
கொருகுரு வாயினை:

ஒருநாள் உமைஇரு முலைப்பால் அருந்தி
முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
ஐம்புலக் கிழவன் அறுமுகன் இவன்என
எழுதரும் அழகுடன் கழுமலத் துதித்தனை;

அறுமீன் பயந்தனை: ஐந்தரு வேந்தன்
நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சுட்(டு)
அன்றில் அங்கிரி இருபிள வாக
ஒருவேல் விடுத்தனை

காவிரி வடகரை மேவிய குருகிரி இருந்த
ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவன் எனஇருந் தனையே.

அருணகிரிநாதர் அருளிய திரு எழுகூற்றிருக்கை




[உதவி: ஸ்ரீ R. கல்யாண ஸுந்தரம் ஐயர்]

௨

## திரு எழுகூற்றிருக்கை

எழுகூற்றிருக்கை என்பது ஒன்று முதல் ஏழுவரை ஏறியும் இறங்கியும் எண்ணலங்காரம் படப் பாடப்படும் பாட்டு வகை எனப் பொருள் தருவதுடன், திரு-எழு-கூற்று-இருக்கை எனப் பிரிவதாகித், திரு-முத்தித்திரு-முத்தி இன்பம், எழு-எழுகின்ற-முத்தியின்பத்தை எழுப்புகின்ற, கூற்று-சொற்களின், இருக்கை-இருப்பிடம் எனவும் பொருள் தருவதாகி-லக்ஷ்மிகரமும், வீட்டின்பமும் தருதற்கு இருப்பிடமான திருப்பாடல் இது என்பதும் இப்பாடலின் பெயரளவிலேயே விளங்காநிற்கும்.

திருஎழுகூற்றிருக்கை என்னும் சித்ரகவி 96 வகைப் ப்ரபந்தங்களுள் ஒன்று. இது: ''ஒன்று முதல் ஏழு வரையும் எண்கள் முறையே ஒவ்வொன்ருக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவி வகை.''

''ஒன்று முதலா ஓர்ஏழ் ஈருச்
சென்றஎண் ஈரேழ் நிலந்தொறுந் திரிதர
எண்ணுவ தொன்ரும் எழுகூற் றிருக்கை''—அவைதாம்
''இரதபெந் தத்தினில் இடையறை இரண்டாய்ச்
சரதம துறநடை சார்தரு பான்மையின்
ஒன்றுபன் ஞன்காய் ஒருபன் னிரண்டாய்
நின்றய லேனவும் நிலந்தொறு முபயங்
குன்றுவ தாய்த்தொகை கூடியொன் றிலிறும்''

மாறனலங்காரம்—ஸூத்ரம் 297- 298.

[இதன்பொருள்:- ''செய்யுளகத்து எண்ணப்பட்ட ஒன்றென்னும் எண் ஒன்று முதலாக ஓரேழ் ஈருக நிகழ்ந்த எண்களைப் பதிஞலு நிலந்தோறும் மீள எண்ணுவதாகும் எழுகூற்றிருக்கை; அங்ஙனம் எண்ணப்படும் எண்கள்தாம் இரதத்திற் பெந்திக்குமிடத்து மையத்தில் பத்தியிரண்டு பத்தியாய்க் கிறிவலமே இடமே நடத்தலைத் தரும் பகுதியில் மையத்தில் ஒன்று பன்ஞன்காகவும், அதன் அயல் இரு பத்தியில் இரண்டும் பன்னிரண்டாகவும் ஒழிந்த மூன்று முதலிய எண்ணும் பத்திதோறும் இரண்டு குறைந்து ஏழ் என்னும் தொகை பொருந்தி முதலே நின்ற ஒன்றில் வந்து முடியும்.'' : ''ஏழறையாக்கக் குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பொறியால் வழுவாமையால் ஒன்று முதலாக ஏழு இறுதியாக முறையானே பாடுவது'']

## அருணகிரியார் அருளிய
## திருஎழு கூற்றிருக்கையைப் பற்றிய குறிப்பு

**திரு எழுகூற்றிருக்கை:-** இதன் சிறப்பு ஆய்தற்பாலது: "புகலியில் வித்தகர் போல...அமிர்தகவித் தொடைபாட அடிமை தனக் கருள்வாயே'' (திருப்.169) என வேண்டியவாறே, புகலி வித்தகர் (ஸம்பந்தப் பெருமான்) திருஎழு கூற்றிருக்கை பாடியவாறே தாமும் முருக வேளுக்கு இத்திரு எழு கூற்றிருக்கையைப் பாடித் தமது ஆண்டவனுக்கு ஸமர்ப்பித்தனர் அருணகிரியார்; இக்காரணம் பற்றி ஸம்பந்தர் பாடியுள்ள திருஎழுகூற்றிருக்கையிலுள்ள ஒரு தனிச்·சிறப்பு அருணகிரியார் பாடியுள்ள திருஎழுகூற்றிருக்கைக்கும் உண்டு என்பது போதரும்; ஞானஸம்பந்தப் பெருமானுடைய திருப்பதிகங்களை நாடோறும் ஓதிப் பயின்று வந்த அவர் தந்தையார்-சிவபாத இருதயர்-அவை நாடோறும் பெருகிவர அங்ஙனம் முற்றும் பயிலப் பெறாது வருந்த அவர் பொருட்டு ஸம்பந்தர் திருஎழுகூற்றிருக்கையைப் பாடியருளி அஃது ஒன்றையே விதிப்படி ஓதினால், எல்லாப் பதிகங்களையும் ஓதிய பயன் கிடைக்கும் என்று ['எந்தைக் கெழு கூற்றிருக்கை' - பெரிய புரா. ஸம். 276.] அறுதியிட்டு உரைத்தனராம்; அதுபோல, அருணகிரியாரது பதினாறாயிரம் திருப்புகழையும் ஓதும் நியமத்தால் வரும்பயன் அவரருளிய இந்தத் திரு எழுகூற்றிருக்கை ஒன்றைப் பாராயணம் செய்யும் நியமம் ஒன்றினாலேயே பெறலாகும் என்பது வெள்ளிடை மலைபோலத் தெள்ளிதில் உணரலாம் என்க'' என்றெழுதி யிருப்பதன் விவரத்தைத் திரு எழுகூற்றிருக்கை ரதபந்தப் படத்துடன், முருகவேள் பன்னிரு திருமுறை-தொகுதி 5-இல் 682-688 பக்கங்களிற் காணலாம்.

நக்கீரர், ஸம்பந்தர், திருமங்கையாழ்வார் இம்மூவர் பாடிய திருஎழுகூற்றிருக்கை பின்வருமாறு அமையும்.

ஓம்

அருணகிரிநாதர் திருஎழுகூற்றிருக்கை ஒரு சிறிது வேறுபட்டுப் பின்வருமாறு அமையும். (ரதபந்தப்படம் பக்கம்-76)



# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறையின்

## பாட்டு முதற்குறிப்பகராதி

## அருணகிரியார் அருளிய
## திருஎழு கூற்றிருக்கையைப் பற்றிய குறிப்பு

**திரு எழுகூற்றிருக்கை:-** இதன் சிறப்பு ஆய்தற்பாலது; "புகலியில் வித்தகர் போல... அமிர்தகவித் தொடைபாட அடிமை தனக் கருள்வாயே" (திருப்.169) என வேண்டிய வாறே, புகலி வித்தகர் (ஸம்பந்தப் பெருமான்) திருஎழு கூற்றிருக்கை பாடியவாறே தாமும் முருக வேளுக்கு இத்திரு எழு கூற்றிருக்கையைப் பாடித் தமது ஆண்டவனுக்கு ஸமர்ப்பித்தனர் அருணகிரியார்; இக்காரணம் பற்றி ஸம்பந்தர் பாடியுள்ள திருஎழுகூற்றிருக்கையிலுள்ள ஒரு தனிச் சிறப்பு அருணகிரியார் பாடியுள்ள திருஎழு கூற்றிருக்கைக்கும் உண்டு என்பது போதரும்; ஞானஸம்பந்தப் பெருமானுடைய திருப்பதிகங்களை நாடோறும் ஓதிப் பயின்று வந்த அவர் தந்தையார்-சிவபாத இருதயர்-அவை நாடோறும் பெருகிவர அங்ஙனம் முற்றும் பயிலப் பெறாது வருந்த அவர் பொருட்டு ஸம்பந்தர் திருஎழுகூற்றிருக்கையைப் பாடியருளி அஃது ஒன்றையே விதிப்படி ஓதினால், எல்லாப் பதிகங்களையும் ஓதிய பயன் கிடைக்கும் என்று ['எந்தைக் கெழு கூற்றிருக்கை' - பெரிய புரா. ஸம். 276.] அறுதியிட்டு உரைத்தனராம்; அதுபோல, அருணகிரியாரது பதினாறாயிரம் திருப்புகழையும் ஓதும் நியமத்தால் வரும்பயன் அவரருளிய இந்தத் திரு எழுகூற்றிருக்கை ஒன்றைப் பாராயணம் செய்யும் நியமம் ஒன்றினாலேயே பெறலாகும் என்பது வெள்ளிடை மலைபோலத் தெள்ளிதில் உணரலாம் என்க" என்றெழுதி யிருப்பதன் விவரத்தைத் திரு எழு கூற்றிருக்கை ரதபந்தப் படத்துடன், முருகவேள் பன்னிரு திருமுறை-தொகுதி 5-இல் 682-688 பக்கங்களிற் காணலாம்.

---

நக்கீரர், ஸம்பந்தர், திருமங்கையாழ்வார் இம்மூவர் பாடிய திருஎழுகூற்றிருக்கை பின்வருமாறு அமையும்.

ஓம்

அருணகிரிநாதர் திருஎழு கூற்றிருக்கை ஒரு சிறிது வேறுபட்டுப் பின்வருமாறு அமையும். (ரதபந்தப்படம் பக்கம்-76)



# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறையின்

## பாட்டு முதற்குறிப்பகராதி

## திருவகுப்பு முதலியன

உ

# பிற்சேர்க்கை

# திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறையின்

## ★ அரும்பதவுரைக் குறிப்புக்கள்

### (எண்கள் - பாட்டு எண்கள்)

### (அருட்கவி ஸாதுராம் எழுதியவை)

1. சாத்திடவும் - அணிவிக்கவும்; ஸமர்ப்பிக்கவும். 2. கயம் - யானை. கயமாமுகன் - கஜமுகாஸுரன். செரு - போர். சாடும் - கொன்ற. 3. பதவுரை : தீ - அக்நியானவன், வினையற்ற - தீக்ஷண்யமாகத் தஹிக்கின்ற தன் செய்கையற்றது போல், சிநம் தீர் - கோபம் நீங்கிய, அஹத்துள் - நமது சாந்த ஹ்ருதயத்துள், மெய் - உண்மையாகிய, தீபம் - ஞாந விளக்கை, நம் தம் தீவினை - நம்முடைய தீவினையாகிய, அல் - இருளானது, தவ - கெடும்படி, நந்தாது - அவிந்து போகாமல், எடுத்தனம் - ஏற்றிவைத்தோம், செம் - சிவந்த, தினைமேல் - தினைப்பயிர் விளைவில், தீ - தீய்ந்துபோகும், வினையற்ற - செய்கையில்லாத, புன - புனத்தில் வாழும், மான்-மான்போன்ற கண்ணையுடைய வள்ளியம்மைக்கு, கொழுநன் - நாயகனாகிய, செழும் - செழுமை தங்கிய, கநகத் தீவினை - பொன்மயமாய்ப் ப்ரகாசிக்கின்ற மோக்ஷ லோகத்தை, அற்ற - பாச பந்தங்கள் நீங்கிய, அடியார்க்கு - தமதடியார்கட்கு, அருள் - கொடுத்து அருள்கின்ற, பெரும் - பெரிய, செல்வனுக்கு - அருள் நிறைந்த செல்வனுக்கு. கருத்துரை : வளப்பம் மிகுந்த தினைப்புனத்தில் வாழ்கின்ற வள்ளியம்மைக்கு நாயகனும், பற்றற்ற அடியார்கட்கு மோக்ஷ உலகத்தை அளிப்பவனுமாகிய குமரக்

★ இதில் வரும் 12 கந்தரந்தாதிப் பாக்களின் பதவுரை, கருத்துரைகள் ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆழ்வார் அருளியவை. பிற பாக்களுக்கு உரையெழுதப் பெரிதும் துணையாயிருந்து உதவிய நூல்கள், தணிகை மணி. வ. சு. செங்கல்வராய பிள்ளை, அவர்கள் தொகுத்த 'முருகவேள் பன்னிரு திருமுறைத்' தொகுதிகள் ஆறுமாம்.

கடவுளுக்கு நமது சாந்த ஹ்ருதயத் தகழியில் உண்மையாகிய ஞாந விளக்கை ஏற்றிவைத்தோம். 4. அந்த ஆதி - முடிவும் முதலும். அந்தாதி - கந்தர் அந்தாதி. நந்தா - அழிவற்ற. வகுப்பு - திருவகுப்பு. அலங்காரம் - கந்தர் அலங்காரம். நனி - நன்றாக. புகழ் - திருப்புகழ். பூதி - கந்தர் அநுபூதி. எந்தாய் - எம் தந்தையே! 5. களி - மகிழ்ச்சி. பதின்மூன்று நூறு - 1,300. ஒல்லை - விரைவில். 6. வதிந்து - வாழ்ந்து. ஆண்டவர்த் தொழுபவ - ஆண்டவரை வணங்குபவனே! 7. இச்சை - ஆசை. ஆவி - உயிர். இச்சையாள் - இச்சாசக்தி; வள்ளிநாயகி. ப்ர்த சரணம் - திருவடி; ஒரு பொருள் இரு சொல். சரணம் - அடைக்கலம். 8. தரு - ஸந்தாநம், ஹ்ரிசந்தநம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் ஐந்து தெய்வ தருக்கள். மரு - வாசனை; மருவும் எனலுமாம். தூளி - தூள். 9. கலை - ஆடை. விதி - ப்ரம்மா. கிள்ளை - கிளி. எள் அத்தனை - எள்ளளவு. வாலை - பாலை; பாலாம் பிகை. 10. சக்தி - வேல். மயில் - வாஹநம். கொடி - சேவல். மயிற்கொடி - மயூரத் த்வஜமுமாம். முப்பழம் - மா, பலா, வாழை. வளைமுறி - முறுக்கு. இக்கு - இக்ஷு; கரும்பு. லட்டுகம் - லட்டு. மகர ஜலநிதி - மகரமீன்கள் நிறைந்த கடலில். வைத்த துதிக்கர - வைத்து நீரை உறிஞ்சிய தும்பிக் கையை உடையவனே! இது கூர்மாவதாரத்தின் போது திருமால் செருக்குற்றுக் கடலைக் கலக்கத், தேவர்கள் அஞ்சிச் சிவபிரானை வேண்ட, அவர் ஆக்ஞையின்படி விநாயகர் கடலை உறிஞ்சி ஆமையின் அஹந்தையைப் போக்கிய கதையைக் குறிக்கும். ஒற்றை மருப்பன் - ஏக தந்தன். தொத்திரம் - தோத்திரம். குழை - காது. தொப்பணம் - தோப்பணம்; தோபி:கரணம் (தோப்புக்கரணம்). குட்டு - தலையிற் குட்டிக் கொள்ளல். அறுபதம் - ஈ. உதிரம் - ரத்தம். உதரம் - வயிறு. நிரைய - வரிசையில் அமைய. அரவம் - ஒலி. களம் - போர்க்களம். மத்தளி டக்கை - மத்தளம், இடக்கை முதலிய வாத்யங்கள். எனவெ - எனவே; என்று. ஒத்து - ஒத்து ஊதுகுழல். துடி - உடுக்கை. தவில் - டவுல். அலகை - பேய். இரண பயிரவி - போர்க்களத்துத் தேவதை. நிசிசரர் - அஸுரர். பெலி - பலி. 11. கத கல் -

பருத்த, இறுகிய கல். தஞ்சம் - சரணாகதி. பஞ்சக் கரம் - ஐந்து கை. 12. பதவுரை: வாரணத்தானை - ஐராவதத்தை உடைய இந்த்ரனையும், அயனை - ப்ரம்மாவையும், விண்ணோரை - தேவர்களையும், மலர்க்கரத்து - தாமரை மலர் போன்ற கையில், வாரணத்தானை - சங்கையுடைய விஷ்ணுவையும், மஹத்து - (தக்ஷனது) வேள்வியில், வென்றோன் - (வீரபத்ர மூர்த்தங் கொண்டு) ஜயித்தவனாகிய பரமசிவனது மைந்தனை - புதல்வனும், துவஜ வாரணத்தானை - கோழிக் கொடியையுடைய குமரக் கடவுளைத், துணை நயந்தானை - தம்பியாக விரும்பியவனும், வயல் - பழனம் (வயல்கள்) சூழ்ந்த. ★அருணை - அருணாசலத்தில், வாரணத்தானை-கஜமுகாஸுரனை. திறைகொண்ட - வெற்றிகொண்ட, யானையை - யானை முகனுமாகிய கணபதியை, வாழ்த்துவன் - (யான்) வணங்குகிறேன். கருத்துரை: தக்ஷனது வேள்வியில் இந்த்ரன், ப்ரம்மா, விஷ்ணு, விண்ணோர் இவர்களை வீரபத்ர மூர்த்தங்கொண்டு வென்ற பரமசிவன் மைந்தனும், குமாரக் கடவுளுக்குத் துணைவனும், கஜமுகாஸுரனை வென்றோனுமாகிய அருணகிரியில் வீற்றிருக்கும் யானைமுக விநாயகனை யான் வணங்குகிறேன். 13. கப்பிய - வாரி உண்ட. பேணி - விரும்பி. கடிது - விரைவில். மத்தம் - ஊமத்தம்பூ. மதியம் - சந்த்ரன். மல் - மல்யுத்தம். மட்டு - வாஸனை; தேன். முத்தமிழ் அடைவு - வ்யாஸ மஹா பாரதம். கிரி - மேருமலை. இபம் - யானை. 14. உம்பர் தரு - தெய்வ வ்ருக்ஷங்கள் ஐந்து; (பாடல் 8-இன் குறிப்புரை பார்க்க.) தேநு - காமதேநு. மணி - சிந்தாமணி. ஒண்கடல் - ஒளி மிக்க கடல். தேன் - தேன்போல் இனிய. அமுதம் - தேவாம்ருதம். பருகி - பருக. தம்பி - முருகவேள். 15. பக்கரை - அங்கவடி (Stirrup). க(ல்)லணை - சேணம் (Saddle). பக்ஷி - பறவை.

---

★ அருணை - திருவண்ணாமலையில், வாரணத்து - கடல் போன்ற(பேரளவில்) அல்லது வார் - நீண்ட, அள் - காதுகளை உடையனவும், நத்து - விரும்பி ஏற்றுக் கொண்டனவும் ஆன, ஆனைத் திறைகொண்ட - யானைகளைக் கப்பமாக ஏற்றுக்கொண்ட, யானையை - யானை முகனும் ஆகிய கணபதியை எனலும் ஆம். "யானைத் திறை கொண்ட விநாயகர்" என்ற ஒரு ஸந்நிதியே திருவருணையில் இன்றும் இருக்கக் காணலாம்; சோண சைல மாலைக் காப்புச் செய்யுள் காண்க. (தணிகை மணி - டாக்டர் (D. Litt.) ஸ்ரீ. வ. சு. செங்கல்வராய பிள்ளை M.A. அவர்கள் முருகவேள் பன்னிரு திருமுறையில் எழுதியுள்ள சிறப்புரை.)

துரகம் - குதிரை (ஆகிய மயில்). நீபம் - கடம்பு. பக்குவம் - மலரும் பருவத்துள்ள. குவடு - க்ரவுஞ்ச கிரி. குக்குடம் - கோழி. ரக்ஷை - காப்பு. செய்ப்பதி - வயலூர். இக்கு - கரும்பு. வண்டெச்சில் - தேன். வெள்ளரி - வெள்ளரி. இடிப்பல் - மாவு. மூலம் - கிழங்கு. அடிசில் - சோறு. அருள் ஆழி - அருட்கடல். (அருள்) வெற்ப - அருள்மலையே! குடிலச் சடிலவளைந்த ஜடையையுடைய. வில் - பிநாகம். மருப்பு - தந்தம். 16. பதவுரை: உண்-(கன்றுகள்)உண்ணும், ஆ-பசுக்களை உடைய, முலை-முல்லை நிலத்திற்கு, உ - இறைவனாகிய விஷ்ணுவினது, மை-மேக நிறத்தையும், மைந்து-வலிமையையும், ஆசு-(உவர்ப்பாகிய) குற்றத்தையும் உடையதாய், அரண்-காவலாயிருக்கிற, அம்பரர்-ஸமுத்ரத்திலிருந்த அஸுரரது, உயிர் சேர்-ஆவியை மாய்த்து, உள்-தேவர்கள் மநத்திருந்த, நாம்-அச்சத்தை, உலையும் - கெடுத்தருளும், ஐ - ஸ்வாமியே! மை-ஆட்டுவாஹநத்தில், தா - ஏறும், சர் - (உஷ்ணத்தை உடைய) அக்நி, அண் - சேர்ந்திருக்கும், நம் - நாம் அடைக்கலம் புகுதற்கிடமாகிய, அருணை வெற்பாள் - அருணகிரியில் வாழும் அம்மையாகிய, உண் - மிகுதியாக, ஆம் - பெருகும், முலையும் - கற்புடைமைக்கும், ஐ-அழகிய, மை - அஞ்சநம் தீட்டிய, தா - குழையை எட்டுகின்ற, சர - அம்புபோன்ற கண்ணினது, நந்தநமும் - க்ருபைக்கும், ஒப்பில் - இணையில்லாத, உண்ணாமுலையுமை - உண்ணாமுலை யென்னும் பெயரையுடைய பார்வதியினது, மைந்தா - புதல்வனே! சரணம் சரண்உனக்கு - உன்னிடத்தே யான் சரணம் புகுந்தேன். கருத்துரை: திருமால் நிறம்போற் கறுத்து உவர்ப்பை உடையதாயும், வலிய அரணையும் (காவலாயும்) இருக்கின்ற ஸமுத்ரத்திலிருந்த அஸுரரைத் தேவர் அச்சந் திரும்பட வதைத்தவனே! அக்நி ஸொரூபமாகிய அருணகிரியில் அமர்ந்தருளிக் கற்பிலும் கடாக்ஷத்திலும் தனக்கு ஒப்பில்லாத உண்ணாமுலையம்மை புதல்வனே! யான், உன் அடைக்கலம் புகுந்தேன். 17. தடுங்கோள்; விடுங்கோள்; இடுங்கோள்; இருங்கோள் - தடுங்கள்; விடுங்கள்; இடுங்கள்; இருங்கள். வெகுளி - கோபம். வை வேல்-கூரிய வேலாயுதம். கோன் - தலைவன்; முருகன். 18. வளைந்து உடுத்த - சூழ்ந்து ஆடையாயுள்ள. எழுபுவி - ஏழு உலகங்கள்.

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

புரந்து - காப்பாற்றி. நிரந்தரிக்க - நித்யமாக. அளகை - அளகாபுரி; குபேரபட்டணம். அரசன் - குபேரன். அமரர் அரசன் - தேவேந்த்ரன். அடைபெறுவது - அடையப்பெறுவது. அலகு இல் வினை சண்டை - அளவற்ற இருவினைச் சண்டைகள். அடல் எதிர் - வலிமைமிக்க எதிர்ப்பு. இலகிய - விளங்கும். புஷ்பகம் - குபேரனின் விமாநம். உடல் நிறம் வெளுத்த இபம் - ஐராவதம். பொருப்பு - மலை. உட்க-வருந்த, ஒழியவும் - தவிரவும். பலிப்பது - உலகில் தோன்றி முளைப்பது; பிறப்பது. வித்தையினை - உலக கலைகளை. பார்உளீர்- உலகில் உள்ளவர்களே! இரைப்ப - ஒலி செய்ய. முகை- மொட்டு. அவிழ் - விரியும். கடம்பு - கடப்பமலர். அடுத்த- தொடுத்த. தார் - மாலை. முதலி - முதல்வர்; பெரியவர். பெரிய அம்பலம் - பேரம்பலம் - மதுரை; சிதம்பரம் எனலும் ஆம். வரை அசலம் - மலை; ஒரு பொருள் இரு சொல். மண்டபம் - (மலைபோற் பெரிய) ஸபா மண்டபம்; ''வரை அசல மண்டபம்'' என்றே ஒரு மண்டபம் திருச்செந்தூரில் உண்டு. முனை - போர் முனைகள். ஒற்றி - தாக்கி. முகில் - மேகம். இரங்க எற்றி - பேரொலி எழ மோதி. முறை நெறி - போர் முறை வழியே. அவுணர் - அஸுரர். குடர் - குடல். பந்தர்- பந்தல். இரு குன்றம்-இரு மலை போன்ற தநபாரங்கள். ஒத்தி- அணைந்து. மழலை - மழலைச் சொல். விளம்பி - பேசி. மலை இறை - பர்வதராஜன். மடந்தை - மகள்; பார்வதி. மதலை- குழந்தை. அயில் - வேல். 19. மிடி - வறுமை. படி - பூமி. விதநம் - துன்பம். அடங்க - முழுமையும். 20. சேந்தன் - சிவந்தவன்; முருகன். காந்தன் - கணவன். கந்தக் கடம்பன் - நறுமணமிக்க கடப்ப மலர் அணிந்தவன். கார் - கறுத்த. சாம் துணை - இறக்கும் வரைக்கும். 21. பதவுரை: திரு - மஹா லக்ஷ்மிக்கு, ஆவி - உயிராகிய (திருமாலும்), நன்குடி - நல்ல தேவியை, பங்காளர் - பாகத்திலுடைய பரமசிவனும், எண் - மதிக்கத்தக்க, முது - பழைமையாகிய, சீர் - சிறப்புப் பொருந்திய, உரை - (வேதாகமப் பொருளைச்) சொல்லிய, சதிர் - சதுர்ப்பாட்டையுடைய, உவாவினன் - இளையோனாகிய (கந்தஸ்வாமிக்கு), குடி - உறைவிடமாகிய, வான்- ஆகா சத்தை, ஆர் - அளாவிய, பரங்குன்று - திருப்பரங்குன்

றையும், சீரலைவாய் - திருச்செந்திற்பதியையும், திரு - செல்வம் நிறைந்த, ஆவினன்குடி - திருவாவினன் குடி (பழநி)யையும், ஏரகம் - ஸ்வாமிமலையையும், குன்றுதோறாடல் - (அக்கடவுள்) திருவிளையாட்டியற்றும் பல குன்றங்களையும், சென்று-ஊடந்து, அதிர் - முழங்கும், உவா - யானைகளின், இனன்-கூட்டங்கள், குடிகொண்ட - நீங்காது உறைகின்றதும், தண்கார் - குளிர்ந்த மேகம் தவழ்வதுமாகிய, வரை - பழமுதிர்சோலையையும், செப்புமின் - துதி செய்யுங்கள். கருத்துரை: (பார்வதீ ஸமேதரான) பரமசிவனும், லக்ஷ்மீ ஸமேதரான திருமாலும் புகழ்கின்ற கீர்த்தியும் வல்லமையுமுடைய குமாரக்கடவுளுக்கு உறைவிடமாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி (பழநி), திருவேரகம், குன்று தோறாடல் (முருகன் திருவிளையாடல் செய்யும் குன்றுகள்), பழமுதிர்சோலைமலை இவற்றைத் துதியுங்கள். 22. ஈநம்-இழிவு. நாணம்-வெட்கம். தவத்தினில் - தபஸில். மிகுதி - மேன்மைப் பகுதி. சாரதி - ஸரஸ்வதி; ஸா - அந்த, ரதி - ரதிதேவி எனலுமாம். துணைவ - ஸஹோதரனே! ஆன - (சிவபிரானுக்கு) உகந்த. திருப்பதிகம்-தேவாரத் திருப்பதிகங்கள். ஆறு திருப்பதி - ஆறு படைவீடு. 23. பதவுரை: ★ சீகர - அலைகளையுடைய, ஸிந்து - ஸமுத்ரத்தின் கண், ரவுத்த - ராவுத்தனை, வெம் - கொடிய, சூர - சூரனை, செய - வென்றவனே! புய - உனது திருப்புயத்தை, வசீகர-வசீகரித்தலில் வாஞ்சையுள்ள, ஸிந்துர - திலதத்தையுடைய, வல்லி - வள்ளி நாயகிக்குரிய, சிங்கார - அலங்காரத்தை உடையவனே! சிவஸுத - பரம சிவனது மைந்தனே! சுசீ-அக்நியினது, கர - கையிலிருந்தவனே! ஸிந்துர - (வெள்ளை) யானையையும், கந்தர - மேகத்தையும், வாஹன் - வாஹநமாகக் கொண்ட இந்த்ரனது, சிறை - சிறையை, விடும்-களைந்த, சுசீகர - பரிசுத்தனே! சிந்து - சிதற அடி, உர-வலிய, மால் - மயக்கத்தைத் தரா நின்ற (தந்த), வினை - இருவினையாகிய, குன்றை - கல்மலையை, சிகண்டி கொண்டு - மயில் வாஹநாரூடனாய் என்முன் எழுந்தருளி. கருத்துரை: ஸமுத்ரத்

★ சீகர - லக்ஷ்மீகரம் (செல்வச் செழிப்புப்) பொருந்தியவனே! சிந்து-யானையாம் பிணிமுகத்தில் அல்லது ஐராவதத்தில் ஏறும், ரவுத்த - ராவுத்த - (மயிலாகிய) குதிரைச் சேவகனே! எனலும் பொருந்தும்.

திண்கண் வலிய சூரனை வென்றவனே! (அல்லது லக்ஷ்மிகரம் உடையவனே! யானையேறும் குதிரைச் சேவகனே!) அழகிய புயாசலனே! வள்ளி நாயகனே! பரமசிவன் மைந்தனே! அக்நியின் கையிலிருந்தவனே! இந்த்ரனது சிறையைக் களைந்த பரிசுத்தனே! நீ மயிலேறி வந்து என் வினையாகிய குன்றைப் பொடி படுத்த வேண்டும். 24. வை-கூர்மை. ஐவர்-ஐம் பொறிகள். வீடு-உடல். 25. கநகம் - பொன். கிரி-மேரு. செண்டு-செண்டாயுதம்; தலைப்பு வளைந்த பிரம்பு போன்ற கருவி. கதி-வலிமை. கடம் மிஞ்சி-மதம் மிகுந்து. அநந்த விதம்-பல வகையில். கவளம்-கபளம் கபளமாக உண்கை. கரி-யானைமுகனும் விநாயகர். துணை-ஸஹோதரன். பநகம்-பந்நகம்-பாம்பு. புயல்-மேகம் போன்றவர். புலையன் - புலைத் தொழில் செய்பவன். பவம்-பாவம். அநகன்-பாவம் அற்றவன். அழல் உந்த-தீக்கொளுந்த. நகும் திறல்-சிரிக்கும் ஆற்றல். வென்-முதுகு. கந-பெருமை படைத்த. மதி-சந்த்ரன். கதிர்-ஸூர்யன். 26. சிகரமும் வலம் வருகிலன்-கிரி ப்ரதக்ஷிணம் செய்கின்றேனில்லை. உவப்பு-மகிழ்ச்சி. விழைகிலன்-விரும்பு கிறேனில்லை. பகடு-எருமை. பிடர்-கழுத்து. கறுத்த-கரிய; கோபித்த எனினுமாம். வெம்-கொடிய. மறலி-யமன். உழை யினர்-யமபடர்கள்; காலன் முதலியோர். எறிகயிறு-பாசம். அடு கதை - கொல்லும் கதாயுதம். பொரு - சண்டையிடும். நைந்து அலமுறு-நொந்து கலங்கும். அளவை-தத் க்ஷணம். வினைத்தலம்-போர்க்களம். அலகை-பேய். விழுக்கு-மாம்ஸம். உண-உண்ண. குஞ்சி-தலைமயிர். பண்-ராகம். கொடிச்சி-பூங் கொடி போன்றவள். முகடு-மலை. நறை-தேன்; வாஸனை. விரைத்த-நறுமணமுள்ள. ம்ருகமதம்-கஸ்தூரி. புயவரை-தோள்மலை. மறைமுநி-ப்ரஹ்மா. புனல்-நீர். அலர் பொதிய- மலர் தூவ. வரிஅளி-ரேகைகளையுடைய வண்டுகள். நறை-தேன். தெவிட்ட -அலுக்க. 27. புண்டரிகம்-தாமரை. கலவி-ஸம்போஹம். மன்-நிரம்ப. பொது திகழ் மாதர்-விளங்கும் விலை மகளிர். செருமி-நெருங்கிப் போய். தநிநாளும்-நாள் தோறும் தக்க ஸமயத்தில். உவகாரி-உபகாரம் செய்பவள். எந்தை-சிவன். இடம்உறை நாயகம்-இடப்பாகத்திலிருக்கும் தலைவி. கவுரி-செந்நிறமான தேவி. ஆனை-யானைமுகக் கணபதி. கரமில்-கரத்தில். பகிர்ந்த-

கொடுத்த. அவம்-வீண். அமுத ஆலயம்-பேரின்ப வீடு. நகம்-குறிஞ்சி(மலை) நிலம்; கால் நகமும் ஆம். குறிஞ்சி-மலை; குறிஞ்சி மலரும் ஆம். அயிலா-வேலவா! 28. ஏறு-வ்ருஷபம். கரி உரி-யானைத் தோல். நூல்-புரி நூல். அதள்-தோல். சிரமணிமாலை-அழகிய தலை(கபால) மாலை. உசந்த-உயர்ந்த. அசந்த-அயர்ந்த. 29. வெண்டையம்-ஒருவகைக் காலணி. பவுரி-வளைந்து(வலம்) வரும் கூத்து வகை. சந்த மகுடம்-அழகிய கிரீடம். சிந்துவேல்-(சூராதிகளை) அழித்த வேல். சந்திர நிறங்கள்-(கோடி) சந்த்ர ப்ரகாசம். புண்டரிகர் அண்டம்-ப்ரஹ்மாண்டம்; ஸத்யலோக மும்ஆம். பஹிர் அண்டம்-வெளியி்ுள்ள உலகுகள். வெம்களம்-கொடிய போர்க்களம். பொன்கிரி-பொன்மலை. என அம் சிறந்து -என்று அழகு மேலிட்டு. புண்டரிகர் தந்தை-திருமால். புண்டரிகர்-தாமரைக் கண்ணனும் விஷ்ணு. தந்தை-சிவபிரான் எனினுமாம். சந்தம்-சந்தநம். கும்பமுநி-அகஸ்த்யர். 30. முஞ்சர்-லோபிகள். முனை-போர். துங்க-பரிசுத்தமான. அம் தண்மறை வேள்வி-அழகிய குளிர்ந்த வேதத்திற் சொல்லப்பட்டுள்ள யாகம்; நாரதர் செய்தது. அந்தம்-அழகு. ஸிந்துரமின் -ஐராவத யானை வளர்த்த மின் கொடி போல்வாளாம் தெய்வ யானை. வேளைக்காரன்-பொழுது போக்குத் துணைவன். வாரக் காரன்-அன்பு வைத்துள்ளவன். செம் சமர்-நேர்மைப்போர். ரணம்-போர். சூறைக்காரன்-சூறையாடுபவன்; அழிப்பவன். 31. விறல் மாரன்-வலிமை வாய்ந்த மந்மதன். வாளி-அம்பு. இந்து-சந்த்ரன். மித வாடை-அளவான (வடக்கு) வாடைக் காற்று. தழல் - நெருப்பு. ஒன்ற - பொருந்த. குறவாணர் - -குறவர். பேதை-வள்ளி. குளிர்மாலை-குளிர்ந்த மாலைப் போது. அணிமாலை-அழகிய பூ (மண)மாலை. குறுகாயோ-(வந்து)அணைத்துக் கொள்ள மாட்டாயோ? மறி மான்-மான்கன்று; ஒரு பொருள் இரு சொல். மதி-புத்தி. மலை-க்ரவுஞ்சம். மாவு சிந்த-மாமரம் அழிய. வேலை-கடல். 32. அண்டர்பதி-தேவருலகு. அந்தரி-பார்வதி. மகிழ்கூர-மகிழ்ச்சிமிக. மண்டலம்-மண்தலம்; பூமி. எண்திசை-அஷ்ட திக்கு. மஞ்சினன்-மேக வாஹநனும் இந்த்ரன். மங்கை-லக்ஷ்மி. மைந்து-வலிமை; அழகு. புண்டரிகம்-தாமரை. அண்டர்மகள்-தேவஸேனை. புந்தி-புத்தி. நாகம்-அஷ்டகுல நாகங்கள். விண்டுவரை-மூங்கில்கள் வளரும் மலைகள்;

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

அஷ்டகுல பர்வதங்கள் அல்லது சூரனெடு வரும் ஏழு கிரிகள் அல்லது க்ரவுஞ்சம். இகல்-மாறுபாடு. சாடு-அழிக்கும். தண்தரளம்-குளிர்ந்த முத்து. மணி-ரத்நம். 33. மூல மந்திரம்-தாரகம்; ப்ரணவம். இங்கிலே-இங்கு இல்லே. மூகன்-ஊமை. வார்மை. ஸஹவாஸம். கும்பி-சகதி; கும்பிபாகம் என்னும் நரகமும் ஆம். கூடு-உடல். கூர்மை-புத்திகூர்மை. பீலி-மயில் தோகை. ஆலி-(குண்டிகை) நீர். அசோகு-அசோகமலர். மூகர்-மௌட்யர். எழுது ஏடு-தேவாரம் எழுதின ஓலேயேடு. மாறன் -நின்ற சீர் நெடுமாற பாண்டியன். பீறு-ரத்தம் பீறிட்டு வரும். வெம் கழு-கொடிய கழுமரம். ஆலம்-விஷம். ஜோதி-அக்நி. அம் க(ண்)ணர்-அழகிய திருக்கண்ணினர். வாலே-பாலே. ஆரணம்-வேதம். 34. இருசெவி-பெருமை பொருந்திய காது. வரபாலன்-வரபுத்ரன். விருதா-வீணே. ஆஹம்-அஹம்; உள்ளம். நவநீதம்-வெண்ணெய். நவலோகம்-பூமியின் ஒன்பது பிரிவான கண்டங்கள். அலங்கிருத-அலங்காரங்களோடுகூடியவனே! விஞ்சை-மாய வித்தை. கரு-பிறப்பு. தெவயானே-தேவயானேயம்மை. அம்-அழகிய. ஸம்ப்ரம்-ஸம்ப்ரமம்; பெருமை. வேள்-செவ்வேள்; முருகவேள். ஸவுந்தரிக-அழகனே! மெய் கண்ட-உண்மையைக் கண்டறிந்த. 35. பவளம்-செம்பவழம். வீழியின்கனி-தேஜிநீ பலம்; செந்நிறமுள்ளது. பொரு-போன்ற. பசலே-தேமல். தநம்-முலே. விரகு-காம புத்தி; ஸாமர்த்யம். விரகு-விரகம் - விரகதாபம் எனலுமாம். சருகு ஒத்து-(காய்ந்த) இலேச்சருகு போல. மெலியா-மெலியாத. அம் பரி-அழகிய குதிரை. நுகர்-பருகுவாயாக! வித்தகம் ஆகும்-(கலே) அறிவு வளரும். நுவல்-சொல். மெய்ப்பு-ஸத்யம். பாலன்-திரு ஞாந ஸம்பந்தன். நுதி-(பல்லின்) கூர்மை. கராம்-முதலே. களிறு-ஆண் யானே; கஜேந்த்ரன். நொடி-கண்ணிமைப்போது. அகரம்-'அ' என்னும் எழுத்து. அக்கரம்- அக்ஷரம்; எழுத்து. அமரர்க்கு இறை- தேவேந்த்ரன். 36. நாடா-விரும்பாத. முடியாதோ-முடிந்து போய் விடாதோ? அரற்றும்-அலறும். வினே ஆயின்-செயலாக உருவாளுல். திருச்சபையின் ஏருது சித்தம்-(நின்) ஸந்நிதாநத்தில் (திரு ஓலக்க ஸபையில்) உன் திரு மநத்தில் ஏற்றுக் கொள்ளப் பெருது. வாடா மலர்ப் பதவி-அழியாமுக்தி நிலே. வாய்பாறி-வாய் கிழிபட்டு (அரற்றி ஓலமிட்டு). வாரேன்-வருகிறேன்;

வரமாட்டேன் எனினுமாம். சூடாமணி-சூளாமணி; ஒரு மகளிர் தலையணி. பிரபை-ஒளி. அரிதோல்-சிங்கத் தோல். ஏடு ஆர் குழல்-மலர் இதழ் பொருந்திய கூந்தல். சுருபி-ஸொரூபி; அங்க லக்ஷணமுள்ளவள். ஞாந ஆதநத்தி-அறிவுப்பீடத்தில் அமர்ந்திருப்பவள். ஏராள்-அழகி. ஏர்-அழகு. புலிசை-சிதம் பரம். 37. திகை-திசை. உவரி-கடல். படி-உலகு. முகடு-மலை. ஜடலம்-உடல். உயிர் இயை-ஜீவனோடு பொருந்தும். ஜடம்-உடம்பு. நளிநம்-தாமரை. மருமலர்-நறுமணப்பூ. சுருதியின் முறை-வேத விதிப்படி; இசை ச்ருதியின் நெறி எனலுமாம். என்+அ—என=என்னுடைய. குதி-குதித்தல்; முதல்நிலைத் தொழிற்பெயர். குதிபாய-குதித்துப் பாய. சம்பைக் கொடி-மின்னற் கொடி. விபுதை-தேவதை; தெய்வயானையம்மை. நந்த-விளங்க. சந்தச் சபை-அழகிய ஸபை அல்லது சந்தப்புகழ் பாடும் இந்த ஸபை. மறுக-வற்றி அழிய. சலரி-சல்லரி; வாத்ய வகை. பேரி - பேரிகை. துன்ற - பொருந்தி ஒலிக்க. சிலைமணி-வில்லிற் கட்டப் பெற்றுள்ள அழகு மணிகள். சிந்த-ஒலியைச் சொரிய. கந்தச் சடை-வாஸனைமிக்க ஜடாபாரம். அடல்-வலிமை. எந்தை-சிவபிரான். கஞ்சப்பதம்-பதகஞ்சம்-பக்வமான தாமரை மலர். இவர்-ஏறி வீற்றிருக்கும். குலமகள் -குலஸ்த்ரீ. குருமலை-ஸ்வாமிமலை. 38. கலி-கலக்கம். உலை-கன்னான் நெருப்படுப்பு. எழுபு - எழுந்து. மரபாவை - மரப் பதுமை; பொம்மலாட்டத்தில் உபயோகப்படுத்துவது. கயிறு-பொம்மலாட்ட ஸூத்ரம். நீறு கண்டு-பொடிபடுத்தி. இந் துளம்-கடம்பு. தொடை-மாலை. நூபுரம்-சிலம்பு. மதன்-மந் மதன். தருணம் - இளமை. மழவிடை - இளம் எருது. அருண கிரி-திரு அண்ணாமலை. குருகு-பறவையாம் கோழி. மந்தரம்-மந்தரமலை. புவநகிரி-உலகைச் சுற்றியுள்ள எட்டுக் குலகிரி கள். சேடன்-ஆதிசேஷன். சசிமகள்-இந்த்ராணி பெண்; தெய்வ யானை. உம்பர்-தேவர். 39. இடைந்து-வருந்தி. ஸுகந்த வீ-நறுமண மலர். விண் மடந்தை-அரம்பை முதலியோர். பரு மயில்-பருத்த (பெரிய) மயில். மருவலர்கள்-பகைவர்கள். திண்-வலிய. பணஅர-படத்தை உடைய பாம்பாம் ஆதிசேஷனின். மறலி-யமன். வளை குலம்-சங்கின் கூட்டம். அலங்கு-ஒளி செய் கின்ற; அசைகின்ற 40. ஒட்டில் பட்ட-கண்ணியில் அகப்பட்ட.

குருகு-பக்ஷி. ஸத்துவிட்ட(அ)ப்படிபொல்-அறிவின் சக்தியை விட்டுவிட்டுத் தவிக்கின்ற அதுபோல். சச்சில்-பதர் போல. படியில்-பூமியில். முத்தப் பதவி-முக்தி நிலை. தொக்கு-தொகுக் கப்பெற்று. மிடி-வறுமை. துப்பு-செம்பவழம். சரணம்-மயில் தோகை. வெற்றிப் புரவி-ஜயம் தரும் குதிரை. சுற்றவிட்டு-வலம் வரச்செய்து. கடுகி-வேகமாக. வித்தக அத்தி-ஞான யானை; கணபதி. பவள தொப்பை அப்பற்கு-பவழம்போற் செந்நிறம் வாய்ந்த பெருவயிற்று எந்தையாம் விநாயக ருக்கு. வெற்றி சக்திக்கர-ஜயவேல் கையில் ஏந்தியவனே! க-மயிற் கொடி உடைய. பச்சைச் சரணம்-பசுந் தோகை. கத்தர்-கர்த்தர்; தலைவர். நெட்டு-நீண்ட. முக்கண் நக்கக் கடவுள்-த்ரிநேத்ரதாரியும், நக்நனும் (திகம்பரனும்) ஆன தெய்வம். கச்சி அப்பர்-ஏகாம்பர நாதர் அல்லது கச்சபேச் வரர். கற்ப தத்தை-கற்பக லோகத்துக் கிளி போல்வாளாம் தேவகுஞ்சரி. உற்பதத்து-உன் பதத்து-உன் கழலே போற் றும். குறவர் கற்பு-குறக்குலத்திற் கற்புக்கரசியாய் அவ தரித்த வள்ளியம்மை. 41. தறை-தரை-பூமி. மானுடர்-மனிதர். மடல் எழுதும் மால்-பனைபோலை ஏடெழுதி மட லேறும் படிக்கு மயக்கம். தோதகம்-வம்பு. ஸரஸர்-ஸல் லாபம் செய்வோர். ஓதி-கூந்தல். மின்-மின்னல். சவலை-கருவு யிர்த்து ஓராண்டுக்குள் தோன்றிய நோயாளிக் குழந்தை. இராசிய-ரஹஸ்ய. பவநம்-காற்று; ப்ராணவாயு. பூரகம்-மூச்சை உள்ளே இழுத்தல்; ப்ராணாயாமத்தின் ஓர் அங்கம். ஏகிகம்-ஒன்றுபடுதல். விந்து-பிந்து; துளி; புள்ளி; சுக்லம். நாதம்-ஒலி; ச்ரோணிதம். நிசாசரர்-அஸுரர். கலாபம்-தோகை; மயில். ஸமேள-ஸம்மேளநம்; கலப்பு. அம்புராசி -கடல். திரைகள்-அலைகள். சீதள-குளிர்ந்த. குடக காவிரி-மேலைக்காவேரி; குடகு நாட்டில் உற்பத்தியாகி ஓடிவரும் காவிரி நதி. திரிசிராமலை-திருச்சிராப்பள்ளி. குறிஞ்சி-(வள்ளி) மலை. மறவர்-வேடர். வடிவு-உருவம்; அழகு. ஆனை-தெய் வானை. மான்-வள்ளிமான். வடிவு அதா-அழகாக. மலையானை யும்-குன்றுதோறாடலில். 42. கழைவில்-கரும்பு வில். குதை-வில் முனைகள். கணை-அம்பு. விசை-வேகம். வட்டபணை-வட்ட மான பறை. தத்தையர்-கிளி போன்ற மாதர்கள். திகிரி-

மூங்கில்; புல்லாங்குழல். நெய்-தேன். கமலமொக்கு-தாமரை மொட்டு. கமலம் ஒக்கும் முலை எனவும் பிரிக்கலாம். குறவி-குறத்தி; வள்ளி. இறுக-கெட்டியாக. எற்றிய-அலைகளை எடுத்தெறிந்த. ஜலதி-கடல். எட்டு அசலம்-அஷ்ட குலகிரிகள். நிலம் முட்ட-பூமி முழுதும். முடிநெட்டு-நீண்ட கிரீடம் அணிந்து அரசாட்சி செய்த. 43. குட்டம்-குஷ்டம். எரிவழங்கு வெப்பு-அக்நியைப் போற் கொதிப்பைக் கக்குகின்ற வெப்பு (ஜுரம்) நோய். இகலி நின்று-மாறுபட்டு இருந்து. அலைக்கும் முயலகன்-வருத்தும் அபஸ்மாரம் என்னும் இழுப்பு நோய். குலைப்பு-நடுக்கும் குலைநோய். முனை-போர். நெடியகுன்று-நீண்டு உயர்ந்த சிறுமலை; தணிகை; திருத்தணிக்கருகில் 'நெடியம்'என்ற பெயராலேயே உள்ள ஒரு குன்றின்மேலும் முருகன் கோயிலிருக்கிறது. திசைமுகன்-ப்ரம்மா. 44. பரவைக்கு-பரவை நாச்சியாருக்கு. விசை-தடவை. பகரற்கு-சொல்ல. மாண்-மாட்சிமை பொருந்திய. மரபு-வம்சாவளி. உச்சித-உசிதமான. கரடம்-மதம். கற்பகன்-கற்பகம் போல் அருள் வழங்கும் கணபதி. கலை-மான் (மகள்). வில் கண்-ஒளிபொருந்திய கண் அல்லது வில்போல் வளைந்த புருவத்தின் கீழமைந்த கண். அயன்-ப்ரம்மன். 45. அகரம்-'அ' என்னும் எழுத்து. அஹம்-உள்ளம்; 'நான்' என்னும் வஸ்து. இகரம்-'இ' எனும் எழுத்து. இருநிலம்-பெரிய பூமி. மகபதி, வலாரி-தேவேந்த்ரன். 46. காலன்-யமன். வேதன்-ப்ரம்மா. ஆர்அமுதம்-நிறைந்த தேவாம்ருதம். தந்தி-யானை; தேவஸேனை. 47. மனை-மனைவி. வாலவயது-பால வயஸ். நுதல் ஆன திங்கள்-பிறைச் சந்த்ரன் போன்ற நெற்றி அல்லது புருவம். தாழும்-தாழ்ந்து வணங்கும். சேல-சேல் மீன்களை உடைய. அனங்கள்-அன்ன பக்ஷிகள். ஆர-நிரம்ப. ஆரம்-முத்து. இஞ்சி-மதில். சேண்-ஆகாசம். ஆலவிடம்-ஹாலாஹல விஷம். கண்டர்-திருக்கழுத்தினர். மன்று-சிதம்பர ஸபை. 48. ஊடல்-காதலரின் பிரிதல் விளையாட்டு. முயங்கி-மயங்கி. விரகால்-விரகத்தால். மெ(ய்)யே-உடம்பே. விசை-வேகம். ஆழி-கடல். ஸேது-அணை. ராவணேசை-ராவணேச்வரனை. தானை-ஸேனை. பாறு-பருந்து. 49. அம்-அழகு; கங்கை நீர். சிவகாசி-பாண்டி நாட்டு ஸ்தலம். சிவம்-மங்கலம். காசி - வடகாசி எனினுமாம். கொந்து - திரளான ஜநங்கள்.

தனி-தனியே; ஒப்பற்ற தன்மையில். தந்திரர்-ஆகம சாஸ்த்ரக் காரர்கள்; கல்வியாளர்கள். கும்பு-கூட்டம். வேளூர்-வைத்தீச் வரன்கோயில். ஜெம்புகேசுரம்-திரு ஆனைக்கா. தென்றல் மாகிரி-பொதியம். மூதூர்-திருப்புனவாயில். விரிஞ்சை-திரு விரிஞ்சிபுரம். வஞ்சி-கருவூர். கம்பை மாவடி-காஞ்சிபுரம் ஏகாம் பரேச்வரர் கோயில். கம்பு-சங்கு. காவேரி ஸங்கமுகம்-காவிரிப் பூம்பட்டினம் என்னும் பூம்புகார். சிராமலை - திருச்சிராப் பள்ளி மலை. தேவதந்திர-தேவஸேனாபதியே! கந்தம்-வாஸனை. சிவாயம்-ரத்நகிரி (திருவாட்போக்கி). அஹம் படு-(ப்ரம்மா வின்) அஹங்காரம் பட்டுப்போன. வாதாடு மங்கையர்-காளிகாதேவி. உம்பர்-ஸத்யலோகம்; தேவர். வாணி-ஸரஸ் வதி. பொன்-திருமகள். மால் ஸவுந்தரி-திருமாலுக்குரிய அழகி; லக்ஷ்மி. ஏர்பு-உள்ளத்து எழுச்சி. இந்திராணி தன்மாது-தெய்வயானையம்மை. மாலாய்-ஆசையாய். தேவாலயம்-தெய் வக் கோயில்கள். 50. அதல சேடனார்-அதல பாதாலத்தி லுள்ள ஆதிசேஷன். அகிலம்-உலகம். அபி(ன்)ன காளி-சிவ னோடு பிரியாத காளி தேவி. விடை-எருது. அருகு-பக்கத்தில். வேதாளம்-பேய். மதுரவாணி-இன்சொற் கலைமகள். வேத னார்-ப்ரஹ்மா. மதி-சந்த்ரன். வநஜ மாமியார்-தாமரையில் வீற்றிருக்கும் (முருகவேட்கு) மாமி; லக்ஷ்மி. மாமனார்-(முருக வேட்கு மாமன்; விஷ்ணு. கதை-கதாயுதம். வாளி-அம்பு. கருத லார்கள்-பகைவர்கள். காலி-பசுக் கூட்டம். விஜயன்-அர்ஜு நன். கோடு ஊதி-சங்கத்வநி செய்தவன். உததி-(பாற்) கடல். மூடு-மூடிய. உவணம் ஊர்தி-கருட வாஹநன். உதய தாமம்-எடுப்பாக விளங்குகின்ற பூமாலையணிந்த. ப்ரபுட தேவ மா ராஜன்-இவன், அருணகிரியார் காலத்தில் திருவண்ணமலைப் பகு தியை ஆண்டுவந்த அரசன். 51. பத்தி-வரிசை. புவநம்-பூமி. எற்றி-இட்டு. தத்தி-பாய்ந்து. பரம ஆநந்த ஸாகரம்-பேரின்பக் கடல். 52. கோலகால-கோலாஹல. நவமணி மாலா-நவரத்ந மாலை. அபிஷேக பார-பெரிய கிரீடமணிந்த. ஸேவை-தர்சநம். வீரமாது-வீர லக்ஷ்மி. ஈர் ஆறு=12. வரி அளி-கோடுகளை உடைய வண்டுகள். சீராக மோது-ஒரே சீராக (வந்து) மோதி முகர்கின்ற. ஸ்ரீராகம் ஓது-'ஸ்ரீ' என்னும் ராகத்தைப் பாடுகின்ற எனவுமாம். நீப பரிமள-கடப்ப

மலரின் நறுமணம் வீசும். ஆராத காதல்-தெவிட்டாத அன்பு. ஜீமூதம் ஊர் வலாரி-மேகத்தை வாஹநமாகக் கொண்ட இந்த்ரன். வேடர் மடமகள்-வள்ளி. வலாரி மடமகள்-தெய்வானை. வலம் இடம் உறை-வலது, இடது பக்கங்களில் வாழ்கின்ற. வலம் இடம் முறை-வல, இடப்பால் முறையே எனினுமாம். அபிராம-அழகிய. தாபம்-ப்ரதாபம். ஆபாதனேன்-மிகக்கீழ்ப் பட்டவன்; தீயவன். ஏர் ஆரும்-அழகு பொருந்திய. மாடம்-உபரிகை. கூடம்-கூடம், தாழ்வாரம் முதலியன. மீது-வெள்ளியம்பலத்தின் மேல். மாறி ஆடும்-கால்மாறி ஆடின. ஏழ் ஏழு பேர்கள்-(7×7) 49 ஸங்கப் புலவர்கள். பொருள் அதிகாரம்-இறையனூர்அகப்பொருள். ஈடுஆய-ஸமாநமான. ஊமர்-ஊமை; ருத்ர ஜந்மர். வணிகர் இல் ஊடு ஆடி-உப்பூரி குடிகிழார் என்ற வைச்யர் வீட்டிலே (அவதரித்து) விளையாடி. ஆலவாய்-மதுரை. விதிசெய்த-சிறந்த உரை இன்னதென்று விதித்தல் செய்த. லீலா விசார-விசாரணைத் திருவிளையாடல் செய்தவனே! வரதர-வரத்தைத் தரிப்பவனே! கூர்ஆழி-கூரிய சக்ரத்தால். வீய-இறக்க. ஜநினைபவன்-அர்ஜுநன். பாநு-ஸூர்யனை. ராயன்-ராஜன். கோடாமல்-கோணாமல்; தவறாமல். வயலி-வயலூர். கோனாடு-விராலிமலையுள்ள நாட்டுப் பகுதிக்குக் 'கோனாடு' என்று பெயர். விராலிமலை-திருச்சிராப்பள்ளியினின்று மதுரை செல்லும் வழியிலுள்ளது; குன்றுதோறாடலுள் ஒன்று. 53. சிலம்பு-காலணி. சிலம்பு - மலை; க்ரவுஞ்சம். தடம் புயம்-விசாலமான தோள். மருவடிவு - பால் வடியும் அழகு பொருந்திய. வதநங்கள் - திருமுகங்கள். குதிகொண்ட - குதித்தல் கொண்டன. 54. ஆராதநர் - பூஜை செய்வோர். ஜப ஆலம்பநம்-ஜபம் செய்தலாகிய பற்றுக்கோடு. ஸபா ஆலம்பநம் - ஸபைகளில் உள்ள ஆசையுமாம். ஆவாஹந மந்திரத்து மடல்-தெய்வம் எழுந்தருள வேண்டி எழுதப்படும் மந்த்ரங்களைக் கொண்ட சக்ரத் தகடு; தாயத்து வகை. சிறந்த ஆறு ஆர் தெச மாமண்டபம்-(6+10)=16 கால் மண்டபக் காட்சி. ஆம் ஆறு எரி தா(வு)ம் இந்தநம்-(யாக யக்ஞங்கட்கு) ஆகும்படி அக்நி பாயும் ஸமித்து; ஹோம விறகு. நீராளகம்-நீராளம்; நீர்மிகுதி. நீர்-கண்ணீர். மஞ்ஜநத்த - அபிஷேகம் கொள்பவனே! நீள் தாரக வேதண்ட-பெரிய ப்ரணவாசலத்தில்

இருப்பவனே; 'ப்ரணவாசலம்' திருப்போரூரில் உள்ளது. தாரக-ப்ரணவப் பொருளே! வேதண்ட-மலைகளுக்கு இறையே எனப் பிரித்தலும் ஆம். மத்த-உத்ஸாஹம் (மகிழ்ச்சி) மிக்கவனே! நியமாக - அந்யம் இன்மையாக. பாராவரம் - பாராவாரம்; கடல். வீர ஆகர - வீரத்துக்கு இருப்பிடம் ஆனவனே! சாமுண்டி-துர்க்கை. சக்ர பாராகண பூதம்-சக்ர வ்யூஹமாக வகுக்கப்பெற்றுநிற்கும் காவல் கணங்களானபூதங்கள். வேதாள ஸமூஹம்-பேய்க் கூட்டம். அமர்-போர். வேதா-ப்ரம்மா. அரற்ற-கூச்சலிட. ஆகாச கபாலம்-வெளிமுகடு; அண்டகூடம். வேர் மாமர மூலம்-மாமர வேர் மூலம்-(சூர்)மா மரத்தின் மூல (அடி) வேர். தறித்து-வெட்டி. வடவா ஆலும்-வடவாமுகாக்நி தங்கியுள்ள. வார் ஆகரம் - கடல். வாணாஸநம்-பாண ஆஸநம்; வில். பரிதாபம்-பயம்; துயரம். 55. பதவுரை: செய-(செய்ய - செம்மையான) சிறந்த, துங்கபத்திரி போற்றும்-துங்கபத்ரையென்னும் நதி வணங்குகிற, பகீரதி கர-கங்கா தேவியின் கையிலிருப்பவனே! செவ்வேல்-சிவந்த வேலாயுதத்தையுடைய, செய-ஜெயம் பொருந்திய (செய்ய-சிவப்பு நிறம் வாய்ந்த) குமாரக் கடவுளே! துங்கபத்திரி-ஸுரபுன்னையிலையை, சூடும்-புனைகின்ற, குறத்தி திறத்த-வள்ளி பங்காளனே! தண்டம் - தண்டாயுதமும், செய-வெற்றியும், துங்க-பெருமையும், பத்தி-ஒழுக்கமு முடைய, ரிபு-மாறுபட்ட காலன், திரி-கெடும்படி (உதைத்த), பாதத்தர்-திருவடியையுடைய பரமசிவன், செல்வ-புதல்வனே! தென்பால்-தென் திசையில், செய்-போகச் செய்வதாகிய, அதுங்கு-யாவரும் ஒதுங்கும், அபத்து-தீ நெறியினால், இரிய-எனது சிந்தை முறிந்தோட, திரியாது - உழலாமல், இரு - நீ தங்கியருள வேண்டும், என் சிந்தையில்-என் மநத்தின் கண்ணே. கருத்துரை:—காங்கேயனே! வேலாயுதனே! வள்ளி நாயகனே! பரமசிவனது மைந்தனே! யான் யம தண்டனையை விளைக்கும் அவநெறியிற் சிக்காவண்ணம் நீ என் சிந்தையில் வீற்றிருக்க வேண்டும். 56. கூர்-மிகுந்த. பக்தனேன்-பக்தனாகிய நான். மநோ பத்மம்-மநமாகிய தாமரை. அன்பு ஆன நூல்-'பக்தி' எனும் நார். நாவிலே சித்ரம்-நாக்கில் எழுதும் கவிதை மாலையாக. ஞான வாஸம்-அறிவு மணம். ப்ரகாசியா

நிற்ப - ஒளிவிட. புத்தி அளி - புத்தியாகிற வண்டு. மாக்ருதா-என்றால் மாநஸிகமாகச் செய்யப்பட்ட. (அல்லது மாத்ருகா-மாத்ருகா மந்த்ரமாலையான) கோல ப்ரவாளம்-அழகிய பவழம். மூசு காநம்-(மரங்கள்)அடர்ந்த வநம். முக்த மூரல்-முத்துச் சிரிப்பு. நீப ப்ரதாப மார்பத்த-புகழ்மிக்க கடம்பணி மார்பனே! மூரி-வலிமை; இளமை. வேழத்தின் மயில்-(ஐராவத) யானை வளர்த்த மயில் போல்வாளாம் தேவஸேனை. வாழ்வு-கணவன். மீநப் பயோதி-மீன் நிறைந்த கடல். வாய்விட்டு-அலறி. வேக-(நீர் வற்றி) வெந்துபோக. வேதித்து-வருத்தி. பராரை நாகம்-பருத்த அடிப்பாகத்தை உடைய மலையாகிய க்ரவுஞ்சம். 57. நாதம்-லிங்கம்; ஒலி; ச்ரோணிதம்; பரவெளி. விந்து-பீடம்; ஒளி; சுக்லம்; துளி (புள்ளி). கலா ஆதி-கலைகளுக்கு மூலப் பொருளே! நாக பந்த மயூரா-பாம்பைக் காலிற் கட்டி அடக்கும் மயில் வாஹநனே! பரசூரர்-பிற அஸுரர்; சூராதிகள். சேத தண்ட-அழித்துத் தண்டித்த. ஸம்ப்ரமம்-நிறைவு. கிரிராஜன்-குறிஞ்சி வேந்தன்; மலைகட்கு அரசன். ஸ்தூய-ஸ்துதிக்கப்பட்ட; ஸ்தோத்ரம் செய்யப்பெற்ற. தூயஅம்பலம்-சுத்தமானபரவெளி. தேவகுஞ்சரிபாகா-தெய்வயானையின் பக்கத்தில் இருப்பவனே! கோலால-கோலாஹலமான. ஈரம்-இரக்கம். ஏழ்தலம்-ஏழு லோகம். மநோஹர-மநத்துக்கு இன்பமுடையவனே! ராஜகெம்பிர நாடு-சோழநாட்டின் ஒரு பகுதி. (ராஜகம்பீர வளநாட்டு மலை என்பது திருக்கற்குடி.) ஆதரம் பயில்-அன்பு வைத்த. ஆரூரர்-ஸுந்தரர். தோழமை-நட்பு. ஆடல் வெம்பரி-ஆடலில் வல்ல விரும்பத்தக்க குதிரை. கயிலையில்-கைலாஸத்துக்கு. ஏகி-போய். ஆதி அந்த உலா-அழகிய 'ஆதிஉலா' (திருக்கைலாஸ ஞான உலா) எனும் ப்ரபந்தம். ஆசு-ஆசுகவியாக. சேரர்-சேரமான் பெருமான் நாயனார். கொங்கு-கொங்குமண்டலம். வைகாவூர் நல்நாடு-நல்ல 'வைகாவூர்' என்னும் நாட்டுப்பகுதி. ஆவினன்குடி - பழநிமலை அடிவாரத்தில் உள்ள முருகன் கோயில்; இதுவே மூன்றும் படைவீடு. ஆதரம்...சேரர்-ஸுந்தரர், சேரமான் இருவரும் திருக்கைலை சென்ற பெரியபுராண வ்ரலாற்றைக் குறிப்பன இவ்வடிகள். 58. நால் இரண்டு இதழால்-4 + 2 = ஆறிதழ்களால். கோலிய-வகுத்துஅமைக்கப்பட்ட.

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

ஞால் அம் முண்டகம் - தொங்கிப் பொருந்திய அந்த அழகிய தாமரை. மேல்-ஸ்வாதிஷ்டானம் என்னும் ஆதாரம். இள ஞாயிறு என்று-(பால ஸூர்யன்)-உதிக்கும் செஞ்ஞாயிறு போல. உறு - நிறம் படைத்த. கோலாஹாலன் - ஆடம்பரமுள்ள ப்ரஹ்மா. ஞாலம் உண்ட-பூமியை உண்ட. ப்ராண ஆதாரனும்-உயிர்களைக் காக்கும் தொழிலைக் கொண்ட, 'மணிபூரகம்' என்னும் ஆதார ஸ்தானத்திலிருக்கும் விஷ்ணுவும். யோக மந்திர மூல ஆதாரனும்-யோகத்துக்கும் மந்த்ரங்களுக்கும் மூல ஆதார ஸ்தானமாகிய ஹ்ருதய கமலத்தில் 'அநாஹதம்' என்னும் ஆதார ஸ்தானத்தில் இருக்கும் ருத்ர மூர்த்தியும். ப்ரபா அல்லது ப்ரபாவ ஆகாரனும்-ஒளி அல்லது புகழுள்ள மேலான திருவுருவம் கொண்டவனும் ப்ருமத்ய ஸ்தானமாம் ஆக்ஞை என்னும் ஆதாரத்திலுள்ள ஸதாசிவ மூர்த்தியும். நடுவு ஆக-நடுநிலைகளில் வீற்றிருக்க. கிரீடா பீடம்-(உன்) லீலைகளுக்கு உரிய இடம். நூல் அறிந்த மா மணி மாடம் - சாஸ்த்ரங்கள் ஆராய்ந்து 'இதுவே இறைவன் ஸ்தானம்' என அறிந்து சொல்லும் சிறந்த அழகிய ரத்ந மண்டபம். மேதகும் - மேன்மை மிக்க. ப்ரபை-ஒளி. கோடாகோடி-பல கோடிக்கணக்கில் விளங்கும். இடம்-முருகன் வீற்றிருக்கும் ஸ்தானம். பண்டிதன்-அறிவாளி. ஆசாரியன்-குரு. இப்பாடலின் முன்பாதி குண்டலினி யோக மார்க்கத்தைக் குறிப்பது. ஆல கந்தரி - கழுத்தில் விஷம் அணிந்தவள். மோடாமோடி-ஆடம்பரமுடைய துர்க்கா தேவி. பிங்கலை-ஸ்வர்ண நிறம் படைத்த காகினி தேவி. நாநா தேசி - பலப்பல இடங்களிலிருப்பவள் அல்லது பலவித ஒளியையுடையவள். அமோஹி-நிராசை வாய்ந்தவள். லோகாலோகி-யாவுலகங்களையும் படைத்துக் காப்பவள். எ உயிர்பாலும்-எந்த ஜீவனிடத்தும். ஸம்ப்ரமி - பெருமிதம் கொண்டவள். மா தவி-காடுகாள் (துர்க்கை). ஞாதா ஆனவர் - எல்லாம் அறிந்த சிவனார். வானவர் - தெய்வம் எனலுமாம். ஆட நடநம் செய்ய. ஆட மன்று-ஆடக மன்று; பொன்னம்பலம் எனினுமாம். ஆடா-ஆடி. கால சங்கரி-யமனை ஸம்ஹரித்தவள். சீலாசீலி-பரிசுத்தமான தேவதைகளுக்குள் பரிசுத்தமானவள். த்ரிசூலி-முத்தலைச் சூலம் ஏந்தினவள். மந்த்ர ஸுபாஷா பாஷிணி-மந்த்ர மயமான நல்ல பேச்சுக்களையே

பேசுபவள். காளகண்டி-கறுத்த கழுத்தினள். கபாலீ-கபாலம் ஏந்தினவள். மாலிநி-மாலை அணிந்தவள். காமதந்திர லீலா ஆலோகிநி - காம சாஸ்த்ரம் கூறும் லீலைகளை உலகில் நடத்தி வைப்பவள். வாம தந்திர நூல் ஆராய்வாள்-சக்தி உபாஸனை முறையைக் கூறும் நூல்களால் ஆராயப்பட்டவள். 59. பதவுரை: தினை-தினைப்புனத்துக்கு, ஏத்தி-இறைவியாகிய வள்ளி நாயகி, அன்புசெய்-இச்சை கொள்ளும், வேந்தன்-குமாரக் கடவுளது, பதாம்புயத்தில்-திருவடித் தாமரையில், பக்தி-அன்பையும், புந்தி-அறிவையும், நைவேத்தியம்-நைவேத்யமாக, உகந்து - விரும்பி, ஏற்றினர் - (ஸமர்ப்பித்து) வணங்கின அடியார்கள், மாற்றினர்-(உண்மையாய்) ஒழித்து விட்டார்கள். பாற்றினம்-பருந்துக்கூட்டங்களும், தீ-நெருப்பும், தின் - பக்ஷிக்கத் தக்கதும், ஐ-அழகிய, வேத்தியர்-அறிஞர், நெறி - (விதித்த) நல்வழியில், செல்லாத - ஒழுகாததும், இந்திய-பஞ்சேந்த்ரிய வசத்ததும், தித்தியினத்தின் - உணவு வகைகளினால், நைவு - கழிவாகிய (மல ஜலாதிகளை), ஏத்து - ஏந்திக்கொண்டதும், இயங்கு உயிர் - (உண்ணின்று) இயங்கும் ப்ராணனை, கூற்று-யமனானவன், ஆரில்-உண்டுவிட்டால், ஊசிடும்-நாறிப் போகத்தக்கதும் ஆகிய, சீ-இகழ்ச்சிக்கு இடமான, உடம்பு-தேஹத்தை. கருத்துரை: வள்ளி நாயகி விரும்பிய கந்த ஸ்வாமியினது திருவடித் தாமரையில் அன்பையும், அறிவையும் செலுத்தினவர்கள் பருந்துக்கும், தீக்கும் இரையாய், நெறியொழி ஐம்புலன் நுகர்ச்சியையுடைய மலபாண்டமும், ப்ராணன் விட்டுப் பிரிந்தால் நாறிப் போவதுமாகிய உடலை ஒழித்து விடுவார்கள். 60. மூலாநிலம்-மூல நிலம்; மூலாதார ஸ்தாநம்; மூல அநிலம் - மூலாதாரத்தில் (மோதும்) (ப்ராண) வாயு எனலுமாம். மோஹ அடவி - ஆசைக் காடு. சுடர்தனை நாடி-நெருப்பைச் சேர்ந்து; அதாவது காமக் காடு தீக்கொளுந்தப் பெற்று; நிராசை அடைந்து. சுடர்தனை நாடி - ஆறு ஆதாரங்களிலுமுள்ள தெய்வங்களின் ஜோதி ஸ்வரூபத்தைத் தர்சித்து எனலும் ஆம். மோநா நிலை-மௌந நிலை. நாநாவகை-பலவிதம். ஓதா-ஓதி; கற்று. லீலா விதம் - பல வகை லீலைகள். கதி-பரகதி. நேமா ரஹஸிய-நியமம் வாய்ந்த (ஒழுங்கான), மறை பொருளான; நேமா - நியமமுள்ள

வனே எனினுமாம். நீடுழி - நீண்ட ப்ரளய காலம். தன் நிலே - தனது நிலேமை. வாடா-கெடாத. மணி ஒளி - ரத்ந ப்ரகாசம்; உபதேச ஒளி. நீதா - நீதிமானே! பலம்-பயன். நாலாருசி அமுது - நாலாவிதமான இன்பச் சுவை அமுதம். மறை நாலு ஆயது-நான்கு வேதங்கள். நாடி ஆய்-நாடி ஆராய்கின்ற. தவர்-தபஸ்விகள். இடர் கேடா-துன்பங்களுக்குக் கேடு விளேவிப்பவனே! திரு-லக்ஷ்மி. ஞானர்-ஞானத்தினர். யமன் உதை காலார்-யமனே உதைத்த திருவடியினர். 61. மை-கறுப்பு. கைவரும்-ஒழுக்கம் வ்ருத்தியாகும் பழகி வந்துள்ள, கையாலான எனலுமாம். பைவரும் கேள்-துன்பமுறும் சுற்றத்தார். பதி-ஊரார். ஐவர்-ஐம்புலன்கள். மெய்-உடம்பை. 62. கோப அபராதி-கோபமும், குற்றமும் உடையவன். அவகுணன்-வீணுன (இழிந்த) குணங்களேக் கொண்டவன். நீசன்-இழிகுலத்தோன். அநுசிதன்-உசிதம் அற்றவற்றையே செய்பவன். விபரீதன்-மாறுபாடான புத்தி யுள்ளவன். ஆசா-ஆசை. விசாரம்-கவலே. மோஹ ஆசரித-ஆசைச் செயல்களேக் கைக்கொண்ட. மோஹா சரித-ஆசைச் சரித்ரங்களே உடைய எனலுமாம். பரவசன்-தன்வசம் இழந்தவன். அனல்-தீ. வளி-காற்று. மாசு-குற்றம். நால் எண் வகை -$(4 \times 8) = 32$ தத்வங்கள்; உயிர்ப் பொருள்களின் பண்பு-32. அவற்றுள் குணப் பண்பு 27, தொழிற்பண்பு 5; $4 + 8 = 12$ எனக் கொண்டால் உயிர் வேதனே 12; நாலும் எட்டும் எனக் கொண்டால், உயிர்த் தோற்றம் நான்கு, ஆணவ மல கார்யம் எட்டு. வாயாத - வாய்க்காத. மகார்-மக்கள். வீசால வேலே - விசாலமான கடல்; வீசு ஆல-வீசும் அலேகளே உடைய அல்லது விஷத்தைக் கக்கிய கடல் எனினுமாம். வேதாளம்-பேய். ராசி-கூட்டம். அறைகூறி-கூவி அழைத்து. மேக ஆரவாரம்-முகிலின் இடி முழக்கம். யாதுதாநர்-ராக்ஷஸர்கள். எம்புரம் - யமபட்டணம். கூசாது-அஞ்சாது. வேடன்-கண்ணப்ப நாயனுர். ஊன்-மாம்ஸம். உண் எனும் உரை கூறு-'அருந்துக' என்னும் சொல்லேச் சொல்லி. மன் ஈய-நிரம்பக் கொடுக்க. அவன் நுகர்தரு சேஷம்-அவன் கடித்துத் தின்ற மீதியை. கோது ஆம் எனுமல்-அநாசாரமானது எனத் தள்ளாமல். அமுதுசெய்-உண்ட. வேத ஆகம ஆதிமுதல்-நால் வேத, சிவாகமங்களுக்கெல்லாம் முழு

## அரும்பதவுரைக் குறிப்புக்கள்

சக்திகரம் - சக்தியுள்ள தன்மை. உரு பிரணவா மந்த்ர - உரு வேற்றப் பெறும் (அல்லது அறிவுருவமாகிய) தாரக மந்த்ரத் தின். கர்த்தவியம் - தலைமைப் பொருள். பருதிகதிர்-ஸூர்ய கிரணம். சரண நூபுரம்-திருவடிச் சிலம்பு. பேர் அண்டம் ஒக்க- பெரியஅண்டம் போல. கந-பெருமை பொருந்திய. பத கெரு விதா - திருவடியைக் கொண்ட பெருமிதம் உடையவனே! துங்கம் - பரிசுத்தம். ஒன்று வற்கரம் - பொருந்திய வலிய பேரொளி. 66. காமியம் - காமச்செயல்; ஆசை. காலர் - யம தூதர். ஒவியத்தில் - சித்ரம் போல் அசையாதிருக்கும் காஷ்ட மௌந நிலையில். அந்தம் - முடிவாகிய முத்திப் பேறு. தூமம்- நறும்புகை. ஏம வெற்பு - பொன்மலை; மேருவைப் போல். ஏரகம்-ஸ்வாமி மலை. 67. அபயம்-தஞ்சம். இதயம்-ஹ்ருதயம். சங்கை-ஸந்தேஹம். எதிர்-ஸமாநம். பதி-ஸ்தலங்கள். எங்கி லும்-யாங்கணும். பலகுன்று - குன்று தோறுடல். 68. தாக்கு அமருக்கு ஒரு சாரையை - எதிர்நின்று தாக்கிப் போரிடும் சண் டையில் ஒப்பற்ற சாரைப் பாம்பு போன்றவனை. நீறு - வெண் ணீறு. தாத்பர்யம் - உண்மைப் பொருள்; கொள்கை. பரிவு - அன்பு. இகல் - மாறுபாடு. தமிழ்க்குரை - தமிழ்ச் சொற்களைக் குரைக்கின்ற. ஞாளி-நாய். வ்ருதாவனே-வீணனே. மருள்-மயக் கம். மலத்ரயம்-ஆணவ, கந்ம, மாயா மலங்கள். பூரியை நேரிய -புல்லைப் போன்ற. பூரி-குற்றமுள்ளவன், நேரிய - சுத்தமான எனலுமாம். கடனே - கடமையோ! வஜ்ரம்-வைரம். வை- கூர்மை. மூக்கறை-மூக்கு அறுபட்டவள். மட்டை - பயன் அற் றவள். மஹா பலகாரணி-பெரும் பலத்தால் (போருக்குக்) காரணம் ஆனவள். காரணி-ஹாரணி; ஸம்ஹாரக்காரி எனலு மாம். படுமூளி-அங்கம் குறைபட்டுள்ள மஹாமூளி. உதாசநி- நெருப்புப் போன்றவள். ஸோதரி-ஸஹோதரி. முழு மோடி- முழு வஞ்சகம் உடையவள். இயல் பேற்றிவிட - இயல்பான (ஸீதையின்) அழகைப் பற்றி உளறி வைக்க. இயல்பு+ஏற்றி எனவும் பிரிக்கலாம். கமலாலய ஸீதை-செந்தாமரைச் செழுந் திருவாம் ஸீதா லக்ஷ்மியை. மோட்டன்-மூர்க்கன். முகிலே - மேகமண்டலத்தின் வழியே. மாக் கந-மஹா கநம் பொருந்திய சித்திர-அழகிய. படைவீடு-அரசர்கள் படைகளொடு போருக் குப் போங்கால் முகாம் (தங்கல்) செய்யும் வீடுகள்; ஈண்டு ராவணனின் ராஜதாநியாம் இலங்கை. மார்க்கம் முடித்த-வழி

முதல் தலைவன். கோ-தலைவனே! 63. ஸந்ததம்-எப்போதும். பந்தத் தொடர்-பாசச் சங்கிலி. ஸஞ்சலம்-துன்பத்தில். துஞ்சி -தூங்கி; மரணாவஸ்தை அநுபவித்து. என்று என்று உற்று-எனவும், எனவும் சொல்லி. தந்தி-ஐராவத யானை. கொம்பு-பூங் கொம்பு போல்வாளாம் தேவஸேனை. அம்-அழகிய. கண்டி-ஈழ நாட்டிலுள்ள கண்டி எனும் தலம்; 'கண்டி கதிர்காமம்' என்பது வழக்கு. 64. அந்தகன்-யமன். ஸங்கதம்-நட்பு. முக்குணம் மாள-ஸத்வ, ரஜோ, தமோ குணங்கள் மூன்றும் அழிய. அந்தி பகல் - இராப்பகல்; கேவல ஸகலம். இரண்டு-த்வந்த்வம் (இரட்டைகள்). செருகும் - உள்ளூடுருவி மறக்க வைக்கும். தடம் - இடம். தணியாத - அடங்காத. அவிழ்ந்து - நெகிழ்ந்து விரிந்து. உரை ஒழித்து - பேச்சற்று. மெய்ச்சிந்தை - உண்மை அறிவு. என்று-என்றைக்கு. தெரிசனை - காட்சி. கொந்து - பூங்கொத்துக்கள். சரண்-திருவடி. சரண் - அடைக்கலம். புரந்தரன் - இந்த்ரன். பதி-அமராபதி. குஞ்சரி - தெய்வயானை. குயம் - குசம்; முலை. குன்று - க்ரவுஞ்சம். திரு அரை - அழகிய இடுப்பு. குண்டலம் - காதணி. குழை - காது; காதணியுமாம். ப்ரபை - ஒளி. தளர் நடை-குழந்தை நடை. ஸந்ததி-பிள்ளை. 65. சுருதி-வேதம். மோநம்-மௌநம். சித்-அறிவு. சிவஸமய-சைவமதத்தின் ஸ்வரூபமாய். அத்துவிதம்-அத்வைதம். நிஷ்கள ஸொரூபம் - வடிவமற்றதும் வடிவமுள்ளதும். துரியநிலை - நான்காம் அவஸ்தை. இதயா கமலம்-ஹ்ருதய கமலம். விளையாநின்ற-விளைந்த. ஸுபோதம்-நல்லறிவு. ஸுயபடிக-ஸ்வயமான ஸ்படிகம்போற் பரிசுத்தமான. பத்மபதம்-தாமரைத்தாள். கரு-கர்ப்பம். சுக்கிலம்-பிந்து. வளி-ப்ராண வாயு. பொருமு-பெருமூச்சாய் ஒலிசெய்ய. முக்குண விபாக நிலை-த்ரிகுணங்களின் பிரிந்த தனித்தனி நிலை. கருத அரியா-நினைப்பதற்கு அருமையான. அசுமம் ஆம்-நாய் ஆகிய. மட்டைதனை - தென்னை மட்டை, பனை மட்டைக்கு ஸமாநமான மூடனாகிய என்னை. விண்ட-சொன்ன. ஷட்ஸமயம்-ஆறுமதங்கள். அண்டம் முட்டை=முட்டை; ஒருபொருள் இருசொல். உற்பநம்-தோற்றம். அமர் உளவோனே-அமர்ந்துள்ளவனே! உத தரிசம்-ஜலத்தோற்றம் போல ஊறுவதாகிய. புத்தமிர்தம் - புது அமிழ்து. அமல ஆநந்தம்-நிர்மலமான இன்பம்.

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

அவசப் பெறுவார்-மயக்கம் அடையும் (பவநி) மாதரது, கணும் - விழிப் பார்வையையும், தெய்வயானை - தெய்வயானையினது, தநச் செப்பும்- கொங்கையாகிய கலசத்தையும், கவசம் புனை-சட்டையாக அணிந்த, புயன்-தோளையுடையவனாகிய முருகக் கடவுளின், பாதம்-திருவடி, என் சென்னியது-என் தலைமீது உற்றது. கருத்துரை:- பரமசிவன் மைந்தனே! சரவணோற்பவனே! திருமால் மருகனே! என்று சின்னம் ஆர்ப்பதைக் கேட்டு மயங்கும் பெண்களின் பார்வையையுந் தெய்வயானையின் கொங்கையையும் கவசமாகத் தரித்த குமாரக் கடவுள் திருவடி என் தலையின் கண்ணது. 74. தோரணம்-மாவிலைத் தோரணம் முதலிய. கநக வாசல்-பொன் இழைத்த வாயிற்படி. முழவு-பறைவகை. முரசு அதிர-முரசவாத்யம் ஒலிக்க. முதிராத-மூப்படையாத; இளமையான. கவரி-வெண்சாமரம். வயிரியர்-கட்டியங் கூறுவோர்; அரசவையில் புகழ்ந்து பாடுவோர். வலி-வலிமை. மத-மதத்தையுடைய. வாரணம்-யானை. ரதம்-தேர். பதாகினி-காலாட்படை. துரகம்-குதிரை. மாதிரம்-திசை. கூரினும்-மிகுந்தாலும். புவந காரண-உலகங்கள் உண்டாகக் காரணமானவனே! சவரி-வேடிச்சி; வள்ளி. பூதர-மலைபோன்ற. தநபாரம்-பருத்தமுலை. பூஷண-மார்புக்கு அணியாகக் கொண்டவனே! நிருதர்-அஸுரர். தூஷண-நிந்தித்தவனே! விபுதர் பூபதி-தேவராஜன்; இந்த்ரன். நகரி-இந்த்ர லோகம். ஆரண-வேதம் பயின்ற. வநஜ-தாமரையில் வீற்றிருக்கும். ஈர் இரு-$2 \times 2 = 4$. குடுமி-தலை (உச்சி)மயிர்க் குடுமி. ஆரியன்-அந்தணன்; ப்ரம்மா. ஆரிய-ச்ரேஷ்டனே! 75. திமிர உததி-இருட்கடல். ஜநநம்-பிறப்பு. வடிவு குறைவு-அங்க ஹீநம். மிடி-தரித்ரம். நிறை-கற்பு; பூர்ணத்வமுமாம். ஸமரமுக-போர்முனையில். வெல்-வெல்லும். ஜலதி-கடல். பதலை-வாத்யவகை. தகர-அதிர்ந்து ஒலிக்க. வெம்-கொடிய. அரவுஅணை-பாம்புப் படுக்கை. விழிகள் நளிநன்-அரவிந்தாக்ஷன்; கண்ணன். மிடறு கரியர்-கறுத்த கழுத்தினர்; சிவனார். விரவும்-கலந்து வீற்றிருக்கும். 76. மதன்நூல்-காம சாஸ்த்ரம். அவா வேட்கை-ஆசைத் தாகம். கந தநம்-பருத்தமுலை. ஆர்த்து கட்டித் தழுவி. கழுநீர்-செங்கழுநீர்ப் பூ. நறை-வாசனைப் பொருள். ஜவாது-ஜவ்வாது. புழுகு-புனுகு. துழாய்-துழாய்

கண்டுபிடித்து அவனைத் தீர்த்துக் கட்டின. விலாளிகள்-வில் தொழில் வல்லவர்கள். நாயகன்-ராமன். வாச்சியம்-வாத்யம்; பறை. கழுநீர்-செங்கழுநீர்ப் பூ. 69. வாதினை-(ஆண்களோடு) வாதம் செய்யும் தொழிலை. தனிமந்த்ர ரூபம் ப்ரணவ ஸ்வரூபம். நாதம்-ச்ரோணிதம். விந்து-சுக்லம். நால் நிலம்-பூமி. நாதம்-லிங்கம். நாகம் அணிகின்ற நாத நிலை-பாம் பணியும் சிவபிரானின் நிலைமை; குண்டலிநிப் பாம்பு மேலே சென்று ஸஹஸ்ரார கமலத்தில் அணிந்து கொள்கின்ற லிங்க நிலை எனலுமாம். தொழுகேன்-தொழுகின்றேனில்லை. சிவம் - மங்களம். ஸோஹம் - ஸா + அஹம் - 'அது நான்' என்னும் நிலைமை. வாகை-வெற்றி. சோலை மலை-பழமுதிர் சோலை. 70. ஐயும் - கோழையும். மையல்-மயல்-ஆசை. அவாவின் ஐவரும்-ஆசையுடன் கூடிய ஐம்புலன்களும். உபாயம்-சூழ்ச்சி. அள்ளல்-சேறு. கடவாது-கடக்காமல். புல் அறிவு-புன்மை; கீழ்மையான சிற்றறிவு. பொழில்-சோலை; கற்பகக் கா. தையல்-தேவஸேனை. மு(ந்)நாலு...புயம் - $3 \times 4 = 12$ திருத்தோள்கள். செய்ய - சிவந்த. வெள்ளை இபம்-வெள்ளானை; ஐராவதம். வள்ளல்-இந்த்ரன். வெள்ளம்-(கடல்)நீர். முதுமா-மூத்த மா மரத்தை (சூரனை). வையம்-உலகம். வல்லம்-திருவலம் என்னும் ஸ்தலம். வள்ளி-வள்ளிக்கிழங்குக் கொடி. சாரல்-மலைச்சாரல். 71. அபகார நிந்தை-தீங்குசெய்தல் என்னும் வசை. இப மா-யானை யாகிய ம்ருகம். ஹிமவான்-பர்வத ராஜன். 72. இரும் நோய் மலம்-பெரிய, கரிய வ்யாதி போன்ற மும்மலம். ஒருவாக என-ஒன்ருக என்று. கற்பகம்-கற்பகத் தருவைப் போன்ற விநாயகர். உபதேசிகப் பதம்-உபதேச மொழி. கரு நோய்-பிறவிப் பிணி. மிடி-வறுமை. கரி மா-யானையாம் விலங்கு. ஞாந பத்நி-வள்ளியம்மை. அயில்-கூர்மை. சிலை-க்ரவுஞ்ச கிரி. கவடு-பட்டமுள்ள. 73. பதவுரை: செ-ரிஷபத்தையுடைய, புங்கவ-தேவாகிய, சங்கர பாலக-சங்கரன் பாலனே! தெய்வ-தெய்விகமாகிய, வாவி-சரவணப் பொய்கையின், அம்பு-ஜலத்தில், செ-உற்பவித்த, புங்கவ-உயர்ந்தோனே! சங்கு-சங்கினை உடைய, அரி-விஷ்ணுவுக்கு, மருகா-மருகனே! என-என்று, சின்னம்-திருச்சின்னமானது, முன்னே-முதலில் தானே, செப்பு-சொல்லி ஆர்க்கின்ற, உங்கு-உவ்விடத்திலேயே (கேட்டு),

க்ஷரம்-திரு ஆறெழுத்து; 'சரவணபவ'; 'நம:குமாராய'; 'ஓம் நம: சிவாய'. இகம்-இவ்வுலகம். பரம்-அவ்வுலகம். பசுபதி சிவாக்யம்-வேத சிவாகமங்கள். பசுபதி - பரமேச்வரன். சிவாக்யம்-ஸ்ரீ வாக்யம்; மஹாவாக்யம்; ''சிவாயநம'' என்பதில் 'சி' என்னும் முதல் பதம் எனலுமாம். கிளை-வம்சம். 79. அகவாழ்வு-இல்வாழ்வு. தெசம்-பத்து. திரமாய்-ஸ்திரமாய்; நிலையாக. மகவா-குழந்தையாக. இன்-இனிய. உச்சி-தலைமேல். ஆநநம்-முகம். முத்தி-முத்தம்; மோக்ஷமுமாம். முகமாயம் -முக அழகில் உண்டாகும் வசீகரம். நீதா-நீதிமானே! முது-பழைய; மூத்த. தகையாத - தகுதியற்ற. தனி-ஒப்பற்ற. ஏரகம்-ஸ்வாமிமலை. தரு-மரங்கள் சூழ்ந்த; நீரைத் தருகின்ற எனலுமாம். பாரிசம்-பக்கம். ஸமர்-போர். 80. ஐங்கரன்-விநாயகர். ஐம்புலம்-பஞ்ச தந்மாத்ரைகள்; அவை-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. சந்திர வெளிக்கு வழி-ஸஹஸ்ரார கமலத்தில் சந்த்ர கலாம்ருதம் உண்டு ஸுகம்பெறும் யோக மார்க்கம். தண்டிகை-பல்லக்கு. கநப் பவுசு-பெரிய படாடோபம். எண்திசை-எட்டுத் திக்கு. ஸம்ப்ரமம்-நிறைவு. இங்கிதம் என உற்ற-ஹிதமாக எடுத்துக் கொண்ட. மண்டலிகர்- நாட்டு அதிகாரிகள்; அரசர்கள். ரப்பகல்-இரவு பகல். ரக்ஷை-காப்பு. கொங்கில்-கொங்குநாட்டில். தென்கரையில்-அழகிய(ஏரிக்)கரையில். அப்பர்-அவிநாசியப்பர். உடல் - முதலைவாய்ப் பட்ட பிள்ளையின் உடம்பு. பொருள்-அர்த்தம்; ரஹஸ்ய விஷயம்; இது திருப்புக்கொளியூர் அவிநாசியில் ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் முதலை உண்ட பாலனை அழைத்துத் தந்த கதையைக் குறிக்கும். குஞ்ஜரம்-யானை. கொங்கணகிரி-கொங்கு நாட்டு முருகன் தலங்களுள் ஒன்று; கொங்கண ஸித்தரின் மலையாம் வடவேங்கடமுமாம். 81. நாள்-நக்ஷத்ரம். வினை-இருவினைகள். கோள்-நவக்ரஹம். கூற்று-யமன். தாள்-திருவடி. 82. முடி-கிரீடம். குடி-குலம். செகுத்தவர் - அழிக்கும் தொழில் உடைய அஸுரர். நிசி-(அறியாமை) இருள். கரு-பிறப்பு. பொருப்பையும் இடிக்கும்-மலையையும் பொடிசெய்யும். நிறைப்புகழ்-நிறைந்த திருப்புகழ்; கற்புடைய புகழ் எனினுமாம். பேரி-பேரி வாத்யம். துடி-உடுக்கை. தளம்-தாளம்; போர் அணி வகுப்பு-படை எனலுமாம். உடற்சங்கரித்து-உடனே (அல்லது உடலை)

தடவி. வார்த்து-பெய்து. நில அரசு - பூமியிலுள்ள அரசர். தலம் அடைசு-இருப்பிடம் அடைந்து. சாளரம்-பலகணி; ஜன்னல். பவுசு-பவுஷு;பகட்டு. அநுராகம்-ஆசை. யாக்கை - உடம்பு. அவம்-வீண். தலைஅறிவு-தலையாய (சிறந்த) அறிவு. நெறி-நல்வழி. தீக்ஷை-அநுக்ரஹம்; இது ஸ்பர்ச தீக்ஷை, நயந தீக்ஷை, மாநஸ தீக்ஷை, வேத தீக்ஷை, பாத தீக்ஷை, ஹஸ்த மஸ்தக சையோக தீக்ஷை, மந்த்ர (ப்ரணவ) தீக்ஷை -இங்ஙநம் பலவகைப்படும். அலகு இல்-அளவற்ற. ஸமர்த்தன் -ஸாமர்த்யசாலி. அருணை - அண்ணாமலை. அடல்-வலிமை. நடாவிய - செலுத்திய. அவதாநம் - பொருள் அறிதல். அத்தன் - தந்தை. அகில தலம் - எல்லா உலகமும். 'அருணகிரிநாத' எனும் - 'அருணகிரிநாத' எனப் பேரிட்டழைத்த. பெலம் - பலம்; வலிமை. கரதலம் - கை. வித்தன்-வித்தகன்; வித்துப் போன்றவன்; அறிவாளி எனலும் ஆம். குறமாது அணை பெரிய புயத்தனே என மாற்றிப் பொருள் கொள்க. தக்ஷிணு மூர்த்தி - தென்முகக் கடவுள். பரஸமய கோளரி - பிறமதங்களுக்குச் சிங்கம் போன்றவன்; திருஞாந ஸம்பந்தர். பெரியமடம் - கும்பகோணத்தில் உள்ளதொரு வீரசைவ மடம். யோக்யர் - யோக்யமானவர்கள்; நல்லவர்கள்; யோகியர் எனலுமாம். 77. உரோகம்-ரோகம்; நோய். முயலகன்-வலி நோய். வாதம் - பக்ஷவாதம், வாத நோய் முதலியன. எரிகுண நாசி- மூக்கெரிச்சல். விடம் - விஷநோய்கள். நீர்இழிவு-சர்க்கரை வ்யாதி. சோகை-உடல் (சாம்பல்போல்) வெளுக்கச் செய்யும் ஒரு வகை நோய். களமாலை-கண்டமாலை. பெருவயிறு- மஹோதரம். ஈளை-இழுப்பு நோய். குலை - குலைப்பு. சூலை - வயிற்றுவலி வகை. பெருவலி-பெரிய நோய். நலியாதபடி - தொந்தரவு செய்யாதபடிக்கு. உன-உன்னுடைய. பதாதி-காலாட்படை. கால வயிரவர்-கால பைரவர்கள். வடி-கூர்மை. தரு-தெய்வத வ்ருக்ஷங்கள் ஐந்து. உறை-வஸிக்கும். முகில் ஊர்தி - மேக வாஹநனும் இந்த்ரன். திருமாது-தெய்வயானையம்மை. ஜலம்இடை-நீர்வாய்த்த கடலின் நடுவில். பூ-பூமி. வீறு-விளங்கும். 78. வசநம்-(உருவேற) ஜபத்தை. ஏற்றி-(மிக)ஜபித்து. இசை-சொல்லிச் சொல்லிப் பயில்தல்; புகழ்; இன்னிசை. ஷடா

மணிமுடி-விசாலமான ரத்ந கிரீடம். இரணம்-பொன் அல்லது மாணிக்கம். கிரணம்-ஒளி. மடமை-இளமை. ம்ருகமதம்-கஸ்தூரி. நுடங்கிய-வளைந்த. நூல்-இழைநூல். மருங்கு-இடுப்பு. இறுகிய-கெட்டியான. பிறை எயிறு-பிறைச் சந்த்ரன் போல் வளைந்த பல் வரிசை. கொள-கொள்ள. வரின்-வந்தால். ஏன்று கொளும்-ஏற்றுக் கொள்ளும். பலி-பிச்சை. கொடுதிரி-கொண்டு திரிகின்ற. இரவலர் - ஏழைகள். இடும்அன-(அன்ன) - வழங்கும் அப்படிப்பட்ட; அன்னத்தை அளிக்கின்ற. கரதலம் - கை. மநகர - மநோஹரமான, தலம் - காஞ்சி எனினுமாம். ஏகாம்பரை-காமாக்ஷி. இந்திரை-லக்ஷ்மி. மோஹ + அங்க-யாரையும் மோஹிக்கச் செய்யும் அவயவங்களை உடைய. ஸுமங்கலை-ஸுமங்கலி. எழுதிய படம் என-எழுதிவைத்த சித்ரம் போல (ஆடாது அசையாது தவத்தில்) அமர்ந்திருந்து. இணை-இரட்டை. ஏகாந்த ஸுகம் - தனிமையில் இனிமை. பாச அங்குசம் - கயிறும், யானைத் தோட்டியும். கரணம் - கருவி; அந்தக் கரண பஞ்சகம். அரணம் - காவல். மரணம்-சாவு எனலுமாம். மலம்-மும்மலம். கடுவினை-கடுமையான இருவினை. கால அந்தரி (ஊழிக்) காலத்தின் முடிவில் இருப்பவள். கம்-தலை (மாலை). தரி-தரிக்கின்ற. நீல அஞ்சநி-கறுத்த மை பூசிய கண்ணி. கணபண-கூட்டமான படத்தை உடைய. குணமணி அணி-உயர்ந்த ரத்நங்களை அணிந்துள்ள. பணி கந வளை-பாம்பைப் பருத்த (பொன்) வளையலாக அணிந்துள்ளவள். மரகத-பச்சை நிறம் வாய்ந்த. காச அம்பர-(ஆ) காச அம்பர - (ஆகாசம் 10 திசைகளுள் ஒன்று; அம்பரம் -ஆடை;) திகம்பரமான. காசம்-பொன். காசாம்பர-பீதாம்பரம் (பொன்னுடை) அணிந்த, எனவும், ( காசா - காயாம்பூ) அம்பரம் - உடை, காசாம்பூ நிறமான நீல நிற ஆடை பூண்ட எனவும் கூடப் பொருள் கொள்ளலாம். கஞ்சுளி-ரவிக்கை; கச்சு. தூசு-பட்டாடை. கனைகழல்-ஒலிக்கும் (வீரக்) கழல் அணிந்த திருவடி. நினையலர்-நினைக்காதவர்; அஸுரர்கள். உயிர்அவி-ஜீவனை நாசம் செய்யும். பயிரவி-அச்சத்தைத் தருபவள்; பைரவ பத்நி. கவுரி-சிவந்தவள். கமலை-(வெண்)கமலத்தில் வீற்றிருக்கும் ஸரஸ்வதியின் அம்சமானவள். குழை-காதணி. ஆர்ந்த - பொருந்திய. கழுநீர் - செங்கழுநீர்ப் பூ. தோய்ந்த-பொருந்திய. குண்டலமாகக் காதில் நீலோத்பலத்

ஸம்ஹாரம் செய்து. அம் மலை-அந்த ஏழு கிரிகளையும். தினைக்கிரி-வள்ளிமலை. தநம்-முலை. எண்- மதிக்கத் தக்க. 83. பதவுரை: சேய-அழகினை உடைய, அன்பு - இச்சையொடு, உந்தி - கான் யாற்றின் (காட்டாறு ஓடும்), வந - காட்டில், வாஸ - வாஸம் செய்த, மாதுடன்-வள்ளிநாயகியுடன், சேர்ந்த - கூடியிருந்த, செந்தில்-திருச்செந்தூரில் வாழா நின்ற (வாழும்), சேய-குமாரக் கடவுளே! வன்பு - வலிமையில், உந்து - உயர்ந்த, இகல் - மாறுபாட்டையுடைய, நிசாசர அந்தக - அஸுரர் குலத்துக்கு யமனே! சேந்த-கந்தனே, என்னில்-என்று துதிப்பீராகில், சேயவன்-செவ்வாய், புந்தி - புதன், பனிப்பாநு-சந்த்ரன், வெள்ளி-சுக்ரன், பொன்-வ்யாழம், செங்கதிரோன் - ஆதித்தன், சேயவன் - அவ் வாதித்தன் மைந்தன் சநியாகிய நவக்ரஹங்களின் வக்ரோதயத்தால், புந்தி தடுமாறவே தரும் - புத்தியைச் சலநப் படுத்துகின்ற, சேதம் இன்று-கேடு இல்லை. கருததுரை: கான்யாறு (காட்டாறு) ஓடும் புனத்திலிருந்த வள்ளி நாயகி பேரில் அன்பு கூர்ந்த செந்தில் நாயகனே! அஸுரர் குலாந்தகனே! சேந்தனே! என்று துதிக்கின்றவர்களுக்கு நவக்ரஹங்களின் வக்ரோதயத்தால் ஆகும் தீமை இல்லை. 84. த்ரணி-பூமி. அரணியம்-காடு. முரண்-மாறுபாடு. இரணியன்-ஹிரண்ய கசிபு. நகநுதி-கைந்நகத்தின் நுனி. சாடு-கொன்ற. ஓங்கு நெடுங்கிரி-ஓங்கி உயர்ந்த நீண்ட மலையாம் கோவர்த்தநம் அல்லது மேரு. ஓடு-ப்ரம்மாவின் மண்டை ஓடு. தமருகம-டமருகம்; பறைவகை. பரிபுரம் - சிலம்பு. சரணியசரண்ய-திருவடிகளை உடைய. தாது+அம்புயம்-மகரந்தத்தோடு கூடிய (செந்) தாமரை. மந்திரம்-கோயில். பரம்பரை-மேலான பொருளுக்கும் மேலானவள். சரி வளை-(கையில்) சரிந்து விழுகின்ற வளையல்களை அணிந்தவள்; 'சரி' எனும் ஒரு வகை வளையல்களைப் பூண்டவள் எனினுமாம். விரிஜடை-விரிந்து பரந்த ஜடாபாரத்தை உடையவள். எரி புரை-தீயைப் போன்ற. சததள முகுளித-தாமரை மொட்டுப் போன்ற. தாம அம் குசம்-(பூ)மாலை அணிந்த, அழகிய திருமுலை. தாள்-(தாமரை அரும்பு போன்ற) இரு திருவடிகள். ஆந்தர அம்பிகை-உண்முகமாக வழிபடுதற்கேற்ற தாய். தருபதி-பஞ்சதருக்களுக்கு அதிபதி; இந்த்ரன். சருவிய-போராடிய. தட

டிருந்த விலங்கு போன்ற சங்கிலி. முளை தெறிக்க - பூட்டை அறுக்க. அரம்-ரம்பம். பழுத்த-(அநுபவத்திலும், அறிவிலும், ஆயுளிலும்) பழுத்திருந்த. முது-பழைய; மூத்த. பலகை-ஸங்கப் பலகை. கவிப்புலவன்-நக்கீரர். இசை-(வேத) இசையாகிற திரு முருகாற்றுப்படைப் பாட்டு. வரைக் குஹை-(கற்கிமுகிப் பூதம் சிறையிடும்) மலைக் குஹை. அலகை - பேய். முசித்து - தரித்ரப் பட்டு. முறைப்படுதல் - ஒப்பாரி வைத்தல். உரத்து உதிரம் - மார்பில் ரத்தம். நிணத்தசை-கொழுப்புச் சதை. நேரும்-நேரில் தரும்; கொடுக்கும். மஹபதி-இந்த்ரன். விதி-ப்ரம்மன். அரி-விஷ்ணு. இடுக்கண் வினை-துன்பச் செயல்கள். சாடும்-அழிக்கும். பரிதி-ஸூர்யன். ஒழுக்கும்-பொழியும். அலை அடக்கு தழல்-வடவா முகாக்நி. முதல் அற-வேர் அற. சொலற்கு-சொல்லுதற்கு. எறிய-உதறித் தள்ள. உறுக்கி-கோபித்து. மறம்-வீரம்; வலிமை. அறம்-அறநெறி எனினுமாம். தருக்கி-கர்வப்பட்டு. நமன்-யமன். முருக்க-கொல்ல. எருக்கு-வெள்ளெருக்கு. மதி-சந்த்ரன். விறல்-வலிமை. இறை-சிவபிரான். தலத்தில்-பூமியில். கணத்தொகுதி-பூத கணங்களின் கூட்டம். முனை-வேலின் நுனி. விதிர்க்க-அசைக்க. வளைவு-சுற்றி வளைத்துக்கொண்டு வரல். அருகு-பக்கத்தில். சலத்து-கோபித்து. குடர்-குடல். தொடை-மாலை. சிகை-தலைஉச்சி. திரை-அலை. புனல்-நீர். கடிது - வேகமாக. உதிரம்-ரத்தம். கிரியை - மலையை. குலிசன் - இந்த்ரன். முகட்டின் இடை - மலை உச்சிகளின் நடுவில். பறக்க - பறந்து செல்ல. அற - முழுதும். விசைத்து அதிர - வேகமாகப் பூமி அதிரும்படி. ரணம் - போர். குறைத்தலை - கவந்தம்; வெட்டுண்ட தலை. எயிறு - பல். ஒருத்தன்-ஒப்பற்றவன். விருத்தன்-கிழவன்; உரியவன், கருத்தன் - தலைவன். 88. தேர் அணி இட்டு-(தேவர்களையே) தேராக அலங்கரித்து. புரம்-திரிபுரம். வேல்கூர் - வேலின் கூரிய முனைப் பாகம். அணிஇட்டு - அண்ணியிட்டு; ஸமீபித்து அல்லது அணியிட்டு - படை வகுத்ததுபோல அமைத்து. அணுவாகி-அணுகுண்டு போல ஆற்றல் மிகுந்து. அணுவாகிக் க்ரவுஞ்சம் - க்ரௌஞ்சம் அணுப் போலப் பொடிப் பொடியாய். நேர் அணி இட்டு - ஒழுங்காக அணி வகுக்கப்பட்டு. வளைந்த கடகம்-சூழ்ந்த ஸேனை. நெளிந்தது-ஒடிந்து சின்ன

ளைதச் சூடியவள் தேவி: 'கர்ணிக நீலோத்பலே'-ச்யாமளா தண்டகம். உற்பலத்தை மாலையாகச் சூடியவள் எனலுமாம். 'கொழும் குவளைக் கோதை' - அப்பர் - 6-9-10. பெரும் திரு-மஹாலக்ஷ்மி. கரைபொழி-கங்கு கரை(இன்றிப்)பொழிகின்ற. காவு ஏந்திய-சுமத்தலாகிய பாரத்தைத் தாங்கிய. பைம்-பசிய. மா சாம்பவி-மஹா சாம்பவீ. தந்தவன்-தந்தருள வந்தவனும் குமரன். அரண்-(பாரத நாட்டின்) காவலாயிருக்கிற. நெடு வடவரை-நீண்ட (பெரிய) வடக்கிலுள்ள மலையாம் ஹிமயமலை. அரண்-பூமிக்கே காவலாயிருக்கிற, நெடு வட-நீண்ட தாம்புக் கயிறு போலத் தொடர்ந்து காணப்படும், வரை-சக்ரவாள கிரி எனலுமாம். அயில்-கூர்மை. வாங்கிய-செலுத்திய. ஒரு பது=10. இரு=2. ஒருபதொடு இருபுயன்-10+2=பன்னிரு திருத்தோளன். அபிநவன்-புத்தம் புதியன். தார் வேய்ந்த-மாலையிட்ட. அந்தகன்-யமன். அடல்-வலிமை. கடம்-மதநீர்; காடு. தடம்-இடம்; வழி. விகடித-வேடிக்கையான திருவுருவம் கொண்ட. மதகளிறு-பெருமை வாய்ந்த அல்லது மதம்பிடித்த ஆண் யானை. அநவரதமும்-ஸதாகாலமும். ஆம்படி-ஆகும் வண்ணம். செந்தில்-திருச்செந்தூர். பொருதிறல்-போர் செய்ய வல்ல வலிமை. மொழிபவர்-துதி செய்யும் அடியார்களை. ஆராய்ந்து-(நன்கு) ஆராய்ச்சி செய்து. தேவேந்திர ஸங்கமே-தேவராஜனும் இந்த்ரனைச் சேர்ந்த கூட்டத்தவர்; அதாவது தேவர்கள் முதலியோர். முருகனை....மொழிபவரை......... தேவேந்திர ஸங்கமே வணங்குவர் எனக் கொண்டு கூட்டுக. **85**. ஓலை-(யமன் அனுப்பும்) அழைப்பு ஓலை. தூதர்-யமதூதர்கள். மருங்கில்-இடுப்பிற் கட்டிய. சேலை-(செந்நிற) ஆடை. சீரா-சிறுவாள். செச்சை-வெட்சிப் பூ. பதாகை-கொடி. தோகை-மயில் வாஹநம். வாகை-வெற்றிக்கு அறிகுறியான வாகைப்பூ (மாலை). **86**. மெய்ம்மை-உண்மை. முன்புசெய்த பழி-ப்ராரப்த கர்மங்கள்; பாவ மூட்டைகள். வடி-கூர்மை. மயூரம்-மயில். **87**. நகை-பல்; சிரிப்பு. குழல்-கூந்தல். இதழ்-வாயிதழ். மறச் சிறுமி-குறவர் குலக் கன்னி. பனைக்கை-பனைமரம் போன்ற நீண்ட துதிக்கை. முகபடம்-முகபடாம்; முக அலங்காரத் துணி. கரடம்-மதம் பாய் சுவடு. தவள கஜக் கடவுள்-வெள்ளைத் தெய்வ யானையாம் ஐராவதம். இடும் நிகளத்து - இடப்பட்

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

ஆதிசேஷன் எனும் (கண்+தகன்) அக்நிக் கண்ணன். மேல் வா(வு)ம் கிளை-மேலே தாவியெழும் கிளை போன்ற படத் தலை கள். கால் சாய்ந்தது-நிலை தடுமாறிக் கீழிறங்கின எனலுமாம். வெளி-ஆகாசம் கந சூர்-பெரிய சூரன். வேர்-குல வேர். விபுதர்-தேவர். நிருதர்-அஸுரர். தளம்-ஸேனை. மேடு ஆம்படி - அஸுரர்களின் பிணக் குவியலால் ஆகாசம் கெடும்படி உயர்ந்து மேடாக. பாடு ஓங்கின-போர் நிகழ்ச்சிகள் சிறந்து திகழ்ந்தன. மிடை-நெருங்கிய. குறள்-குட்டைப் பேய்கள். வெம்-கொடிய. கொடி-காக்கை. ஆர்ந்து-நிரம்ப உண்டு. அகல் வான் ஆர்ந்தன-அகன்ற வானிடத்தில் நிறைந்து உலாவின. அடவிபடும் - காடுபோல் இருக்கும். வெம்பணி - கொடும் பாம்பு. அம் பணி ஆம் - அழகிய ஆபரணமாம். அங்கதர்-வாஹுவலயமாக (த்தோளணியாக)க் கொண்டவர். வாம அங்கனை - இடப்பாகத் தேவி. அநுபவை-எதையும் அநு பவிக்க வைப்பவள். அநுதிதை - சொல்லுக்கு அடங்கா தவள். த்ரியம்பகி-முக்கண்ணி. ஆசா அம்பரை-திக்குகளை ஆடையாக உடையவள் (நிர்வாணி). பாச அங்குசை-பாச மும் அங்குசமும் கையில் ஏந்தியவள். அநகை-பாவமற் றவள். அஸஞ்சலை - ஸஞ்சலமில்லாதவள். குண ஸுந்தரி-மேம்பட்ட குணமும் அழகும் உடையவள். அந்தரி-ஞாந வெளியில் இருப்பவள். கால அந்தகி-யமனுக்கும் யமனனவள். மேல் ஆம் திரு-லக்ஷ்மியை விட மேலானவள். அமலை-மல மற்றவள். அலங்க்ருதை-சிங்காரி. அபிநய பங்கு உரை சங்கிநி -நாடக இலக்கண பாகங்களை யெடுத்து உரைக்கும் (சங்கிநி ஜாதிப்) பெண். மான் ஆம் கணி-மான் போன்ற கண்ணை உடையவள். ஞாந அங்குரை-ஞாநத்துக்கு வித்துப் போன் றவள். அணிமுக பந்திகள் - அழகிய முக(பட) வரிசைகள். அழல்வாய் கான்றிடு - வாய்கள் நெருப்பைக் கக்குகின்ற. நாக அங்கதை - பாம்பைத் தோள் வளையாக அணிந்த வள். அபயவரம்-அபய வரதம். உபயகரம் - இரண்டு கைகள். அந்தணி - செந்தண்மை பூண்டவள்; பார்ப்பனி. ஆம் ஆங்கு அறி தாய்-(தன் அடியார்களுக்கு) வேண்டியவற்றை அப்பொழுதே அறிந்து உதவும் தாயைப் போன்றவள். மாண்பினள் - பெருமை வாய்ந்தவள். அதுலை - ஒப்பற்

பின்னமாயிற்று. சூர்ப் பேரணி-சூரனது ஸேனையின் பின்னணி. **89**. கால்-தடவை. இடும்பைக் குன்று - துன்ப மலை. கொன் நவில் வேல்-வலிமை புகழ்ந்து பேசப் பெறுகின்ற வேலாயுதம். கொற்றவன்-அரசன். பனிவேய் - மூடுபனி மேய்ந்த. குன்றம்-க்ரௌஞ்சம். பட்டு - அழிய. உருவ - ஊடுருவ. தொட்ட-ப்ரயோஹித்த. தனிவேல் - ஒப்பற்ற வேற்படை. வாங்க -செலுத்த. **90**. திடவிய-வைராக்யமுள்ள; வலிமையான. இடும்பை-துன்பம். தீயாம் குறை - அத்ருப்தி எனும் நெருப்பு; தீமையாம் குறைபாடு எனலும் ஆம். இசை-புகழ். கலி-துக்கம்; பயம். தேசாந்தரம்-நாடு கடத்தல். நஞ்சு உறழ்-விஷம்போன்ற. மயல்-மயக்கம். தீமான்கதர்-தீய தன்மையுடைய கோபக்காரர் கள். சிகர தரங்கித-மலைபோல் எழும் உயர்ந்த அலைகளை யுடைய. மகரம் - மகரமீன். தீ மூண்டு - நெருப்புப்பற்றிக் கொண்டு. தெரியலர்-பகைவர்கள். எண்கரி-அஷ்டதிக் கஜங் கள். சிம்பெழ-பயந்து பிளறி ஒலிக்க. மாறு ஆம்-பகைமை ஆகிய. கிரி-க்ரௌஞ்சம். தொளை நூறுஆம்-பொடிபடும்படித் தொளைக் கப் பெற்றது; நூற்றுக்கணக்கான தொளைகளைப் பெற்றன வாம் எனினும் ஆம். சிகரம்-மலைஉச்சி. திக்அந்தம்-திசை முடிவு கள். லோக அந்தம்-உலகங்களின் முடிவிடங்கள். சேண்-ஆகா சம்; பொன்னுலகம். சீர்-சிறப்பு. அறம்-தர்மம். அற-முழு தும் என்பதும் ஆம். நேர்-நேர்மை. விட வசநம்-விஷம் போன்ற சொற்கள். விரிஞ்சன்-ப்ரஹ்மா. கால் விலங்கு அது பூண்டு என மாற்றுக. மேல்-மேன்மை; அஹந்தை. தீர்ந்தனன்-அழி யப் பெற்றனன். விகஸித-மலர்ந்துள்ள. ஸுந்தர-அழகிய. விதரண-கொடுத்தலில் வல்ல. ஐந்தரு-பஞ்ச தருக்கள். வெந்து -எரிந்துபோய். வீ-அழிந்து பட்டிருந்த. வான்பொழில்-பெரிய கற்பகச் சோலை. விழைவு-விருப்பம். பதம்-பதவி. சசி-இந்த் ராணி. மங்கலநூல்-திருமாங்கல்யம். வாங்குகிலாள்-இழக்கா தவளாய். வெருவி-பயந்து. இமையவர்-தேவர். இதம்-நன்மை. விழி.. கண்டகன்-விழி ஓர்இரண்டு ஒருபதுசதம் $1 \times 2 \times 10 \times 100 = 2000$ கண்கள். நின்று எரி-நிலைத்துத் தீயைக் கக்கும். கண்ட கன்-கீழ் மகன்; அஸுரனும் சிங்கமுகாஸுரன். மேல் வா(வு)ம் இளை-மேலே தாவி எழும் சுற்றத்தார். கால் சாய்ந்தது-அடி யோடழிந்தது; நெருப்பைக் கக்கும் 2000 கண்களைக் கொண்ட

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

கவே. 91. தாரை - கூர்மை. விண்ணோர் - தேவர். செவ்வேள- செந்நிறத்தால் யாரையும் (தன்னை) விரும்பச் செய்யும் முருகவேள். வாரி - கடல். கொற்றம் - வெற்றி. சூர்-சூரன். தொளைத்த - தொளை செய்த. 92. தடக் கொற்ற வேள் - பெருமையும் வெற்றியும் உள்ள செவ்வேள். தனிவிடில் - முருகவேள் உன்னைத் தனியாகப் போக விட்டால். வடக்கில் கிரிக்கு - வடக்கே உள்ள மேரு (அல்லது இமய) மலைக்கு. அப்புறத்தும் - அப்பாலும். நின் தோகையின் - உன்னுடைய தோகையால். நின்று+ஓகையின் எனப் பிரித்துத், திரிந்து மகிழ்ச்சியினால் எனவும் பொருள் கொள்ளலாம். வட்டம் இட்டு - தோகையை வட்டமாக விரித்து. கதிர்-ஸூர்ய சந்த்ரர்கள். கநக சக்ர திடர் - பொன்மயமான சக்ரவாளகிரி. திரிகுவை - திரிந்து உயிர்களைக் காப்பாய். இடர்தீர் - துன்பங்கள் தீர்ந்த.அத் தனி விடில்-அந்த ஒருபூதரும் அறியாத் தனிவீட்டில் நீ என்னைக் கொண்டு விட்டுவிட்டால், பின்பு எனக்காக நீ வர வேண்டிய வேலை இல்லாமல், திரிகுவை - உன் இஷ்டப்படி எங்குந் திரிந்து கொண்டிருப்பாய் எனவும் பொருள் கொள்ளலாம். 93. சலம்-கோபம். துலங்கா நரகம்-(விளங்காத) இருண்ட நரகம். அலங்கார நூறு-கந்தர் அலங்காரம் நூறு பாடல்கள். 94. மடங்கல் - வடவாமுகாக்நி. மாதிரத்தோர் - திசைகளிலுள்ளோர். உரகன் - ஆதிசேஷன். கீழ்க் கிடங்கு - கீழேயுள்ள அகழி; அதல பாதாளம். நடுங்கும்-நடுங்குவன். 95. ஏறுமயில்-ஆண்மயில். உருவ-ஊடுருவ. வாங்கி - விட்டு. மாறுபடு - பகைமையுற்ற. 96. பூதி - விபூதி. ஆஹம் - மார்பு. என மானம் உனது - என்னுடைய மானம் உன்னுடையது. வியாகுலம் - துக்கம். வினா இல் - கேள்வி இல்லாத. ஏவர் - எவர். என்சொலாதோ - என்ன தான் சொல்லாதோ. நீறு - திருநீறு. மாழை - பொன். பொரு - போன்ற. வாஹ - வாஹநத்தை உடையவனே! நீசர்கள்-இழிந்தவர்கள்; அஸுரர்கள். தமோடு- தங்களோடு. மடிய-அழிய. நீடு-நீண்ட. மடங்கல் வேல்-வடவாமுகாக்நி போன்ற வேலாயுதம். சீறி வரும் - கோபித்து வந்த. மாறு அவுணன்-மாறுபட்ட அஸுரன். ஆனைமுக தேவர் - யானைமுகமுடைய கடவுளாம் கணபதி. துணைவா - தம்பியே. சிகரி - மலையுச்சி. அண்டகூடம் - தேவர் உலகு. வரதா - வரங்

றவள். மதலே-பிள்ளை. இபம்-(கணபதியாம்) யானை. பாய் மாண் கலே-பாயும் நிறைந்துள்ள கலேமான்கள். வாய் மாண் புன-வாழ்ந்திருந்த சிறந்த தினைப்புனத்திலிருந்த. அணி குற மின்-அழகிய குற மின்னுள்; வள்ளி. இந்திர ராஜாங்கம் அது ஆராய்ந்தவன்-தேவேந்த்ரனது அரசாட்சியைப் பரிசீலனை செய்து ஒழுங்கு படுத்தினவன். வடவை - வடவா முகாக்நி. இடும்படி-இட்ட தன்மையில். மணிமுடி-ரத்ந கிரீடங்கள். விஞ் சிய-மிக அதிகமான. மாடு ஆம் புடை-இரு பக்கங்களை (எதிரி கள் இரு பக்கத்தாரை)க் கொண்ட போரை. நாடு ஆண் தகை-நாடி நடத்திய நம்பி (பெருமையில் சிறந்தோன்). வசை-பழி. குருபதி-குருகுலத் தலேவனும் துர்யோதநன். பாண்டவர் தேர்-பஞ்ச பாண்டவர்களுள் அர்ஜுநனுடைய ரதத்தை. வளவு-ஆயர்பாடி. இடைமகளிர்-இடைச்சியர். தடம்-குளம். குடைவார்-குளித்துக் கொண்டிருந்தவர்கள். பூம்துகில்-அழகிய பட்டாடைகள். வார்-வாரி எடுத்து ஒளித்த. பூம்புயல்-அழகிய மேக வண்ணன். வரை-கோவர்த்தந கிரி. நிரை-பசு. பண்-இசை. கெழு-பொருந்திய. வேய்-மூங்கில்; புல்லாங்குழல். கழல்-திருவடி. மருது இடை - மருத மரங்களின் நடுவில். சகடு-சகடாஸுரன். தடிந்து-கொன்று. அடர் - சண்டையிட வந்த. வெம் பு(ள்)ளே-கொடிய பறவையாம் பகாஸுரனை. கீண்டு-பிளந்து. பேய்-பூதகியை. காய்ந்தவன்-கோபித்து அழித்தவன். மத சயிலம்-மதம் கொண்ட மலேயாம் குவலயாபீடம் என்னும் யானை. பொர - சண்டை செய்ய. வரவிடு - அனுப்பிய. மாமான் - மாமன். கோமான் - பெருமானுகிய கண்ணன். திரு - லக்ஷ்மிகரம் பொருந்திய அல்லது லக்ஷ்மிக்கு. மஞ்சரி - பூங்கொத்து; பூந்தளிர் போன்ற வள்ளி அல்லது தெய்வயானை அம்மை. குஞ்சரி - தேவஸேனை. வாஹ அம்பரை - வாஹந மாக மேகத்தைக் கொண்ட தெய்வயானை. (வாகு+அ-அழகை உடைய, அம்பரை-ஆடை அணிந்தவள் எனலுமாம்). தோய்-பொருந்தி அணையும். காங்கெயன்- காங்கேயன்: கங்கையின் மகன். மஹபதி - இந்த்ரன். பதி - ஊராகிய பொன்னுலகு. பகை - பகைவனும் சூரன். கிழியும்படி - மார்பு கிழிந்து அழியும்படி. அடல்வாள் - வலிமையும் ஒளியும். வாள்-வாளாயுதம் எனலுமாம். வேல்வாங்கவே - வேலாயுதத்தைப் ப்ரயோஹிக்

பார்த்திபன் - அரசன். சேயவர் - பகைவர்; அஸுரர். தமர் - உறவினர். நீறு ஆயே - பொடியாகவே. பட - அழிய. மோது. மோதுக. அமரோடே-சண்டையோடு. தானை-ஸேனை. அமர் அடலாகி-சண்டை இடுதலாகி. வீட்டி - அழித்து. 102. தடம்-விசாலமான. கூறு - துண்டு. தனி - ஒப்பற்ற. குக்குடம்-கோழிக்கொடி. மஞ்ஞை - மயில். யானைதன் அணங்கு - ஐராவத யானை வளர்த்த தெய்வ மகளாம் தேவ குஞ்ஜரி. மாறு இலா - மாறுபாடு இல்லாத; அதாவது என்றும் இளமை வாய்ந்த. சீர் - சிறப்பு. 103. ஏவரும் - யாவரும். இராறு—$2 \times 6 = 12$. காஞ்சி மாவடி-கச்சி ஏகம்பம். வைகும்-தங்கி இருக்கும். அன்னோன் - அத்தகைய முருகவேள். 104. ஏகாந்தம் - தனிமை. நீல அங்க யாநம் - நீலத் திருமேனி கொண்ட மயில் வாஹநம். ஏடு ஆர்ந்த நீபம் - இதழ் பொருந்திய கடப்ப மலர். முகில் - மேகம். ஏறு ஓங்கல் ஏழும் - உயர்ந்து மேல் ஏறுகின்ற ஏழு மலைகள்; சூரனொடு வரும் ஏழு கிரிகள். சாய்த்த - அழித்த. நான்மூன்று தோள் $(4 \times 3) = 12$ தோள்கள். த்யாக அங்கம் - கொடைப் பெருமை அலங்காரம். ஆர்த்து-கூச்சலிட்டு. தேசாங்க சூரன் - நாமம், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, மாலை, கொடி என்னும் (தசாங்கம்) 10 அரசியல் உறுப்புக்களைக் கொண்ட சூரபன்மன். சே ஏந்தி - ரிஷபத்தைக் கொடியாக ஏந்திய சிவபெருமானின். தேசம் பார்க்க - கட்டளையை நிறைவேற்ற. (அல்லது) சே - சிவந்த, வேந்தி - அரசியாம் தெய்வயானை அம்மையின், தேசம் பார்க்க - இடமாம். விண்ணுலகத்தில் உள்ள தேவர்கள் கண்டுகளிக்க. மீநம் - நக்ஷத்ரங்கள். பூத்த-தோன்றி ஒளிர்கின்ற. மோஹ அந்தகாரம் - பேராசையாம் இருட்டு. வேதாந்த தீபம் - வேதத்தின் முடிவான தத்வமாகிற ஒளி விளக்கு. 105. நால் ஆறு கால் $(4 + 6 = 10)$ ப்ராணன், அபாநன், வ்யாநன், உதாநன், ஸமாநன், நாஹன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தநஞ்ஜயன் என்னும் தசவாயுக்கள். (நால் ஆறு கால் $4 \times 6 = 24$ குறுக்குவிட்டக் கால்கள் என்பதற்கு ஆத்ம தத்வம் (அசுத்த தத்வம்) 24 எனப் பொருள் கொள்ளலும் ஆம். இரு கால்-இரண்டு கால்களாம் தூண்கள். வளை முதுகு ஓட்டி - வளைந்த முதுகு அமைத்து. கைந்நாற்றி-

கொடுப்பவனே. 97. சங்கரி-பார்வதி. சங்கு அரிதன் மகள் - சங்க பாணியனுன திருமாலின் மகள். ஸங்கரிக்கும் - ஸம்ஹாரம் செய்யும். சங்கரன் - சிவபெருமான். மாமன் - மாமனுர். தயல் - தையல்; பெண். வெம் கரி - விரும்பத் தக்க (ஐராவத) யானை. பிடி - பெண்யானை. விண்ணவர் கோன் - தேவர் தலைவனும் இந்த்ரன். ஸுதை - மகள். அணங்கு - தெய்வப் பெண். பைங்கழுநீர் - பசிய செங்கழுநீர்ப் பூ. செம் கமலை - செந்தாமரையில் வீற்றிருக்கும் லக்ஷ்மி. தரும் - பெற்றருளிய. அமுதை - அம்ருதம் போன்றவளை. இடத்து - இடப் பக்கத்தில். 98. மாதவன்-லக்ஷ்மீ காந்தனும் திருமால். மா தவனுய் - மஹா தபஸ்வியாய். மாதவம்-பெரிய கடுந்தவம். மலர்மான் - திருமகள். பூதல மங்கை - பூ லோகத்துப் பெண். வள்ளிப் பொருப்பு - வள்ளிமலை. பொருப்பர் - வேடர். வேங்கை - வேங்கை மரம். அவ்வேளை - அந்த வேளையில். இருகை கோள் - இரண்டு கைகளையும் பற்றிக் கொள்ளுதல்; பாணி க்ரஹணம். உன்னி - த்யானித்து. 99. விரை - வாஸனை. போது - மலர். பங்கயம் - தாமரை. திரை-அலை. தரை - பூமி. மால்வரை - பெரிய மலை. 100. எழு அம் முதிரை - எழுந்து வளர்கின்ற அழகிய தினை என்னும் தான்யம். புனம் - தினைப்புனம். கிழம் உதிர் - கிழத்தன்மை உதிர்ந்துபோன. இளநலம் - நல்ல இளமை. கிடைப்ப - கிடைக்க வேண்டி. முன்னவன் - விநாயகனை. மழ முதிர் களிறு - இளமை நிறைந்த ஆண் யானை. அம் பகவற் போற்றுவாம் - அழகிய பகவானைப் போற்றுவோம். 101. நிருதரார் - அஸுரர்கள். காலா - யமனே. ஜே ஜெய - ஜயம் உண்டாகட்டும்; ஜயம் உண்டாகட்டும். நிமலனுர் - சிவனுர். விறல் - வலிமை. ஆழ்திரை ஏழ் - ஆழ்ந்த ஏழு கடல்கள். எழு பிறவி- ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பன, விலங்கு, மக்கள், தேவர் என்னும் எழுவகைப் பிறப்புக்கள். சவலை - வருத்தம்; மநக் குழப்பம். உனதாள் - உன் திருவடி. ஏற்றி - ஏறவைத்து; ஏற்றுக் கொண்டு. இன் - இனிய. ஞானா போதம் - அறிவுபதேசம். தமியனேற்கு - எனக்கு. முனே - முன்னே. தருவின் நாடு - ஐந்தரு நாடாம் பொன்நாடு. அரசாள்வான் - அரசாட்சி செய்யும் இந்த்ரன். வேணுவின் உருவமாய்-மூங்கில் வடிவில். தவனினுல் - தவத்தால். லோக்கியம் - உலக போகம்.

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

நகர்-பொன்னுலகு. இறை-இந்த்ரன். குடிபுகுத-குடிபுக. நிருதர் -அஸுரர். எரி-நெருப்பு. உரகர்பதி-நாக ராஜனும் ஆதிசேஷன். அபிஷேகம்-திருமுடி. எழு பிலம்-பாதாளம் முதலிய கீழ் உலகங்கள் ஏழு. வடகுவடு-வடமேரு மலை. ஓடியல்-பனங்கிழங்குப் பிளவு. பயறொடு இயல் (நல்ல தகுதியுள்ள) பொரி எனவும் பிரிக்கலாம். அமுதுசெயும்-உண்ணும். இலகு-விளங்கும். வெஹாகடம்-பெருகும் மதஜலம். விகடம்-விசித்ரம்; அழகு. தடபார மேரு-பெரிய கநத்த மேரு மலை போன்ற விநாயகர். இகலி-போட்டியிட்டு. திகிரிகிரி-சக்ரவாளகிரி. நெரிய-பொடிபட. வளைகடல்-(பூமியைச்) சூழ்ந்துள்ள கடல். எறுழி-காட்டுப் பன்றி. அரி-சிங்கம். கரி-யானை. கடமை-காட்டுப்பசு. வருடை-மலை ஆடு. உழை-மான். இரலை-கலைமான் (ஆண்மான்). மரை-மான் வகை. இரைதேர்-உணவு தேடும். கட அடவி-பெருங்காடு அல்லது அரும் நெறிகளைக் கொண்ட காடு. எயினர்-வேடர். இதண் - பரண். இளகு - தழைத்துள்ள. கடிய - விரட்டி ஓட்ட. சிறுமி - வள்ளிநாயகி. புனம் - தினைப்புனம். முதல வினை - பிறவிக்கு முதற்காரணமான இருவினைகள். பிறை எயிறு-பிறைச் சந்த்ரன் போன்ற பற்கள். கயிறு - பாசக் கயிறு. வடவை விழி - வடவாமுகாக்நி போன்ற கண். காலதூதர் - யம படர்கள். முடுகுவதும் - விரட்டி ஓட்டுவதும். அருள்நெறி-திருவருளைப் பெற உதவும் வழி. முடிய-நிறைவேற. சாடுவது-அடித்து ஓட்டுவது. மதுபம்-வண்டு. முரல்-ரீங்காரம் செய்யும். குரவு-குராமலர். விளவு-விளா மரம். குறுமுறியும் - இளந்தளிர்களும். வகுளம்-மகிழம்பூ. தள-தளவு; முல்லைமலர். முழுநீல தீவரம்-முழுவதும் நீலமாயுள்ள இந்தீவரம்; குவளை. முருகு-நறுமணம். தபோபலம்-தவப்பயன். மகளிர் அறுவர்-கார்த்திகைப் பெண்கள் ஆறு பேர். சரணம்-அடைக்கலம். குழற - தடுமாற. விழிஅருவி - கண்ணீர் ஆறு. அறைகூவி-வலிய அழைத்து. முடிய-முற்றிலும். வழிவழி அடிமை-பிறவிகள் தோறும் விடா அடிமை. மழலை மொழி - (ஆண்டவன் அருளிய இன்மொழிகளாம்) குதலை மொழி. கொடு - கொண்டு. ஆசுகவி - தன் முயற்சி இன்றித் திருவருளால் ஊற்றென வரும் கவிதை. முதல மொழிவன-முதலியனவாகச் சொல்லப்படுவன. நிபுண

இரண்டு கைகளைத் தொங்க அமைத்து. நரம்பால் ஆர்க்கை இட்டு-நரம்புகள் என்னும் கயிறுகள் கொண்டு கட்டி வைத்து. தசை-சதை (ஊன்). மேய்ந்த-மேயப்பட்டுள்ள; உண்டாக்கப் பட்டுள்ள. அகம்-இந்த உடலாகிய வீடு. வேறு இல்லையே-வேறு துணை கிடையாது. 106. உததி-கடல். கடவும்-செலுத் தப்படுகின்ற. மரகத வருணம்-பச்சைநிறம். அருணம்-செந் நிறம் எனினுமாம். குல துரகம்-ச்ரேஷ்டமான குதிரைகள். உப லளிதம்-விளங்கும் அழகு. கநக ரதம் - பொன்தேர். சதகோடி -நூறுகோடி; பலகோடிக் கணக்கான. அதிகவித - பலவகை யான நிறங்களைக் கொண்ட. கலப ககம்-தோகைப் பக்ஷி. உக முடிவு-யுகாந்த காலம். ஒருவி வரும்-நீங்கி ஓங்கி வளரும். மநு பவநம்-தர்ம சாஸ்த்ரங்களுக்கு (மந்த்ரங்களுக்கு) இருப்பிட மான. பிறிது-வேறு. பரவசம்-தன் வயம் இழத்தல். விழி செருகி-(ஊனக்) கண்கள் உட்புறம் சொருகி நிற்க. உணர்வு விழி-ஞானக்கண். கொடு-கொண்டு. நியதி-எப்பொழுதும்; முறைப்படி. தமது ஊடு-தங்களுக்குள்ளே. அரு-உருவமற்றது. உ(ள்)ளது, இ(ல்)லது-இருப்பதும், இல்லாததும். பரஸமய கலை-பிற மதநூல்கள். ஆரவாரம்-ஆடம்பரப் பேரொலி. உரை -பேச்சு. அவிழ-அற்று நீங்க. உளம்-எண்ணங்களுக்கு இருப்பிட மான மநம். உயிர்-ஜீவனின் அகம்பாவ நிலை. உளபடி-உள்ள தன்மை. அநுபூதி-ஸ்வாநுபவம். மகவு-பிள்ளை. மலிநம்-பாவம். பவ ஜலராசி-பிறவிக்கடல். ஏற-கரையேற. புணை-தெப்பம். அறி முகம்-(ஞானத்தை) அறிவிக்கும் வாயில். மணிமுடி-ரத்நகிரீடம். உலைவுஇலது-அழிவில்லாதது. மநோரதம்-மநத்துக்கு உகந்தது. இதழி-கொன்றை. வெகுமுக ககந நதி-ஆயிரக் கணக்கான முகங்களாய்ப் பரந்துள்ள ஆகாச கங்கையாறு. அறுகு-அறுகம் புல். தறுகண் அர-அஞ்சாமை என்னும் வீரத்தைக் கொண்ட பாம்பு. இமகிரண-பனி போல் குளிர்ந்த கதிர்களையுடைய. தருண உடுபதி - இளமை வாய்ந்த நக்ஷத்ரங்களுக்குக் கணவன் எனப்படும் (மூன்றாம் பிறையாம்) சந்த்ரன். ஜடாமவுலி-ஜடைமுடி. இறை-சிவன். உடைமணி-அரைமணி. அணி ஸகலம் -தண்டை, வெண்டையம், சதங்கை, கிண்கிணி ஆகிய எல்லா விதமான ஆபரணங்களும். மணி கல் என-மணிபோல் கல் என்று ஒலிக்க. இமய மயில் - பார்வதி. இமையவர்கள் - தேவர்கள்.

திருவடி. அயன் கையெழுத்து-ப்ரம்ம லிபி. 108, 108-அ, 110 பாடல்களுக்கு முறையே பாட்டுக்கள் 4, 5, 8 இவற்றின் குறிப்புரையைப் பார்க்க. 109. சின்னம் - அடையாளம். ஏக தாரை-ஒருவகை இசைக்கருவி; இஃது ஒரே தந்தியோடு கூடிய தம்புரா வாத்யம் போன்றது. சொன்ன மா மாரி - பெருத்த பொன்மழை. தன்னை நேரில்லா - தனக்கு ஒப்பாவாரில்லாத. 111. நாளும்-நாள்தோறும். கசிவு-உருக்கம். நிருத்தம்-நடநதர்சநம். ஏழை-ஏழை ஆகிய அடியேன். அநுபூதி ராசி-அநுபவ ஞாநமாகிய (யோகம்) பாக்யப் பொருத்தம். பூளை-பூளைச் செடியின் பூ. நாகபூணர்-ஸர்ப்பாபரணர். வேளை தனக்கு--வள்ளி பிரிந்து ஒடின அந்த ஸமயத்துக்கு. உசிதமாக-ஒத்ததாக; ஸமயோசிதமாக. வேழம்-யானையை. 112. ஆதாரம்-பற்றுக்கோடு. இலேன்-இல்லாதவன். சற்றும்-சிறிதும். நினைந்திலே-என்னைப்பற்றி நினைக்கின்ரு யில்லை. வேத, ஆகம, ஞாந, விநோத மந அதீதா-நான்கு வேதங்களுக்கும், 28 சிவாகமங்களுக்கும், அறிவுக்கும், விசித்ரமான மநத்துக்கும் அப்பாற்பட்டவனே! வேத, ஆகம அறிவுகளால் புகழப்பெறும் விநோதனே எனினுமாம். ஸுரலோக சிகாமணி - தெய்வ உலகத்துக்குத் திரு முடிப்பூண் போன்றவனே! 113. எம் தாயும் - எமது தாயாரும். சிந்தா ஆகுலம் - மநக் கவலை. ஆனவை - ஆகியவைகள். மால் - மயக்கம், நவை-குற்றம் எனவுமாம். 114. உளது இலது - உள்ளது இல்லது; அஸ்தி; நாஸ்தி. மரு - வாஸனை. மணி - ரத்நம். கரு-கர்ப்பப் பிண்டம். கதி-பரகதி. விதி-தலைவிதி. வருவாய் - வந்திடுவாய். வருவாய் அருள்வாய் - (ஞாந) வரும்படி (செல்வத்தைக்) கொடுப்பாய் எனவுமாம். குஹனே - ஹ்ருதய குஹையில் வஸிப்பவனே! 115. பதவுரை: செல் - அங்குச் சென்று, வந்தி-வணக்கஞ் செய்! கழுமலம் - குமாரக் கடவுளானவர் முன் ஸம்பந்தப் பிள்ளையாய் அவதரித்தருளிய சீகாழிப் பதியின்கண், நெஞ்சமே - ஹ்ருதயமே! அவன்-அவரது, தெய்வ-தெய்விகமாகிய, மின்-தெய்வயானை, ஊர்-ஏறி வருகின்ற, செல்-மேக வாஹநமானது, வந்து-வந்து, இகழும்-(பிறரால்) இகழப்படும், நமது-நம்முடைய, இன்மை-இல்லாமை யாவும், தீர்க்கும்-நீக்கிவிடும். வெம்-கொடிய,

மதுபம் - அறிஞர்களாகிய வண்டுகள். முகர்-மோந்து அநு பவிக்கும். இதம்-இனிமை வாய்ந்த. மவுந முகுள-மவுந நிலையை விட்டு வாய்அரும்பி(வாய் மலர்ந்து பாடிய). பரிமளம்-சொல், பொருள், தமிழ், அருள், மணங்கள் கமழும். நிகில கவிமாலை-எல்லாவகையான பாமாலைகளும். மதசிகரி-மதமலை; கஜேந்த்ர யானை. கவர்தர-காலைப் பற்ற. மடு-நீர்நிலை. வெருவி-பயந்து. ஒருவிசை-ஒருமுறை. வரதன்-கேட்ட வரந்தருவோன். இகல் இரணியன்-மாறுபட்ட ஹிரண்ய கசிபு. நுதிஉகிர்-(உகிர் நுதி)-நகத்தின் நுனி. வகிரும்-கிழித்தெறியும். அடல்அரி-வலிமை யுள்ள(நர)சிங்கம். வடிவு குறள்-உருவம் குட்டை. மாபலி-மஹாபலிச் சக்ரவர்த்தி. வலிய-பலத்த. வெளியின் முகடு-ஆகாச உச்சி. முடிய-முற்ற முடிய: மேலுக்கும் கீழுக்கும் ஒரே நீளமாக. நிருதன்-ராவணாஸுரன். இருபது வாஹு பூதரம்-20 தோள்மலைகள். மகுடம் ஒருபது-திருமுடிகள் பத்து. அடுபகழி-கொல்லும் அம்பு. குரிசில்-ஆண்மகன். நிசிசரர்தளம்-அஸுர ஸேனை. மகர ஜலநிதி - மகர மீன்கள் நிறைந்த கடல். மறுகி-சுருங்கி. முனியும் - கோபிக்கும். நீலகிரி - நீலோற்பல மலை; திருத்தணி. குருபதி - குருமூர்த்தி. யுவதி - என்றும் இளையவள். பவதி - தாய். பகவதி - ஆறு குணங்களை உடையவள். மதுர வசநி - இன்சொல் பேசுபவள். பயிரவி - பயங்கரி அல்லது பைரவராம் சிவபிரானது பத்நி. கௌரி-சிவந்தவள். த்ரிசூலதரி-முத்தலைச் சூலம் ஏந்தினவள். வநஜை-தாமரையில் வீற்றிருப்பவள். மதுபதி-காளி. அமலை-மலமில்லாதவள். விஜயை-வெற்றிபூண்டவள். திரிபுரை-மும்மூர்த்திகளுக்கும்மூத்தவள். புநிதை-பரிசுத்தமான தேவி. வநிதை-பெண்ணில் நல்லாள். அபிநவை-என்றும் புதியவள். அநகை - பாவமில்லாதவள். அபிராமநாயகி-அழகின் தலைவி. மதலை-குழந்தை. மலை கிழவன்-மலைகளுக்கு உரியவன். அநுபவன்-அநுபவங்களுக்கு மூலகாரண மூர்த்தி. அபயன்-பயமில்லாதவன்: யாவர்க்கும் அடைக்கலம் கொடுப்பவன். உபய-இரண்டாகிய(திருவடிகள்). சதுர்மறை-நான்கு வேதங்கள். மணம் நாறு-வாஸனை வீசுகின்ற. சீறடி-சிற்றடி; சிறிய பாதம். 107. சேல்-சேல்மீன். பொழில் தேம் கடம்பின்-சோலையிலுள்ள இனிய கடப்ப மலரின். மால்-வாஸனை; மயக்கம். வேலை-கடல். வெற்பு-க்ரௌஞ்சம். கால்-

டியது என்ன இருக்கின்றது? 117. யாம்-நாங்கள். ஓதிய-பயின்ற. தாமே பெற-தமக்கே திரும்பி வரும் பொருட்டு. பூ மேல்-பூமியில். மயல்-மயக்கம். அறம்-தர்மம். அற-முற்றிலும். மெய்-ஸத்யத்தை. உணர்வீர்-கைக்கொண் டொழுகுவீர்களாக. நாமேல்-நாக்கின் மீது. நடவீர்-நடவுங்கள். அதாவது இறைவனை நாவினால் கவிதை பாடிப் புகழுங்கள் என்றவாறு. நாம் ஏன்-அச்சம் எதற்கு? நடவீர்-(நல்வழியிலேயே) ஒழுகுங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். இனி-இனிமேல். 118. நினைத்தது எத்தனை-நினைத்தது எந்த அளவும். எத்தனை-யத்தநம் (முயற்சி) எனலுமாம். கருத்த - பெரிய பெரிய தத்வ ஆராய்ச்சிகளிலெல்லாம். உற்று-மநத்தைச் செலுத்தி. கதித்த-உண்டாகும். நித்திய-நிலையான. சித்து-அறிவு. மனித்தர்-மனிதர். ஜெநித்த-அவதரித்த. 119. ஒருத்த-ஒப்பற்றவனே. மலை விருத்த - மலைக்கிழவ: குன்றுதோறாடற்கு உரியவனே. கருத்த-தலைவனே; (என்) கருத்தில் உள்ளவனே! இச்சை - ஆசை. தருவித்து - வரவழைத்துக் கொடுத்து. வெறுது - வெறுக்காது. புலவர் - கவிஞர்; அறிஞர். வேண்டும் அளவில் - கேட்டவுடன்; கேட்ட அளவு; உண்மையில் அவர்களுக்குத் தேவையான மட்டும். சிவம் - மங்கலம். ஆர் - பொருந்திய. எனுநா-எனது நாக்கு. கலியாண ஸுபுத்திரன்-திருமண மாப்பிள்ளை. கவின் ஆரு-அழகு பொருந்திய. களிகூரும்-மகிழும். வை-வைப்பாயாக. கடன்-கடமை. இதுக்கநம் ஆகும்-இது உனக்குப் பெருமையாகும். படி-பூமி. பரிவு - அன்பு. ஏறு-மிகக்கொண்ட. பவரோக வைத்தியநாத-பிறவிப் பிணிக்கு மருத்துவனே! சலம் - ஸஞ்சலம்; கோபமுமாம். அதுவேரை அறுத்து - பிறப்பின் மூலத்தைக் களைந்து. தலம்-உலகம். அஞ்சல்-பயப்படாதே. தரணி-பூமி. தகைமை-தகுதி. சரணம்-பாதம். அநுக்கூலம்-அநுகூலம். வியாகுலம்-வ்யாகுலம்; கவலை. வினவில்-பிறர் கேள்விப் பட்டால்; வினவு இல்-கேட்டல் இல்லாத என்பதும் ஆம். ஏவர்-யார். குறிஞ்சி-மலை. மறவர்-வேடர். வடிவு-உருவ அழகு. ஆனை-தேவயானை. மான்-வள்ளி. வடிவு அது ஆம்-அழகுடையனவாம். சிவம்-சிவன். நடிக்கும்-நடநம் ஆடும். எமதுளே-எம்முள்ளே. ஸொரூபம்-ஸ்வரூபம்; வடிவம். இது அல்லது மிது-மீது. பவம்-பாவம்.

கூற்றுவற்கு-யமனுக்கு, செல்-நம்மேல் நடப்பதாகிய, வந்தி-கொடுமையை, கழும்-துடைத்துவிடும், திருக்கையில்-(முருகக் கடவுளது) திருக்கரத்தின், வேல் - வேலாயுதமானது, தினை காத்த - தினைப்புனங் காவல்பூண்ட, செல்வி - வள்ளிநாயகியினது, செல்வம்-பெருஞ்சிறப்பாக, திகழும்-(நிறைந்து)ப்ரகாசிக்கின்ற, மணவாளன்-நாயகனாகிய கந்தஸ்வாமியானவர், நல்கும் திருவடி-(தமது) திருவடித் தாமரையை நமக்குத் தந்தருள்வார். கருத்துரை: நெஞ்சமே! தெய்வயானையினது வாஹநமாகிய மேகம் நமது வறுமையைத் தவிர்க்கும். குமாரக் கடவுளது வேலாயுதம் நமக்கு வரும் யம தண்டனையை நீக்கிவிடும். வள்ளிநாயகிக்கு மணவாளராகிய கந்தஸ்வாமி தமது திருவடித் தாமரையைத் தந்தருள்வார்; ஆதலால், நீ அக்கடவுள் முன் ஸம்பந்தப் பிள்ளையாயவதரித்த சீகாழியிற் சென்று அவரை வணங்குவாயாக! 116. பதவுரை: செவிக்கு-என் காதுக்கு, உன்-உனது, தவா-தவிராத, ரண-உரிமையை, நல்கு-கொடுக்கும், இசை-கீர்த்தியை, பூட்ட-அணிய, வன்-வலிய, சிந்தை-(என்) ஹ்ருதயமாகிய, அம்புசே-தாமரையிலிருக்கும், வி-பட்சியாகிய ஆன்மா, குன்ற-வருந்துகையில், வாரணம்-நின் கோழிக்கொடி எழுந்தருளி, அஞ்சல் என்று-பயப்படாதே யென்று, ஆண்டது-அடிமை கொண்டது. நீண்ட கன்ம-பெரிதான முன்செய் வினையாலாகும், செ-ஜநநத்துககு வித்தாகிய, இக் குன்று-இம் மலை போன்ற, அவா-ஆசையை, ரண-அமர்புரியும், வேலாயுதம்-அயிலானது, செற்றது-கொன்று விட்டது, உற்றன-என் சென்னிமேலே வீற்றிருந்தன, கட்செவி-பாம்பு போன்ற, குன்ற-திருச்செங்கோட்டு மலையையுடைய கந்தஸ்வாமியே! வாரண-தெய்வயானை, வள்ளி-வள்ளியாகிய நாயகிமாருடைய, பொற்ருள்-பொன்னடிகள், மற்றென் தேடுவது-இனி நான் ஸம்பாதிக்க வேண்டியது வேறு என்ன இருக்கின்றது? கருத்துரை: நாகமலையில் வாழும் கந்தஸ்வாமியே! உன் திருப்புகழை யான் கேட்டறிந்த மாத்ரத்தில் நினது கோழிக் கொடி என் ஆத்மாவை அபயங் கொடுத்து ஆண்டு கொண்டது; உன் வேலாயுதம் பிறப்புக்கிடமான பேராசையை ஒழித்துவிட்டது; உன் தேவிமாரது திருவடியும் கிடைத்தது; இனி, யான் தேட வேண்

அரும்பதவுரைக் குறிப்புக்கள்

அநுதயை-தயையோடு கூடியவள். அதலம் முதல் எழுதலம்-அதல, விதல, ஸுதல, தராதல, ரஸாதல, மஹாதல, பாதலம் என்னும் ஏழு உலகங்கள். அடைய - முற்ற முடிய. அருளிய-பெற்றருளிய. பழையவள் - புராதநமானவள். வஸுவ பசுபதி-அக்நி ஸ்வரூபியாகிய சிவபிரான். ஒருமொழி மவுநம்-மவுநோபதேசம். இமையவர் மரபில் வநிதை-தேவர்குலப் பெண்ணும் தெய்வயானை. வநசரர் புதல்வி - வேடர்மகள்; வள்ளி. இயல் அறி புலமை-இயற்றமிழ் தெரியும் அறிவு. உபநிட மதுர கவிதை - உபநிஷத் ஸாரமாம் இனிய (ஸம்பந்தர்) தேவாரப் பாட்டு. விதரண கருணை - கொடுக்கும் தயை. வடிவு-நிறம்; உருவம். ஸஹாயம் - உதவி மொழி. நாயகி-வள்ளிநாயகி. நாணம்-வெட்கம். அவ் வஞ்சகம் நாடியெ-அந்த ஏமாற்றும் வித்தையை விரும்பியே. பங்கய பதம் நோவ - தாமரைத் தாள் நொந்து தளர. மார சரம்-மந்மத பாணம். குறவாணர் குறிஞ்சி - குறவர்தம் வள்ளிமலை. மா முநிவன் - சிறந்த சிவ முநிவர். புணர் மான் - புணர்ந்த லக்ஷ்மியாகிய மான். தனி மான் - ஒப்பற்ற மான் போன்ற வள்ளி நாயகி. செண்பக அடவி-சம்பக மரக்காடு. இதண்-பரண். சந்தந அடவி - சந்தந மரக்காடு. நூபுரம் - சிலம்பு. கமலம் - திருவடித் தாமரை. வளை-கைவளை. வேய்-மூங்கில் போன்ற தோள். இந்து வாள் முக வநஜம் - சந்த்ரனையும், தாமரையையும் போன்ற ஒளி பொருந்திய முகம். ம்ருகமதம்-கஸ்தூரி. குங்கும அசல யுகளம்-குங்குமக் குழம்பு பூசப் பெற்ற மலை போன்ற இரண்டு தநபாரங்கள். மதுரித இந்தள அம்ருத வசநம் - இனிமையான இந்தளப் பண்ணுக்குரிய 'நாத்நாமக்ரியை' ராகம் த்வநிக்கும் அம்ருதம் போன்ற மொழி. முறுவல்-புன் சிரிப்பு. அபிராமம்-அழகு. இந்த்ர கோபம்-தம்பலப் பூச்சியைப் போலச் சிவந்த வாயிதழ். மரகத வடிவம் - பச்சை மணிபோல் நிறம். இந்த்ர சாபம் - வான வில் போன்ற நெற்றி அல்லது புருவம். குழை - காது; குண்டலம் பொரும் - மோதும். இந்த்ர நீலம் - நீலோத்பல புஷ்பம் போன்ற கண்கள். மடல் - பனை ஓலை மடல். பீலி-மயில் தோகை. இலை-பச்சை இலை தழை. ஆரினும்-யாவரையும் விட. யவனள்-யவ்வநத்தாள். இதண் -பரண். உற்றிட்டு-பொருந்தி இருந்து. இனம்-கூட்டம். மருள-

தெறிக்கும்-பொடிபடுத்தும். புரிபிழை-செய்த குற்றம். தரிக்கும் - தங்க வைக்கும். சதைக்கும்-நெரித்து அழிக்கும். பணி விதிக்கும் - தொண்டுகளைக் கட்டளையிடும். தகப்பன் ஸ்வாமி-தந்தைக்கும் குரு. கலக்கு-கலக்கம். உண்டாகு பணிவிடை-விதிக்கப்பட்டுள்ள தொண்டு. கணக்கு - இவ்வளவு தானென்ற ஒரு கணக்கு. பரை - பார்வதி. வரர் - ச்ரேஷ்டமான முநிவர்கள். அஸுரர் வாட-அவுணர்கள் வாட்டமடைய. ஸுரர் பாட - தேவர்கள் புகழ்ந்து பாட. எதிர் களம் - போர்க்களம். நிணம்-கொழுப்பு; தசை. பெலம்-வலிமை. கழுது-பேய். கொடி-காக்கை. ஜடிலதர - ஜடையைத் தரித்தவரும், விஷதர - விஷத்தைக் கழுத்தில் தரித்தவரும், பணிதர - பாம்பை (ஆபரணமாகத்) தரித்தவரும், தர பரசுதர - மேலான மழுப் படையைத் தரித்தவரும், சசி தர-சந்த்ரனைத் தரித்தவரும், சுசிதர - சுத்தத் தன்மையைத் தரித்தவரும், வித தமருக மிருக தர - வகைவகையாக ஒலிக்கும் டமருகத்தையும், மானையும் தரித்தவரும், வ(ந்)நி தர - அக்நியைத் தரித்தவரும், சிரதர - ப்ரம்மனின் தலையைத் தரித்தவரும், பாரத் தரணி தர தநுதர - பெரிய பூமியானது (அல்லது பூமியைத்) தாங்கும் மேருமலையாகிற வில்லைத் தரித்தவரும், வெஹுமுக - பல (பாயும்) முகங்களையுடைய, குல தடிநி தர - சிறந்த நதி ஆகிற கங்கையைத் தரித்தவரும் ஆன, சிவ - சிவ பெருமானின், ஸுத-குழந்தையே! குணதர - ஸத்குண ஸம்பந்நனே! பணிசயில - நாககிரியாம் திருச்செங்கோட்டில் இருப்பவனே! விதரண - கொடையாளியே! தருபுர சசிதரு - கற்பக வ்ருக்ஷம் உள்ள அமராவதி நகரத்து இந்த்ராணி வளர்த்தருளிய மயில் போன்ற சாயலுடைய தேவஸேனைக்கு வாழ்வே-கணவனே! சவலை - அறிவு தேய்ந்த புத்தி. வசநம்-சொல். இருவினை-நல்வினை, தீவினை. மலம்-ஆணவம், கந்மம் மாயை. அநுபூதி இனிமை-அநுபவ இன்பம். தனிமை-ஏகாந்தம். இறுதி-முடிவு. அறுதி-தீர்மானம். பெறுதி-பெறப்படுவது; பேறு. இருமை ஒருமையில் பெருமை - சக்தி-சிவம், சிவன்-ஜீவன் ஆகிய இரண்டும் ஒன்றுபடுதலில் உள்ள பெருமையை. அசல குலபதி - மலைக்கூட்டத்தின் தலைவன்; பர்வத ராஜன். விமலைகள் எழுவரும்-ஸப்த கன்னியரும். அருணை-அண்ணா

தொழிந்துபோய். கதி-பரகதி; மோக்ஷம். மதி-புத்தி. ஊதியம்--லாபம்; சம்பளம். இசைவாய்-ஒப்புக்கொள்ள வேண்டும். 121. சருவி-போராடி. வெகுண்டு-கோபித்து. ஸமயம்-மதம்; தெய்வம். பறிதலையர்-தம் தலைமயிர் பறிக்கும் தொழிலுடைய சமணர்கள். சலிகை-செல்வாக்கு. நன்றி-உபகார குணம். வென்றி - வெற்றி. கநம்-சீர்மை. சரவணம் - சரவணப் பொய்கை. பொறை-பொறுமை. தனி-ஒப்பற்ற. விருது துலங்க -வெற்றிச் சின்னங்கள் விளங்க. சிகண்டி-மயில். அண்டர்-தேவர். பதம்-திருவடி. விதரணம்- கொடைப் பெருமை. திறம்-ஸாமர்த்யம். தரம்-தகுதி; மேன்மை. தினைபுனமான்-தினைப்புனத்து மானும் வள்ளிநாயகி. நொந்து-மயங்கி நைந்து. அடிவருடி-கால் பிடித்து. விஜயம்-வெற்றிச் செயல்கள். அன்பில்-அன்புடன். இயல்-பெருமை. கதிரவன் இந்து-ஸூர்ய சந்த்ரர்கள். கடகரி-மதயானை (கஜேந்த்ரன்). மடு-நீர்நிலை. புயல் -மேக வண்ணன். இந்திரை கணவன்-லக்ஷ்மீ காந்தன். அரங்க முகுந்தன் - ஸ்ரீரங்க நாதன். சகடு அற - சகடாஸுரன் அழிய. மோதி-காலால் மோதினவன். மருது-இரண்டு மருத மரங்கள். நலங்க-நொந்து போக. முனிந்திடு-கோபித்து உதைத்த. வரதன்-காஞ்சி வரதராஜன். அலங்கல்-(துளஸி) மாலை. குறள்வடிவன்-வாமநாவதார மூர்த்தி. கடல் மங்க-ஸமுத்ரம் நொந்து வாட. ஓர் அம்பு-(ஒப்பற்ற) ஒரே (ராம) சரம். தொடு-செலுத்தின. மீளி-பராக்ரமசாலி. புரந்தரன் - இந்த்ரன். ஒன்றிய-பொருந்தச் செய்த. பிரமபுரம்-சீகாழி. குஹன் என்பவர் மநதினில்- குஹன் என்று ஜபிப்பவர்களுடைய உள்ளத்தில். பரிவு-அன்பு. ஒன்றி-பொருந்தி. 121-அ. நிதி-செல்வம். நிகர் -ஒளிமிக்க. சந்தத் தமிழ் - சந்த இலக்கணத்தொடு கூடிய தமிழ்ப் பாக்களாம் திருப்புகழ்ப் பாடல்கள். சொரிந்து-பொழிந்து. 122. மொய் தார்-வண்டுகள் மொய்க்கும் பூமாலைகள். வேட்டவன்-விரும்பி அணைந்தவன். முத்தமிழ் -இயல், இசை, நாடகத் தமிழ். வைதார்-வசவு செய்தவர்கள். வெய்ய -கொடிய. வாரணம்-யானை. கைதான் இருபது உடையான்-இருபது கைகள் கொண்ட ராவணேச்வரன். கத்தரிக்க-துண்டிக்க. எய்தான்-ஓர் அம்பை விட்ட ராமன். பயந்த-பெற்றருளிய. இலஞ்ஜியம்-சரவணபவன். இலஞ்ஜி-குளம்; மடு; சர

மயங்க. ஆயுத கவண்-கவண்கயிற்றைக் கையில் ஆயுதமாக. வழி அடிமை - பரம்பரைத் தாஸ்யம். செப்பி - சொல்லி. வீறு உள - பெருமை மிக்க. சக்ரவாளம்-பூமியை வளைந்து சுற்றியுள்ள சக்ரவாளகிரி. விலைப்பட்டு - அடிமையாகி. மேரு வில்-மேருமலையாம் ஏட்டில். எழுத்து இட்ட - எழுதி வைத்த. மதசிகரி..சிறடியே-இப் பகுதிக்குப் பாடல் 106-இன் குறிப்புரை யின் கடைசிப் பகுதியைக் காண்க. அந்தண்மறை...பெருமாளே -இப்பகுதிக்குப் பாடல் 30-இன் பிற்பகுதிக் குறிப்புரையைப் பார்க்க. வெற்பு உறை-மலையில் வாழும். ஜோதி-ஒளி. கார்த் திகை-க்ருத்திகை நக்ஷத்ரப் பெண்கள் அறுவர். வினைப்பகை- இருவினைகளாம் எதிராளிகள். 120. பதவுரை: திசாமுக-நான்கு திக்கு முகங்களையுடைய, வேதன்-ப்ரம்மனும், ஐயன்-அவனது பிதாவாகிய விஷ்ணுவும், பர்ற்கரன்-ஸூர்யனும், திங்கள் -சந்த்ரனும், தங்கள் - தங்கள் தங்கள், அவதி - (ஆயுள்) முடிந்து, சாம் - இறக்கின்ற, உக வேதனை ஈறிலும்-யுகாந் தத்தில் துன்புறும் காலத்திலும், ஈறிலர் - அழியார்கள், சீறும் - கோபித்தொலிக்கின்ற, ★ அம்போதி - ஸமுத்ரத்தின் கண் தோன்றி, சாமுக - சாமுகத்தை (அழிகின்ற முகத்தை) உடையவனும், வேதனை - தேவர்கட்குத் துன்பத்தை விளைக் கின்றவனுமாகிய சூரனை, வென் கண்ட - புறங்காட்டச் செய்த, வேலன்-வேலாயுதத்தை உடைய முருகன் (வாஸம் செய்கின்ற), தினைப்புன - தினைப்புனங்களையும், தந்தி - யானை களின், சாமுக - கூட்டங்களையும், வே தனை - மூங்கில்களையும், நண்ணு - பொருந்தியிருக்கின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, கார்-மேகங்கள் தவழா நின்ற (தவழ்ந்த), வரை - பழமுதிர் சோலை மலையை, (வட பழமுதிர்சோலை என்னும் வள்ளி மலையை), சேர்பவர்-அடைந்து இடைவிடாமல் த்யானிப்பவர். கருத்துரை: ஸமுத்ரத்தின் கண் சூரனை வென்ற வேலாயுதப் பெருமான் உறைந்தருளிய சோலைமலையை (வள்ளிமலையை) அடையவர் ப்ரம்மா, விஷ்ணு, சந்த்ர ஸூர்யர்கள் எல் லோரும் அழியும் யுகாந்த காலத்தினும் துன்பமின்றி நித்யரா யிருப்பார்கள். 120-அ. மநதாலே இறந்திட்டு - மநம் இறந்

★ அம்போதி-கடலில், சா-பேய்போற் பயங்கரமான, முக - (கோர)முகத்தை உடைய, வேதனை-குற்றம் செய்தவனை அல்லது துன்பம் விளைவிப்பவனை சூரனை என்னலுமாம்.

அளவில்-தேவஸேனையைக் கண்ட, அவள் பெயர் கேட்ட அவ்வளவிலேயே. துவளும்-நெஞ்சுருகும். ஏடு அவிழ்-இதழ்விரிந்த. கூதளம்-கூதாளமலர். முடிக்கும்-முடியிற் சூடும். வானவர்-தேவர். மஹவான்-இந்த்ரன். மகவு ஆனது பொருட்டு எனப் பிரித்துக் குழந்தையாய் அவதரித்த காரணத்தால் என்றும் பொருள் கொள்ளலாம். மலர்வாவி-தாமரை பூத்த (சரவணப்) பொய்கை. முகமாயம்-முகமயக்கு; ஆறுமுக விசேஷம். வாரண பதி-இந்த்ரன்; கஜேந்த்ரன்; ஐராவதம். நாரணன்-நாராயணன். மருமான்-மருமகன்; வழித்தோன்றல். அயனைக் கறுவு-ப்ரம்மனைக் கோபித்த. பரவில்-துதித்தால். சரண வாரிஜம்-திருவடித் தாமரை. மாடம்-உபரிகை உள்ள வீடு. த்ரிகூட கிரி - குற்றுலமலை. கதிர் செய் மாநகரி-சிறந்த கதிர்காம நகர். கடவுள் ஆயம்-தேவர் கூட்டம். வாள் எயிறு அது உற்ற-வாள் போலக் கூர்மையான அல்லது ஒளிமிக்க பற்களைக் கொண்ட. பகுவாய்-அகன்றவாய். உதறும்-ஆட்டி அலைக்கும். வாசி-குதிரையாம் மயில். வாளகிரி - சக்ரவாள மலை. தாளில்-காலால். வாகை-வெற்றி. குக்குட பதாகை-சேவற்கொடி. மாசு இல்-குற்றமற்ற. வானில் - ஆகாசத்தில். உபாயக்காரன்- (தந்த்ரம்) சூழ்ச்சி வல்லவன். வாதனை - பழைய வாஸனை; துன்பம். மஹா அடவி-பெரிய காடு. ஸஹாயக்காரன் - உதவி செய்தவன். மீனவன் - பாண்டியன்; உக்ரப் பெருவழுதி. மீனவன்-ஸோம ஸுந்தர பாண்டியன் எனலுமாம். புலவோர் - 49 ஸங்கப் புலவர்கள். பலகை - ஸங்கப் பலகை. தமிழ் த்ரயம் - முத்தமிழ். வேரி-வாஸனை. மது - தேன். மத்தம்-ஊமத்தம் பூ. மதி-சந்த்ரன். தாதகி - ஆத்தி. கடுக்கை-கொன்றை. வேணி-ஜடை; ஆறு. கேள்வி - கலை அறிவு. வேலை-கடல். துகள்- தூளி. மலை-ஏழு கிரிகள். உருவ-ஊடுருவ. வேலை -வேலாயுதத்தை. உற-பொருந்த. தனி வேலைக்காரன்-ஒப்பில்லாத தொழில் ஸாமர்த்யக்காரன். மீன்-நக்ஷத்ரம். க்ருத்திகை-கார்த்திகைப் பெண்கள் அறுவர். வீடு-மோக்ஷ வீடு. உதாரம்-தாராள குணம். மேனை - பர்வத ராஜன் மனைவி. அரிவை-மாது. பேரன் - பெயரன் (Grandson). மதித்த-யாரும் மதிக்கும். சூறைக்காரன்-சுழற்காற்றுப் போல அழிப்பவன். வேதியர்-மறையோர். வெறுக்கை-செல்வ நிதி. அநாதி-ஆதியற்றவன்,

வண தடாகம். ஜம்-உண்டானவன். இலஞ்ஜிஜம் (சரவணைத் புவன்) இலஞ்ஜியம் என்றாயிற்று. 123. ஆன பயபக்தி - பயபக்தியான. நிகழ்-தவ ஒழுக்கமாகக் கொண்டு வழிபடும். பக்தஜநம் - அடியார் கூட்டம். வாரம் - அன்பு. ஆர - நிரம்ப. மதுரித்த - இனித்த. தமையனார் - அண்ணனும் விநாயகர். உணக்கை - (பழத்தை) உண்ணும் ஸாமர்த்யப் போட்டி. பரி-வருத்தம். தீமை-குற்றம். ஆகமம்-வேத சாஸ்த் ரங்கள் (தர்ம நூல்கள்). அகில-எல்லா. நொடிப்பு-கைந்நொடி. அதிவேகம்-மிகவிரைவு. மதிவேகம்-(புத்தி) மநோவேகம் என லுமாம். ஆணவம்-அஹம்பாவம். ஆவி-உயிர்; ஜீவன். அநுபூதி- அநுபவ ஞாநம். பார்வை-கடைக்கண் பார்வை. ஆடலைவு- அலைச்சல். பட்ட-அநுபவித்த. அமரர் நாடு - பொன்னுலகு. புரக்கும்-காப்பாற்றும். அடல்-வெற்றி. ஆடகம்-பொன். விசித்ர கநம்-விநோத வேலைப்பாடும் பெருமையும் வாய்ந்த. அருணை புரி - திருவண்ணாமலை. ஆயிர முகத்து நதி - கங்கை. அஹத் தடிமை-உள்ளத்தே மெய்யடிமை. வித்தகன்-ஞாந மூர்த்தி. ஆறிரு 6 × 2 = 12. யான், எனது-அகங்கார, மமகாரங்கள். சருவும்-போரிடும். ஈந ஸமயம்-இழிந்த மதம். யாதும்-கொஞ் சமும். ஏழு பிறவி-ஏழுவகைப் பிறப்புக்கள். கடலை ஏற-கடல் களினின்று கரை ஏற. ஓடக்காரன்-ஓடத்தைச் செலுத்துபவன். ஏரகம்-ஸ்வாமிமலை. இடைக்கழி-திருவிடைக்கழி. சிராமலை- திருச்சிராப்பள்ளி. ஏர்-அழகு, செருத்தணி - திருத்தணிகை. வாஸம் - குடியிருப்பு. ஏழையின் - ஏழையாகிய என்னுடைய. இரட்டை வினை-நல்வினை, தீவினை என்னும் இருவினை. இராமல் -இல்லாமல். நியாயக்காரன்-நீதிமான். யாமளை-ஒரு வகைப் பச்சை நிறத்தை யுடையவள். மணக்கும் முக-நறுமணம் இடம் பெற்றுள்ள. சாமளை - பச்சை நிறத்தி. மணிக்குயில் - அழகிய குயில் போன்றவள். யாய்-தாய். ஏதம் அற-துன்பம் அற்றுப் போக. நிச்சயம்-திடமான. மநோலய விளக்கொளி- மநம் ஒடுங்கிச் சும்மா இருக்கும் நிலையாம் ஒளி மயமான ஜோதி. யாகமுநிவர்-வேள்வி செய்யும் முநிவர்கள்; ஈண்டு முநிவர் என்பது நாரதரையும் குறிக்கலாம். ஈர் இரு மருப்பு - நாலு தந்தங்கள். சோனை மத வெற்பு-விடாமழை போல் மதநீர் பொழியும் மலை போன்ற ஐராவதம். இவரும்-ஏறும். யானை

தவருள் ஒரு கூட்டத்தார். யக்ஷர்-குபேரன் முதலான இயக்கர்கள். கணம்-கூட்டம். உபநிடம்-உபநிஷதம். வானவன்-தேவர் கோன். ஒருவன் - ஒப்பில்லாத தனிப் பொருள். உபயம் - இரண்டு. அக்நி கரம்-தீக் கடவுளின் கை. ப்ரபாகரன்-பேரொளியோன்; ஸூர்யன். அதி மதுரம்-மிக்க இனிமை. சித்ரகவி-சித்ரத்துக்குள் அடைபடும்படியாகப் பாடப் பெறும் மிறைக் கவி வகை. நிருபன்-அரசன். தமிழ்த்ரய விநோதம்-விசித்ரமான முத்தமிழ். கலாதரன்-ஸகல கலா வல்லபன். எள்+பயறு= எட்பயறு. அமுது செயும்-உண்ணும். விக்ந பதி-விக்ந ராஜன். யானை-கணபதி. அவுணர்-அஸுரர். மகரஜல வட்டம்-மகரமீன்களைக் கொண்டதும், நீர் நிறைந்துள்ளதும், (பூமியைச்) சூழ்ந்துள்ளதும் ஆன கடல். அபயம்இட-அடைக்கலம் எனக் கூச்சலிட. வில் படை-ஆயுதமாம் வில்; ஒளி பொருந்திய ஆயுதமாம் வேல் எனினுமாம். ஆயத்தம்-தயார். அருணை-அருணாசலம். உரககிரி-நாகமலை; திருச்செங்கோடு. செருத்தணி-தணிகை. கற்பக அடவி-கற்பகக் காடாகிய அமராவதி. அறிவும் அறிதத்துவம்-அறிவையும் அறிந்து கொள்ளும் உண்மை. அபரிமித-வித்தை-கணக்கற்ற கலைகள். இமைப்பொழுது-ஒரு நொடிப் பொழுது. வேதியன்-மறையோன். முடிப்பு-முடிவு. தேசிகன்-குரு மூர்த்தி. அமலன்-குற்றமற்றவன். அதிகுணன் - மேலான குணத்தவன். நிர்க்குணன்-குணமிலி. அகில புவநம்-ஸகல உலகமும். அமரஸேனை-தேவர் ஸேனை. அநுபவன்-எல்லா நுகர்ச்சிகட்கும் மூலகாரணன். அநுகுணன்-தகுதியுள்ளவன்; ஒத்துவருபவன். அக்ஷரன்-அழிவில்லாதவன்; அகாராதி க்ஷகாராந்தமான அக்ஷரங்களுக்கு மூலப் பொருளாய் இருப்பவன். மநம் ஒழிக்கும் அநுபூதி-மநோ நாச அநுபவம். ஸுக உதயன் - இன்பத்தைத் தோற்றுவிப்பவன். இதம் அஹிதம்-இன்ப துன்பங்கள். இரவு பகல் அற்ற இடம்-ஸகல கேவலங்கள் தாண்டிய நிலை; காலதத்வம் கடந்த ஸ்தாநம்-முத்தி வீடு. எனது அற-யான், எனது என்ற செருக்கு அற்றுப் போக. இருக்கைபுரி-இருக்க வைக்கும். யோகப் புராதநன்-பழைமையான சிவயோகப் பொருள். மநவில்-மநத்தில். பரமஸுக மவுநம்-பேரின்ப மோநம் என்னும். கட்கம்-வாள். துணிக்க-துண்டிக்க. விதியா-விதித்து; ஏற்படுத்தி. பூபதி - அரசன் எழுமை-ஏழு பிறவி. அப்படி-அத்தகைய ஆச்சர்யமான முறையில். ப்ரஸாதித்த-ப்ரஸாதமாகத் தந்தருளிய.

பரவஸ்து - பரம்பொருள். விசாகன்-விசாக நக்ஷத்ரத்திற்கு உரியவன். விகற்பம்-வேறுபாடு. வெஹுரூபம்-பல வடிவம். முநி-நாரத முநிவர். வியாகுல மநம்- கவலைப்பட்டுக் கலங்கின மநஸ். விற்காரன்-வில் தாங்கிய வேடன். இதண்-பரண். ஓவியம்-சித்ரம்; உயிரோவியம். மேதகு - பெருமை மிக்க. திருவேளைக்காரன்-அழகான லீலைகள் புரிந்து பொழுதுபோக்குபவன். 124. சிகண்டி-மயில். கோலம்-அழகு. குருநாதன்-குருமூர்த்தியாகிய முருகவேள். சீலம்-உபதேச ஒழுக்கம். மெள்ள-மெதுவாக. காலத்தை வென்று இருப்பார்-கால தத்வத்தைக் கடந்திருப்பார்கள். மரிப்பார்-அழிந்து போவார்கள். வெறும் கர்மிகள்-கேவலம் கர்மாக்களையே புரிந்து கொண்டிருப்பவர்கள். 125. உதர கமலம்-தாமரை உந்தி. புவந த்ரயம்-மூவுலகு. உகமுடிவு யுகாந்த காலம். உமிழ்திரை - கொப்பளிக்கும் அலை. வெஹுமுக - பலமுகமாய்ப் பரந்தோடும். குலம்-சிறப்பு. உதக மகள்-நீர்மகள்; கங்கை. பக்கல்-இடத்தில். ஷடாநநன்-ஆறுமுகன். உவகை - மகிழ்ச்சி. அவண் - அவ்விடத்தில். ஓர்ஓர் புத்ரன்-ஒவ்வொரு மகன். உதய ரவி வர்க்கம்-உதய ஸூர்யர்களின் கூட்டம். நிகர்-போன்ற. வ(ன்)ன-அழகியநிறம் வாய்ந்த. கிரணம்-ஒளி. விர்த்த விதம்-ஒன்றோடொன்று முரண் பட்ட விதவிதமான வண்ணத் தோகைகள். சதபத்ரம்-மயில். நவ பீடம் - புதிய ஆஸநம். உதய ரவி - உதிக்கின்ற செங்கதிரின், வர்க்கம்-இனத்தை, நிகர்வன-போன்றனவும், கிரண-ஒளியும், விர்த்த - வட்டவடிவமும், இதம்-(ம்ருதுத் தன்மையால்) இன்பமும், உடைய-உடையனவுமாகிய, சதபத்ர-செந்தாமரைகள் ஆறும், நவ-ஸ்நேஹமும், புதுமையும் வாய்ந்த, பீடத்து-ஆஸநங்களில் வாழ்பவனும்-(முன்பு சரவணப் பொய்கையில்) வாழ்ந்திருந்தவனும் எனவும் பொருள் காணலாம். கடவுள்மடு-தெய்விகமான தடாகம். அடர்-அடர்ந்து சண்டையிட்ட. வஜ்ரதரன் - குலிசாயுதம் ஏந்திய இந்த்ரன். மத வெற்பு - மதங்கொண்ட மலையாம் ஐராவத யானை. உலைய-அழிய. வேதித்த-நலிவித்த. வீரியன்-வீரன். உரைபெற-புகழ் விளங்க. அருணைநகரின் ஒரு பக்தன்-அருணகிரி நாதர். இடும்-சூட்டும். மதாணி-பதக்கம். க்ருபாகரன்-கருணைக்கு இருப்பிடமானவன். உரகர்-நாகர். ஸித்தர்-ஸித்தி வல்லவர்கள். கருடர்-பதினெண் கணத்

கோடுகளையுடைய அல்லது வரிந்து கட்டப்பட்ட வில். புனம்-தினைப் புனம். இதண்-பரண். வேடிச்சி காவலன்-வள்ளிக்கு வேளைக்காரனாயிருந்து காவல் காத்த நாயகன். 126. பைம் புனம்-பசுந் தினைப்புனம். சிறு+ஏனல்=சிற்றேனல்=சிறிய தினை. பேதை-பேதைப் பருவத்து வள்ளி. கொங்கை-தந பாரம். மெல்ல மெல்ல-கொஞ்சங் கொஞ்சமாக. உள்ள-த்யானிக்க. அரும்பும்-உண்டாகும். தனி-ஒப்பற்ற. பரம ஆநந்தம்-பேரின்பம். அன்றே-அன்றைக்கே; அப்போதே. செந் தேன்-நல்ல தேன். அற-முற்றிலும். கைத்தது-கசந்தது. 127. திருத்திய புனத்து இடை - சுத்தமான தினைப் புனத்தின் நடுவில். வநத் தழை உடுத்து-காட்டுப் பச்சிலை தழைகளை ஆடையாக அணிந்து. வரைப்புயன் - மலைத்தோளன். வினைப்பகை செகுப்பவன் - இருவினைப் பகைமையை அழிப்பவன். அறுமுகப் பொருள்-ஆறுமுகமான பொருள்; ஷண்முக வஸ்து. ஜகத்ரயம் முகிழ்த்த-மூவுலகங்களையும் உண்டாக்கிய. உதரம் - வயிறு. உற்பல கிரி-நீலோற்பல மலை. தரித்து-தாங்கி. திருப்புகழ்-தெய்வத் தைப் புகழ்ந்து பாடும் துதிப் பாட்டு. திருக்கையில் வழக்கம்-வலது திருக்கையால் கொடுப்பவை; ப்ரஸாதம்.

## திரு எழு கூற்றிருக்கை (பக்கம் 75) பொழிப்புரை:

ஏக ஸ்வரூபமாகிய ப்ரணவ மென்னும் ப்ரம்ம வஸ்துவின் ஒரே வகையான உதயத்தில், நாதம், பிந்து என்னும் இரண்டின் லக்ஷணமும் வாய்த்து, சக்தியும் சிவமும் ஒரே வடிவமாகப் பொருந்தி அந்தப் பராசக்தி, சிவன் என்னும் இருவரிடமிருந்தும் அவதரித்து மூப்பு இல்லாமல், என்றும் இளமையோடு இருக்கின்றாய்; 'இருபிறப்பாளர்' என்னும் மறையோர் மரபில் (திருஞாந ஸம்பந்தமூர்த்தி நாயனாராக) அவதரித்து ஒப்பில்லாதவன் ஆனாய்; ப்ரணவார்த்தத்தை ஆராய்ந்தறியாத தன்மையால் பெருமையோடு முன்னொரு கால் ப்ரம்மாவின் தலைக் குடுமியை ஒரு நொடிப் பொழுதில் குட்டி ஆட்டி அலைக்கழித்து, இந்த்ரன், விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் வந்து (உன்) இரு திருவடிகளை வணங்கிக் கேட்டுக் கொள்ள, அந்தப் ப்ரம்மாவை நீ இட்ட ஒரு சிறையினின்றும் விடுதலை செய்தாய்; ஒரே இமைப் பொழுதில் பெரும் சிறகுகளைக் கொண்ட மயிலின் ஏறிக் கடலை உடையாக அணிந்த பூமி பயப்பட நீ வலம்

இமையவர்-தேவர். முடித்தொகை - கூட்டமான கிரீடங்கள். வநசரர் பொருப்பு-வேடர் மலையாம் வள்ளி மலை. பாதச் சரோருஹம்-தாமரைத் தாள். எழுதரிய-எழுதமுடியாத (அழகு வாய்ந்த). கற்பதரு-கற்பக வ்ருக்ஷம். தத்தை-கிளி போன்ற தெய்வ யானை. கடகம்-வீர வளையல். வஜ்ர-வைரம் பாய்ந்த திண்ணிய. அதிபார-மிகப் பருத்த. புய அசலம்-தோள்மலை. எதிர் இல் புலவர்-ஒப்பற்ற புலவர் ஏரும் நக்கீரர். உதவு... ராவுத்தன் எனக் கூட்டுக. வெளிமுகடு - ஆகாச உச்சி. இவுளிமுகி-குதிரை முகப் பெண் பூதம்; கல்கிமுகி. ராவுத்தன்-குதிரைச் சேவகன்; போர் வீரன். எழு பரி ரதம்-ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட தேரினன். இரவி-ஸூர்யன். எழுநிலம்-எழுந்துலவும் அல்லது ஏழு பூமிகள். அக் கரிகள்-அந்த அஷ்டதிக் கஜங்கள். அ-8. பதாகை-கொடி. இணை-ஒப்பு. நிர்ப்பயன்-அபயன்: பயமில்லான். நிஷ்களன்-உருவில்லாதவன். விப்ரகுலம்-அந்தணர் மரபு. யாகச் சபாபதி-யாகங்களுக்கு ஸபாநாயகன்; தலைவன். மதுகை-வலிமை. சக்ரகிரி-சக்ரவாள மலை. நெளிய-வளைய. வளைய வரும்-வலம் வந்த. விக்ரம-பராக்ரமம் வாய்ந்த. கலாபம்-தோகை. சிகாவலன்-மயில் வாஹநன். நிகளம் - விலங்கு. மறுகு-மநக் கலக்கம் கொண்ட. வநஜமுநி-தாமரைக் கடவுள்; ப்ரம்மா. காவலன்-தலைவன். குருகு-க்ரவுஞ்ச பக்ஷி. கந வட சிகரி - பொன் மயமான வடக்கு மலையாம் க்ரவுஞ்ச கிரி. தொட்ட-ப்ரயோஹித்த. சேவகன்-வீரன். வரதன்-வரந்தருபவன். நிருதர்-அஸுரர். நிஷ்டுரன்-கொடுமை செய்தவன். மநுபவந ஸித்தன்-மந்த்ர வீட்டை இருப்பிடமாகக் கொண்ட ஸித்த மூர்த்தி. மநோதுக்க பேதநன் - மநத் துன்பத்தை மாற்றுபவன். வயிர் - மூங்கில் (புல்லாங் குழல்); ஊதுகொம்பு. மழை-மேகம். குறிஞ்சி-மலை நில ஊர்கள். குரவை-குரவைக் கூத்து. குரவையுள் + திரியும் = குரவையுட்டிரியும். மணி - ரத்நம். பணி-ஆபரணம். அணிதழை-அழகிய இலை தழை. வநசரர் கொடிச்சி-வேடர் கொடி; வள்ளி. யாசிக்கும்-'என்னை மணந்துகொள்' என்று வேண்டும். யாசகன்-பிக்ஷாடநன். மதநன்-மந்மதன். புஷ்பசர படலம்-மலர் அம்புக் கூட்டம். உடல் - உடம்பு; உடலுதல்-(போர் புரிதல்). மடல்-பனை ஏட்டில் எழுதும் படம். அதிமோஹம்-மிக்க காதல். மதிமோகர்-காமபுத்தி எனலுமாம். தபோ தநன்-தவச் செல்வன். வரி சிலை-

# அநுபந்தம் I

## ஸ்வாமிகள் விரும்பிப் பாடிய சில முக்கியத் திருப்புகழ்களும் பிறவும்

### விநாயகர் துதி

### 129. திருவடி பெற

*தனனதன தான தனனதன தான*
*தனனதன தான தன்தான*

விடம்அடைசு வேலை அமரர்படை சூலம்
விஜயன்விடு பாணம் எனவேதான்—
விழியும்அதி பார விதமும்உடை மாதர்
வினையின்விளை வேதும் அறியாதே;
கடிஉலவு பாயல் பகல்இரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய—
கயவன்அறி வீனன் இவனும்உயர் நீடு
கழல்இணைகள் சேர அருள்வாயே;
இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை அறியாதே—
இதயமிக வாடி உடையபிளை நாத
கணபதிஎன் நாமம் முறைகூற;
அடையலவர் ஆவி வெருவஅடி கூர
அசலும்அறி யாமல் அவர்ஓட—
அகல்வதென டாசொல் எனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே.

வந்தாய்; நான்கு தந்தங்களையும், மூன்று மதங்களையும், இரண்டு பெரிய காதுகளையும், ஒரு துதிக்கையையும் உடைய மலை போன்ற ஐராவத யானை வாஹநனும் தேவேந்த்ரனின் பெண் தெய்வயானையை விரும்பி மணந்து கொண்டாய்; ஒரே வகையான திருவுருவில் (தேவ சரீரத்தில்) கால்கள் பூதத்தைப் போலவும், உடம்பு மானுடரைப் போலவும் இரண்டு வகையாகக் கொண்டவரும், மூன்று மதங்களைப் பெற்றிருந்த யானைக்கு (யானை உருவம் எடுப்பதற்குக்) காலத்தால் மூத்தவனாகி (இரு மதத்துடன்) இருந்தவரும், தொங்கும் வாயைக் கொண்ட திருமுகத்தவரும், ஐந்து கைகள் வாய்ந்த தெய்வமும், அறுகம் புல்லை அணிந்து கொண்டவரும் ஆன விநாயகருக்கு இளைய ஸஹோதரனாக இருக்கின்றாய்; பஞ்சாக்ஷரத்தால் சதுர் வேதங்களும், நமக்கு அறிவிக்கின்ற தெய்வமாம் த்ரிநேத்ர தாரியாம் ஜோதியும், தலைவரும், நல் வினை தீவினை இரண்டையும் ஒழிக்கும் மருந்தும் ஆன பரம சிவனுக்கு ஒப்பற்ற குருமூர்த்தி ஆனாய்; முன்னொரு நாள் பார்வதி தேவியின் இரண்டு அல்லது பெருமை மிக்க திருமுலைப்பாலையும் குடித்து, முத்தமிழ் வல்லுநனாய் நான்கு வகைக் கவிகளைப் பாடுவதில் கவிராஜ சிங்கமாய்ப் பஞ்ச தந்மாத்ரைகளையும் அடக்கி ஆள்வதற்கு உரியவனாய் ''ஷண்முகனே இவன்'' என்று யாவரும் வியக்க, யாராலும் எழுதுவதற்கு முடியாத பேரழகுடன் சீகாழித் தலத்தில் (திருஞாந ஸம்பந்த மூர்த்தியாக) அவதாரம் செய்தாய்; ஆறு (கார்த்திகை) நக்ஷத்ரப் பெண்களால் பெற்றெடுக்கப் பெற்றாய்; பஞ்ச தருக்களையுடைய கற்பக நாட்டுக்கு அரசனே! (நான்மறைத் தோற்றத்து) நாலு வேதங்களுக்கும் மூலகாரணமான, (உ-) சிவ சக்தியே! சூலத்தைப் போல மூன்று கிளைப் பிரிவுகளை உடைய சிவந்த உச்சிக் கொண்டையைக் கொண்ட க்ரவுஞ்ச பக்ஷியைப் போல உருவில் விளங்கும் அழகிய மலையாம் க்ரவுஞ்ச கிரி இரண்டு கூறுகும்படி ஒப்பற்ற ஒற்றை வேலாயுதத்தை அதன் மீது ஏவினாய்; காவேரி நதியின் வடக்குக் கரையில் இருக்கும் ''குருமலை'' என்னும் ஸ்வாமி மலையில் வீற்றிருந்து (உன்) ஷடக்ஷரத்தை ஜபிக்கும் வேதியர்கள் (உன்) திருவடிகளை வணங்கத் 'திருவேரகத்துத் தெய்வம்' என்ற பெயருடன் விளங்கி வருகின்றாய்.

(அரும்பதவுரைக் குறிப்புக்கள் முற்றும்.)

# 1. ஆறுபடை வீடுகள்

## 1. திருப்பரங்குன்றம்

### 131. அருள்பெற

தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த தனதான

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில்வந்து தித்துக் குழந்தை வடிவாகிக்—
கழுவிஅங்கெ டுத்துச் சுரந்த
முலைஅருந்து விக்கக் கிடந்து
கதறிஅங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி;
அரைவடங்கள் கட்டிச் சதங்கை
இடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
அவைஅணிந்து முற்றிக் கிளர்ந்து வயதேறி—
அரியபெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணிஉழன்று சுற்றித் திரிந்த
தமையும்உன் க்ருபைச் சித்தம் என்று பெறுவேனோ;
இரவிஇந்த்ரன் வெற்றிக் குரங்கின்
அரசர்என்றும் ஒப்பற்ற உந்தி
இறைவன்எண்கி னக்கர்த்தன் என்றும் நெடுநீலன்—
எரியதென்றும் ருத்ரற் சிறந்த
அநுமன்என்றும் ஒப்பற்ற அண்டர்
எவரும்இந்த வர்க்கத்தில் வந்து புனமேவ;
அரியதன்ப டைக்கர்த்தர் என்று
அஸுரர்தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே—
அயனையும்பு டைத்துச் சினந்து
உலகமும்ப டைத்துப் பரிந்து
அருள்பரங்கி ரிக்குட் சிறந்த பெருமாளே.

## 130. காத்தருள

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான

*முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சக்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனஓதும்—
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்;
பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்—
பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்!
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வதும் ஒருநாளே;
தித்தித்தெய ஒத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்க நடிக்கக் கழுகொடு கழுதாடத்—
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனஓதக்;
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடிஎன முதுகூகை—
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி இட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமானே.

---

*முருகவேள் அடி எடுத்துக் கொடுக்க, அருணகிரியார் முதல் முதலில் பாடிய பாடல் இது.

பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டைஎன் பங்கம்அணி பவர்சேயே—
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பிஎனும் வயலூரா;
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை—
திங்களுஞ் செங்கதிரும் மங்குலுந் தங்கும்உயர்
தென்பரங் குன்றில் உறை பெருமாளே.

## 2. திருச்செந்தூர்

### 134. ஈந்து உய்ய

தனனதன தனனதன தந்தத் தந்தத்
தனனதன தனனதன தந்தத் தந்தத்
தனனதன தனனதன தந்தத் தந்தத் தனதான

அமுதுததி விடம்உமிழு செங்கட் டிங்கட்
பகவின்ஒளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையும்உடை யவன்அரவ தண்டச் சண்டச் சமனோலை-
அதுவருகும் அளவில்உயிர் அங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு தம்பட் டம்பற்
கரையஉற வினர்அலற உந்திச் சந்தித் தெருவூடே;
எமதுபொருள் எனுமருளை இன்றிக் குன்றிப்
பிளவளவு தினைஅளவு பங்கிட் டுண்கைக்
கிளையுமுது வசைதவிர இன்றைக் கன்றைக்
கெனநாடா(து)—
இடுககடி தெனும்உணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனஅகலும் நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ;
குமுதபதி வகிர்அமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலஜடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாடக்,

## 132. திருவடித் தொண்டு செய

தனத்தத் தந்தனந் தனத்தத் தந்தனந்
தனத்தத் தந்தனந் தனதான

தடக்கைப் பங்கயம் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சம்என் றுலகோரைத்—
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படும்
தளர்ச்சிப் பம்பரம் தனைஊசற்;
கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடும்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்—
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே;
படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்—
பணித்துத் தம்பயம் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடும் தனிவேலா;
குடக்குத் தென்பரம பொருப்பிற் றங்கும்அம்
குலத்திற் கங்கைதன் சிறியோனே—
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரம்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

## 133. திருவடி பெற

தந்தனந் தந்ததன தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன தனதான

மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்—
மண்டிடுந் தொண்டைஅமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்;
ஒன்றஅம் பொன்றுவிழி கன்றஅங் கங்குழைய
உந்தினின் றின்றமடு விழுவேனை—
உன்சிலம் புங்கனக தண்டையும் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்;

மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்—
வனமழியு மங்கை மாதர்களின்
நிலைதனைஉ ணர்ந்து தாளில்உறு
வழிஅடிமை அன்பு கூருமது சிந்தியேனோ;
இதழ்பொதிஅ விழ்ந்த தாமரையின்
மணஅறைபு குந்த நான்முகனும்
எறிதிரைஅ லம்பு பால்உததி நஞ்சராமேல்—
இருவிழிது யின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர்வ ணங்கு வாஸவனும் நின்றுதாழும்;
முதல்வ!சுக மைந்த பீடிகையில்
அகிலஜக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுதம் உண்டவேளே—
முளைமுருகு சங்கு வீசிஅலை
முடுகி மைத வழ்ந்த வாய்பெருகி
முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே

## 137. வாழ்வு உற

தானன தானன தானன தானன
தானன தானன தனதானா

ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணா—
ஈனனை வீணனை ஏடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்;
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மை இலாதனை இகழாதே—
மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவதும் ஒருநாளே;

குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழல்அதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத்
தொகுதீதோ;

திமிதமென முழஒலிமு ழங்கச் செங்கைத்
தமருகம ததிர்ஜதியொ டன்பர்க் கின்பத்
திறம்உதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா!
திரளுமணி தரளம்உயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரஜல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே.

## 135. அன்பு பெற

தனனதன தனன தந்தத் தனதான

இயல்இசையில் உசித வஞ்சிக் கயர்வாகி—
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே;
உயர்கருணை புரியும் இன்பக் கடல்மூழ்கி—
உனைஎனதுள் அறியும் அன்பைத் தருவாயே;
மயில்தகர்கல் இடையர் அந்தத் தினைகாவல்—
வனஜகுற மகளை வந்தித் தணைவோனே;
கயிலைமலை அனைய செந்திற் பதிவாழ்வே—
கரிமுகவன் இளைய கந்தப் பெருமாளே.

## 136. அன்பு பெருக

தனனதன தந்த தானதன
தனனதன தந்த தானதன
தனனதன தந்த தானதன தந்ததான

உததிஅறல் மொண்டு சூல்கொள்கரு
முகில்எனஇ ருண்ட நீலமிக
ஒளிதிகழு மன்றல் ஓதிநரை பஞ்சுபோலாய்—
உதிரம்எழு துங்க வேல்விழி
மிடைகடைஒ துங்கு பீளைகளும்
உடைதயிர்பி திர்ந்ததோ இதென வெம்புலாலாய்;

மமவி நாயகன் நஞ்சுமிழ் கஞ்சுகி
அணிக ஜானன விம்பன்ஓர் அம்புலி
மவுலி யான்உறு சிந்தை உகந்தருள் இளையோனே—
வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாது நெருங்கிய மங்கல
மஹிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

## 139. வேசையர் நட்பு அற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

களபம் ஒழுகிய புளகித முலையினர்
கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடுங்—
கலகம் இடுகயல் எறிகுழை விரகியர்
பொருளில் இளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினில் எவரையும் நகையாடிப்;
பிளவு பெறில்அதில் அளவள வொழுகியர்
நடையில் உடையினில் அழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறில் அமளியில் இதமொடு
குழைவோடே—
பிணமும் அணைபவர் வெறிதரு புனல்உணும்
அவச வனிதையர் முடுகொடும் அணைபவர்
பெருமை உடையவர் உறவினை விட அருள் புரிவாயே;
அலையில் உறைபுலி பெறுமக வயில்தரு
பசுவின் நிரைமுலை அமுதுண நிரைமகள்
வசுவ ஞெடுபுலி முலைஉண மலையுடன் உருகாநீள்—
அடவி தனில்உள உலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளிஉயர் பறவைகள் நிலம்வர விரல்சேர்ஏழ்;

நாவலர் பாடிய நூல்இசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை—
நாடியெ கானிடை கூடிய ஸேவக!
நாயக! மாமயில் உடையோனே;
தேவிம நோன்மணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே—
சேண்உயர் சோலையின் நீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே.

## 138. திருவடி பெற

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான

ஆமல மாதுடன் இந்திரை யும்சரி
சொல ஒணுதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையில் அங்கையில் இருபோதேய்—
களவு நூல்தெரி வஞ்சனை அஞ்சன
விழியில் மோஹித கந்தஸு கம்தரு
கரிய ஓதியில் இந்துமு கந்தனில் மருளாதே;
அமலம் ஆகிய சிந்தை அடைந்தகல்
தொலைவி லாத அறம் பொருள் இன்பமும்
அடைய ஓதி உணர்ந்துத ணந்தபின் அருள்தானே—
அறியு மாறுபெ றும்படி அன்பினின்
இனிய நாதசி லம்புபு லம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்;
குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை அம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி எமதாயி—
குறைவி லாள்உமை மந்தரி அந்தரி
வெகுவி தாகம ஸுந்தரி தந்தருள்
குமர! மூஷிக முந்திய ஐங்கர கணராயன்;

கொங்கையில் நீராவி மேல்வளர் செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையில் ஆதார சோபையில் மருளாதே ;
உம்பர்கள் ஸ்வாமீ நமோநம எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்—
உன்புக ழேபாடி நான்இனி அன்புடன் ஆசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே ;

பம்பர மேபோல ஆடிய சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி—
பங்கமி லாநீலி மோடிப யங்கரி மாகாளி யோகினி
பண்டுஸு ராபான சூரனொ டெதிர்போர்கண்(டு)
"எம்புதல் வா!வாழி வாழி "எ னும்படி வீரான வேல்தர
என்றும்உ ளானே!ம னோகர! வயலூரா —
இன்சொல்விசாகா க்ருபாகர செந்திலில் வாழ்வாகியேஅடி
யென்றனை ஈடேற வாழ்வருள் பெருமாளே.

## 142. காலன் வரும்போது காட்சி பெற

தந்த தனனதன தந்த தனனதன
தந்த தனனதன தனதான

சிந்த பசிதனைஅ றிந்து முலைஅமுது
தந்து முதுகுதட வியதாயார்—
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகர்உயிர் எனவேசார் ;
மைந்தர் மனைவியர் கடும்பு கடனுதவும்
அந்த வரிசைமொழி பகர்கேடா—
வந்து தலைநவிர்அ விழ்ந்து தரைபுகம
யங்க ஒருமகிட மிசைஏறி ;
அந்த கனும்எனைஅ டர்ந்து வருகையினில்
அஞ்சல் எனவலிய மயில்மேல்நீ—
அந்த மறலியொ டுகந்த மனிதன்நம
தன்பன் எனமொழிய வருவாயே ;

தொளைகள் விடுகழை விரல்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி உடையவன் நெடியவன் மனமகிழ் மருகோனே-
துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளர்அறு முககுக
துறையில் அலைவாறி திருநகர் உறைதரு பெருமாளே.

## 140. காலன் வருமுன் காட்சி பெற

தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந் தனதான

காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலின்ஆர் தந்துடன் கொடுபோகக்—
காதலார் மைந்தரும் தாயரா ருஞ்சுடும்
கானமே பின்தொடார்ந் தலறாமுன்;
சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமும்
சூடுதோ ளுந்தடந் திருமார்பும்-
தூயதாள் தண்டையும் காணஆர் வஞ்செயும்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்;
ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடும்
தேவர்வாழ் அன்றுகந் தமுதீயும்—
ஆரவா ரம்செயும் வேலைமேல் கண்வளர்ந்
தாதிமா யன்தன்நன் மருகோனே;
சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயம்
சாரல்ஆர் செந்தில்அம பதிவாழ்வே—
தாவுசூர் அஞ்சிமுன் சாயவே கம்பெறும்
தாரைவேல் உந்திடும் பெருமாளே.

## 141. வினைப்படாத வகை

தந்தன தானன தானன தந்தன தானன தானன
தந்தன தானன தானன தனதான

கொம்பனை யார்காது மோதிரு கண்களில் ஆமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு—

## 144. மயில்மேல் வரும் காட்சி பெற

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தன்தன
தந்த தானன தனதன தனதன தனதான

பஞ்ச பாதகம் உறுபிறை எயிறெறி
குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்—
பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகில் உருவொடு
பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்;
அஞ்ச வேவரும் அவ்த்ரம் அதில்ஒரு
தஞ்சம் ஆகியெ வழிவழி அருள்பெறும்
அன்பி னுல்உன தடிபுகழ் அடிமைஎன் எதிரேநீ—
அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர மயிலினில் இயலுடன் வரவேணும்;
மஞ்சு போல்வளர் அளகமும் இளகிய
ரஞ்சி தாம்ருத வசநமும் நிலவென
வந்த தூயவெண் முறுவலும் இருகுழை அளவோடும்—
மன்றல் வாரிஜ நயநமும் அழகிய
குன்ற வாணர்தம் மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயில் அழகிய மணவாளா;
செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை ஸகலமும் இகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் மகமேரு—
சென்டு மோதினர் அரசருள் அதிபதி
தொண்டர் ஆதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநகர் இனிதுறை அமரர்கள் பெருமாளே.

சிந்தை மகிழமலை மங்கை நகில்இணைகள்
சிந்து பயம்அயிலும் மயில்வீரா—
திங்கள் அரவுநதி துன்று ஜடிலர்அருள்
செந்தில் நகரில்உறை பெருமாளே.

## 143. உயிர் போம்பொழுது மயில்மேற் காட்சி பெற

தந்த தனன தனா தனனதன
தந்த தனன தனா தனனதன
தந்த தனன தனா தனனதன தனதான

தொந்தி சரிய மயிரே வெளிறநிரை
தந்தம் அசைய முதுகே வளையஇதழ்
தொங்க ஒருகை தடிமேல் வரமகளிர் நகையாடித்—
தொண்டு கிழவன் இவன்ஆர் எனஇருமல்
கிண்கிண் எனமுன் உரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி ;
வந்த பிணியும் அதிலே மிடையும்ஒரு
பண்டி தனுமெய் உறுவே தனையும்இள
மைந்தர் உடைமை கடன்ஏ தெனமுடுக துயர்மேவி—
மங்கை அழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே ஒழுகஉயிர்
மங்கு பொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும் ;
" எந்தை ! வருக ! ரகுநா யக ! வருக !
மைந்த ! வருக ! மகனே ! இனிவருக !
என்கண் ! வருக ! எனதா ருயிர் ! வருக ! அபிராம—
இங்கு வருக ! அரசே ! வருக ! முலை
உண்க வருக ! மலர்சூ டிடவருக !"
என்று பரிவி னொடுகோ சலைபுகல வருமாயன் ;
சிந்தை மகிழும் மருகா ! குறவர்இள
வஞ்சி மருவும் அழகா ! அமரர்சிறை
சிந்த அஸுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா—
திங்கள் அரவு நதிசூ டியபரமர்
தந்த குமர ! அலையே கரைபொருத
செந்தில் நகரில் இனிதே மருவிவளர் பெருமாளே.

வாள முழுதாளும் ஓர்தண்து மூர்தங்கு
ஜோதி மணிமார்ப மாலின்பி ஞள்இன்சொல்
வாழும் உமைமாத ராள்மைந்தனே எந்தை இளையோனே-
மாசில் அடியார்கள் வாழ்கின்ற ஊர்சென்று
தேடி விளையாடி யேஅங்ங னேநின்று
வாழு மயில்வீர னே! செந்தில் வாழ்கின்ற பெருமாளே.

## 147. திருவடியில் அன்பு உற

தனன தனந்த தனதான

வரியார் கருங்கண் மடமாதர்—
மகவாசை தொந்த மதுவாகி;
இருபோது நைந்து மெலியாதே—
இருதாளின் அன்பு தருவாயே;
பரிபா லனஞ்செய் தருள்வோனே—
பரமே சுரன்தன் அருள்பாலா;
அரிகேச வன்தன் மருகோனே—
அலைவாய் அமர்ந்த பெருமாளே.

## 148. மாயை அற

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

விதிபோலு முந்த விழியாலும் இந்து
நுதலாலும் ஒன்றி இளைஞோர்தம்—
விரிவான சிந்தை உருவாகி நொந்து
விறல்வேறு சிந்தை வினையாலே;
இதமாகி இன்ப மதுபோத உண்டு
இனிதாளும் என்று மொழிமாதர்—
இருளாய துன்ப மருள்மாயை வந்து
எனையாள்வ தென்றும் ஒழியாதோ;
மதிசூடி அண்டர் பதிவாழ மண்டி
வரும்ஆலம் உண்டு விடைஏறி—
மறவாத சிந்தை அடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா;

## 145. அருள் பெற

தனதன தனதன தந்தத் தந்தத் தனதானு

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானுர்—
படையம படைஎன அந்திக் குங்கட் கடையாலே;
வரிஅளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே—
மறுகிடு மருளனை இன்புற் றன்புற் றருள்வாயே;
அரிதிரு மருக!க டம்பத் தொங்கற் றிருமார்பா—
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா;
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா—
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.

## 146. இறைவனுடன் ஒன்ருகி நிற்றல்

தான தனதான தானந்த தானந்த
தான தனதான தானந்த தானந்த
தான தனதான தானந்த தானந்த தனதான

மூளும் வினைசேர மேல்கொண்டி டாஐந்து
பூத வெகுவாய மாயங்கள் தான்நெஞ்சில்
மூடி நெறிநீதி ஏதுஞ்செ யாவஞ்சி அதிபார—
மோக நினைவான போகஞ்செய் வேன்அண்டர்
தேட அரிதாய ஞேயங்க ளாய்நின்ற
மூல பரயோக மேல்கொண் டிடாநின்ற துளதாகி;
நாளும் அதிவேக கால்கொண்டு தீமண்ட
வாசி அனலூடு போய்ஒன்றி வானின்கண்
நாம மதிமீதில் ஊறுங்க லாஇன்ப அமுதூறல்—
நாடி அதன்மீது போய்நின்ற ஆநந்த
மேலை வெளிஏறி நீஇன்றி நான்இன்றி
நாடி இனும்வேறு தான்இன்றி வாழ்கின்ற தொருநாளே;
காள விடம்ஊணி மாதங்கி வேதஞ்சொல்
பேதை நெடுநீலி பாதங்க ளால்வந்த
காலன் விழமோது சாமுண்டி பார்அம்பொ டனல்வாயு—
காதி முதிர்வான் மேதங்கி வாழ்வஞ்சி
ஆடல் விடைஏறி பாகங்கு லாமங்கை
காளி நடமாடி நாள்அன்பர் தாம்வந்து தொழுமாது;

சிவகலைகள் ஆக மங்கள் மிகவுமறை ஓதும் அன்பர்
திருவடிக ளேநி னைந்து துதியாமல்—
தெரிவையர்கள் ஆசை மிஞ்சி வெகுகவலை யாய் உழன்று
திரியும்அடி யேனை உன்றன் அடிசேராய்;
மவுநஉப தேச சம்பு மதிஅறுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவர்—
மனமகிழ வேஅ ணைந்து ஒருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா;
பவனிவர வேஉ கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படிஅதிர வேந டந்த கழல்வீரா-
பரமபத மேசெ றிந்த முருகன்என வேஉ கந்து
பழநிமலை மேல்அ மர்ந்த பெருமாளே.

## 151. பணிந்து உருகும் அன்பு பெற

*தத்தா தனத்ததன தத்தா தனத்ததன*
*தானத் தனந்ததன தானத் தனந்ததன*
*(இப்படி மும்முறை கூறிய பின்) தனதனதான*

இத்தா ரணிக்குள்மநு வித்தாய் முளைத்தழுது
கேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்
தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்துநல கோடிப் ப்ரபந்தகலை
இச்சீர் பயிற்றவய தெட்டோடும் எட்டுவர
வாலக் குணங்கள்பயில் கோலப் பெதும்பையர்க
ளுடன் உறவாகி-
இக்கார் சரத்துமத னுக்கே இளைத்துவெகு
வாகக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல
திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்தஅணை மீதிற் றுயின்றுஸுகம்
இட்டா தரத்துருகி வட்டார் முலைக்குள்இடை
மூழ்கிக் கிடந்துமயல் ஆகித் தொளைந்துசில
பிணிஅதுமூடிச்;
சத்தான புத்திஅது கெட்டே கிடக்கநமன்
ஓடித் தொடர்ந்துகயி றூடிக் கொளும்பொழுது

2

அதிமாயம் ஒன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல்கொ டன்று பொரும்வீரா—
அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே.

## 149. திருவடி பெற

தந்தன தான தந்தன தான
தந்தன தான தனதான

விந்ததின் ஊறி வந்தது காயம்
வெந்தது கோடி இனிமேலோ—
விண்டு விடாமல் உன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும் ;
வந்து விநாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி—
வண்பதம் ஏறி என்களை ஆற
வந்தருள் பாத மலர்தாராய் ;
எந்தனுள் ஏக செஞ்சுடர் ஆகி
என்கணில் ஆடு தழல்வேணி—
எந்தையர் தேடும் அன்பர்ஸ ஹாயர்
எங்கள்சு வாமி அருள்பாலா ;
ஸுந்தர ஞான மென்குற மாது
தன்திரு மார்பில் அணைவோனே—
ஸுந்தர மான செந்திலில் மேவு
கந்த ! ஸு ரேசர் பெருமாளே.

# 3. திரு ஆவினன்குடி—பழநி

## 150. திருவடி பெற

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த தனதான

அவனிதனி லேபி றந்து மதலையென வேத வழ்ந்து
அழகுபெற வேந டந்து இளைஞோனாய்—
அருமழலை யேமி குந்து குதலைமொழி யேபு கன்று
அதிவிதம தாய்வ ளர்ந்து பதினாறாய் ;

அத்தா! பரத்தைஅறி வித்தாவி சுற்றும்ஒளி
ஆகிப் ப்ரபந்தமணி வேல்தொட்ட மைந்தபுய
வர்க்கா! மருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடியர் ஆவிக்குள் நின்றுலவி
வருபெருமாளே.

## 152. அகப்பொருள் (நற்றாய் இரங்கல்)

தனனதன தனனதன தானான தனனதன
தனனதன தனனதன தானான தனனதன
தனனதன தனனதன தானான தனனதன தனதான

இரவிஎன வடவைஎன ஆலால விடம்அதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைகள்ஒரு நால்ஏவ விருதுகுயில் அதுகூவ-
எழுகடலின் முரசின்இசை வேய்ஓசை விடையின்மணி
இசைகுறுகி இருசெவியில் நாராசம் உறுவதென
இகல்புரிய மதனகுரு ஓராத அனையர்கொடு
வசைபேச;
அரஹரென வநிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயில் அதுகருதி யாரோடும் இகல்புரிவள்
அவசமுற அவசமுற ஆர்ஓமல் தரவுமிக
மெலிவாளுன்—
அகுதிஇவள் தலையில்விதி ஆனாலும் விலகரிது
அடிமைகொள உனதுபரம் ஆறுத ஒருதனிமை
அவளை அணை தரஇனிதின் ஓகார பரியின்மிசை
வருவாயே;
நிரைபரவி வரவரையுள் ஓர்சீத மருதினொடு
பொருசகடு உதையதுசெய் தாமாய மழைசொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவேகொள் கரகமலன்
மருகோனே—
நிருமலிய திரிநயனி வாள்வீச வருகுமரி
கவுரிபயி ரவிஅரவ பூணாரி திரிபுவனி
நிபுடமலை அரசன்அருள் வாழ்வான புரணஉமை
அருள்பாலா;

பெற்றார்கள் சுற்றிஅழ உற்றார்கள் மெத்தஅழ
ஊருக் கடங்கல்இலர் காலற் கடங்கஉயிர்
தக்கா திவர்க்கும்அயன் இட்டான் விதிப்படியின்
ஓலைப் பழம்படியி னல்இற் றிறந்ததென
எடும்எனஓடிச்-

சட்டா நவப்பறைகள் கொட்டா வரிச்சுடலை
ஏகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமைய
இட்டே அனற்குள்எரி பட்டார் எனத்தழுவி
நீரிற் படிந்துவிடு பாசத் தகன்றுனது
சற்போ தகப்பதுமம் உற்றே தமிழ்க்கவிதை
பேசிப் பணிந்துருகு நேசத்தை இன்றுதா
இனிவாவேணும்;

தித்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுச்செகுகு தித்தா திமித்ததிகு
தாதத்த செந்திகுத தீதத்த செந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணென
ஒருமயிலேறித்-

திட்டே ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் தொளைந்துவரை ஏழைப் பிளந்துவரு
சித்தா! பரத்தமரர் கத்தா! குறத்திமுலை
மீதிற் புணர்ந்துஸ்ல்லாக லீலைக் கதம்பம் அணி
சுத்தா! உமைக்கும்ஒரு முத்தாய் முளைத்தகுரு
நாதக் குழந்தைஎன ஓடிக் கடம்பமலர்
அணிதிருமார்பா;

மத்தா மதக்களிறு பிற்றான் உதித்தகுகன்
ஏதத் திலங்கையினில் ஆதிக்கம் உண்டதொரு
முட்டாள் அரக்கர்தலை இற்றே விழக்கணைக
ளேதொட்ட கொண்டல்உரு வாகிச் சுமந்ததிக
மட்டார் மலர்க்கமல முற்றா ஸனத்திருவை
மார்பிற் புணர்ந்தரகு ராமற்கும் அன்புடைய
மருமக்ஞகி-

வற்று மதுக்கருணை உற்றே மறைக்கலைகள்
ஓதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கல்அணி

## 155. துதி

தனன தனனதன தனன தனனதன
தனன தனனதன தனதான

கடலை பொரிஅவரை பலகனி கழைநுகர்
கடின குடஉதர விபரீத—
கரட தடமுமத நளின சிறுநயன
கரிணி முகவரது துணைவோனே;
வடவரை யின்முகடு அதிர ஒருநொடியில்
வலம்வரு மரகத மயில்வீரா—
மகபதி தருஸுதை குறமினொ டிருவரும்
மருவு ஸரஸவித மணவாளா;
அடல்அஸு ரர்கள்குல முழுது மடியஉயர்
அமரர் சிறையைவிட எழில்மீறும்—
அருண கிரணஒளி ஒளிரும் அயிலைவிடும்
அரஹர சரவண பவலோலா;
படல உடுபதியை இதழி அணிஜடில
பசுபதி வரநதி அழகான—
பழ நிமலையருள்செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே.

## 156. திருவடியைப் பெற

தனன தனன தனன தனன தனன தனன
தனதான

கரிய பெரிய எருமை கடவு கடிய கொடிய திரிசூலன்—
கறுவி இறுகு கயிறொ டுயிர்கள் கழிய முடுகி எழுகாலம்;
திரியும் நரியும் எரியும் உரிமை தெரிய விரவி அணுகாதே—
செறிவும் அறிவும் உறவும் அனைய திகழும் அடிகள் தரவேணும்;
பரிய வரையின் அரிவை மருவு பரமர் அருளும் முருகோனே—
பழனம் உழவர் கொழுவில் எழுது பழைய பழநி அமர்வோனே

பரவைகிரி அஸுரர்திரள் மாஸேனை தவிடுபொடி
படஅமரர் துயர்அகல வேல்ஏவி அமர்பொருத
பதுமகர தலமுருக நால்வேத கரர்அணிக மயில்வீரா—
பனிதம்ருக மதகளப சேருர வளருமுலை
வநிதைகுற மகள்மகிழும் லீலா!வி தரமதுர
பனுவல்தரு பழநிவரு கோலாக லவ!அமரர்
பெருமாளே.

## 153. மதி கெடாதிருக்க

தனனதன தான தந்த தனதான

உலகபசு பாச தொந்த மதுவான—
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்;
மலஜலசு வாஸ ஸஞ்ச லமதால்என்—
மதிநிலைகெ டாமல் உன்தன் அருள்தாராய்;
ஜலம்அறுகு பூளை தும்பை அணிசேயே—
சரவணப வா!மு குந்தன் மருகோனே;
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே—
பழநிமலை வாழ வந்த பெருமாளே.

## 154. ஆசை அற

தனதனன தனதனன தானத் தானத் தனதானா

ஒருபொழுதும் இருசரண நேசத் தேவைத் துணரேனே—
உன்துபழ நிமலையெனும் ஊரைச் சேவித் தறியேனே;
பெருபுவியில் உயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே—
பிறவிஅற நினைகுவன்என் ஆசைப் பாடைத் தவிரேனோ;
துரிதம்இடு நிருதர்புர சூரைக் காரப் பெருமாளே—
தொழுதுவழி படும்அடியர் காவற் காரப் பெருமாளே;
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே—
விறல்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே.

பரவைமனை மீதில் அன்று ஒருபொழுது தூது சென்ற
பரமன்அரு ளால்வ ளர்ந்த குமரேசா—
பகைஅஸுரர் ஸேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே.

## 159. ஞானங் கூட

தானந்த தனன தான தானந்த தனன தான
தானந்த தனன தான தனதான

ஞானங்கொள் பொறிகள் கூடி வான்இந்து கதிர் இலாத
நாடண்டி நமசி வாய வரைஏறி—
நாஇன்ப ரஸம தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடுகு லாவி விளையாடி;
ஊனங்கள் உயிர்கள் மோக நான்என்ப தறிவி லாமல்
ஓம்அங்கி உருவம் ஆகி இருவோரும்—
ஓர்அந்தம் மருவி ஞான மாவிஞ்சை முதுகின் ஏறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்!
தேனங்கொள் இதழி தாகி தார்இந்து ஸலில வேணி
சீர்அங்கன் எனது தாதை ஒருமாது—
சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுந ஜோதி
சேர்பங்கின் அமல நாதன் அருள்பாலா;
கானங்கள் வரைகள் தீவு ஓதங்கள் பொடிய நீல
காடந்த மயிலில் ஏறும் முருகோனே—
காமன்கை மலர்கள் நாண வேடம்பெண் அமளி சேர்வை
காண்எங்கள் பழநி மேவு பெருமாளே.

## 160. மயில்மீது வருக

தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன தனதான

தலைவலி மருத்திடு காமாலை சோகைஜுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாஸம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி அணுகாதே—
தலைமிசை அதற்கான பேரோடு கூறிஇது
பரிகரி எனக்காது கேளாது போலும்அவர்
சரியும்வய துக்கேது தாரீர்சொ லீர்எனவும்
விதியாதே;

அரியும் அயனும் வெருவ உருவ
அரிய கிரியை எறிவோனே—
அயிலும் மயிலு மறமும் நிறமும்
அழகும் உடைய பெருமாளே.

## 157. உபதேசம் பெற

தனத்தன தனதன தனதான

கருத்திஞல் விரகுசெய் மடமாதர்—
கலக்குமோ ஹநமதில் மருளாமே;
ஒருத்தனும் வகைதிரு அருளாலே—
உணர்த்துநாள் அடிமையும் உடையேனே;
பருத்ததோ கையில்வரு முருகோனே—
பரக்கவே இயல்தெரி வயலூரா;
திருத்தமா தவர்புகழ் குருநாதா—
திருக்கைவேல் அழகிய பெருமாளே.

('கருப்புவில்லில்' என்ற பழநிப் பாட்டின் அடிகளின் இறுதி வரிகள்)

## 158. அரகர சிவாய எனக் கூற

தனனதன தான தந்த தனன்தன தான தந்த
தனனதன தான தந்த தனதான

கருவின்உரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே—
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி;
அரகரசி வாய என்று தினமும்நினை யாமல் நின்று
அறுசமய நீதி ஒன்றும் அறியாமல்—
அசனம்இடு வார்கள் தங்கள் மனைகள்தலை வாசல் நின்று
அநுதினமும் நாணம் இன்றி அழிவேனோ;
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள் அரங்கர்
உலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே—
உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி ஊரில் அன்று வருவோனே;

## 162. வணங்க

தனத்தனன தான தந்த தனத்தனன தான தந்த
தனத்தனன தான தந்த தனதான

மனக்கவலை ஏதும் இன்றி உனக்கடிமை யேபு ரிந்து
வகைக்குமநு நூல் விதங்கள் தவறாதே—
வகைப்படி மனோர தங்கள் தொகைப்படியி னால்இ லங்கி
மயக்கம்அற வேத முங்கொள் பொருள்நாடி;
வினைக்குரிய பாத கங்கள் துகைத்துவகை யால்நி னைந்து
மிகுத்தபொருள் ஆக மங்கள் முறையாலே—
வெகுட்சிதனை யேது ரந்து களிப்பினுட னேந டந்து
மிகுக்கும்உனை யேவ ணங்க வரவேணும்;
மனத்தில்வரு வோனெ என்றுன் அடைக்கலம தாக வந்து
மலர்ப்பதம தேப ணிந்த முநிவோர்கள்—
வரர்க்கும்இமை யோர்கள் என்பர் தமக்குமன மேஇ ரங்கி
மருட்டிவரு சூரை வென்ற முனைவேலா;
தினைப்புன முனேந டந்து குறக்கொடியை யேம ணந்து
ஜெகத்தைமுழு தாள வந்த பெரியோனே—
செழித்தவள மேசி றந்த மலர்ப்பொழில்க ளேநி றைந்த
திருப்பழநி வாழ வந்த பெருமாளே.

## 163. யோகத்தில் கழல் ஓசை கேட்க

தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன தனதான

*மூலங்கிளர் ஓர்உரு வாய்நடு
நால்அங்குல மேல்நடு வேர்இடை
மூள்பிங்கலை நாடியொ டாடிய முதல்வேர்கள்—
மூணும்பிர காசம தாய்ஒரு
சூலம்பெற ஓடிய வாயுவை
மூலந்திகழ் தூண்வழி யேஅள விடஓடிப்;
பாலங்கிளர் ஆறுசி கரமொ
டாருஞ்சுடர் ஆடுப ராபர
பாதம்பெற ஞானஸ தாசிவம் அதின்மேவிப்—

உலைவற விருப்பாக நீள்காவின் வாஸமலர்
வகைவகை எடுத்தே தொடாமாலி காபரணம்
உனதடியி னிற்சூட வேநாடு மாதவர்கள் இருபாதம்—
உளமது தரித்தே வினாவோடு பாடிஅருள்
வழிபட எனக்கே தயாவோடு தாள்உதவ
உரகம தெடுத்தாடு மேகார மீதின்மிசை வரவேணும்;
அலைகடல் அடைத்தே மகாகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேஆன ஜாநகியை
அடலுடன் அழைத்தேகொள் மாயோனை மாமன்எனும் மருகோனே—
அறுகினை முடித்தோனை ஆதாரம் ஆனவனை
மழுஉழை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில் நடித்தோனை மாதாதை யேஎனவும் வருவோனே;
பலகலை படித்தோது பாவாணர் நாவில்உறை
இருசரண வித்தார! வேலாயு தா!உயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகம்உறு மணவாளா—
பதுமவய லிற்பூக மீதே வரால்கள்துயில்
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவளர்
பழநிவரு கற்பூர கோலாக லா!அமரர் பெருமாளே.

## 161. கதி பெற

தனனதனத் தனனதனத் தனனதனத் தனதான

இடம்இலிஸற் குணமிலிநற் றிறமிலிஅற் புதமான—
செயல்இலிமெய்த் தவம்இலிநற் ஜெபம்இலி ஸொர்க் கமுமீதே;
இடம்இலிகைக் கொடைஇலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட—
இருபதமுற் றிருவினைஅற் றியல்கதியைப் பெறவேணும்;
கெடுமதிஉற் றிடும்அஸுரக் கிளைமடியப் பொரும்வேலா—
கிரணகுறைப் பிறைஅறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே;
படர்ஜடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா—
பலவயலிற் றரளநிறைப் பழநிமலைப் பெருமாளே.

# 4. திருஏரகம் (ஸ்வாமி மலை)

## 165. காட்சி தர ; பிறவி அற

தனனா தனத்த தந்த தனனா தனத்த தந்த
தனனா தனத்த தந்த தனதான

கூடிமா மலர்க்குள் இன்பம் உளவேரி கக்கு நண்பு
தருமா கடப்ப மைந்த தொடைமாலை—
கனமேரு ஒத்தி டும்ப னிருமா புயத்த ணிந்த
கருணா கரப்ர சண்ட கதிர்வேலா ;
வடிவார் குறத்தி தன்பொன் அடிமீது நித்த மும்தண்
முடியான துற்று கந்து பணிவோனே—
வளவாயமை சொற்ப்ர பந்தம் உளகீர னுக்கு கந்து
மலர்வாய் இலக்க ணங்கள் இயல்போதி ;
அடிமோனை சொற்கி ணங்க 'உலகாம் உவப்ப' என்றுன்
அருளால் அளிக்கு கந்த பெரியோனே—
அடியேன் உரைத்த புன்சொல் அதுமீது நித்த முந்தண்
அருளேத ழைத்து கந்து வரவேணும் ;
செடிநேர்உ டற்கு டம்பை தனில்மேவி உற்றி டிந்த
படிதான் அலக்கண் இங்கண் உறலாமோ—
திறமாத வர்க்க னிந்துன் இருபாத பத்மம் உய்ந்த
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே.

## 166. முறையிடு

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

குமர ! குருபர ! முருக ! சரவண !
குஹ ! ஷண் முக ! கரி பிறகான—
குழக ! சிவஸுத ! சிவய நமஎன
குரவன் அருள்குரு மணியே ! என்(று)
அமுத இமையவர் திமிர்தம் இடுகடல்
அதென அநுதினம் உனைஓதும்—
அமலை அடியவர் கொடிய வினைகொடும்
அபயம் இடுகுரல் அறியாயோ ;

பாடுந்தொனி நாதமு நூபுரம்
ஆடுங்கழல் ஓசையி லேபரி
வாகும்படி யேஅடி யேனையும் அருள்வாயே ;
சூலங்கலை மான்மழு ஓர்துடி
வேதன்தலை யோடும் அராவிரி
தோடுங்குழை சேர்பர னூர்தரு முருகோனே—
சூரன்கர மார்சிலை வாள்அணி
தோளுந்தலை தூள்பட வேஅவர்
சூளுங்கெட வேல்விடு சேவக மயில்வீரா ;
காலின்கழல் ஓசையும் நூபுர
வார்வெண்டைய ஓசையு மேயுக
காலங்களின் ஓசைய தாநடம் இடுவோனே—
கானங்கலை மான்மக ளார்தமை
நாணங்கெட வேஅணை வேள்பிர
காசம்பழ னாபுரி மேவிய பெருமாளே.

## 164. துதித்தலால் வரும் பேறு

தனனா தனனா தனதான

*வரதா! மணிநீ எனஓரில்—
வருகா தெதுதான் அதில்வாரா(து) ;
இரதா திகளால் நவலோகம்—
இடவே கரியாம் இதிலேது ;
சரதா! மறையோ தயன்மாலும்—
ஸகலா கமநூல் அறியாத ;
பரதே வதையாள் தருசேயே-
பழனா புரிவாழ் பெருமாளே.

*பாடல்கள் 163, 164 ஐ வயலூருக்கும் கொள்ளலாம்.
பழனா புரி—வயலூர். பழனம்—வயல். புரி—ஊர்.

மாஜகம் தொழும்உனது புகழினோர் சொற்ப கர்ந்து
ஸுகமேவி—
மாமணம் கமழும்இரு கமலபா தத்தை நின்று
பணிவேனோ;
வாசகம் புகலஒரு பரமர்தாம் மெச்சு கின்ற குருநாதா—
வாஸவன் தருதிருவை ஒருதெய்வா னைக்கி ரங்கு
மணவாளா;
கீசகம் ஸுரர் தருவு மகிழுமா அத்தி சந்து புடைசூழும்—
கேசவன் பரவுகுரு மலையில்யோ கத்த மர்ந்த
பெருமாளே.

## 169. ஐக்கிய நிலை அடைய

தானன தான தத்த தானன தான தத்த
தானன தான தத்த தனதான

நூாவேறு பாம ணத்த பாதார மேநி னைத்து
நால்ஆறு நாலு பற்று வகையான—
நால்ஆறும் ஆக மத்தின் நூலாய ஞான முக்தி
நாள்தோறும் நான் உரைத்த நெறியாக;
நீவேறெ னாதி ருக்க நான்வேறெ னாதி ருக்க
நேராக வாழ்வ தற்குன் அருள்கூர—
'நீடார் ஷடாத ரத்தின் மீதே பராப ரத்தை
நீகாண்' என அனைச்சொல் அருள்வாயே;
சேவேறும் ஈசர் சுற்ற மாஞான போத புத்தி
சீராக வேஉ ரைத்த குருநாதா—
தேரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு
தீரா!கு றா!கு றத்தி மணவாளா;
காவேரி நேர்வ டக்கி லேவாவி பூம ணத்த
காவார்சு வாமி வெற்பின் முருகோனே—
கார்போலு மேனி பெற்ற மார்காளி வாலை சக்தி
காமாரி வாமி பெற்ற பெருமாளே.

திமிர எழுகடல் உலகம் முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்—
சிகர முடிஉடல் புவியில் விழஉயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா;
நமனை உயிர்கொளும் அழலின் இணைகழல்
நதிகொள் ஜடையினர் குருநாதா—
நளின குருமலை மருவி அமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.

## 167. ஸகல செல்வ யோக வாழ்வு பெற

தனனதன தான தத்த தனனதன தான தத்த
தனனதன தான தத்த தனதான

சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறை தியானம் வைக்க அறியாத—
சடகசட மூட மட்டி பவவினையி லேஜ னித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ!
கருணைபுரி யாதி ருப்ப தெனகுறைஇ வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே—
கடகபுய மீதி ரத்ந மணிஅணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்பம் அணிவோனே;
தருணம்இதை யாமி குத்த கனமதுறு நீள்ஸ வுக்ய
ஸகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு—
தகைமைசிவ ஞான முக்தி பரகதியும் நீகொ டுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த வடிவேலா;
அருணதள பாத பத்மம் அதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான் அளித்த மயில்வீரா—
அதிசயம் அநேகம் உற்ற பழநிமலை மீது தித்த
அழக! திரு வேர கத்தின் முருகோனே.

## 168. பாதம் பணிய

தானனந் தன்னதன தனதன தத்த தந்த தனதான

நாசர்தங் கடைஅதனில் விரவிநான் மெத்த நொந்து
தடுமாறி—
ஞானமும் கெடஅடைய வழுவிஆ முத்த முந்தி
மெலியாதே;

## 170. திருவடி பெற

தனதன தனதன தனதானா

நிறைமதி முகம்எனும் ஒளியாலே—
நெறிவிழி கணைஎனும் நிகராலே;
உறவுகொள் மடவர்கள் உறவாமோ—
உனதிரு வடிஇனி அருள்வாயே;
மறைபயில் அரிதிரு மருகோனே—
மருவலர் அஸுரர்கள் குலகாலா;
குறமகள் தனைமணம் அருள்வோனே—
குருமலை மருவிய பெருமாளே.

## 171. யம பயம் அற

தான தனதன தான தனதன
தான தனதன தனதானா

யாதி மதிநதி போது மணிசடை
நாதர் அருளிய குமரேசா—
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா;
காதும் ஒருவிழி காகம் உறஅருள்
மாயன் அரிதிரு மருகோனே—
காலன் எனை அணு காமல் உனதிரு
காலில் வழிபட அருள்வாயே;
ஆதி அயனொடு தேவர் ஸுரர்உல
காளும் வகைஉறு சிறைமீளா—
ஆடு மயிலினில் ஏறி அமரர்கள்
சூழ வரவரும் இளையோனே;
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே—
சூரன் உடல்அற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே

## 172. வீடு பெற

தனஞ தனத்த தனஞ தனத்த
தனஞ தனத்த — தனதான

மருவே செறித்த குழலார் மயக்கி
மதன்ஆக மத்தின் — விரகாலே—
மயலே எழுப்பி இதழே அருத்த
மலைபோல் முலைக்குள் — உறவாகிப்;
பெருகாதல் உற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்சம் — மறவாதே—
பிழையே பொறுத்துன் இருதாளில் உற்ற
பெருவாழ்வு பற்ற — அருள்வாயே;
குருவாய் அரற்கும் உபதேசம் வைத்த
குஹனே! குறத்தி — மணவாளா—
குளிர்கா மிகுத்த வளர்பூகம் மெத்து
குடகா விரிக்கு — வடபால்ஆர்;
திருஏர கத்தில் உறைவாய்! உமைக்கொர்
சிறுவா! கரிக்கும் — இளையோனே—
திருமால் தனக்கு மருகா! அரக்கர்
சிரமே துணித்த — பெருமாளே.

## 173. ஆண்டருள

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த — தனதான

வாதமொடு சூலை கண்ட மாலைகுலை நோவு சந்து
மாவலி வியாதி குன்மம் — ஒடுகாசம்—
வாயுவுட னேப ரந்த தாமரைகள் பீனசம்பின்
மாதர்தரு பூஷ ணங்கள் — எனஆகும்;
பாதகவி யாதி புண்கள் ஆனதுட னேதொ டர்ந்து
பாயலை விடாது மங்க — இவையால்நின்-
பாதமலர் ஆன திண்கண் நேயம் அறவே மறந்து
பாவமது பானம் உண்டு — வெறிமூடி;

ஏதம்உறு பாச பந்தம் ஆனவலை யோடு மூன்று
ஈனமிகு ஜாதி யின்கண் அதிலேயான்—
ஈடழிதல் ஆன தின்பின் மூடன்என ஓது முன்புன்
ஈஅருள் கூர வந்து எனையாள்வாய்;
சூதமகிழ் பாலை கொன்றை தாதுவளர் சோலை துன்றி
சூழுமதில் தாவி மஞ்சின் அளவாகத்—
தோரணநன் மாடம் எங்கும் நீடுகொடி யேத ழைந்த
ஸ்வாமிமலை வாழ வந்த பெருமாளே.

# 5. குன்றுதோருடல்

## 1. கயிலை மலை

### 174. ஞானம் பெற

*தானந் தனத்ததன தானந் தனத்ததன*
*தானந் தனத்ததன தனதான*

தேன்உந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும் பழித்தசிவம் அருள்ஊறத்—
தீதும் பிடித்தவினை ஏதும் பொடித்துவிழ
ஜீவன் சிவச்சொருபம் எனதேறி;
நான்என்ப தற்றுயிரொ டூன்என்ப தற்றுவெளி
நாதம் பரப்பிரம ஒளிமீதே—
ஞானம் சுரப்பமகிழ் ஆனந்த சித்தியொடெ
நாளும் களிக்கபதம் அருள்வாயே;
வானம் தழைக்கஅடி யேனும் செழிக்கஅயன்
மாலும்பி ழைக்கஅலை விடமாள—
வாரும் கரத்தன்எமை ஆளும் தகப்பன்மழு
மானின்க ரத்தன்அருள் முருகோனே;
தானந் தனத்ததன ஞவண்டு சுற்றிமது
தான்உண் கடப்பமலர் அணிமார்பா—
த்ானம் குறித்துஎமை யாளும் திருக்கயிலை
சாலும் குறத்திமகிழ் பெருமாளே.

### 175. கவி பாட

*தனனதனத் தனதான*

**பு**மிஅதனிற் ப்ரபுவான-
புகலியில்வித் தகர்போல;
அமிர்தகவித் தொடைபாட-
அடிமைதனக் கருள்வாயே;
ஸமரில் எதிர்த் தஸுர்மாளத்-
தனிஅயில்விட் டருள்வோனே;
நமசிவயப் பொருளானே-
ரஜதகிரிப் பெருமானே.

## 5-2. திருவேங்கடம்

### 176. காலன் அணுகா வகை உற

*தாந்தன தானதன தாந்தன தானதன*
*தாந்தன தானதன தனதான*

**சா**ந்தமில் மோகஎரி காந்திய வாஅனிலம்
மூண்டவி யாதஸம யவிரோத-
சாங்கலெ வாரிதியை நீந்தஒ ணாதுலகர்
தாம்துணை யாவர்என மடவார்மேல்;
ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பிெனாடு
தோய்ந்துரு காஅறிவு தடுமாறி-
ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன்வசம்
யான்தனி போய்விடுவ தியல்போதான்;
காந்தளின் ஆனகர மான்தரு கானமயில்
காந்த!வி சாக!சர வணவேளே—
காண்டகு தேவர்பதி ஆண்டவ னே!சுருதி
ஆண்டகை யே!இபமின் மணவாளா;
வேந்த!கு மார!குஹ! சேந்தம யூர!வட
வேங்கட மாமலையில் உறைவோனே—
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்ட வெறாதுதவு பெருமானே.

## 177. திருவடி நிழல் பெற

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன தனதான

சரவண பவநிதி அறுமுக! குருபர!
சரவண பவநிதி அறுமுக! குருபர!
சரவண பவநிதி அறுமுக! குருபர! எனஓதித்—
தமிழினில் உருகிய அடியவர் இடம்உற
ஜநந மரணம்அதை ஒழிவுற சிவம்உற
தருபிணி துளவரம் எமதுயிர் ஸுகம்உற அருள்வாயே;
கருணைய விழிபொழி ஒருதனி முதல்என
வருகரி திருமுகர் துணைகொளும் இளையவ!
கவிதை அமுதமொழி தருபவர் உயிர்பெற அருள்நேயா-
கடல்உல கினில்வரும் உயிர்படும் அவதிகள்
கலகம் இனையதுள கழியவும் நிலைபெற
கதியும் உனதுதிரு வடிநிழல் தருவதும் ஒருநாளே;
திரிபுரம் எரிசெயும் இறையவர் அருளிய
குமர! சமரபுரி தணிகையு மிகும்உயர்
சிவகிரி யிலும்வட மலையிலும் உலவிய வடிவேலா—
தினமும் உனதுதுதி பரவிய அடியவர்
மனது குடியும்இரு பொருளிலும் இலகுவ
திமிர மலம்ஒழிய தினகரன் எனவரு பெருவாழ்வே;
அரவணை மிசைதுயில் நரஹரி நெடியவர்
மருகன் எனவெவரும் அதிசயம் உடையவ!
அமலி விமலிபரை உமையவள் அருளிய முருகோனே—
அதல விதலமுதல் கிடுகிடு கிடுஎன
வருமயில் இனிதொளிர் ஷடுமையில் நடுவுற
அழகி னுடன்அமரும் ஹரஹர சிவசிவ பெருமாளே.

# 5-3. திருத்தணிகை

## 178. திருப்புகழ் அடியார்களைப் போற்ற வேசையர் மயக்கு அற

*தனத்தன தனத்தன தனத்தன தனத்தன*
*தனத்தன தனத்தன தனதான*

இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை அறுத்திடும் எனஓதும்—
இசைத்தமிழ் நடத்தமிழ் எனத்துறை விருப்புடன்
இலக்கண இலக்கிய கவிநாலும்;
தரிப்பவர் உரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
தலத்தினில் நவிற்றுதல் அறியாதே—
தனத்தினில் முகத்தினில் மனத்தினில் உருக்கிடு
ஸமர்த்திகள் மயக்கினில் விழலாமோ;
கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்
களிப்புடன் ஒளித்தெய்த மதவேளைக்—
கருத்தினில் நினைத்தவன் நெருப்பெழ நுதற்படு
கனற்கணில் எரித்தவர் கயிலாயப்;
பொருப்பினில் இருப்பவர் பருப்பத உமைக்கொரு
புறத்தினை அளித்தவர் தருசேயே—
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
பொருப்பினில் விருப்புறு பெருமாளே.

## 179. சிவரூபம் பெற

*தனனதான தானன தனனதான தானன*
*தனனதான தானன தனதான*

உடலினூடு போய்மீளும் உயிரினூடு மாயாத
உணர்வினூடு வானூடு முதுதீயூ(டு)—
உலவையூடு நீரூடு புவியினூடு வாதாடும்
ஒருவரோடு மேவாத தனிஞானச்;
சுடரினூடு நால்வேத முடியினூடும் ஊடாடு
துரியஆகு லாதீத சிவரூபம்—

தொலைவிலாத பேராசை துரிசறாத ஓர்பேதை
தொடும்உபாயம் ஏதோசொல் அருள்வாயே;
மடல்அறாத வாரீஜ அடவிசாடி மாறான
வரிவரால் குவால்சாய அமராடி—
மதகுதாவி மீதோடி உழவரால் அடாதோடி
மடையைமோதி ஆறாடு தடமாகக்;
கடல்புகா மஹாமீனை முடுகிவாளை தான்மேவு
கமலவாவி மேல்வீழு மலர்வாவிக்—
கடவுள்நீல மாறாத தணிகைகாவ லா! வீர!
கருணைமேரு வே!தேவர் பெருமாளே.

## 180. திருவடியைத் தொழ

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலம் தனில்ஓயா-
எடுத்திடு காயம் தனைக்கொடு மாயும்
இலச்சை இலாதென் பவமாற;
உனைப்பல நாளும் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குளிமேவி-
உணர்த்திய போதம் தனைப்பிரி யாதொண்
பொலச்சரண் நானும் தொழுவேனோ;
வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேள்கொன் றவன்நீயே-
விளப்பென மேல்என் றிடக்கய னும்
விருப்புற வேதம் புகல்வோனே;
தினத்தொடு சூரன் தனைக்கொடு வேலின்
சிரத்தினை மாறும் முருகோனே-
தினைப்புனம் மேவும் குறக்கொடி யோடும்
திருத்தணி மேவும் பெருமாளே.

## 181. திருவடி பெற

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன தந்ததான

ஏது புத்திஐ யாஎ னக்கினி
யாரை நத்திடு வேன்அ வத்தினி
லேஇ றத்தல்கொ லோஎ னக்குநி தந்தைதாய்என்-
றேஇ ருக்கவும் நானும் இப்படி
யேத வித்திட வோஜ கத்தவர்
ஏச லிற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்-
பாதம் வைத்திடை யா!தெ ரித்தெனை
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்கும் ஐயா! தகப்பன்முன் மைந்தன்ஓடிப்-
பால்மொ ழிக்குரல் ஓலம் இட்டிடில்
யார்எ டுப்பதெ னவெ றுத்தழ
பார்வி டுப்பர்க ளோ?எ னக்கிது சிந்தியாதோ;
ஓதம் உற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
ஓட வெட்டிய பாநு சக்திகை எங்கள்கோவே-
ஓத மொய்ச்சடை ஆட உற்றமர்
மான்ம ழுக்கரம் ஆட பொற்கழல்
ஓசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே;
மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர ! அற்புத ! கந்தவேளே-
மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ் திருத்தணி மாம லைப்பதி தம்பிரானே.

## 182. திருப்புகழ் கூற

தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன தனதான

குருவி எனப்பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை மிருகம் எனப்புழு
குறவை எனக்கரி மரமும் எனத்திரி உறவாகா-
குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை எனப்பிணி கலகம் இடத்திரி
குலையன் எனப்புலை கலியன் எனப்பலர் நகையாமல்;
மருவு புயத்திடை பணிகள் அணப்பல
கரிபரி சுற்றிட கலைகள் தரித்தொரு
மதன சரக்கென கனக பலக்குடன் அதுதேடேன்-
வரிய பதத்தினின் அருவி இருப்பிடம்
அமையும் எனக்கிடம் உனது பதச்சரண்
மருவு திருப்புகழ் அருள எனக்கினி அருள்வாயே;
விருது தனத்தன தனன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி எனக்குகு வெகுதாளம்-
வெருவ முகிழ்த்திசை உரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை அதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு அஸுரர் தெறித்திட விடும்வேலா;
அரிய திரிப்புரம் எரிய விழித்தவன்
அயனை முடித்தலை அரியு மழுக்கையன்
அகிலம்அனைத்தையும்உயிரும் அளித்தவன் அருள்சேயே-
அமணர் உடற்கெட வசியில் அழுத்திவிண்
அமரர் கொடுத்திடும் அரிவை குறத்தியொ
டழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமானே.

## 183. நன்றி மறவாமை

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான

கொந்து வார்குர வடியினும் அடியவர்
சிந்தை வாரிஜ நடுவினும் நெறிபல
கொண்ட வேதநன் முடியினும் மருவிய குருநாதா—

கொங்கில் ஏர்தரு பழநியில் அறுமுக!
செந்தில் காவல! தணிகையில் இணையிலி!
கொந்து காஎன மொழிதர வருஸம யவிரோதத்;
தந்த்ர வாதிகள் பெறஅரி யதுபிறர்
ஸந்தி யாதது தனதென வரும்ஒரு
ஸம்ப்ர தாயமும் இதுஎன உரைசெய்து விரைநீப—
ஸஞ்ச ரீகரி கரமுரல் தமனிய
கிண்கி ணீமுக விதபத யுகமலர்
தந்த பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே;
ஸிந்து வாரமும் இதழியும் இளநவ
சந்த்ர ரேகையும் அரவமும் அணிதரு
செஞ்ஜ டாதரர் திருமக வெனவரு முருகோனே—
செண்ப காடவி யினும்இத ணினும்உயர்
சந்த ஞடவி யினும்உறை குறமகள்
செம்பொன் நூபுர கமலமும் வளைஅணி புதுவேயும்;
இந்து வாண்முக வனஜமு ம்ருகமத
குங்கு மாசல யுகளமும் மதுரித
இந்த ளாம்ருத வசனமும் முறுவலும் அபிராம—
இந்த்ர கோபமும் மரகத வடிவமும்
இந்த்ர சாபமும் இருகுழை யொடுபொரும்
இந்த்ர நீலமும் மடலிடை எழுதிய பெருமாளே.

## 184. திருவடி மலரில் உருக

தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன தனதான

சினத் திலத்தினை சிறுமணல் அளவுடல்
செறித்த தெத்தனை சிலைகட லினில்உயிர்
ஜெனித்த தெத்தனை திரள்கயல் எனபல அதுபோதா—
செமித்த தெத்தனை மலைசுனை உலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தில் எத்தனை நமன்உயிர்பறிகொள்வ தளவேதோ;

மனத்தில் எத்தனை நினைகவ டுகள்குடி
 கெடுத்த தெத்தனை மிருகம தெனஉயிர்
 வதைத்த தெத்தனை அளவிலை விதிகரம் ஒழியாமல்—
வகுத்த தெத்தனை மசகனை முருடனை
 மடைக்கு லத்தனை மதிஅழி விரகனை
 மலர்ப்ப தத்தினில் உருகவும் இனிஅருள் புரிவாயே;
தனத்த னத்தன தனதன தனதன
 திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
 தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ-
தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
 தடுட்டு டுட்டுடு டுடுடுடு டுடுடுடு
 தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்;
சினத்த மர்க்கள செருதிகழ் குருதிய
 திமிழ்த்தி டக்கரி அஸுரர்கள் பரிசிலை
 தெறித்தி டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா—
செழிக்கும் உத்தம சிவசர ணர்கள்தவ
 முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
 திருத்த ணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே.

## 185. பேரருள் பெற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தனனத் தனதான

துப்பார் அப்பா டற்றீ மொய்க்கால்
 சொற்பா வெளிமுக் குணமோஹம்-
துற்றாய் அப்பீ றற்றோல் இட்டே
 சுற்றா மதனப் பிணிதோயும்;
இப்பா வக்கா யத்தா சைப்பா
 டெற்றே உலகிற் பிறவாதே—
எத்தார் வித்தா ரத்தே கிட்டா
 எட்டா அருளைத் தரவேணும்;
தப்பா மற்பா டிச்சே விப்பார்
 தத்தாம் வினையைக் களைவோனே—

தற்கா ழிச்சூர் செற்ருய்! மெய்ப்போ
தத்தாய்! தணிகைத் தனிவேலா
அப்பா கைப்பா லைப்போல் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே—
அத்தா! நித்தா! முத்தா! சித்தா!
அப்பா! குமரப் பெருமானே.

## 186. ஓதிப் பிழைக்க

தனதான தனத்தன தான தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான தனதான

நிலையாத ஸமுத்திரம் ஆன ஸமுஸார துறைக்கணின் மூழ்கி
நிஜம்ஆன தெனப்பல பேசி அதனூடே—
நெடுநாளும் உழைப்புள தாகி பெரியோர்கள் இடைக்
கரவாகி
நினைவால்நின் அடித்தொழில் பேணி துதியாமல்;
தலையான உடற்பிணி ஊறி பவநோயின் அலைப்பல ஏகி
சலமான பயித்தியம் ஆகி தடுமாறித்
தவியாமல் பிறப்பையும் நாடி அதுவேரை அறுத்துனை ஓதி
தலமீதில் பிழைத்திடவேநின் அருள்தாராய்;
கலியாண ஸுபுத்திரன் ஆக குறமாது தனக்கு விநோத
கவின்ஆறு புயத்தில் உலாவி விளையாடிக்—
களிகூரும் உனைத்துணைதேடும் அடியேனை ஸுகப்படவே வை
கடன்ஆகும் இதுக்கனம் ஆகும் முருகோனே;
பலகாலும் உனைத்தொழு வோர்கள் மறவாமல்
திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே—
பதியான திருத்தணி மேவு சிவலோகம் எனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமானே.

## 187. திருவடியைப் பெற

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

பெருக்கவு பாயம் கருத்துடை யோர்தம்
ப்ரபுத்தன பாரங் களிலேஸம்-
ப்ரமத்துடன் நாளும் ப்ரமித்திருள் கூறும்
ப்ரியக்கட லூடும் தணியாத;
கருக்கட லூடுங் கதற்றும் அநேகம்
கலைக்கட லூடுஞ் சுழலாதே-
கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசும்
கழற்புணை நீதந் தருள்வாயே;
தருக்கிய வேதன் சிறைப்பட நாளும்
சதுர்த்தச லோகங் களும்வாழ-
ஸமுத்திரம் ஏழும் குலக்கிரி ஏழும்
சளப்பட மாவும் தனிவீழத்;
திருக்கையில் வேல்ஒன் றெடுத்தமர் ஆடும்
செருக்கும யூரம் தனில்வாழ்வே-
சிறப்பொடு ஞானம் தமிழ்த்ரயம் நீடும்
திருத்தணி மேவும் பெருமாளே.

## 188. அகப்பொருள் (தலைவன் வந்தருள)

தத்தத் தனத்தனன தத்தத் தனத்தனன
தத்தத் தனத்த தனதான

முத்துத் தெறிக்கவளர் இக்குச் சிலைக்கைமதன்
முட்டத் தொடுத்த மலராலே-
முத்தத் திருச்சலதி முற்றத் துதித்தினன
முற்பட் டெறிக்கும் நிலவாலே;
எத்தத்தை யர்க்கும்இத மிக்குப் பெருக்கமணி
இப்பொற் கொடிச்சி தளராதே-
எத்திக்கும் உற்றபுகழ் வெற்றித் திருத்தணியில்
இற்றைத் தினத்தில் வரவேணும்;

மெத்தச் சினத்துவட திக்குக் குலச்சிகர
வெற்பைத் தொளைத்த கதிர்வேலா-
மெச்சிக் குறத்திதனம் இச்சித் தணைத்துருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா;
மத்தப்ர மத்தர்அணி மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே-
வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே.

## 189. திருவடியை ஓத

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

வினைக்கினம் ஆகும் தனத்தினர் வேள்அம்
பினுக்கெதிர் ஆகும் விழிமாதர்-
மிகப்பல மானம் தனிற்புகு தாவெஞ்
சமத்திடை போய்வெந் துயர்மூழ்கிக்;
கனத்தவி சாரம் பிறப்படி தோயும்
கருக்குழி தோறும் கவிழாதே-
கலைப்புல வோர்பண் படைத்திட ஓதும்
கழற்புகழ் ஓதும் கலைதாராய்;
புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே-
பொருப்பிரு கூறும் படக்கடல் தானும்
பொருக்கெழ வானும் புகைமூளச்;
சினத்தொடு சூரன் கனத்திணி மார்பம்
திறக்கம ராடும் திறல்வேலா-
திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும்
திருத்தணி மேவும் பெருமாளே-

## 5-4. வள்ளிமலை

### 190. யமன் வரும் நாளில் திருவடியைப் பெற

தய்யதன தான தய்யதன தான
தய்யதன தானத் தனதான

அல்லிவிழி யாலு முல்லைநகை யாலும்
அல்லல்பட ஆசைக் கடல்ஈயும்-
அளஇனி தாகி நள்ளிரவு போலும்
உள்ளவினை யாரத் தனமாரும்;
இல்லும்இளை யோரும் மெல்லஅய லாக
வல்எருமை மாயச் சமனும்—
எள்ளிஎன தாவி கொள்ளைகொளும் நாளில்
உய்யஒரு நீபொற் கழல்தாராய்;
தொல்லைமறை தேடி இல்லைஎனும் நாதர்
சொல்லும்உப தேசக் குருநாதா-
துள்ளிவிளை யாடு புள்ளிஉழை நாண
எள்ளிவன மீதுற் றுறைவோனே;
வல் லஸுரர் மாள நல்ல ஸுரர் வாழ
வல்லவடி வேலைத் தொடுவோனே;
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமானே.

### 191. உண்மைப் பொருளைக் காண

தனதன தனதன தனதன தனதன
தய்யத்த தாத்த தனதான

†ககனமும் அநிலமும் அனல்புனல் நிலம்அமை
கள்ளப் புலாற்கி ருமிவீடு-

† இப்பாடலின் 2, 4, 6, 8, 10, 12, 14, 16 வரிகளைச் சேர்த்துப் பார்க்க அழகானதொரு (கரந்துறை) பாடல் பின்வருமாறு அமையும். 191-A

கள்ளப் புலாற் கிருமிவீடு-கள்வைத்த தோற்பை சுமவாதே;
உள்ளக்கண் நோக்கும் அறிவூறி—உள்ளத்தைநோக்க
அருள்வாயே;
வெள்ளைப் பிராட்டி இறைகாணு—வெள்ளத்தை ஏற்ற
பதிவாழ்வே;
வள்ளிக் குலாத்தி கிரிவாழும்-வள்ளிக்கு வாய்த்த பெருமானே.

கனல்எழ மொழிதரு சினம்என மதமிகு
கள்வைத்த தோற்பை சுமவாதே;
யுகஇறு திகளிலும் இறுதிஇல் ஒருபொருள்
உள்ளக்கண் நோக்கும் அறிவூறி-
ஒளிதிகழ் அருஉரு எனுமறை இறுதியில்
உள்ளத்தை நோக்க அருள்வாயே;
ம்ருகமத பரிமள விகஸித நளினம்நள்
வெள்ளைப் பிராட்டி இறைகாணு-
விடதர குடிலஜ டிலமிசை வெகுமுக
வெள்ளத்தை ஏற்ற பதிவாழ்வே;
வகுளமு முகுளித வழைகளு மலிபுன
வள்ளிக் குலாத்தி கிரிவாழும்-
வனசரர் மரபினில் வரும்ஒரு மரகத
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

## 192. திருவடியை உணர

தனதாத்த தய்ய தனதாத்த தய்ய
தனதாத்த தய்ய தனதான

குடிவாழ்க்கை அன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர ஸன்ன மொழியார்கள்-
குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை உணராதே;
இடநாட்கள் வெய்ய நமன்ஈட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி-
இடுகாட்டில் என்னை எரிஊட்டு முன்உன்
இருதாட்கள் தம்மை உணர்வேனோ;
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயில்மேற் றிகழ்ந்த குமரேசா-
வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா;
அடிநாட்கள் செய்த பிழைநீக்கி என்னை
அருள்போற்றும் வண்மை தரும்வாழ்வே-
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

## 5-5. கதிர்காமம்

### 193. ஆண்டருள

தனத்தத்தன தான தானன
தனத்தத்தன தான தானன
தனத்தத்தன தான தானன தனதான

உடுக்கத்துகில் வேணும் நீள்பசி
அவிக்கக்கன பானம் வேணும்நல்
ஒளிக்குப்புனல் ஆடை வேணுமெய் உறுநோயை-
ஒழிக்கப்பரி காரம் வேணும்உள்
இருக்கச்சிறு நாரி வேணும்ஓர்
படுக்கத்தனி வீடு வேணும்இவ் வகையாவும்;
கிடைத்துக்க்ருஹ வாஸி ஆகிய
மயக்கக்கடல் ஆடி நீடிய
கிளைக்குப்பரி பாலனய்உயிர் அவமேபோம்-
க்ருபைச்சித்தமும் ஞான போதமும்
அழைத்துத்தர வேணும் ஊழ்பவ
கிரிக்குட்சுழல் வேலை ஆளுவ தொருநாளே;
குடக்குச்சில தூதர் தேடுக
வடக்குச்சில தூதர் நாடுக
குணக்குச்சில தூதர் தேடுக எனமேவிக்-
குறிப்பிற்குறி காணு மாருதி
இனித்தெற்கொரு தூது போவது
குறிப்பிற்குறி போன போதிலும் வரலாமோ;
அடிக்குத்திர காரர் ஆகிய
அரக்கர்க்கிளை யாத தீரனும்
அலைக்கப்புற மேவி மாதுறு வனமேசென்(று)-
அருட்பொற்றிரு வாழி மோதிரம்
அளித்துற்றவர் மேல் மனோகரம்
அளித்துக்கதிர் காமம் மேவிய பெருமாளே.

## 194. திருவடியை நினைக்க

தனன தான தத்த தனதான

எதிர் இலாத பக்தி தனைமேவி—
இனிய தாள் நினைப்பை இருபோதும்;
இதய வாரி திக்குள் உறவாகி—
எனது ளேசி றக்க அருள்வாயே;
கதிர காம வெற்பில் உறைவோனே—
கனக மேரு ஒத்த புயவீரா;
மதுர வாணி உற்ற கழலோனே—
வழுதி கூன் நிமிர்த்த பெருமாளே.

## 195. துதி

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான

திருமகள் உலாவும் இருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்.
ஜெகதலமும் வானும் மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்;
மருவும்அடி யார்கள் மனதில் விளையாடும்
மரகத மயூரப் பெருமாள்காண்—
மணிதரளம் வீசி அணிஅருவி சூழ
மருவு கதிர்காமப் பெருமாள்காண்;
அருவரைகள் நீறு படஅஸுரர் மாள
அமர்பொருத வீரப் பெருமாள்காண்—
அரவுபிறை வாரி விரவுஜடை வேணி
அமலர் குருநாதப் பெருமாள்காண்;
இருவினை இலாத தருவினை விடாத
இமையவர் குலேசப் பெருமாள்காண்—
இலகுசிலை வேடர் கொடியின் அதிபார
இருதன விநோதப் பெருமாளே.

## 196. நரகிற் கிடப்போர்

தானதன தானத் தனதான

மாதர்வச மாய்உற் றுழல்வாரும்-
மாதவம் எணுமற் றிரிவாரும்;
தீதகல ஓதிப் பணியாரும்-
தீநரக மீதிற் றிகழ்வாரே;
நாதஒளி யே!நற் குணசீலா-
நாரிஇரு வோரைப் புணர்வேலா;
ஜோதிசிவ ஞானக் குமரேசா-
தோமில்கதிர் காமப் பெருமாளே.

# 5-6 (திருக்)கழுக்குன்றம்

## 197. துதி

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதானு

எழுகுநிறை நாபி அரிபிரமர் ஜோதி
இலகும்அரன் மூவர் முதலானோர்-
இறைவிஎனும் ஆதி பரைமுலையின் ஊறி
எழும்அமிர்தம் நாறு கனிவாயா
புழுகொழுகு காழி கவுணியரில் ஞான
புநிதன்என ஏடு தமிழாலே-
புனலில்எதிர் ஏற சமணர்கழு ஏற
பொருதகவி வீர! குருநாதா;
மழுஉழை கபால டமருக த்ரிசூல
மணிகர விநோதர் அருள்பாலா-
மலர்அயனை நீடு சிறைசெய்தவன் வேலை
வளமைபெற வேசெய் முருகோனே;
கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு
கதிர்உலவு வாசல் நிறைவானோர்-
கடல்ஒலிய தான மறைதமிழ்கள் ஓது
*கதலிவன மேவு பெருமாளே.

## 198. புத்தி பெற

தான தத்த தான தத்த தான தத்த தனதான

*வேத வெற்பி லேபு னத்தில் மேவி நிற்கும் அபிராம-
வேடு வச்சி பாத பத்ம மீது செச்சை முடிதோய;
ஆத ரித்து வேளை புக்க ஆறி ரட்டி புய:நேய-
ஆத ரத்தொ டாத ரிக்க ஆன புத்தி புகலவாயே;
காதும் உக்ர வீர பத்ர காளி வெட்க மகுடாம்ஆ-
காச முட்ட வீசி விட்ட காலர் பத்தி இமையோரை;
ஓது வித்த நாதர் கற்க ஓது வித்த முநிநாண-
ஓர்எ ழுத்தில் ஆறெ ழுத்தை ஓது வித்த பெருமாளே.

# 5-7. (திரி)சிராப்பள்ளி

## 199. 'மைந்தா குமரா என (மனதுக்கு உபதேசம்)

தந்தாதன தானன தாத்தன
தந்தாதன தானன தாத்தன
தந்தாதன தானன தாத்தன தனதான

அந்தோ!மன மே!நம தாகையை
நம்பாதெ இதாஹித ஸூத்திரம்
அம்போருகன் நாடிய பூடிது இனிமேல்நாம்
அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ ஞர்க்கியல்
அங்காகுவம் வாஇனி தாக்கையை ஒழியாமல்;
வந்தோம்இது வேகதி ஆட்சியும
இந்தாமயில் வாஹந நர் சீட்டிது
வந்தாளுவம் நாம்என வீக்கிய சிவநீறும்
வந்தேவெகு வாநமை ஆட்கொள்உ
வந்தார்மதம் ஏதினி மேற்கொள
மைந்தா! குமரா! எனும் ஆர்ப்புய மறவாதே;
திந்தோதிமி தீதத மாத்துடி
தந்தாதன ஞுதன தாத்தன
செம்பூரிகை பேரிகை ஆர்த்தெழ மறைஓதச்-

செங்காடென வேவரு மூர்க்கரை
சங்கார சிகாமணி வேற்கொடு
செண்டாடி மஹாமயில் மேற்கொளு முருகோனே;

இந்தோடிதழ் நாகமஹாக் கடல்
கங்காள மினார்ஜடை சூட்டிய
என்தாதை ஸதாசிவ கோத்திரன் அருள்பாலா-

எண்கூடரு ளால்நெளவி நோக்கியை
நன்பூமண மேவிசி ராப்பளி
என்பார்மன மேதினி நோக்கிய பெருமாளே.

## 200. திருவடியைப் பெற

தத்த தான தனதன தத்த தான தனதன
தத்த தான தனதன தந்ததான

சத்தி பாணீ! நமோநம முத்தி ஞானீ! நமோநம
தத்வ ஆதீ! நமோநம விந்துநாத-
ஸத்து ரூபா! நமோநம ரத்ந தீபா! நமோநம
தற்பர தாபா! நமோநம என்றுபாடும்;

பத்தி பூண மலேஉல சத்தின் மானார் ஜவாதகில்
பச்சை பாடீர பூஷித கொங்கைமேல்வீழ்-
பட்டி மாடான நான்உனை விட்டி ராமே உலோஹித
பத்ம சீர்பாதம் நீதினி வந்துதாராய்;

அத்ர தேவா யுதா!ஸுரர் உக்ர ஸேனா பதி!சுசி
அர்க்ய ஸோமாசி யாகுரு ஸம்ப்ரதாயா-
அர்ச்சனா வாஹனா!வய லிக்குள் வாழ்நாய கா!புய
அக்ஷ மாலா தரா! குற மங்கைகோவே;

சித்ர கோலா கலா விர லக்ஷ்மி ஜாதா! ரதாபல
திக்கு பாலா! சிவாகம தந்த்ரபோதா-
சிட்ட நாதா! சிராமலை அப்பர் ஸ்வாமீ! மஹாவ்ருத
தெர்ப்பை ஆசார வேதியர் தம்பிரானே.

## 201. ஞானம் பெற

தானத்தத் தான தானன தானத்தத் தான தானன
தானத்தத் தான தானன தந்ததான

வாசித்துக் காணொ ணாதது பூஜித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது நெஞ்சினாலே-
மாசர்க்குத் தோணொ ணாதது நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது விந்துநாத ;
ஓசைக்குத் தூரம் ஆனது மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி ஆனது கண்டுநாயேன்-
யோகத்தைச் சேரு மாறுமெய்(ஞ்) ஞானத்தைப் போதி யாய்இனி
னானத்தைப் போடி டாதும யங்கலாமோ ;
ஆசைப்பட் டேனல் காவல்செய் வேடிச்சிக் காக மாமயல்
ஆகிப்பொற் பாத மேபணி கந்தவேளே-
ஆலித்துச் சேல்கள் பாய்வயல் ஊரத்திற் காள மோடடர்
ஆரத்தைப் பூண்ம யூரது ரங்கவீரா ;
நாசிக்குட் ப்ராண வாயுவை ரேசித் தெட்டாத யோகிகள்
நாடிற்றுக் காணொ ணாதென நின்றநாதா-
நாகத்துச் சாகை போய்உயர் மேகத்தைச் சேர் கிராயலே
நாதர்க்குச் சாமியே ! ஸுரர் தம்பிரானே.

## 5-8. (திருச்)செங்கோடு

### 202. அலைச்சல் அற

தந்தான தந்த தந்தான தந்த
தந்தான தந்த தனதான

அன்பாக வந்து உன்தாள் பணிந்து
ஐம்பூதம் ஒன்ற நினையாமல்-
அன்பால் மிகுந்து நஞ்சாரு கண்கள்
அம்போரு கங்கள் முலைதானும் ;
கொந்தே மிகுந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்-
கொண்டே நினைந்து மன்பேது மண்டி
குன்று மலைந்து அலைவேனோ ;
மன்றாடி தந்த மைந்தா ! மிகுந்த
வம்பார் கடம்பை அணிவோனே-
வந்தே பணிந்து நின்றார் பவங்கள்
வம்பே தொலைந்த வடிவேலா ;

சென்றே இடங்கள் 'கந்தா!' எனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்.
செஞ்சாலி கஞ்சம் ஒன்றாய் வளர்ந்த
செங்கோ டமர்ந்த பெருமாளே.

## 203. ஞானம் பெற

*தானதனத் தனதான*

*காலன்இடத் தணுகாதே-காசினியிற் பிறவாதே;*
*சீலஅகத் தியஞான-தேன்அமுதைத் தருவாயே;*
*மால்அயனுக் கரியானே-மாதவரைப் பிரியானே;*
*நாலுமறைப் பொருளானே-நாககிரிப் பெருமாளே.*

## 204. முருகன் வர

*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன தனதான*

கொடிய மறலியும் அவனது கடகமும்
மடிய ஒருதினம் இருபதம் வழிபடு
குதலை அடியவன் நினதருள் கொடுபொரும் அமர்காண-
குறவர் மகள்புணர் புயகிரி ஸமுஹமும்
அறுமு கமும்வெகு நயனமும் ரவிஉமிழ்
கொடியும் அகிலமும் வெளிபட இருதிசை இருநாலும்;
படியும் நெடியன எழுபுண ரியுமுது
திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வரும்ஒரு மரகத துரகத மிசைஏறிப்-
பழைய அடியவர் உடன்இமை யவர்கணம்
இருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ வரும்அதில் அருணையில் ஒருவிசை வரவேணும்;
ஜடில த்ரவிஷ தரபணி தரதர
பரசு தரசசி தரசுசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தரபாரத்-
தரணி தரதநு தரவெகு முககுல
தடினி தரசிவ ஸுத!குண தர!பணி
மயில! விதரண தருபுர சசிதரு மயில்வாழ்வே;

நெடிய உடல்உரு இருள்எழ நிலவெழ
எயிறு சுழல்விழி தழல்எழ எழுகிரி
நெரிய அதிர்குரல் புகைஎழ இடிஎழ — நெடுவானும்-
நிலனும் வெருவர வருநிசி சரர்தளம்
நிகில ஸகலமும் மடியஓர் படைதொடு
நிருப! குருபர! ஸுரபதி பரவிய — பெருமாளே.

## 205. அருள் மறவாமை

தத்த தனத்தன தத்த தனத்தன
தத்த தனத்தன தனதான

பக்தர் கணப்ரிய நிர்த்தம் நடித்திடு
பக்ஷி நடத்திய — குஹ! பூர்வ-
பச்சிம தக்ஷிண உத்தர திக்குள
பக்தர்கள் அற்புதம் — எனவோதும் ;
சித்ர கவித்துவ சத்த மிகுத்ததி
ருப்புகழைச்சிறி — தடியேனும்-
செப்பென வைத்துல கிற்பர வத்தெரி
சித்த அநுக்ரஹம் — மறவேனே ;
கத்திய தத்தை கலைத்து விழத்திரி
கற்கவண் இட்டெறி — தினைகாவல்-
கற்ற குறத்தி நிறத்த கழுத்தடி
கட்டி அணைத்தப — னிருதோளா ;
சக்தியை ஒக்க இடத்தினில் வைத்தத
கப்பனு மெச்சிட — மறைநூலின்-
தத்துவ தற்பர முற்றும் உணர்த்திய
ஸப்த கிரீச்சுரர் — பெருமாளே.

## 206. திருவடியைப் பெற

தந்த தத்தத் தந்த தத்தத்
தந்த தத்தத் தந்த தத்தத்
தந்த தத்தத் தந்த தத்தத் தனதான

பொன்ற லைப்பொய்க் கும்பி றப்பைத்
துும்ப றுத்திட் டின்று நிற்கப்
புந்தி யிற்சற் றுங்கு றிக்கைக் கறியாமே-
பொங்கி முக்கிச சங்கை பற்றிச்
சிங்கி ஒத்தச் சங்க டத்துப்
புண்ப டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்;

துன்றும் இச்சைப் பண்ட னுக்குப்
பண்ப ளித்துச் சம்ப்ர மித்துத்
தும்பி பட்சிக் கும்ப்ர சச்சொப் பதிமீதே-
தொண்டு பட்டுத் தெண்டன் இட்டுக்
கண்டு பற்றத் தண்டை வர்க்கத்
துங்க ரத்நப் பங்க யத்தைத் தருவாயே;

குன்றெ டுத்துப் பந்த டித்துக்
கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்டல் ஒத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா-
கொம்பு குத்திச் சம்ப ழுத்தித்
திண்ட லத்திற் றண்டு வெற்பைக்
கொண்ட முக்கிச் சண்டை இட்டுப் பொரும்வேழம்;

சென்று ரித்துச் சுந்த ரிக்கச்
சந்த விர்த்துக் கண்ஸு கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நித்தக் களிகூரும்-
செண்ப கத்துச் சம்பு வுக்குத்
தொம்ப தத்துப் பண்பு ரைத்துச்
செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே.

## 5-9. தீர்த்த மலை

### 207. மனதுக்குப் புத்தி கூறல் (முருகனைச் சந்திப்பாயாக)

தாத்த தனதன தாத்த தனதன
தாத்த தனதன தாத்த தனதன
தாத்த தனதன தாத்த தனதன தனதான

பாட்டில் உருகிலை கேட்டும் உருகிலை
கூற்று வரும்வழி பார்த்தும் உருகிலை
பாட்டை அநுதினம் ஏற்றும் அறிகிலை தினமானம்-
பாப்ப ணியன்அருள் வீட்டை விழைகிலை
நாக்கின் நுனிகொடு ஏத்த அறிகிலை
பாழ்த்த பிறவியில் ஏற்ற மனது!நல் வழிபோக ;
மாட்டம் எனுகிறை கூட்டை விடுகிலை
ஏட்டின் விதிவழி ஓட்டம் அறிகிலை
பார்த்தும் இனிஒரு வார்த்தை அறைகுவன் இதுகேளாய்-
வாக்கும் உனதுள நோக்கும் அருளுவன்
ஏத்த புகழ்அடி யார்க்கும் எளியனை
வாழ்த்த இருவினை நீக்கு முருகனை மருவாயோ ;
ஆட்டி வடவரை வாட்டி அரவொடு
பூட்டி திரிபுரம் மூட்டி மறலியி
னோட்டம் அறசரண் நீட்டி மதன்உடல் திருநீறாய்-
ஆக்கி மகமதை வீட்டி ஒருவனை
ஆட்டின் முகமதை நாட்டி மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டும் உமையவன் அருள்பாலா ;
சீட்டை எழுதிவை யாற்றில் எதிர்உற
ஓட்டி அழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொர்டுகழு ஏற்ற அருளிய குருநாதா-
தீர்த்த எனதகம் ஏட்டை யுடன்நினை
ஏத்த அருளுடன் நோக்கி அருளுதி!
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமானே.

## 5-10. பேறைநகர் (பெரும் பேறு)

### 208. மாதர் மயக்கு அற

*தானதன தான தந்த தானதன தான தந்த*
*தானதன தான தந்த தனதான*

நீலமயில் சேரும் அந்தி மாலைநிகர் ஆகி அந்த
காரமிக வேநி றைந்த குழலாலும்-
நீடும்அதி ரேக இன்பம் ஆகிய ஸலாப சந்த்ரன்
நேர்தரு முகார விந்தம் அதனாலும் ;

ஆலின்நிகர் ஆன உந்தி யாலுமட வார்கள் தங்கள்
ஆசைவலை வீசு கெண்டை விழியாலும்-
ஆடிய கடா மிசைந்த வார்முலைக ளாலு மந்தன்
ஆகிமயல் நான்உ முன்று திரிவேனோ ;

கோலஉரு வாய்எ ழுந்து பார்அதனை யேஇ டந்து
கூறிடு முராரி விண்டு திருமார்பன்-
கூடம்உறை நீடு செம்பொன் மாமதலை யூடெ ழுந்த
கோபஅரி நார சிங்கன் மருகோனே ;

பீலிமயில் மீது றைந்து சூரர்தமை யேஜெ யங்கொள்
பேர்பெரிய வேல்கொள் செங்கை முருகோனே-
பேடைமட ஓதி மங்கள் கூடிவிளை யாடு கின்ற
பேறைநகர் வாழ வந்த பெருமாளே.

## 5-11. மயிலம்

### 209. திருவடியைப் பெற

தனதந்த தானன தானா தானா
தனதந்த தானன தானா தானா
தனதந்த தானன தானா தானா தனதான

கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்-
குயில்தங்கு மாமொழி யாலே நேரே
இழைதங்கு நூல்இடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானா விதம்ஆகி ;

உலைகொண்ட மாமெழு காயே மோகாய்
அலைஅம்பு ராசியின் ஊடே மூழ்கா
உடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ ;
உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனைஅண்டி யேநம னார்தூ தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள்நீ மீதான் அருள்வாயே ;

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூர்
அணிஅம்ச ராஸனம் வேருய் நீருய் இடவேதான்-
அவிர்கின்ற ஜோதிய வார்ஆர் நீள்சீர்
அனல்அங்கை வேல்விடும் வீரா ! தீரா !
அருமந்த ரூபக ! ஏகா ! வேறோர் வடிவாகி ;
மலைகொண்ட வேடுவர் கான்ஊ டேபோய்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண்டு லாய்அவள் தாள்மீ தேவீழ் குமரேசா-
மதிமிஞ்சு போதக வேலா ! சூளா
மகிழ்சப்பு வேதொழு பாதா ! நாதா !
மயிலந்தண் மாமலை வாழ்வே! வானோர் பெருமானே.

## 5-12 ரத்நகிரி(வாட்போக்கி)

### 210. பதம் பெற

தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன தனதான

சுற்றகப டோடுபல சூதுவினை ஆனபல
கற்றகள வோடுபழி காரர்கொலை காரர்சலி
சுற்றவிழல் ஆனபலி ஷோடுகடல் மூழ்கிவருதுயர்மேவித்-
துக்கஸமு ஸாரவலை மீனதென சூழில்விழு
செத்தைஎன மூளும்ஒரு தீயில்மெழு கானஉடல்
சுத்தம்அறி யாதபறி காயம்அதில் மேவிவரு பொறியாலே ;

சற்றுமதி யாதகலி காலன்வரு நேரம்அதில்
தத்துஅறி யாமல்ஒடி யாடிவரு சூதர்ஐவர்
சத்தபரி சானமண ரூபரஸ மானபொய்மை வினையாடித்-
தக்கமட வார்மனையை நாடிஅவ ரோடுபல
சித்துவினை யாடுவினை சீசிஇது நாறஉடல்
கத்திமுடி வாகிவிடு வேனொமுடி யாதபதம் அருள்வாயே ;

தித்திமித தீதிமித தீதிமித தீமிதத
　　தத்ததன தானதன தானனன தானனன
　　திக்குடுடு டூடமட டாடமட டூடுடுடு　　　　எனதானம்-
　திக்குமுகில் ஆடஅரி ஆடஅயன் ஆடசிவன்
　　ஒத்துவிளை யாடபரை ஆடவரர் ஆடபல
　　திக்கஸுரர் வாடஸுரர் பாடமறை பாடஎதிர்
　　　　　　　　　　　　களமீதே;

எத்திசையும் நாடியம ஞர்நிணமொ டாடபெல
　　மிக்கநரி ஆடகழு தாடகொடி ஆடஸமர்
　　எற்றிவரு பூதகணம் ஆடஒளி ஆடவிடு　　　　வடிவேலா-
　எத்திஒரு மானைதினை காவல்வல பூவைதனை
　　சித்தமலை காமுக! குஹா'நமசி வாயனொரு
　　ரத்நகிரி வாழ்முருக னே!இளைய வா!அமரர் பெருமானே.

## 211. முக்தி பெற

தத்தன தானனத் தனதான

பக்தியால் யான்உனைப்　　　　பலகாலும்-
　　பற்றியே மாதிருப்　　　　புகழ்பாடி;
முக்தன்ஆம் ஆறெனைப்　　　　பெருவாழ்வின்-
　　முக்தியே சேர்வதற்　　　　கருள்வாயே;
உத்தமா! தானஸற்　　　　குணர்நேயா-
　　ஒப்பிலா மாமணிக்　　　　கிரிவாஸா;
வித்தகா! ஞானசத்　　　　திநிபாதா-
　　வெற்றிவே லாயுதப்　　　　பெருமானே.

# 5-13. வள்ளியூர்

## 212. உடல் மாயை ஒழிய

தய்ய தானன தனதான

அல்லில் நேருமின்　　　　அதுதானும்-
　　அல்ல தாகிய　　　　உடல்மாயை;
கல்லின் நேரஅ　　　　வழிதோறும்-
　　கையும் நானும்உ　　　　லையலாமோ;

சொல்லி நேர்படு முதுசூரர்-
தொய்ய ஊர்கெட விடும்வேலா ;
வல்லி மார்இரு புறமாக-
வள்ளி யூர்உறை பெருமாளே ;

## 5-14. விநாயக மலை

### 213. அருள் பெற

தனதன தானு தனுதன தனதன தானு தனுதன
தனதன தானு தனுதன தனதான

சரவண ஜாதா! நமோநம கருணை அதீதா! நமோநம
சததள பாதா! நமோநம அபிராம-
தருண கதிரா! நமோநம நிருபமர் வீரா! நமோநம
சமதள ஊரா! நமோநம ஜகதீச ;-
பரம ஸொரூபா! நமோநம ஸுரர்பதி பூபா! நமோநம
பரிமள நீபா! நமோநம உமைகாளி-
பகவதி பாலா! நமோநம இஹபர மூலா! நமோநம
பவுருஷ சீலா! நமோநம அருள்தாராய் ;-
இரவியும் ஆகாச பூமியும் விரவிய தூள்ஏற வானவர்
எவர்களும் ஈடேற ஏழ்கடல் முறையோஎன்(று)-
இடர்பட மாமேரு பூதரம் இடிபட வேதான் நிசாசரர்
இகல்கெட மாவேக நீடயில் விடுவோனே ;
மரகத ஆகார ஆயனும் இரணிய ஆகார வேதனும்
வஸுவெனும் ஆகார ஈசனும் அடிபேண-
மயில்உறை வாழ்வே! விநாயக மலைஉறை வேலா! மஹீதர
வநசரர் ஆதாரம் ஆகிய பெருமாளே.

## 5-15. விராலி மலை

### 214. உபதேச நெறி பெற

தந்த தானன தான தனதன
தந்த தானன தான தனதன
தந்த தானன தான தனதன தனதான

ஐந்து பூதமும் ஆறு ஸமயமும்
மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப-
அண்ட ராதி சராச ரமும்உயர்
புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலஉரு வானும் நிலவொடு வெயில்காலும்;
சந்த்ர ஸூரியர் தாமும் அஜபையும்
விந்து நாதமும் ஏக வடிவம்அ
தன்சொ ரூபம தாக உறைவது சிவயோகம்-
தங்கள் ஆணவ மாயை கரும ம
லங்கள் போய்உப தேச குருபர
ஸம்ப்ர தாயமொ டேயும் நெறியது பெறுவேனோ;
வந்த தானவர் ஸேனை கெடிபுக
இந்த்ர லோகம்வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி-
வன்கண் வீரி பிடாரி ஹரஹர
சங்க ராஎன மேரு கிரிதலை
மண்டு தூள்எழ வேலை உருவிய வயலூரா;
வெந்த நீறணி மேனி இருடிகள்
பந்த பாச விகார பரவச
வென்றி ஆன ஸமாதி முறுகுகல் முழைகூடும்-
விண்டு மேல்மயில் ஆட இனியகள்
உண்டு கார்அளி பாட இதழிபொன்
விஞ்ச வீசு விராலி மலைஉறை பெருமானே.

## 215. ஞானோபதேசம் பெற

தானான தான தானான தான
தானான தான தனதான

மால்ஆசை கோபம் ஓயாதெ நாளும்
மாயா விகார வழியேசெல்-
மாபாவி காளி தானேனும் நாத!
மாதா பிதாவும் இனிநீயே;

நாலான வேத நூல்ஆக மாதி
நான்ஓதி னேனும் இலைவீணே
நாள்போய் விடாமல் ஆறாறு மீதில்
ஞானோப தேசம் அருள்வாயே;
பாலா! கலார ஆமோத! லேப
பாடீர வாக! அணிமீதே
பாதாள பூமி ஆதார! மீன
பானீய மேலை வயலூரா;
வேலா! விராலி வாழ்வே! ஸமூஹ
வேதாள பூத பதிசேயே
வீரா! கடோர சூராரியே!செவ்
வேளே! ஸுரேந்த்ரர் பெருமாளே.

## 6. பழமுதிர்சோலை

### 216. அஷ்டாங்க யோகம் அறிய

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தந்ததான

ஆசை நாலுசது ரக்கமல முற்றின்ஒளி
வீசி ஓடி இரு பக்கமொ டுறச்செல்வளி
ஆவல் கூரமண்முதற்ஜலஜ பொற்சபையும் இந்துவாகை
ஆர மூணுபதி யிற்கொள நிறுத்திவெளி
ஆரு மஞ்ஜாதிநூறு பத்தினுடன் எட்டுஇதழ்
ஆகி ஏழும்அள விட்டருண விற்பதியின் விந்துநாத;
ஓசை சாலும் ஒரு சத்தமதி கப்படிக
மோடு கூடிஒரு மித்தமுத ஸிதறியொடும்
ஓது வேதசர சக்திஅடி உற்றதிரு நந்தியூடே
ஊமை யேனைஒளிர் வித்துனது முத்திபெற
மூல வாசல்வெளி விட்டுன துரத்தில்ஒளிர்
யோக பேதவகை எட்டும்இதில் ஒட்டும்வகை
இன்று தாராய்;

வாசி வாணிகன் எனக்குதிரை விற்றுமகிழ்
வாத வூரன்அடி மைக்கொளுக்ருபைக்கடவுள்
மாழை ரூபன்முக மத்திகை விதத்தருண செங்கையாளி.
வாகு பாதிஉறை சக்திகவு ரிக்குதலே
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவைஎன்
மாசு சேர்எழு பிறப்பையு மறுத்தஉமை தந்தவாழ்வே ;

காசி ராமெசுரம் ரத்நகிரி ஸர்ப்பகிரி
ஆருர் வேலுர்தெவுர் கச்சிமது ரைப்பறியல்
காவை மூதுர்அரு ணக்கிரி திருத்தணியல்
செந்தில்நாகை-
காழி வேளூர்பழ நிக்கிரி குறுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல் சோலைவளர் வெற்பில் உறை முக்தர்புகழ்
தம்பிரானே.

## 217. திருவடி பெற

தானதத்த தான தனு தனுதன
தானதந்த தான தனு தனுதன
தானதத்த தான தனு தனுதன தனதான

சீர்சிறக்கு மேனி பசேல் பசேல்என
நூபுரத்தின் ஓசை கலீர் கலீர்என
சேரவிட்ட தாள்கள் சிவேல் சிவேல்என வருமானூர்-
சேகரத்தின் வாலை சிலோர் சிலோர்களும்
நூறுலக்ஷ கோடி மயால் மயால்கொடு
தேடிஒக்க வாடி ஐயோ ஐயோஎன மடமாதர்;

மார்படைத்த கோடு பளீர் பளீர்என
ஏமலித்தென் ஆவி பகீர் பகீர்என
மாமசக்கில் ஆசை உளோம் உளோம்என நினைவோடி-
வாடைபற்று வேளை அடா அடாஎன
நீமயக்கம் ஏது? சொலாய் ! சொலாய்என
வாரம்வைத்த பாதம் இதோ இதோஎன அருள்வாயே ;

பாரதத்தை மேரு வெளீ வெளிதிகழ்
கோடொடித்த நாளில் வரைஇ வரைஇபவர்
பானிறக்க ணேசர் குவா குவாஹநர் இளையோனே-
பாடல்முக்ய மாது தமீழ் தமீழ்இறை
மாமுநிக்கு காதில் உணர் உணர்விடு
பாசம்அற்ற வேத குரு குருபர குமரேசா ;

போர்மிகுத்த சூரன் விடோம் விடோம்என
நேர்எதிர்க்க வேலை படீர் படீர்என
போய்அறுத்த போது குபீர் குபீர்என வெகுசோரி-
பூமிஉக்க வீசு குஹா ! குஹா!திசழ்
சோலைவெற்பின் மேவு தெய்வா ! தெய்வானைதோள்
பூணிஇச்சை ஆறு புயா புயாறுள பெருமாளே.

# II பஞ்சபூத ஸ்தலங்கள்

## 1. காஞ்சீபுரம்

### 218. ஆசை அற

தத்தத் தனதான

| | | |
|---|---|---|
| அற்றைக் | கிரைதேடி—அத்தத் | திலும் ஆசை ; |
| பற்றித் | தவியாத—பற்றைப் | பெறுவேனோ ; |
| வெற்றிக் | கதிர்வேலா—வெற்பைத் | தொளைசீலா ; |
| கற்றுற் | றுணர்போதா—கச்சிப் | பெருமாளே. |

### 219 மோக்ஷம் பெற

தனதனத் தத்த தந்த தனதனத் தத்த தந்த
தனதனத் தத்த தந்த தனதான

அறிவிலாப் பித்தர் உன்றன் அடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி அறியாத-
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகள் ஆக்கிப் புகழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச் ;

சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருஉலாத் தித்தி ரிந்து
தெரிவைமா ர்க் குச்சொ ரிந்து அவமேயான்-
திரியுமார்க் கத்து நிந்தை அதனைமாற் றிப்ப ரிந்து
தெளிய மோக்ஷந்தனை என்று அருள்வாயே ;

இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்-
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொல் உடையோனே ;

குறவர் கூட்டத்தில் வந்து கிழவனுப் புக்கு நின்று
குருவிஓட் டித்தி ரிந்த தவமானைக்-
குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
குமர கோட்டத்த மர்ந்த பெருமானே.

## 220. முருகன் கருணையை வியத்தல்

தனதனந் தத்தத் தத்தன தத்தந்
தனதனந் தத்தத் தத்தன தத்தந்
தனதனந் தத்தத் தத்தன தத்தந் தனதான

கனிதரும் கொக்குக் கட்செவி வெற்பும்
பழநியும் தெற்குச் சற்குரு வெற்பும்
கதிரையும் சொற்குட் பட்ட திருச்செந் திலும்வேலும்-
கனவிலும் செப்பத் தப்புமனைச்சங்
கடஉடம் புக்குத் தக்க அனைத்தும்
களவுகொண் டிட்டுக் கற்பனை யிற்கண் சுழல்வேனைப் ;

புனிதன்அம் பைக்குக் கைத்தல ரத்நம்
பழையகங் கைக்குற் றப்புது முத்தம்
புவியில்அன் றைக்கற் றெய்ப்பவர் வைப்பென்
றுருகாளம்-

பொழுதும்வந் திக்கைக் கற்றஎனைப் பின்
பிழையுடன் பட்டுப் பக்தருள் வைக்கும்
பொறையைஎன் செப்பிச் செப்புவ தொப்பொன்
றுளதோதான் ;

அனனியம் பெற்றற் றற்றெரு பற்றும்
தெளிதரும் சித்தர்க் குத்தெளி சிற்கொந்
தபலெதென் கச்சிப் பிச்சிம லர்க்கொத் தளபாரை-
அறவி நுண் பச்சைப் பொற்கொடி கற்பெண்
டமுதினும் தித்திக் கப்படு சொற்கொம்
பகிலஅண் டத்துற் பத்திசெய் முத்தின் பொலமேருத்;
தனிவடம் பொற்புப் பெற்றமு லைக்குன்
றிணைசுமந் தெய்க்கப் பட்ட நுசுப்பின்
தருணிசங் குற்றுத் தத்துதி ரைக்கம் பையினூடே-
தவமுயன் றப்பொற் றப்படி கைக்கொண்
டறம்இரண் டெட்டெட் டெட்டும் வளர்க்கும்
தலைவிபங் கர்க்குச் சத்யம் உரைக்கும் பெருமானே.

## *221. பரம்பொருளை அடைய

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

செறிதரும் செப்பத் துற்பல வெற்பும்
பிறிதும்அங் கத்தைக் குற்ற விருப்பும்
சிகரிதுண் டிக்கக் கற்ற தனிச்செஞ் சுடர்வேலும்-
திரள்புயம் கொத்துப் பட்ட அனைத்தும்
தெளியநெஞ் சத்துப் புற்று மயக்கம்
திகழ்ப்ரபஞ் சத்தைப் புற்புதம் ஒக்கும் படிநாடும்;
அறிவறிந் தத்தற் க்ற்றது செப்பும்
கடவுளன் பக்தர்க் கச்ச மறுத்தன்
பருள்பவன் பொற்புக் கச்சியுள் நிற்கும் பெருமான் என்(று)
அவிழும்அன் புற்றுக் கற்று மனத்தின்
செயல்ஒழிந் தெட்டப் பட்டத னைச்சென்
றடைதரும் பக்வத் தைத்தமி யெற்கென் றருள்வாயே;

---

*இந்தப் பாடல் "திருக்கச்சி மேற்றளி"த் தலத்துக்கு உரியது.

குறியவன் செப்பப் பட்ட எவர்க்கும்
பெரியவன் கற்பிக் கப்படு சுக்ரன்
குலைகுலைந் துட்கச் சத்யம் மிழற்றும் சிறுபாலன்-

குதலையின் சொற்குத் தர்க்கம் உரைக்கும்
கனகன்அங் கத்திற் குத்தி நிணச்செங்
குடர்பிடுங் கித்திக் குற்ற முகச்சிங் கமுராரி;

பொறிவிடும் துத்திக் கட்செவி யிற்கண்
துயில் கொளும்; சக்ரக் கைக்கிரி சுத்தம்
புயல்எனும் பொற்புப் பெற்ற நிறத்தன் ஜகதாதை-

புநிதசங் கத்துக் கைத்தல நிர்த்தன்
பழையசந் தத்தைப் பெற்ற மடப்பெண்
புகலுகொண் டற்றுச் சித்தி அளிக்கும் பெருமாளே.

## 222. கனவிலும் நினைக்க

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

புரைபடுஞ் செற்றக் குற்ற மனத்தன்
தவம்இலன் சுத்தச் சத்ய அஸத்யன்
புகல்இலன் சுற்றச் செத்தையுள் நிற்குந் துரிசாளன்-

பொறை இலன் கொத்துத் தத்வ விகற்பம்
ஸகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொருளுடன் பற்றுச் சற்றும்இல் வெற்றன் கொடியேன்நின்;

கரை அறுஞ் சித்ரச் சொற்புகழ் கற்குங்
கதிஇலன் கட்டைப் புத்தியன் மட்டன்
கதிஇலன் செச்சைப் பொற்புய வெற்புங் கதிர்வேலுங்-

கதிரையுஞ் சக்ரப் பொற்றையு மற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு முற்றுங்
கனவிலுஞ் சித்தத் திற்கரு திக்கொண் டடைவேனோ;

குரைதருஞ் சுற்றுச் சத்த ஸமுத்ரங்
கதறிவெந் துட்கக் கட்புர துட்டன்
குலமடங் கக்கெட் டொட்டொழி யச்சென் றுருநேமிக்-

குவடொதுங் கச்சொர்க் கத்தர் இடுக்கண்
கெடநடுங் கத்திக் கிற்கிரி வர்க்கங்
குலிசதுங் கக்கைக் கொற்றவன் நத்தம் குடியேறத்,

தரைவிசும் பைச்சிட் டித்த இருக்கன்
சதுர்முகன் சிட்சைப் பட்டொழி யச்சந்
ததமும்வந் திக்கப் பெற்றவர் தத்தம் பகையோடத்-

தகையதண் டைப்பொற் சித்ர விசித்ரந்
தருசதங் கைக்கொத் தொத்து முழக்குஞ்
சரணகஞ் சத்திற் பொற்கழல் கட்டும் பெருமாளே.

## 223. ஆண்டருள

தத்தத் தத்தத் தனதான

பூட்டுப் பட்டுக் கதிதோறும்- முற்றச் சுற்றிப் பலநாளும்;
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச்-சற்றுப் பற்றக் கருதாதோ;
வட்டப் புட்பத் தலமீதே- வைக்கத் தக்கத் திருபாதா;
கட்டத் தற்றத் தருள்வோனே- கச்சிச் சொக்கப்
பெருமாளே;

# II—2. திருஆனைக்கா

## 224. இந்த்ரிய தாப சபலம் அற

தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன தனதான

ஓல மறைகள் அறைகின்ற ஒன்றது
மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்
ஓது சரியை க்ரியையும் புணர்ந்தவர் எவராலும்-

ஓத அரிய துரியங் கடந்தது
போத அருவ சுருபம் ப்ரபஞ்சமும்
ஊனும் உயிரும் முழுதுங் கலந்தது சிவஞானம்;

சால உடைய தவர்கண்டு கொண்டது
மூல நிறைவு குறைவின்றி நின்றது
ஜாதி குலமும் இலதன்றி அன்பர்சொ — னவியோமம்-
சாரும் அநுபவர் அமைந்த மைந்தமெய்
வீடு பரம சுகஸிந்து இந்த்ரிய
தாப சபலம் அறவந்து நின்கழல் — பெறுவேனோ ;

வால குமர! குஹகந்த! குன்றெறி
வேல! மயில! எனவந்து கும்பிடு
வான விபுதர் பதிஇந்த்ரன் வெந்துயர் — களைவோனே-
வாஸ களப வரதுங்க மங்கல
வீர கடக புய! சிங்க! சுந்தர!
வாகை புனையும் ரணரங்க புங்கவ! — வயலூரா ;

ஞால முதல்வி இமயம் பயந்தமின்
நீலி கவுரி பரைமங்கை குண்டலி
நாளும் இனிய கனிஎங்கள் அம்பிகை — த்ரிபுராயி-
நாத வடிவி அகிலம் பரந்தவள்
ஆலின் உதரம் உளபைங் கரும்பு *வெண்
நாவல் அரசு மனைவஞ்சி தந்தருள் — பெருமாளே.

## 225. வீடு பெற

தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன தனதான

குருதி புலால்என்பு தோல் நரம்புகள்
கிருமிகள் மால்அம் பிசித மண்டிய
குடர்நிணம் ரோமங்கள் மூளை என்பன — பொதிகாயக்-
குடில்இடை ஓர்ஐந்து வேடர் ஐம்புல
அடவியில் ஓடும் துராசை வஞ்சகர்
கொடியவர் மாயஞ்ச பாத கம்செய — அதனாலே ;

---

*வெண் நாவல்-வெண் நாவல் மரம் தல விருக்ஷமாய் உள்ள திரு ஆனைக்கா.

சுருதி புராணங்கள் ஆகமம்பகர்
சரியைக்ரி யாஅண்டர் பூஜை வந்தனை
துதியொடு நாடும் தியானம் ஒன்றையும் முயலாதே-
சுமடம தாய்வம்பு மால்கொளுந்திய
திமிரரோ டேபந்த மாய் வருந்திய
துரிசற ஆநந்த வீடு கண்டிட அருள்வாயே;

ஒருதனி வேல்கொண்டு நீள்க்ர வுஞ்சமும்
நிருதரும் மாவும் கலோல சிந்துவும்
உடைபட மோதுங் குமார! பங்கய கரவீரா-
உயர்தவர் மாஉம்ப ர்ஆன அண்டர்கள்
அடிதொழு தேமன் பராவு தொண்டர்கள்
உளமதில் நாளுங் குலாவி இன்புற உறைவோனே;

கருதிய ஆறங்க வேள்வி அந்தணர்
ஹரிஹரி கோவிந்த கேச வென்றிரு
கழல்தொழு ஸ்ரீரங்க ராஜன் நண்புறு மருகோனே-
கமலனும் ஆகண்ட லாதி அண்டரும்
எமது பிரான்என்று தாள்வணங்கிய
*கரிவனம் வாழ்சம்பு நாதர் தந்தருள் பெருமாளே.

## 226. ஞானம் பெற

தானத் தானத் தனதான

நாடித் தேடித் தொழுவார்பால்- நான்நத் தாகத்
திரிவேனோ!
மாடக் கூடற் பதிஞான- வாழ்வைச் சேரத் தருவாயே.
பாடற் காதற் புரிவோனே- பாலைத் தேனொத்
தருள்வோனே;
ஆடற் றோகைக் கினியோனே- ஆனைக் காவிற்
பெருமாளே.

---

*கரிவனம்—கஜாரணியம்—ஆனைக்கா.

# II—3. திருவண்ணுமலை

## 227. கலைஞானம் பெற

தனத்தா தனத்தத் தனத்தா தனத்தத்
தனத்தா தனத்தத் தனதான

அருக்கார் நலத்தைத் திரிப்பார் மனத்துக்
கடுத்தாசை பற்றித் தளராதே-
அடற்கால னுக்குக் கடைக்கால் மிதித்திட்
டறப்பேதகப்பட் டழியாதே-
கருக்காரர் நட்பைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்திற் பிறவாதே-
கருத்தால் எனக்குத் திருத்தாள் அளித்துக்
கலைப்போ தகத்தைப் புகல்வாயே!
ஒருக்கால் நினைத்திட் டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார்கள் சித்தத் துறைவோனே-
உரத்தோள் இடத்திற் குறத்தேனை வைத்திட்
டொளித் தோடும் வெற்றிக் குமரேசா;
செருக்கா தருக்கிச் சுரச்சூர் நெருக்கச்
செருச்சூர் மரிக்கப் பொரும்வேலா-
திறப்பூ தலத்திற் றிரட்சோண வெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே.

## 228. அகப்பொருள்

தனதானன தானன தனத்தந் தனதான

இமராஜன் நிலாவ தெறிக்கும் கனலாலே-
இளவாடையும் ஊரும் ஒறுக்கும் படியாலே;
சமராகிய மாரன் எடுக்கும் கணையாலே-
தனிமான்உயிர் சோரும் அதற்கொன் றருள்வாயே;
குமரா 'முருகா! ஜடிலத்தன் குருநாதா-
குறமாமகள் ஆசை தணிக்கும் திருமார்பா;
அமராவதி வாழ்வமரர்க்கன் றருள்வோனே-
அருணாபுரி வீதியில் நிற்கும் பெருமாளே.

## 229. அருள்பெற

தனனதனத் தன்தான

இரவுபகற் பலகாலும்- இயல்இசைமுத் தமிழ்கூறித்;
திரம்அதனைத் தெளிவாகத்- திருவருளைத் தருவாயே;
பரகருணைப் பெருவாழ்வே- பரசிவதத் துவஞானா;
அரன்அருள்சற் புதல்வோனே- அருணகிரிப் பெருமானே.

## 230. கிருபை பெற

தனன தனனா தனன தனனா
தனன தனனா தனதான

இருவர் மயலோ அமளி விதமோ
என்என செயலோ அணுகாத-
இருடி அயன்மால் அமரர் அடியார்
இசையும் ஒலிதான் இவைகேளா(து);
ஒருவன் அடியேன் அலறு மொழிதான்
ஒருவர் பரிவாய் மொழிவாரோ-
உனது பததூள் புவன கிரிதான்
உனது கிருபா கரம்ஏதோ;
பரம குருவாய் அணுவில் அசைவாய்
பவன முதலா கியபூதப்-
படையும் உடையாய்' சகல வடிவாய்
பழைய வடிவா கியவேலா;
அரியும் அயனோ டபயம் எனவே
அயிலை இருள்மேல் விடுவோனே-
அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருண கிரிவாழ் பெருமானே.

## 231 பேரின்பப் பொருளைப் பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

கருணை சிறிதுமில் பறிதலை நிசிசரர்
பிசித அசனம றவர்இவர் முதலிய
கலக விபரித வெகுபர ஸமயிகள் பலர்கூடிக்-
கலகலெனநெறி கெடமுறை முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத அரியதை விழிபுனல் வரமொழி குழறுஅன்(பு);

உருகி உனதருள் பரவுகை வரில்விர
கொழியில் உலகியல் பிணைவிடில் உரைசெயல்
உணர்வு கெடில்உயிர் புணர்இரு வினைஅன றதுபோக-
உதறில் எனதெனும் மலம்அறில் அறிவினில்
எளிது பெறல்என மறைபறை அறைவதொர்
உதய மரணமில் பொருளினை அருளுவ தொருநாளே;

தருண சததள பரிமள பரிபுர
சரணி தமனிய தநுதரி திரிபுர
தஹநி கவுரி பவதிபக வதிபயி ரவிசூலி-
ஜடில தரிஅநு பவைஉமை திரிபுரை
ஸகல புவனமும் உதவிய பதிவ்ருதை
ஸமய முதல்வி தனய! பகிரதிஸுத! சதகோடி;

அருண ரவியினும் அழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர! குருபர!
அருணை நகர்உறை சரவண! குரவணி புயவேளே-
அடவி சரர்குல மரகத வநிதையும்
அமரர் குமரியும் அனவர தமும்அரு
கழகு பெறநிலை பெறவரம் அருளிய பெருமானே.

## 232. மாதர் மயக்கு அற

தானன தான தத்த தனதான

கீத விநோத மெச்சு குரலாலே-
கீறு மையார் முடித்த குழலாலே;
நீதி இலாத ழித்தும் உழலாதே;
நீமயில் ஏறி உற்று வரவேணும்;

சூதமர் சூரர் உட்க பொருசூரா-
சோண கிரியில் உற்ற குமரேசா;
ஆதியர் காதொரு ருச்சொல் அருள்வோனே-
ஆனை முகார் கனிஷ்ட பெருமானே.

## 233. கனவிலும் திருவடி மறவாதிருக்க

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

குமர! குருபர! குணதர! நிசிசர
திமிர தினகர! சரவண பவ! கிரி
குமரி ஸுத!பகி ரதிஸுத! ஸுரபதி குலமானும்-
குறவர் சிறுமியு மருவிய திரள்புய!
முருக! சரணென உருகுதல் சிறிதும் இல்
கொடிய வினையனை அவலனை அசடனை அதிமோகக்;
கமரில் விழவிடும் அழகுடை அரிவையர்
களவி னொடுபொருள் அளவளவு அருளிய
கலவி அளறிடை துவளுறும் வெளிறனை இனிதாளக்;
கருணை அடியரொ டருணையில் ஒருவிசை
சுருதி புடைதர வரும்இரு பரிபுர
கமல மலரடி கனவிலும் நனவிலு மறவேனே;
தமர மிகுதிரை எறிவளை கடல்குடல்
மறுகி அலைபட விடநதி உமிழ்வன
ஸஹஸ முககண பணபணி பதிநெடு வடமாக-
ஸகல உலகமும் நிலைபெற நிறுவிய
கனக கிரிகிரி தரவெகு கரமலர்
தளர இனியதொர் அமுதினை ஒருதனி கடையாநின்(று);
அமரர் பசிகெட உதவிய க்ருமைமுகில்
அகில புவனமும் அளவிடு குறியவன்
அளவு நெடியவன் அளவிட அரியவன் மருகோனே;
அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர ஒளிதிகழ்
அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே.

## 234. வேல் மயில் பெற

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான

சிவமா துடனே அநுபோ கமதாய்
சிவஞா னமுதே பசியாறித்-
திகழ்வோ டிருவோர் ஒருரு பமதாய்
திகைலோ கமெலாம் அநுபோகி;
இவனே எனமால் அயனோ டமரோர்
இளையோன் எனவே மறையோத-
இறையோன் இடமாய் விளையா டுகவே
இயல்வே லுடன்மா அருள்வாயே;
தவலோ கம்எலாம் முறையோ எனவே
தழல்வேல் கொடுபோய் அசுராரைத்-
தலைதூள் படஏழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே;
கவர்பூ வடிவாள் குறமா துடன்மால்
கடனும் எனவே அணைமார்பா-
கடையேன் மிடிதூள் படநோய் விடவே
கனல்மால் வரைசேர் பெருமானே.

## 235. காலன் வருநாளில் தரிசனம் பெற

தனன தனந்தன தான தத்த தந்த
தனன தனந்தன தான தத்த தந்த
தனன தனந்தன தான தத்த தந்த
தனதனத் தனதான

தும்ர குரங்களும் கார் இருட்பி ழம்பு
மெழுகிய அங்கமும் பார்வை யிற்கொ ளுந்து
தழல்உமிழ் கண்களும் காளம் ஒத்த கொம்பும்
உளகதக் கடமாமேல்-
தனிவரும் அந்தகன் பாசம் விட்டெ றிந்து
அடவரும் என்றுசிந் தாகு லத்தி ருந்து
தமர்அழ மைந்தரும் சோகம் உற்றி ரங்க
மரணபக் குவமாம்நாள்;

கமல முகங்களும் கோம ளத்தி லங்கு
நகையும் நெடுங்கணுங் காதி னிற்று லங்கு
கனக குதம்பையும் தோடும் வஜ்ர அங்க
தமும்அடற் சுடர்வேலும்-
கடிதுல கெங்கணும் தாடி இட்டு வந்த
மயிலும்இ லங்கலங் கார பொற்ச தங்கை
கழல் ஒலி தண்டையங் காலும் ஒக்க வந்து
வரம்எனக் கருள் கூர்வாய்;

இமகிரி வந்தபொன் பாவை பச்சை வஞ்சி
அகில தலம்பெறும் பூவை சக்தி அம்பை
இளமுலை யின்செழும் பால்கு டித்தி லங்கும்
இயல்நிமிர்த் திடுவோனே-
இறைவர் இறைஞ்சநின் ருக மப்ர ஸங்கம்
உரைசெய் திடும்ப்ரசண் டாவி சித்து நின்ற
ரணமுக துங்கவெஞ் சூரு டற்பி ளந்த
அயிலுடைக் கதிர்வேலா;

அமணர் அடங்கலும் கூட லிற்றி ரண்டு
கழுவில் உதைந்துதைந் தேற விட்டு நின்ற
அபிநவ துங்க!கங் காந திக்கு மைந்த!
அடியவர்க் கெளியோனே-
அமரர் வணங்குகந் தா!கு றத்தி கொங்கை
தனில்முழு கும்கடம் பா!மி குத்த செஞ்சொல்
அருணை நெடுந்தடங் கோபு ரத்த மர்ந்த
அறுமுகப் பெருமானே.

## 236. சிவஞான ஸித்திபெற

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான

வலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள்சூலை குட்டமொடு குளிர்தாகம்-
மலிநீர் இழிச்சல்பெரு வயிறீளை கக்குகளை
வருநீர் அடைப்பினுடன் பெருநோய்கள்

இலைநோய் அடைத்தஉடல் புவிமீ தெடுத்துழல்கை
தெளியா எனக்கும்இனி முடியாதே-
சிவமார் திருப்புகழை எனுநா வினிற்புகழ
சிவஞான ஸித்திதனை அருள்வாயே;

தொலையாத பத்திஉள திருமால் களிக்க ஒரு
சுடர்வீசு சக்ரம்அதை அருள்ஞான-
துவர்வேணி அப்பன்மிகு சிவகாமி கர்த்தன்மிகு
ஸுகவாரி சித்தன்அருள் முருகோனே;

அலைசூரன் வெற்பும்அரி முகன்ஆனை வக்திரனொ
டஸுரார் இறக்கவிடும் அழல்வேலா-
அமுதா சனத்திகுற மடவாள் கரிப்பெணொடும்
அருணா சலத்திலுறை பெருமாளே.

## 237. சிவ அமுது உண்ண

தனதன தனனத் தனதன தனனத்
தனதன தனனத் தனதன தனனத்
தனதன தனனத் தனதன தனனத் தனதான

செயசெய அருணாத் திரிசிவ யநமச்
செயசெய அருணாத் திரிமசி வயநச்
செயசெய அருணாத் திரிநம சிவயத் திருமூலா-
செயசெய அருணாத் திரியந மசிவச்
செயசெய அருணாத் திரிவய நமசிச்
செயசெய அருணாத் திரிசிவ யநமஸ்த் தெனமாறி;

செயசெய அருணாத் திரிதனில் விழிவைத்
தரகர சரணாத் திரியென உருகிச்
செயசெய குருபாக் கியமென மருவிச் சுடர்தாளைச்-
சிவசிவ சரணாத் திரிஜெய ஜெயெனச்
சரண்மிசை தொழுதத் தியசுவை பெருகத்
திருவடி சிவவாக் கியகடல் அமுதைக் குடியேனோ;

செயசெய சரணாத் திருஎன முநிவர்க்
கணம்இது வினைகாத் திடும்என மருவச்
செடமுடி மலைபோற் றவுணர்கள் அவியச் சுடும்வேலா-
திருமுடி அடிபார்த் திடும்என இருவர்க்
கடிதலை தெரியாப் படிநினை அருணச்
சிவசுடர் சிகிநாட் டவன்இரு செவியிற் புகல்வோனே;
செயசெய சரணாத் திரியெனும் அடியெற்
கிருவினை பொடியாக் கியசுடர் வெளியிற்
றிருநடம் இதுபார்த் திடும்என மகிழ்பொற் குருநாதா-
திகழ்கிளி மொழிபாற் சுவைஇதழ் அமுதக்
குறமகள் முலைமேற் புதுமண மருவிச்
சிவகிரி அருணா சலமகிழ் பொற் பெருமானே.

# II—4. திருக்காளத்தி

## 238. ஆண்டருள

தனத்தா தத்தத் தனதான

சிரத்தா னத்திற் பணியாதே-
செகத்தோர் பற்றைக் குறியாதே;
வருத்தா மற்றொப் பிலதான-
மலர்த்தாள் வைத்தெத் தனைஆள்வாய்;
நிருத்தா! கர்த்தத் துவநேசா-
நினைத்தார் சித்தத் துறைவோனே;
திருத்தாள் முத்தர்க் கருள்வோனே-
திருக்கா ளத்திப் பெருமானே.

## 239. கலங்கா மதிபெற

தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன தனதான

பங்கய னார்பெற் றிடும்ச ராசர
அண்டம தாய்உற் றிருந்த பார்மிசை
பஞ்சவர் கூடித் திரண்ட தேன்நர உருவாயே-

பந்தம தாகப் பிணிந்த ஆசையில்
இங்கிதம் ஆகத் திரிந்து மாதர்கள்
பண்மொழி சூதைக் கடந்தி டாதுழல் படிறுயே;
வெங்கடன் ஆகித் தளர்ந்து நோய்வினை
வந்துடல் மூடக் கலங்கி டாமதி
தந்தடி யேனைப் புரந்தி டாய்! உன தருளாலே-
சங்கரர் வாமத் திருந்த நூபுர
ஸுந்தரி ஆகித் தருப்ஸுதா! பத
தண்டைய னே! குக் குடம் பதாகையின் முருகோனே;
திங்கள் உலாவப் பணிந்த வேணியர்
பொங்கர வாடப் புனைந்த மார்பினர்
திண்சிலை சூலத் தழுந்து பாணியர் நெடிதாழ்வார்-
விந்துவி லேஉற் றெழுந்த காளவி
டம்கள மீதிற் சிறந்த ஜோதியர்
திண்புய மீதிற் றவழ்ந்து விறிய குருநாதா;
சிங்கம தாகத் திரிந்த மால்கெரு
வம்பொடி ஆகப் பறந்து சீறிய
சிம்புள தாகச் சிறந்த காளன வருகோமுன்-
செங்கதி ரோனைக் கடிந்த தீவினை
துஞ்சிட வேநற் றவஞ்செய் தேறிய
தென்கயி லாயத் தமர்ந்து வாழ்வருள் பெருமானே.

## II—5. சிதம்பரம்

### 240. ஆண்டருள

தனதன தனதன தானன தானன
தனதன தனதன தானன தானன
தனதன தனதன தானன தானன தந்ததான

அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை ஆதாளி வாயனை அஞ்சுபூதம்-
அடைசிய சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணான வீணனை
அழுகலை அவிசலை ஆறான ஊணனை அன்பிலாத;

கவடனை விகடனை நாணு விகாரனை
வெகுளியை வெகுவித மூதேவி மூடிய
கலியனை அலியனை ஆதேச வாழ்வனை — வெம்பிவீழும்-
களியனை அறிவுரை பேணாத மாநுட
கசனியை அசனியை மாபாதன் ஆகிய
கதிஇலி தனைஅடி நாயேனை ஆளுவ — தெந்தநாளோ;

மவுலியில் அழகிய பாதாள லோகனும்
மரகத முழுகிய காகோத ராஜனும்
மநுநெறி யுடன்வளர் சோணாடர் கோனுடன்
உம்பர்சேரும்-
மகபதி புகழ்புலி யூர்வாழும் நாயகர்
மடமயில் மகிழ்வுற வானாடர் கோஎன
மலைமகள் உமைதரு வாழ்வே! மனோகர! மன்றுள்ஆடும்;

சிவசிவ ஹரஹர தேவா! நமோநம
தெரிசன பரகதி ஆனாய்! நமோநம
திசையினு மிசையினும் வாழ்வே! நமோநம
செஞ்சொல்சேரும்-
திருதரு கலவி மணாளா! நமோநம
திரிபுரம் எரிசெய்த கோவே! நமோநம
ஜெயஜெய ஹரஹர தேவாஸு ராதிபர் — தம்பிரானே.

## 241. தரிசனை பெற

தனதனன தன்ன தந்தத் தனதான

இருவினையின் மதிமயங்கித் — திரியாதே
எழுநரகில் உழலும் நெஞ்சுற் — றலையாதே;
பரமகுரு அருள்நினைந்திட் — டுணர்வாலே
பரவுதரி சனையை என்றெற் — கருள்வாயே;
தெரிதமிழை உதவு சங்கப் — புலவோனே
சிவன்அருளும் முருக! செம்பொற் — கழலோனே;
கருணைநெறி புரியும் அன்பர்க் — கெளியோனே
கனக ஸபை மருவு கந்தப் — பெருமானே.

## 242. திருவடியைப் பெற

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான

எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
  எனதிடர் பிறவி — அவதாரம்-
 இனிஉன தபயம் எனதுயிர் உடலும்
  இனிஉடல் விடுக — முடியாது ;

கழுகொடு நரியும் எரிபுவி மறலி
  கமலனு மிகவும் — அயர்வானார்
 கடன்உன தபயம் அடிமைஉன் அடிமை
  கடுகிஉன் அடிகள் — தருவாயே ;

விழுதிகழ் அழகி மரகத வடிவி
  விமலிமுன் அருளும் — முருகோனே-
 விரிதலம் எரிய குலகிரி நெரிய
  விசைபெறு மயிலில் — வருவோனே ;

எழுகடல் குமுற அவுணர்கள் உயிரை
  இரைகொளும் அயிலை — உடையோனே-
 இமையவர் முநிவர் பரவிய புலியு
  ரினில்நட மருவு — பெருமாளே.

## 243. புகழ்ந்து போற்ற

தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன தனதான

கட்டி முண்டகர பாலி அங்கிதனை
  முட்டி அண்டமொடு தாவி விந்துஒலி
  கத்த மந்திரவ தான வெண்புரவி — மிசைஏறிக்-
 கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்
  பட்டி மண்டபமு டாடி இந்துவொடு
  கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ டசையாமல்;

சுட்டு வெம்புரம் நிருக விஞ்சைகொடு
தத்து வங்கள்விழ சாடி எண்குணவர்
சொர்க்கம் வந்துகையுள் ஆக எந்தைபதம் உறமேவித்-
துக்கம் வெந்துவிழ ஞானம் உண்டுகுடில்
வச்சி ரங்கள்என மேனி தங்கஉற
சுத்த கம்புகுத வேத விந்தையொடு புகழ்வேனோ ;

எட்டி ரண்டும்அறி யாத என்செவியில்
எட்டி ரண்டும்இது வாம் இலிங்கம்என
எட்டி ரண்டும்வெளி யாமொ ழிந்தகுரு முருகோனே-
எட்டி ரண்டுதிசை ஓட செங்குருதி
எட்டி ரண்டும்உரு வாசி வஞ்சகர்மேல்
எட்டி ரண்டுதிசை யோர்கள் பொன்றஅயில்
விடுவோனே ;

செட்டி என்றுசிவ காமி தன்பதியில்
கட்டு செங்கைவளை கூறும் எந்தை இட
சித்த முங்குளிர நாதி வண்பொருளை நவில்வோனே ;
செட்டி என்றுவன மேவி இன்பரஸ
சக்தி யின்செயலி னாளை அன்புருக
தெட்டி வந்துபுலி யூரில் மன்றுள்வளர் பெருமானே.

## 244. துதி

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான

கனகஸபை மேவும் எனதுகுரு நாத
கருணைமுரு கேசப் பெருமாள்காண்
கனகதிற வேதன் அபயம்இட மோது
கரகமல ஜோதிப் பெருமாள்காண் ;
வினவும்அடி யாரை மருவிவினை யாடு
விரகுரஸ மோஹப் பெருமாள்காண்
விதிமுநிவர் தேவர் அருணகிரி நாதர்
விமலசர சோதிப் பெருமாள்காண்

ஜனகிமண வாளன் மருகனென வேத
சதமகிழ் குமாரப் பெருமாள்காண்-
சரணசிவ காமி இரணகுல காரி
தருமுருக நாமப் பெருமாள்காண்;
இனிதுவன மேவும் அமிர்தகுற மாதொ
டியல்பரவு காதற் பெருமாள்காண்-
இணையில்இப தோகை மதியின்மக ளோடும்
இயல்புலியூர் வாழ்பொற் பெருமானே.

## 245. முக்தி பெற

தான தான தான தானன தான தந்த
தத்த தந்த தத்த தந்த தந்ததான

ஞாய மாய வீடு மீறிய கூடு நந்து
புற்பு தந்த னிற்கு ரம்பை கொண்டுநாளும்-
காசில் ஆசை தேடி வாழ்வினை நாடி இந்த்ரி
யப்ர மந்த டித்த லைந்து சிந்தைவேறாய்;
வேயில் ஆய தோள மாமட வார்கள் பங்க
யத்து கொங்கை உற்றி ணங்கி நொந்திடாதே-
வேத கீத போத மோனமெய் ஞான நந்த
முற்றி டின்ப முக்தி ஒன்று தந்திடாயோ;
மாய வீர தீர சூரர்கள் பாற நின்ற
விக்ர மங்கொள் வெற்பி டந்த செங்கைவேலா;
வாகை வேடர் பேதை காதல வேழ மங்கை
யைப்பு ணர்ந்த வெற்ப கந்த! செந்தில்வேளே;
ஆயும் வேத கீதம் ஏழிசை பாட அஞ்செ
ழுத்த ழங்க முட்ட நின்று துன்றுஜோதி-
ஆதி நாதர் ஆடு நாடக சாலை அம்ப
லச்சி தம்ப ரத்த மர்ந்த தம்பிரானே.

## 246. ஞானம் பெற

தான தனத்தம் தான தனத்தம்
தான தனத்தம் தனதான

ஆவி உடுத்தும் தாழ்சடை வைத்தும்
காடுகள் புக்கும் தடுமாறிக்-
காய்கனி துய்த்தும் காயம் ஒறுத்தும்
காசினி முற்றும் திரியாதே;
ஜீவன் ஒடுக்கம் பூத ஒடுக்கம்
தேற உதிக்கும் பரஞான-
தீப விளக்கம் காண எனக்குன்
சீதள பத்மம் தருவாயே;
பாவ நிறத்தின் தாருக வர்க்கம்
பாழ்பட உக்ரம் தருவீரா-
பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்
பாடலை மெச்சும் கதிர்வேலா;
தூவிகள் நிற்கும் சாலி வளைக்கும்
சோலை சிறக்கும் புலியூரா-
சூரர் மிகக்கொண் டாட நடிக்கும்
தோகை நடத்தும் பெருமாளே.

## 247. துதி

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான

கைத்தருண ஜோதி அத்திமுக வேத
கற்பகஸ கோத்ரப் பெருமாள்காண்-
கற்புசிவ காமி நித்யகலி யாணி
கத்தர்குரு நாதப் பெருமாள்காண்;
வித்துருப ராம ருக்குமரு கான
வெற்றிஅயில் பாணிப் பெருமாள்காண்-
வெற்புளக டாகம் உட்குதிர வீசு
வெற்றிமயில் வாஹப் பெருமாள்காண்
சித்ரமுகம் ஆறு முத்துமணி மார்பு
திக்கினின் இலாதப் பெருமாள்காண்-
தித்திமிதி தீதென் ஒத்தின்ளை யாடு
சித்திரகு மாரப் பெருமாள்காண்;

சுத்தவிர சூரர் பட்டுவிழ வேலை
 தொட்டகவி ராஜப் பெருமாள்காண்-
துப்புவளி யோடும் அப்புலியூர் மேவு
 சுத்தசிவ ஞானப் பெருமாளே.

## 248. திருவடியைப் பெற

தனனதந்தம் தனனதந்தம்
தனனதந்தம் தானந்தம் * * * தனதான

*சுகுடமுந்துங் கடல்அடைந்துங்
 குளமகிழ்ந்துந் தோய்சங்கங்
கமுகடைந்தண் டமுதகண்டந்
 தரளகந்தந் தேர்கஞ்சஞ்
சரம்எனுங்கண் குமிழதுண்டம்
 புருவவனுஞ்செஞ் சாபம்பொன் திகழ்மாதர்-
ஜலஜ கெந்தம் புழுகுடன்சண்
 பகமணங்கொண் டேய்ரண்டந்
தனகனப பொன் கிரிவணங்கும்
 பொறிபடுஞ்செய் பேர்வந்தண்
சலனசப பொன் றிடை பணங்கின்
 கடிதடங் கொண் டாரமபொன் தொடர்பார்வை;
புகலல்கண்டஞ் சரிகரம்பொன்
 சரணபந்தந் தோதிந்தம்
புரமுடன்கிண் கிணிசிலம்பும்
 பொலிஅலம்புந் தாளரங்கம்
புணர்வலைந்தண் டுவரொடுந்தொண்
 டிடர்கிடந்துண் டோகொஞ்சுங் கடைநாயேன்-
புகழ்அடைந்துன் கழல்பணிந்தொண்
 பொடியணிந்திங் காநந்தம்
புனல்படிந்துண் டவசமிஞ்சுந்
 தவசர்சந்தம் போலுந்திண்

---

* இப்பாடலைத் தவளசங்குப் பாடல் என்பர் வள்ளிமலை ஸ்வாமிகள்.

புவனிகண்டின் றடிவணங்குஞ்
செயல்கொளஞ்செஞ் சீர்செம்பொன் கழல்தாராய்;

திகுடதிந்திந் தகுடதந்தத்
திகுடதிந்திந் தோதிந்தம்
டகுடடண்டண் டிகுடடிண்டிண்
டகுடடண்டண் டோடிண்டிண்
டிமுடடிண்டின் டிமுடடுண்டுண்
டிமுடடிண்டெ ன்றே சங்கம் பலபேரி

செககணஞ்சஞ் சலிகைபஞ்சம்
பறைமுழங்கும் போர் அண்டஞ்
சிலைஇடிந்துங் கடல்வடிந்தும்
பொடிபறந்துண் டோர்சங்கஞ்
சிரம்உடைந்தண் டவுணர் அங்கம்
பிணமலைந்தன் றுடுஞ் செங் கதிர்வேலா;

அகில அண்டஞ் சுழலஎங்கும்
பவுரிகொண்டங் காடுங்கொன்
புகழ்விளங்குங் கவுரிபங்கன்
குருவெனுஞ்சிங் காரங்கொண்
டறுமுகம்பொன் ஐதிதுலங்குந்
திருபதங்கந் தாஎன்றென் றமரோர்பரவ

அலர்பொழிந்தங் கரமுகிழ்ந்தொண்
சரணமுங்கொண் டோதந்தம்
புலைகுறம்பெண் சிறுமி அங்கம்
புணர்ஜெயம்கொண் டேஅம்பொன்
அமைவிளங்கும் புலிசரம்* பொன்
திருநடங்கொண் டார்கந்தம் பெருமாளே.

## 249. முருகன் எழுந்தருள

தனதன்ன தனதான தனதன்ன தனதான
தனதன்ன தனதான தனதான

* புலிசரம் = புலீச்சரம் = சிதம்பரம்.

சூடரி அனைய திருமேனி உடையழகு முதுஞான
சொருபகிரி இடமேவு முகம்ஆறும்-
ஸுரர்தெரியல் அளிபாட மழலைகதி நறைபாய
துகிர்இதழன் மொழிவேத மணம்வீச;
அடர்பவள ஒளிபாய அரியபரி புரம்ஆட
அயில் கரமொ டெழில்தோகை மயிலேறி-
அடியன்இரு வினைநீறு படஅமரர் இதுபூரை
அதிசயம என்ருள்பாட வரவேணும்;
விடைபரவி அயன்மாலொ டமரர்முநி கணம்ஓட
மிடநடைய விடம்வாரி அருள்நாதன்-
மிலைஅனைய இடைமாது இடமருவு குருநாதன்
மிகமகிழ அநுபூதி அருள்வோனே;
இடர்கலிகள பிணிஓட எனையும்அருள் குறமாதின்
இணை தூளநிர் முலைமார்பின் அணைமார்பா-
இனியமுது புலிபாத னுடன் அரவு சதகோடி
இருடியர்கள் புகழ்ஞான பெருமாளே.

## 250. அடியாருடன் சேர

தான தானன தனன தானன
தான தானன தனன தானன
தான தானன தனன தானன தனதான

தாது மாமலர் முடியா லேபத
நூத நூபுர அடியா லேகர
தாளம் ஆகிய நொடியா லேமடி பிடியாலே-
ஞாடை பேசிய வகையா லேமிகு
வாடை பூசிய நகையா லேபல
தாறு மாறுசொல் மிகையா லேஅன நடையாலே
மோதி மீறிய முலையா லேமுலை
மீதில் ஏறிய கலையா லேவெகு
மோடி நாணய விலையா லேமயல் தருமாதர்-
மோகவாரிதி தனிலே நாடொறும்
மூழ்கு வேனுன தடியார் ஆகிய
மோன ஞானிகள் உடனே சேரவும் அருள்வாயே;

காதலாய்அருள் புரிவாய் நான்மறை
மூல மேஎன உடனே மாகரி
காண நேர்வரு திருமால் நாரணன் மருகோனே-
காதல் மாதவர் வலமே சூழ்ஸபை
நாத னார்தம திடமே வாழ்சிவ
காம நாயகி தருபா லா புலி சையில்வாழ்வே;
*வேத நூன்முறை வழுவா மேதினம்
வேள்வி யால்எழில் புனைமூவாயிர
மேன்மை வேதியர் மிகவே பூஜை புரிகோவே-
வீறு சேர்வரை அரசாய் மேவிய
மேரு மால்வரை எனநீள் கோபுர
மேலை வாயிலின் மயில்மீ தேறிய பெருமாளே.

# III. பிற தலங்கள்

## 1. அவிநாசி

### 251. (பெருவாழ்வு) வீடுபெற

*தனதானத் தனதான*

இறவாமற் பிறவாமல் - எனையாள்ஸற் குருவாகிப்;
பிறவாகித் திரமான - பெருவாழ்வைத் தருவாயே;
குறமாதைப் புணர்வோனே - குகனே! சொற் குமரேசா;
அறம்நாலைப் புகல்வோனே - அவிநாசிப் பெருமாளே.

## 2. (திரு) ஆலங்காடு

### 252. கதிபெற

*தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த*
*தனதன தானந் தாத்த தனதான*

---

*திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் வடக்குப்பட்டு த. சுப்ரமண்யப் பிள்ளை அவர்கள் திருப்புகழ்ப் பணிக்கு காரணமாயிருந்த வரிகள்.

புவிபுனல் காலுங் காட்டி சிகியொடு வானுஞ் சேர்த்தி
புதுமன மானும் பூட்டி இடையூடே-
பொறிபுலன் ஈர்ஐந் தாக்கி கருவிகள் நாலும் காட்டி
புகல்வழி நால்ஐந் தாக்கி வருகாயம்;

பவவினை நூறுங் காட்டி சுவமதி தானுஞ் சூட்டி
பசுபதி பாசங் காட்டி புலமாயப்-
படிமிசை போஎன் றோட்டி அடிமையை நீவந் தேத்தி
பரகதி தானுங் காட்டி அருள்வாயே!

சிவமய ஞானங் கேட்க தவமுநி வோரும் பார்க்க
திருநடம் ஆடும் கூத்தர் முருகோனே-
திருவளர் மார்பன் போற்ற திசைமுகன் நாளும் போற்ற
ஜெகமொடு வானங் காக்க மயிலேறிக்;

குவடொடு சூரன் தோற்க எழுகடல் சூதம் தாக்கி
குதர்வடி வேல்அங் கோட்டு குமரேசா-
குவலயம் யாவும் போற்ற பழனியில் ஆலங்காட்டில்
குறமகள் பாதம் போற்று பெருமானே;

## 3. இடைக்கழி

### 253. வாழ்வுற

தனன தத்தனத் தனன தத்தனத்
தனன தத்தனத் தனதான

பகரு முத்தமிழ்ப் பொருளும் மெய்த்தவப்
பயனும் எப்படிப் பலவாழ்வும்-
பழைய முக்தியிற் பதமும் நட்புறப்
பரவு கற்பகத் தருவாழ்வும்;

புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்-
புலன்அ கற்றிடப் பலவி தத்தினும்
புகழ்ப லத்தினைத் தரவேணும்;

தகரில் அற்றகைத் தலம்வி டப்பிணைச்
சரவ ணத்தினிற் பயில்வோனே-
தனிவ னத்தினிற் புனம றத்தியைத்
தழுவு பொற்புயத் திருமார்பா;

சிகர வெற்பினைப் பகிரும் வித்தகத்
திறல் அயிற்சுடர்க் குமரேசா-
செழும லர்ப்பொழிற் குரவம் உற்றபொற்
றிருஇ டைக்கழிப் பெருமானே.

## 4. இடைமருதூர்

### 254. தவநெறி பற்ற

தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந் தந்ததான

படியையள விடுநெடிய கொண்டலுஞ் சண்டனும்
தமரசது மறைஅமரர் சங்கமுஞ் சம்புவும்
பரவரிய நிருபன்விர கன்சுடுஞ் சம்பன் செம்பொன்
மேனிப்-
பரமன்எழில் புனையும்அர வங்களுங் கங்கையுந்
திருவளரு முளரியொடு திங்களுங் கொன்றையும்
பரியகுமிழ் அறுகுகன தும்பையுஞ் செம்பையுந்
துன்றுமூலச் ;

சடைமுடியில் அணியும்நல சங்கரன் கும்பிடுங்
குமரன் அறு முகவன்மது ரந்தருஞ் செஞ்சொலன்
சரவணையில் வருமுதலி கொந்தகன் கந்தன்என்
றுய்ந்துபாடித்-
தணியஒலி புகலும்விதம் ஒன்றிலுஞ் சென்றிலன்
பகிரஒரு தினையளவு பண்புகொண் டண்டிலன்
தவநெறியில் ஒழுகிவழி பண்படுங் கங்கணஞ்
சிந்தியாதோ ;

கடுகுபொடி தவிடுபட மந்திரம் தந்திரம்
பயிலவரும் நிருதர்உட லம்பிளந் தம்பரங்
கதறிவெகு குருதிநதி பொங்கிடுஞ் சம்ப்ரமங்
கண்டுசேரக்-

கழுகுநரி கொடிகருடன் அங்கெழுந் தெங்குநின்
றலகைபல திமிலைகொடு தந்தனந் தந்தனங்
கருதிஇசை பொசியும்நசை கண்டுசண் டின்புறந்
துங்கவேலா;

அடல்புனையும் இடைமருதில் வந்திணங் குங்குணம்
பெரியகுரு - பர!குமர! சிந்துரஞ் சென்றடங்
கடவிதனில் உறைகுமரி சந்திலங் குந்தனந்
தங்குமார்பா-

அருணமணி வெயில்இலகு தண்டைஅம் பங்கயங்
கருணைபொழி வனகழலில் அந்தமுந் தம்படஎன்
றழகுபெற நெறிவருடி அண்டருந் தொண்டுறுந்
தம்பிரானே.

# 5. இராமேச்வரம்

## 255. யாக்கையைப் பழிந்தல்

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன தனதான

வாலவய தாகிஅழ காகிமதன் ஆகிபணி
வாணிபமொ டாடிமருள் ஆடிவிளை யாடிவிழல்
வாழ்வுசதம் ஆகிவலி வாகிமட கூடமொடு
பொருள்தேடி-

வாஸபுழு கோடுமல ரோடுமன மாகிமகிழ்
வாஸனைக ளாகிஇடல் ஆகிமயல் ஆகிவிலை
மாதர்களை மேவிஅவர் ஆசைதனி லேசுழல
சிலநாள்போய்;

தோல்திரைகள் ஆகிநரை யாகிகுரு டாகிஇரு
கால்கள்தடு மாறிசெவி மாறியசு பாசபதி
சூழ்கதிகள் மாறிஸுக மாறிதடி யோடுதிரி யுறுநாளில்-

சூலைசொறி ஈளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைஜுர மோடுபிணி தூறிருமல்
சூழல்உற மூலகசு மாலம்என நாறிஉடல் அழிவேனோ ;

நாலுமுகன் ஆதிஅரி ஓம்எனஅ தாரம்உரை
யாதபிர மாவைவிழ மோதிபொருள் ஓதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபட தாளம்இடும்
இளையோனே

நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுதல்
ஈணமக வானைமகிழ் தோம்வன மீதுசெறி
ஞானகுற மாதைதினை காவில்மண மேவுபுகழ்
மயில்வீரா ;

ஓலமிடு தாடகைசு வாகுவளர் ஏழுமரம்
வாலியொடு நீலிபக னோடொருவி ராதன்எழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாம்அமரில்
பொடியாக

ஓகைதழல் வாளிவிடு மூரிதநு நேமிவளை
பாணிதிரு மார்பன்அரி கேசன்மரு காஎனவெ
ஓதமறை ராமெசுர மேவுகும ரா!அமரர் பெருமாளே.

## 6. உத்தரமேரூர்

### 256. நினைக்க

தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தானதந்த தானதந்த தனதான

தோளெலும்பு சீநரம்பு பீளைதுன்று கோழைபொங்கு
சோரிபிண்ட மாய்உருண்டு வடிவான

தூலபங்க காயம்வம்பி லேசுமந்து நான்மெலிந்து
சோரும்இந்த நோய்அகன்று துயர்ஆற ;

ஆலம்உண்ட கோன்அகண்ட லோகம்உண்ட மால்விரிஞ்சன்
ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்

ஆனனங்கள் மூவிரண்டும் ஆறிரண்டு தோளும்அங்கை
ஆடல்வென்றி வேலும்என்று நினைவேனோ ;

வாலசந்த்ர சூடிசந்த வேதமந்த்ர ரூபி அம்பை
வாணிபஞ்ச பாணிதந்த முருகோனே-
மாயைஐந்து வேகம்ஐந்து பூதம்ஐந்து நாதம்ஐந்து
வாழ்பெருஞ்ச ராசரங்கள் உறைவோனே;
வேலைஅன்பு கூரவந்த ஏகதந்த யானைகண்டு
வேடர்மங்கை ஓடிஅஞ்ச அணைவோனே-
வீரமங்கை வாரிமங்கை பாரின்மங்கை மேவுகின்ற
*மேருமங்கை ஆளவந்த பெருமாளே.

## 7. எட்டிகுடி

### 257. ஆண்டருள

தாந்த தந்தன தான தனத்தந் தனதான

ஓங்கும் ஐம்புலன் ஓட நினைத்தின் பயர்வேனை-
ஓம்பெ றும்ப்ரண வாதி உரைத்தெந் தனைஆள்வாய்;
வாங்கி வெங்கணை சூரர் குலக்கொம் புகடாவி-
வாங்கி நின்றன ஏவில் உகைக்குங் குமரேசா;
மூங்கில் அம்புய வாஸ மணக்குஞ் சரிமானும்-
மூண்ட பைங்குற மாது மணக்கும் திருமார்பா;
காங்கை யங்கறு பாசில் மனத்தன் பர்கள்வாழ்வே-
†காஞ்சி ரங்குடி ஆறுமுகத்தெம் பெருமாளே.

## 8. எண்கண்

### 258. பணிய

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தனதான

தந்த னந்தி மிர்த்தி ணைந்து குங்கு மங்க டம்பி லங்கு
சண்ப கஞ்செ றிந்தி லங்கு திரள்தோளும்-
தண்டை யஞ்சி லம்ப வெண்டை யஞ்ஜ லஞ்ஜல் என்று
சஞ்சி தஞ்ச தங்கை கொஞ்ச மயிலேறித்;

---

*மேருமங்கை - உத்தரமேரூர்.
†காஞ்சிரம் குடி - எட்டிகுடி -

திந்தி மிந்தி மிந்தி மிந்தி தந்த னந்த னந்த னென்று
சென்ற சைந்து கந்து வந்து க்ருபையோடே.
சிந்தை யங்கு லம்பு குந்து ஸந்த தம்பு கழ்ந்து ணர்ந்து
செம்ப தயப ணிந்திர் என்று மொழிவாயே;
அந்த மந்தி கொண்டி லங்கை வெந்த ழிந்தி டும்ப கண்டன்
அங்க முங்கு லைந்த ரங்கொள் பொடியாக-
அம்ப குமப னுங்க லங்க வெஞ்சி னம்பு ரிந்து நின்று
அம்பு கொண்டு வென்ற கொண்டல் மருகானே
இந்து வும்க ரந்தை தும்பை கொன்றை யும்ஜலம்பு னைந்தி
டும்ப ரன்றன் அன்பில் வந்த குமரசா-
இந்தி ரன்ப தம்பெ றண்டர் தம்ப யங்க டிந்த பின்பு
எண்கண் அங்க மர்ந்தி ருந்த பெருமானே.

## 9. எழுகரை நாடு

### 259. பேரின்பப் பொருளைப் பெற

தனதன தாத்தன தனதன தாத்தன
தனதன தாத்தன தனத்தான

*விரகற நோக்கியும் உருகியும் வாழ்த்தியும்
விழிபுனல் தேக்கிட அன்புமேல்மேல்-
மிகவும் இராப்பகல் பிறிது பராக்கற
விழைவு குராப்புனை யுங்குமார;
'முருக! ஷடாக்ஷர! சரவண! கார்த்திகை
முலைநுகர் பார்த்திப!' என்றுபாடி-
மொழிகுழ றத்தொழு தழுதழு தாட்பட
முழுதும்அலாப் பொருள் தந்திடாயோ;
பரகதி காட்டிய விரக! சிலோச்சய!
பரம பராக்ரம! சம்பராரி-
படவிழி யாற்பொரு பசுபதி போற்றிய
பகவதி பார்ப்பதி தந்தவாழ்வே;

---

*இந்தப் பாடலை வள்ளியம்மையின் தோழியாம் "பொங்கி"யே மோஹன ராகத்தில் பாடக் கேட்டிருக்கிறார் வள்ளிமலை சுவாமிகள் என்பது அவரது வரலாற்றில் தெரிகிறது.

இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
எழுகிரி ஆர்ப்பெழ வென்றவேலா-
இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே.

## 10. ஒற்றியூர்

### 260. சிவகதி பெற

தனதத்தன தானதன தனதத்தன தானதன
தனதத்தன தானதன தனதான

சொரூபப்பிர காசவிசு வருபப்பிர மாகநிஜ
ஸுக!விப்பிர தேச!ரஸ சுபமாயா-
துலியப்பிர காச!மத சொலியற்றர சாசவித
தொகைவிக்ரம மாதர்வயி றிடைஊறு;
கருவிற்பிற வாதபடி உருவிற்பிர மோதஅடி
களையெத்திடி ராகவகை அதில்மீறிக்-
கருணைப்பிர காச!உன தருள்உற்றிட ஆசில்சிவ
கதிபெற்றிடர் ஆனவையை ஒழிவேனோ!
குருக்குட வாரகொடி செருஉக்கிர ஆதபயில்
பிடிகைத்தல ஆதிஅரி மருகோனே-
குமரடபிர தாப!குஹ! சிவசுப்பிர மாமணிய!
குணமுட்டர் அவாஅஸுரர் குலகாலா
திருவொற்றியு ருமருவு நகர் ஒற்றியூர் வாரிதிரை
அருகுற்றிடு மாதிசிவன் அருள்பாலா-
திசமுற்றிடு யோகதவ மிகுமுக்கிய மாதவர்கள்
இதயத்திட மேமருவு பெருமானே.

## 11. திருக்கடவூர்

### 261. இறக்கும்போது அருள்பெற

தாத்த தனத்தன தான்ன தானன
தாத்த தனத்தன தான்ன தானன
தாத்த தனத்தன தான்ன தானன தனதான

ஏட்டின் விதிப்படி யேகொடு மாப்ர
வீட்டில் அடைத்திசை வேகசை மூண்அதில்
ஏற்றி அடித்திட வேகடல் ஓடம தெனஏகி-
ஏற்குப எனப்பொருள் ஆசைபெணுசைகொ
ளாத்து எனத்திரி யாபரி யாதவம்
ஏற்றி இருப்பிட மேஅறி யாமலும் உடல்பேணிப்;
பூட்டு சரப்பணி யேமத ஞம்என
ஆட்டி அசைத்திய லேதிரி நாளையில்
பூத்த மலக்குஹை யோபொதி சோறென கழுகாகம்-
போற்றி நமக்கிரை யாம்என வேகொள
நாட்டில் ஒடுக்கெண வேவிழு போதினில்
பூட்டு பணிப்பத மாமயிலா! அருள் புரிவாயே;
வீட்டில் அடைத்தெரி யேஇடு பாதகன்
நாட்டை விடுத்திட வேபல சூதினில்
வீழ்த்த விதிப்படி யேகுரு காவலர் வனமேபோய்-
வேற்றுமை உற்றுரு வோடியல் நாள்அது
பார்த்து முடித்திட வேஒரு பாரத
மேறபுனை வித்த மகாவிர மாயவன் மருகோனே;
கோட்டை அழித்தஸு ரார்பதி கோஎன
மூட்டி எரித்த பராபர! சேகர!
கோத்த மணிக்கதி ரேநிகர் ஆகிய வடிவேலா-
கூற்று மரித்திட வேஉதை பார்வதி
யார்க்கும் இனித்த பெண்ஆகிய மான்மகள்
கோட்டு முலைக்கதி பா! கட வூர்உறை பெருமானே.

## 12. கந்தன் குடி

### 262. பவம் அற

தந்தந்தன தந்தந்தன தந்தந்தன தந்தந்தன
தந்தந்தன தந்தந்தன தனதான

எந்தன்சட லங்கம்பல பங்கப்படு தொந்தங்களை
என்றும்துயர் பொன்றும்படி ஒருநாளே-
இன்பம்தரு செம்பொன்கழல் உந்துங்கழல் தந்தும்பினை
என்றும்படி பந்தம்கெட மயில்ஏறி;

இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
எழுகிரி ஆர்ப்பெழ வென்றவேலா-
இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே.

## 10. ஒற்றியூர்

### 260. சிவகதி பெற

தனதத்தன தானதன தனதத்தன தானதன
தனதத்தன தானதன தனதான

சொரூபப்பிர காசவிசு வருபப்பிர மாகநிஜ
ஸுக!விப்பிர தேச!ரஸ சுபமாயா-
துவியப்பிர காச!மத சொலியற்றர சாசவித
தொகைவிக்ரம மாதர்வயி றிடைஊறு;
கருவிற்பிற வாதபடி உருவிற்பிர மோதஅடி
களையெத்திடி ராகவகை அதில்மீறிக்-
கருணைப்பிர காச!உன தருள்உற்றிட ஆசில்சிவ
கதிபெற்றிடர் ஆணவையை ஒழிவேனோ!
குருகுக்குட வாரகொடி செருஉக்கிர ஆதபயில்
பிடிகைத்தல ஆதிஅரி மருகோனே-
குமரபிர தாப!குஹ! சிவசுப்பிர மாமணிய!
குணமுட்டர் அவாஅஸுரர் குலகாலா
திருவொற்றியு ருமருவு நகர் ஒற்றியூர் வாரிதிரை
அருகுற்றிடு மாதிசிவன் அருள்பாலா-
திடமுற்றிடு யோகதவ மிகுமுக்கிய மாதவர்கள்
இதயத்திட மேமருவு பெருமானே.

## 11. திருக்கடவூர்

### 261. இறக்கும்போது அருள்பெற

தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன தனதான

ஏட்டின் விதிப்படி யேகொடு மாப்ர
வீட்டில் அடைத்திசை வேகசை மூண்அதில்
ஏற்றி அடித்திட வேகடல் ஓடம தெனஏகி-
ஏற்குய எனப்பொருள் ஆசைபெணுசைகொ
ளாத்து எனத்திரி யாபரி யாதவம்
ஏற்றி இருப்பிட மேஅறி யாமலும் உடல்பேணிப்;
பூட்டு சரப்பணி யேமத னும்என
ஆட்டி அசைத்திய லேதிரி நாளையில்
பூத்த மலக்குகை யோபொதி சோறென கழுகாகம்-
போற்றி நமக்கிரை யாம்என வேகொள
நாட்டில் ஒடுக்கென வேவிழு போதினில்
பூட்டு பணிப்பத மாமயிலா! அருள் புரிவாயே;
வீட்டில் அடைத்தெரி யேஇடு பாதகன்
நாட்டை விடுத்திட வேபல சூதினில்
வீழ்த்த விதிப்படி யேகுரு காவலர் வனமேபோய்-
வேற்றுமை உற்றுரு வோடியல் நாள்அது
பார்த்து முடித்திட வேஒரு பாரத
மேறபுனை வித்த மகாவிர மாயவன் மருகோனே;
கோட்டை அழித்தஸு ரார்பதி கோஎன
மூட்டி எரித்த பராபர! சேகர!
கோத்த மணிக்கதி ரேநிகர் ஆகிய வடிவேலா-
கூற்றும ரித்திட வேஉதை பார்வதி
யார்க்கும் இனித்த பெண்ஆகிய மான்மகள்
கோட்டு முலைக்கதி பா! கட வூர்உறை பெருமாளே.

## 12. கந்தன் குடி

### 262. பவம் அற

தந்தந்தன தந்தந்தன தந்தந்தன தந்தந்தன
தந்தந்தன தந்தந்தன தனதான

எந்தன்சட லங்கம்பல பங்கப்படு தொந்தங்களை
என்றுந்துயர் பொன்றும்படி ஒருநாளே-
இன்பந்தரு செம்பொன்கழல் உந்துங்கழல் தந்தும்பினை
என்றும்படி பந்தங்கெட மயில்ஏறி;

வந்தும்பிர சண்டம்பதி ரண்டம்புவி எங்குந்திசை
மண்டும்படி நின்றஞ்சுடர் ஒளிபோலும்-
வஞ்சக்குடி கொண்டுந்திரி நெஞ்சன்துகள் என்றுங்
கொளும்
வண்டனிதமி யன்றன்பவம் ஒழியாதோ;
தந்தந்தன திந்திந்திமி என்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சம் புரி கொஞ்சுஞ்சிறு மணிஆரம்-
சந்தந்தொனி கண்டும்புயல் அங்கன்சிவன் நம்பன்பதி
சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்;
கந்தன்குகன் என்றன்குரு என்றுந்தொழும் அன்பன்கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே-
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்குஞ்சுனை
கந்தன்குடி யின்தங்கிய பெருமாளே.

## 13. கருவூர்

### 263. சிவஞானம் பெற

தனதானத் தனதான

மதியால்வித் தகன்ஆகி- மனதால்உத் தமன்ஆகிப்;
பதிவாகிச் சிவஞான- பராயோகத் தருள்வாயே;
நிதியே!நித் தியமே!என்- நினைவே! நற்பொருளாயோய்;
கதியே!சொற் பரவேளே- கருவூரிற் பெருமாளே.

## 14. காசி

### 264. நைந்துவிடாதிருக்க

தான தந்தன தானன தனதான

வேழம் உண்ட விளாகனி அதுபோல-
மேனி கொண்டு வியாபக மயல்ஊறி;
நாளு மிண்டர்கள் போல்மிக அயர்வாகி-
நானும் நைந்து விடாதருள் புரிவாயே;
மாள அன்றம ணீசர்கள் கழுஏற-
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா-
காள கண்டன் உமாபதி தருபாலா!
காசி கங்கையில் மேவிய பெருமாளே.

# 15. திருக் குடவாயில்

## 265. தந் சரிதம்

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

சுருதியாய் இயலாய் இயல் நீடிய
தொகுதியாய் வெகுவாய் வெகுபாஷைகொள்
தொடர்புமாய் அடியாய் நடுவாய் மிகு துணையாய்மேல்-
துறவுமாய் அறமாய் நெறியாய் மிகு
விரிவுமாய் விளைவாய் அருள்ஞானிகள்
சுகமுமாய் முகிலாய் மழையாய் எழு சுடர்வீசும்;

பருதியாய் மதியாய் நிறைதாரகை
பலவுமாய் வெளியாய் ஒளியாய் எழு
பகல் இரா இலையாய் நிலையாய்மிகு பரம்ஆகும்-
பரம மாயையின் நேர்மையை யாவரும்
அறியொணாதனதை நீகுரு வாய்இது
பகருமாறு செய்தாய்முதல் நாள் உறு பயனேதான்;

கருதும் ஆறிரு தோள்மயில் வேல்இவை
கருதொணாவகை ஓர்அர சாய்வரு
கவுணி யோர்குல வேதிய னய்உமை தனபாரக்-
களப பூண்முலை ஊறிய பால்உணும்
மதலையாய் மிகு பாடலின் மீறிய
கவிஞனாய் விளையாடிடம் வாதிகள் கழுவேறக்-

குருதி ஆறெழ வீதி எலாமலர்
நிறைவ தாய்விட நீறிட வேசெய்து
கொடிய மாறன்மெய் கூன்நிமிரா முனே குலையாவான்-
குடிபு கீர்என மாமது ராபுரி
இயலை ஆரண ஊர்என நேர்செய்து
குடசைமா நகர் வாழ்வுற மேவிய பெருமாளே.

## 16. திருக் குரங்காடுதுறை

### 266. நடனத்தைத் துதிக்க

தனந்தான தனத்தனனத் தனந்தான தனத்தனனத்
தனந்தான தனத்தனனத் தனதான

அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்
கசைந்தாடு குழைக்கவசத் திரள்தோளும்-
அலந்தாம மணித்திரளைப் புரண்டாட நிரைத்தகரத்
தணிந்தாழி வளைக்கடகச் சுடர்வேலும்;

சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்
சிவந்தேறி மணத்தமலர்ப் புனைபாதம்-
திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்
தினந்தோறும் நடிப்பதுமற் புகல்வேனோ;

இலங்கேசர் வனத்துள்வனக் குரங்கேவி அழற்புகையிட்
டிளந்தாது மலர்த்திருவைச் சிறைமீளும்-
இளங்காள முகிற்கடுமைச் சரங்கோடு கரத்தில்எடுத்
திருங்கானம் நடக்கும் அவற் கினியோனே;

குலங்கோடு படைத்தஸுரப் பெருஞ்சேனை அழிக்கமுனைக்
கொடுந்தாரை வெயிற்கயிலைத் தொடும்வீரா-
கொழுங்காவின் மலர்ப்பொழிலிற் கரும்பாலை புணர்க்கும்இசைக்
குரங்காடு துறைக்குமரப் பெருமாளே.

## 17. குற்றாலம்

### 267. பேரின்ப வாழ்வை உற

தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன தனதான

வேதத்திற் கேள்வி இலாதது
போதத்திற் காண ஒணாதது
வீசத்திற் றூரம் இலாதது கதியாளர்-

வீதித்துத் தேடரி தானது
ஆதித்தற் காய ஒணாதது
வேகத்துத் தீயில் வெகாதது சுடர்கானம்;

வாதத்துக் கேஅவி யாதது
காதத்திற் பூஇய லானது
வாசத்திற் பேரொளி ஆனது மதம்ஊறும்-
மாயத்திற் காயம தாசல
நீதர்க்குத் தூரம தாகிய
வாழ்வைச்சற் காரமதா இனி அருள்வாயே;

காதத்திற் காயம தாகும
தீதித்தித் தீதிது தீதெனை
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணார்-
காணப்பட் டேகொடு நோய்கொடு
வாதைப்பட் டேமதி தீதக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவேனோ;

கோதைப்பித் தாய்ஒரு வேடுவ
ருபைப்பெற் றேவன வேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு முருகோனே-
கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலம் உலாவிய பெருமானே.

# 18. கூடலை யாற்றூர்

## 268. காலன் அணுகா அருள் பெற

தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன தந்ததான

வாட்டிஎனைச் சூழ்ந்தவினை ஆசையமு வாசைஅனல்
மூட்டிஉலைக் காய்ந்தமழு வாம்எனவி காரமொடு
மாட்டிஎனைப் பாய்ந்துகட வோடடமொ டாடிவிடு
விஞ்சையாலே.

வாய்த்தமலர்ச் சாந்துபுழு கானபனி நீர்களொடு
காற்றுவரத் தாங்குவன மார்பில்அணி ஆரமொடு
வாய்க்குமெனப் பூண்டழக தாகபவி சோடுமகிழ்
வன்புகூரத்;

தீட்டுவிழிக் காந்திமட வார்களுடன் ஆடிவலை
பூட்டிவிடப் போந்துபிணி யோடுவலி வாதமென
சேர்த்துவிடப் பேர்ந்துவினை மூடிஅடி யேனும்உன
தன்பிலாமல்-

தேட்டமுறத் தேர்ந்தும்அமிர் தாம்எனவெ ஏகிநமன்
ஓட்டிவிடக் காய்ந்துவரிவேதன் அடையாளம்அருள்
சீட்டுவரக் காண்டுநலி காலன்அணு காநினருள்
அன்புதாராய்;

வேட்டுவரைக் காய்ந்துகுற மாதைஉற வாடிஇருள்
நாட்டவரைச் சேந்தகதிர் வேல்கொடம ராடிசிறை
மீட்டமரர்க் காண்டவனை வாழ்கநிலை யாகவைகும்
விஞ்சையோனே-

வேற்றுருவிற் போந்துமது ராபுரியில் ஆடிவைகை
ஆற்றின்மணற் றூங்குமழு வாளிஎன தாதைபுர
மேட்டை எரித் தாண்டசிவ லோகனிவிடை
யேறிஇட முங்கொள்ஆயி;

கோட்டுமுலைத் தாங்கும்இழை யானஇடை கோடிமதி
தோற்றம்எனப் போந்தஅழ கானசிவ காமிவிறல்
கூற்றுவனைக் காய்ந்தஅபி ராமிமன தாரஅருள்
கந்தவேளே-

கூட்டுநதித் தேங்கிய *வெளாறு தராளாறு திகழ்
நாட்டில்உறைச் சேந்த!மயிலா!வளி தெய்வானையொடெ
கூற்றுவிழத் தாண்டிஎன தாகமதில் வாழ்குமர!
தம்பிரானே.

---

*வெளாறு தராளாறு திகழ்நாடு - வெள்ளாறும் மணி முத்த நதியும் கூடுமிடமாம் திருக்கூடலை யாற்றூர். தராளாறு-மணிமுத்த நதி.

## 19. (திருப்பாண்டிக்) கொடுமுடி

### 269. கதி பெற

*தனதனத் தனனத் தனதான*

இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி-
இடர்கள்பட் டலையப் புகுதாதே ;
திருஅருட் கருணைப் ப்ரபையாலே-
திரமெனக் கதியைப் பெறுவேனோ ;
அரிஅயற் கறிதற் கரியானே-
அடியவர்க் கெளியற் புதநேயா ;
குருஎனச் சிவனுக் கருள்போதா-
கொடுமுடிக் குமரப் பெருமாளே.

## 20. கோசை நகர்

### 270. திருவடியை நினைக்கும் அருள் பெற

*தானதன தானதன தானதன தானதன*
*தானதன தானதன தனதான*

ஆதவித பாரமுலை மாதர்இடை நூல்வயிற
தால் இலை எனுமதன கலைலீலை—
யாவும்விளை வானகுழி யானதிரி கோணம் அதில்
ஆசைமிக வாய் அடியன் அலையாமல் ;
நாதசத கோடிமறை ஓலம்இடு நூபுரமுன்
ஆனபத மாமலரை நலமாக-
நான்அநு தினுதினமு மேநினைய வேகிருபை
நாடிஅரு ளேஅருள வருவாயே;
சீதமதி ஆடரவு வேர் அறுகு மா இறகு
சீதசல மாசடில பரமேசர்—
சீர்மைபெற வேஉதவு கூர்மைதரு வேல! சிவ!
சீறிவரு மாஅசுரர் குலகாலா;

கோதைகுற மாதுகுண தேவமட மாதும்இரு
  பாலும்உற வீறிவரு குமரேசா—
கோசைநகர் வாழவரும் ஈச்அடியர் நேச! சரு
  வேச! முருகா! அமரர் பெருமாளே.

## 21. கோடி (குழகர் கோயில்)

### 271. முருகா என ஓத

தானதன தானதன தானதன தானதன
  தானதன தானதன தனதான

நீலமுகி லானகுழ லானமட வார்கள்தன
  நேயமதி லேதினமும் உழலாமல்—
நீடுபுவி யாசைபொரு ளாசைமரு ளாகியலை
  நீரிலுழல் மீன் அதென முயலாமற்;
காலனது நாவரவ வாயிலிடு தேரையென
  காயமரு வாவிவிழ அணுகாமுன்—
காதலுடன் ஓதும்அடி யார்களுட னடியொரு
  கால்முருக வேள் எனவும் அருள்தாராய்;

சோலைபரண் மீதுநிழ லாகதினை காவல்புரி
  தோகைகுற மாதினுடன் உறவாடிச்-
சோரன்என நாடிவரு வார்கள்வன வேடர்விழ
  சோதிகதிர் வேலுருவு மயில்வீரா;
கோலஅழல் நீறுபுனை ஆதிசரு வேசரொடு
  கூடிவிளை யாடும் உமை தருசேயே—
கோடுமுக ஆனைபிற கானதுணை வா! குழகர்
  கோடிநகர் மேவிவளர் பெருமாளே.

## 22, கோடை நகர் (வல்லக்கோட்டை)

### 272. அகப்பொருள்-அணையப்பெற

தான தந்த தனத்த தத்த தனதான

ஞாலம் எங்கும் வளைத்த ரற்று கடலாலே—
  நாளும் வஞ்சியர் உற்று ரைக்கும் வசையாலே;

ஆல முந்து மதித்த முற்கும் அழியாதே—
ஆறி ரண்டு புயத்த ணைக்க வருவாயே;
கோலம் ஒன்று குறத்தி யைத்த முவுமார்பா—
கோடை யம்பதி உற்று நிற்கு மயில்வீரா;
காலன் அஞ்ச வரைத்தொ ளைத்த முதல்வானோர்—
கால்வி லங்கு களைத்த றித்த பெருமானே.

## 23. சிக்கல்

### 273. குன்றாத வாழ்வைப் பெற

தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன தனதான

புலவரை ரக்ஷிக் குந்தாரு வே! மது
ரிதகுண வெற்பொக் கும்பூவை மார்முலை
பொருபுய! திக்கெட் டும்போய் உலாவிய புகழாளா—
பொருவரு நட்புப் பண்பான வாய்மையில்
உலகில் உனக்கொப் புண்டோஎ ஞநல
பொருள்கள் நிரைத்துச் செம்பாகம் ஆகிய கவிபாடி;
விலையில் தமிழ்ச்சொற் குன்போல் உதாரிகள்
எவரென மெத்தக் கொண்டாடி வாழ்வெனும்
வெறிகொள் உலுத்தர்க் கென்பாடு கூறிடு மிடிதீர—
மிகஅரு மைப்பட் டுன்பாத தாமரை
சரணம் எனப்பற் றும்பேதை யேன்மிசை
விழிஅருள் வைத்துக் குன்றாத வாழ்வையும் அருள்வாயே;
இலகிய வெட்சிச் செந்தாம மார்புய!
சிலைநுதல் மைக்கட் சிந்தூர வாணுதல்
இமயம கட்குச் சந்தானம் ஆகிய முருகோனே..
இளைய கொடிச்சிக் கும்பாக சாதனன்
உதவும் ஒருத்திக் குஞ்சீல நாயக!
எழிலியெ ழிற்பற் றுங்காய மாயவன் மருகோனே;

அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாம்அளி இசையாலே-

அழகிய சிக்கற் சிங்காரவேலவ!
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்காரம் ஆடிய பெருமாளே.

## 24. சிறுவை

### 274. அருள் வேண்டுதல்

தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன தனதான

சீதள வாரிஜ பாதா! நமோ நம
நாரத கீதவி நோதா! நமோ நம
சேவல மாமயில் ப்ரீதா! நமோ நம மறைதேடும்-

சேகர மானப்ர தாபா! நமோ நம
ஆகம ஸாரஸொ ரூபா! நமோ நம
தேவர்கள் சேனை மகிபா! நமோநம கதிதோயப்;

பாதக நீவுகு டாரா! நமோ நம
மாஅஸுரேசக டோரா! நமோநம
பாரினி லேஜய வீரா! நமோநம மலைமாது-

பார்வதி யாள்தரு பாலா! நமோநம
நாவல ஞானமனோலா! நமோநம
பாலகு மாரஸுவாமீ! நமோநம அருள்தாராய்;

போதக மாமுகன் நேரான சோதர!
நீறணி வேணியர் நேயா ப்ரபாகர!
பூமக ளார்மரு கேசா! மகோததி இகல்சூரா-

போதக மாமறை ஞானா! தயாகர!
தேன் அவிழ் நீபநறு ஆரு மார்பக!
பூரண மாமதி போல்ஆறு மாமுக! முருகேசா;

மாதவர் தேவர்க ளோடே முராரியும்
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநிலம் ஏழினு மேலான நாயக ! வடிவேலா—
வானவர் ஊரினும் வீறுகி வீறளை
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ் சிறு வாபுரி வாழ்வே ! சுராதிபர் பெருமாளே.

## 25. சீகாழி

### 275. அகப்பொருள்

தந்தத்தன தானன தந்தத் தனதானா

சிந்துற்றெழு மாமதி அங்கித் திரளாலே—
தென்றற்றரு வாசமி குந்துற் றெழலாலே ;
அந்திப்பொழு தாகிய கங்குற் றிரளாலே—
அன்புற்றெழு பேதைம யங்கித் தனியாளள் ;
நந்துற்றிடு வாரிமை மகிகத் திகழாயே—
நஞ்சொத்தொளிர் வேலினை யுந்திப் பொருவேளே ;
சந்தக்கவி நூலினர் தஞ்சொற் கினியோனே—
சண்பைப்பதி மேவிய கந்தப் பெருமாளே.

### 276. காக்கப் பெற

தானதன தானன தானன
தானதன தானன தானன
தானதன தானன தானன தந்ததான

பூமாதுர மேயணி மான்மறை
வாய்நாலுடை யோன்மலி வானவர்
கோமான்முநி வோர்முதல் யாரும்இ யம்புவேதம்—
பூராயம தாய்மொழி நூல்களும்
ஆராய்வதி லாதடல் ஆசுரர்
போரால்மறை வாயுறு பீதியின் வந்துகூடி ;
நீமாறரு ளாய்என ஈசனை
பாமாலைக ளால்தொழு தேதிரு
நீறூர்தரு மேனிய ! தேன்இயல் கொன்றையோடு—

நீரேர்தரு ஜானவி மாமதி
காகோதர மாதுளை கூவிளை
நேரோடம்பி ளாமுத லார்சடை எம்பிரானே;
போமாறினி வேறெது ஓதென
வேஆரரு ளால்அவர் ஈதரு
போர்வேலவ! நீலக லாபிஇ வர்ந்துநீடு—
பூலோகமொ டேஅறு லோகமும்
நேர்ஓர்நொடி யேவரு வோய் சுர
சேனாபதி யாயவ னேயுனை அன்பினோடும்;
காமாவறு சோமசு மானன
தாமாமணி மார்தரு நீபசு
தாமாவென வேதுதி யாதுழல் வஞ்சனேனைக்—
காவாயடி நாளசு ரேசரை
யேசாடிய கூர்வடி வேலவ!
காரார்தரு காழியின் மேவிய பெருமானே.

# 26. திருச் செங்காட்டங்குடி

## 277. உபதேசம் பெற

தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன - தனதான

* வங்கார மார்பில்அணி தாரொடுயர் கோடசைய
கொந்தார மாலைகுழல் ஆரமொடு தோள்புரள
வண்காதில் ஓலைகதிர் போலஒளி வீசஇதழ் மலர்போல-
மஞ்சாடு சாபநுதல் வாள்அலைய வேல்விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசிஉற
வந்தாரை வாரும் இரும் நீர்உற வென்ஆசைமயல்
இடுமாதர்;

---

*தாசி ஒருத்தி இப் பாட்டை சிந்து பைரவியில் பாடியதைக் கேட்டே சுவாமிகள் திருப்புகழில் ஈடுபாடு கொண்டார்.

சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசிஅவர் மாயவலை யோடடியென்
உழலாமற்-
சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயைஇருள்
வெந்தோட மூலஅழல் வீசஉப தேசமது
தண்காதில் ஓதிஇரு பாதமலர் சேரஅருள் புரிவாயே ;

சிங்கார ரூபமயில் வாகன!ந மோநமென
கந்தா!கு மார!சிவ தேசிக!ந மோநமென
சிந்தூர பார்வதிசு தாகர!ந மோநமென விருதோதை-
சிந்தான சோதிகதிர் வேலவ!ந மோநமென
கங்காள வேணிகுரு வானவ!ந மோநமென
திண்சூரர் ஆழிமலை தூள்படவை வேலைவிடு
முருகோனே ;

இங்கீத வேதபிர மாவைவிழ மோதிஒரு
பெண்காத லோடுவன மேவிவளி நாயகியை
இன்பான தேன்இரச மார்முலைவி டாதகர மணிமார்பா-
எண்டோளர் காதல்கொடு காதல்கறி யேபருகு
செங்காடு மேவிபிர காசமயில் மேலழகொ
டென்காதல் மாலைமுடி ஆறுமுக வா!அமரர்
பெருமானே.

## 27. சோமநாதன் மடம்

### 278. மௌனோபதேசம் பெற

தனதனன தான தான தனதனன தானதான
தனதனன தான தான தனதான

ஒருவழிப டாது மாயை இருவினைவி டாது நாளும்
உழலும்அநு ராக மோக அநுபோகம்-
உடலும்உயிர் தானும் ஆயுள் உணர்வில்ஒரு கால் இராத
உளமுநெகிழ் வாகும் ஆறு அடியேனுக்(கு,)

இரவுபகல் போன ஞான பரமசிவ யோக தீரம்
எனமொழியும் வீசு பாச கனகோப-
எமபடரை மோது மோன உரையில்உப தேச வாளை
எனதுபகை தீர நீயும் அருள்வாயே;

அரிவையொரு பாகம் ஆன அருணகிரி நாதர் பூசை
அடைவுதவ றுது பேணும் அறிவாளன்;
அமணர்குல காலன் ஆகும் அரியதவ ராஜ ராஜன்
அவனிபுகழ் சோமநாதன் மடமேவும்;

முருக!பொரு சூரர் சேனை முறியவட மேரு வீழ
முகர!சல ராசி வேக முனிவோனே-
மொழியும்அடி யார்கள்கோடி குறைகருதி ஞலும் வேறு
முனியஅறி யாத தேவர் பெருமாளே.

## 28. தச்சூர் (ஆண்டார்குப்பம்)

### 279. வேசையர் மயக்கு அற

தத்தா தனத்தான தாத்தத் தனந்த
தத்தா தனத்தான தாத்தத் தனந்த
தத்தா தனத்தான தாத்தத் தனந்த தனதான

அச்சாய் இறுக்காணி காட்டிக் கடைந்த
செப்பார் முலைக்கோடு நீட்டிச் சரங்க
ளைப்போல் விழிக்கூர்மை நோக்கிக் குழைந்து உறவாடி-
அத்தான் எனக்காசை கூட்டித் தயங்க
வைத்தாய் எனப்பேசி மூக்கைச் சொறிந்து
அக்கால் ஒருக்காலம் ஏக்கற் றிருந்திர் இலையாசை;

வைச்சாய் எடுப்பான பேச்சுக் கிடங்கள்
ஒப்பார் உனக்கீடு பார்க்கிற் கடம்பன்
மட்டோ எனப்பாரின் மூர்க்கத் தனங்கள் அதனாலே-
மைப்பா கெனக்கூறி வீட்டிற் கொணர்ந்து
புற்பா யலிற்காலம் வீற்றுக் கலந்து
வைப்பார் தமக்காசை யாற்பித் தனாந்து திரிவேனோ;

எச்சாய் மருட்பாடு மேற்பட் டிருந்த
பிச்சா சருக்கோதி கோட்டைக் கிலங்க
மிக்கா நினைப்போர்கள் வீக்கிற் பொருந்தி நிலையாயே-
எட்டாம் எழுத்தேழை யேற்குப் பகர்ந்த
முத்தா! வலுப்பான போர்க்குட் டொடங்கி
எக்காலு மக்காத சூர்க்கொத் தரிந்த சினவேலா;

தச்சா! மயிற்சேவல் ஆக்கிப் பிளந்த
சித்தா! குறப்பாவை தாட்குட் படிந்து
சக்காகி அப்பேடை யாட்குப் புகுந்து மணமாகித்-
தப்பாமல் இப்பூர்வ மேற்குத் தரங்கள்
தெற்காகும் இப்பாரில் கீர்த்திக் கிசைந்த
தச்சூர் வடக்காகு மார்க்கத் தமர்ந்த பெருமானே.

# 29. தேவனூர்

## 280. ஆசைகள் அற

தான தான தந்த தந்த தான தான தந்த தந்த
தான தான தந்த தந்த - தனதான

ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும்
[அஞ்சும்
ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் அறுநாலும்-
ஆறுமாய சஞ்ச லங்கள் வேற தாவி ளங்கு கின்ற
ஆர ணாக மங்க டந்த கலையான;

ஈறு கூற ரும்பெ ருஞ்சு வாமி யாய் இருந்த நன்றி
ஏது வேறி யம்பல் இன்றி ஒருதானாய்-
யாவு மாய்ம னங்க டந்த மோன வீட டைந்தொ ருங்கி
யான் அவா அடங்க என்று பெறுவேனோ;

மாறு கூறி வந்தெ திர்ந்த சூரர் சேனை மங்க வங்க
வாரி மேல்வெ குண்ட சண்ட விததாரை-
வாகை வேல! கொன்றை தும்பை மாலை கூவி
[ளங்கொ ழுந்து
வால சோமன் நஞ்சு பொங்கு பகுவாய;

சீறு மாசு ணங்க ரந்தை ஆறு வேணி கொண்ட நம்பர்
தேசி கா!க டம்ப லங்கல் புனைவோனே-
தேவர் யாவ ருந்தி ரண்டு பாரின் மீது வந்தி றைஞ்சு
தேவ னூர்வி ளங்க வந்த பெருமாளே.

## 30. நாகப்பட்டினம்

### 281. திருவடியைக் கூட

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா - தனதான

விழுதா தெனவே கருதா துடலை
வினைசேர் வதுவே புரிதாக-
விருதா வினிலே உலகா யதமே
விடவே மடவார் மயலாலே ;
அழுதா கெடவே அவமா கிடநாள்
அடைவே கழியா துனையோதி-
அலர்தாள் அடியேன் உறவாய் மருவோர்
அழியா வரமே தருவாயே ;
தொழுதார் வினைவேர் அடியோ டறவே
துகள்தீர் பரமே தருதேவா-
சுரர்பூ பதியே!கருணா லயனே !
சுகிர்தா ! அடியார் பெருவாழ்வே ;
எழுதா மறைமா முடிவே! வடிவேல்
இறைவா ! எனையாள் உடையோனே-
இறைவா! எதுதா அதுதா ! தனையே
இணைநா கையில்வாழ் பெருமாளே.

## 31. பட்டாலியூர்

### 282. முத்தியை எளிதில் பெற

தந்தத்தத் தான தனதன தந்தத்தத் தான தனதன
தந்தத்தத் தான தனதன - தனதான

சங்கைக்கத் தோடு இலுகிடு சங்கிச்சட் கோல சமயிகள்
சங்கற்பித் தோதும் வெகுவித கலைஞானச்-

சண்டைக்குட் கேள்வி அலம்அலம் அண்டற்குப் பூசை
[யிடுமவர்
சம்பத்துக் கேள்வி அலம்அலம் இமவானின் ;
மங்கைக்குப் பாகன் இருடிகள் எங்கட்குச் சாமி எனஅடி
வந்திக்கப் பேசி அருளிய சிவநூலின்-
மந்த்ரப்ரஸ்த் தார தரிசன யந்த்ரத்துக் கேள்வி
[அலம்அலம்
வம்பிற்கூற் றுது பரகதி அருள்வாயே ;
வெங்கைச்சுக் ரீபர் படையை இலங்கைக்குப் போக விடவல
வென்றிச்சக் ரேசன் மிகமகிழ் மருகோனே-
வெண்பட்டுப் பூணல் வனகமு கெண்பட்டுப் பாளை
[விரிபொழில்
விஞ்சிட்டுச் சூழ வெயில்மறை வயலூரா ;
கொங்கைக்கொப் பாகும் வடகிரி செங்கைக்கொப் பாகும்
[நறுமலர்
கொண்டைக்கொப் பாகு முகில்என வனமாதைக்-
கும்பிட்டுக் காதல் குனகிய இன்பச்சொற் பாடும் இளையவ!
கொங்கிற்பட் டாலிநகருறை பெருமாளே-

# 32. பேரூர்

## 283. ஞானோபதேசம் பெற

*தானத் தனதான*

| | |
|---|---|
| தீராப் பிணிதீர - | ஜீவாத் துமஞான ; |
| ஊராட் சியதான - | ஓர்வாக் கருள்வாயே |
| பாரோர்க் கிறைசேயே - | பாலாக் கிரிராசே ; |
| பேராற் பெரியோனே - | பேரூர்ப் பெருமாளே. |

# 33. திருப்போரூர்

## 284. நாளில் விழ

*தான தானன தானன தான தானன தானன*
*தான தானன தானன - தனதான*

சீர் உலாவிய ஓதிம மான மாநடை மாமயில்
சேய சாயல்க லாமதி முகமானார்-
தேனுலாவிய மாமொழி மேரு நேர்இள மாமுலை
சேல் உலாவிய கூர்விழி குமிழ்நாசி ;

தார் உலாவிய நீள்குழல் வேய் அளாவிய தோளியர்
சார்பி லேதிரி வேனைநின் அருளாலே-
சாம வேதியர் வானவர் ஓதி நாள்மலர் தூவிய
தாளில் வீழ விரும்புக அருள்வாயே;

கார் உலாவிய நீள்புன வேடர் மால்வரை மீதுறை
காவல் மாதினொ டாவல்செய் தணைவோனே-
காண ஆகம வேதபு ராண நூல்பல ஓதிய
காரணா!கரு ணாகர! முருகோனே;

போர் உலாவிய சூரனை வாரி சேறெழ வேல்விடு
பூப! சேவக! மாமயில் மிசையோனே-
போதன் மாதவன் மாதுமை பாதி ஆதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமானே.

## 285. துதி

தனன தானன தானன தனன தானன தானன
தனன தானன தானன தனதான

திமிர மாமன மாமட மடமை யேன்இடர் ஆணவ
திமிரமேஅரி சூரிய! திரிலோக-
தினக ரா!சிவ! காரண! பனக பூஷண ஆரண
சிவசு தா!அரி நாரணன் மருகோனே;

குமரி சாமளை மாதுமை அமலி யாமளை பூரணி
குணக லாநிதி நாரணி தருகோவே-
குரு!கு கா!கும ரேசுர!சரவ ணா!சக ளேசுர!
குறவர் மாமகள் ஆசைகொள் மணியே!சம்;

பமர பாரப்ர பாருண படல! தாரக! மாசுக!
பசுர பாடன பாளித! பகளேச-
பசித பாரண! வாரண துவச! ஏடக மாஅயில்
பரவு பாணித! பாவல! பரயோக;

சமப ராமத சாதல! சமயம் ஆறிரு தேவத!
சமய நாயக! மாமயில் முதுவீர-
சகல லோகமு மாசறு சகல வேதமு மேதொழு
*சமர மாபுரி மேவிய பெருமானே.

## 34. மதுரை

### 286. திருவடியைப் பெற

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

ஆனைமுக வற்கு நேர் இளைய பத்த!
ஆறுமுக வித்த கமரேசா-
ஆதிஅர னுக்கும் வேதமுதல் வற்கும்
ஆரணம் உரைத்த குருநாதா;

தானவர் குலத்தை வாள்கொடு துணித்த
சால்சதுர் மிகுத்த திறல்வீரா-
தாளிணைகள் உற்று மேவியப தத்தில்
வாழ்வொடு சிறக்க அருள்வாயே;

வானெழு புவிக்கும் மாலும் அய னுக்கும்
யாவரொரு வர்க்கும் அறியாத-
மாமதுரை சொக்கர் மாதுமை களிக்க
மாமயில் நடத்து முருகோனே;

தேனெழு புனத்தில் மான்விழி குறத்தி
சேரமரு வுற்ற திரள்தோளா-
தேவர்கள் கருத்தில் மேவிய பயத்தை
வேல்கொடு தணித்த பெருமானே.

### 287. அன்பு நிலைகூட

தானத் தனதான

நீதத் துவமாகி- நேமத் துணையாகிப்;
பூதத் தயவான போதைத் தருவாயே;
நாதத் தொனியோனே; ஞானக் கடலோனே;
கோதற் றமுதானே- கூடற் பெருமானே.

---

*சமர மாபுரி - திருப்போரூர்

## 288. சீர்பாத வகுப்பைப் பாட

தனன தனந்தன தனன தனந்தன
தனன தனந்தன தனதான

பரவு நெடுங்கதிர் உலகில் விரும்பிய
பவனி வரும்படி அதனாலே-
பகர வளங்களும் நிகர விளங்கிய
இருளை விடிந்தது நிலவாலே;-

வரையினில் எங்கணும் உலவி நிறைந்தது
வரிசை தரும்பத மதுபாடி-
வளமொடு செந்தமிழ் உரைசெய அன்பரும்
மகிழ வரங்களும் அருள்வாயே ;

அரஹர! சுந்தர; அறுமுக! என்றுனி
அடியர் பணிந்திட மகிழ்வோனே-
அசல நெடுங்கொடி அமைஉமை தன்ஸுத!
குறமகள் இங்கித மணவாளா ;

கருதரு திண்புய! சரவண! குங்கும
களபம் அணிந்திடு மணிமார்பா-
கனக மிகும்பதி மதுரை வளம்பதி
அதனில் வளர்ந்தருள் பெருமாளே.

# 35. மயிலாப்பூர்

## 289. அருளின்பம் பெற

தனன தானன தானன தந்தத் தனதான

அறம் இலா அதி பாதக வஞ்சத் தொழிலாலே-
அடியனேன்மெலி வாகி மனஞ்சற் றிளையாதே ;
திறல் குலாவிய சேவடி வந்தித் தருள்கூடத் ;
தினமு மேமிக வாழ்வுறும் இன்பைத் தருவாயே-

விறல் நிசாசரர் சேனைகள் அஞ்சப் பொரும்வேலா-
விமல மாதபி ராமி தருஞ்செய்ப் புதல்வோனே;
மறவர் வாணுதல் வேடை கொளும்பொற் புயவீரா-
மயிலை மாநகர் மேவிய கந்தப் பெருமாளே.

## 290. மாதர் மயலால் தடையுறாதிருக்க

தனதத் தனதன தனதான

அயிலொத் தெழுமிரு விழியாலே-
அமுதொத் திடுமரு மொழியாலே;
சயிலத் தெழுதுணை முலையாலே-
தடையுற் றடியனு மடிவேனோ;
கயிலைப் பதியரன் முருகோனே-
கடலக் கரைதிரை யருகேசூழ்;
மயிலைப் பதிதனில் உறைவோனே-
மகிமைக் கடியவர் பெருமாளே.

# 36. (திரு) முட்டம் (ஸ்ரீ முஷ்ணம்)

## 291. தரிசனம் பெற

தனனத்த தான தனனத்த தான
தனனத்த தான தனதான

கழைமுத்து மாலை புயல்முத்து மாலை
கரிமுத்து மாலை மலைமேவுங்-
கடிமுத்து மாலை வளைமுத்து மாலை
கடல்முத்து மாலை அரவீனும்;
அழல்முத்து மாலை இவைமுற்றும் மார்பின்
அடைவொத்து லாவ அடியேன்முன்-
அடர்பச்சை மாவில் அருளிற்பெ ணோடும்
அடிமைக்கு முனமொ டருள்வாயே;
மழைஒத்த சோதி குயில்தத்தை போலும்
மழலைச்சொல் ஆயி எமைஈனும்;
மதமத்த நீல களநித்த நாதரி
மகிழ்சத்தி ஈனும் முருகோனே;

செழுமுத்து மார்பின் அமுதத் தெய்வானை
திருமுத்தி மாதின் மணவாளா-
சிறையிட்ட சூரர் தலைவெட்டி ஞான
திருமுட்ட மேவு பெருமாளே.

## 37. திருமுருகன் பூண்டி

### 292. திருவடியைப் பூண

தனதனனந் தாந்தத் தனதான

அவசியம்உன் வேண்டிப் பலகாலும்-
அறிவின்உணர்ந் தாண்டுக் கொருநாளில்;
தவ செபமும் தீண்டிக் கனிவாகிச்-
சரணமதும் பூண்டற் கருள்வாயே;
சவதமொடுந் தாண்டித் தகர்ஊர்வாய்-
சடுசமயங் காண்டற் கரியானே;
இவகுமரன் பீண்டிற் பெயரானே-
திருமுருகன் பூண்டிப் பெருமானே.

## 38. வடதிருமுல்லைவாயில்

### 293. கரை ஏற

தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன - தனதான

அணி செவ்வி யார்திரை சூழ்புவி
தனிலிவ்வி யேகரை யேறிட
அறிவில்லி யாம்அடி யேன்இடர் அதுதீர-
அருள்வல்லை யோநெடு நாள்இனம்
இருள்இல்லி லேஇடு மோஉன
தருள்இல்லை யோஇனம் ஆனவை அறியேனே;

குணவில்ல தாமக மேரினை
அணிசெல்வி யாய்அரு ணசல
குருவல்ல மாதவ மேபெறு குணசாத-

குடில்இல்ல மேதரு நான்எது
மொழிநல்ல யோகவ ரேபணி
குணவல்ல வாசிவ னேசிவ குருநாதா;

பணிகொள்ளி மாகண பூதமொ
டமர்கள்ளி கானக நாடக
பரமெல்லி யார்பர மேசுரி தருகோவே-

படர்அல்லி மாமலர் பாணம
துடைவில்லி மாமத னார்அனை
பரிசெல்வி யார்மரு காசுர முருகேசா;

மணம் ஒல்லை யாகி நகாகன
தனவல்லி மோகன மோடமர்
மகிழ்தில்லை மாநடம் ஆடினர் அருள்பாலா-

மருமல்லி மாவனம் நீடிய
பொழில்மெல்லி காவன மாடமை
வடமுல்லை வாயிலில் மேவிய பெருமாளே.

# 39. வயலூர்

## 294. உபதேசம் பெற

தனதன தானன தானந் தனதன தானன தானந்
தனதன தானன தானந் - தனதான

அரிமரு கோனே! நமோ! என் றறுதியி லானே! நமோ! என்
றறுமுக வேளே! நமோ! என் றனபாதம்-
அரகர சேயே! நமோ! என் றிமையவர் வாழ்வே!
நமோ! என்
றருண சொரூபா! நமோ! என் றனதாளை;

செழுமுத்து மார்பின் அமுதத் தெய்வானை
  திருமுத்தி மாதின் மணவாளா-
சிறையிட்ட சூரர் தலைவெட்டி ஞான
  திருமுட்ட மேவு பெருமாளே.

## 37. திருமுருகன் பூண்டி

### 292. திருவடியைப் புனை

தனதனனந் தாந்தத் தனதான

அவசியம்உன் வேண்டிப் பலகாலும்-
  அறிவின்உணர்ந் தாண்டுக் கொருநாளில்;
தவ செபமும் தீண்டிக் கனிவாகிச்-
  சரணமதும் பூண்டற் கருள்வாயே;
சவதமொடுந் தாண்டித் தகர்ஊர்வாய்-
  சடுசமயங் காண்டற் கரியானே;
இவகுமரன் பீண்டிற் பெயரானே-
  திருமுருகன் பூண்டிப் பெருமானே.

## 38. வடதிருமுல்லைவாயில்

### 293. கரை ஏற

தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன - தனதான

அணி செவ்வி யார்திரை சூழ்புவி
  தனிலவ்வி யேகரை யேறிட
  அறிவில்லி யாம்அடி யேன்இடர் அதுதீர-
அருள்வல்லை யோநெடு நாள்இனம்
  இருள்இல்லி வேஇடு மோஉன
  தருள்இல்லை யோஇனம் ஆனவை அறியேனே;

குணவில்ல தாமக மேரினை
அணிசெல்வி யாய்அரு ளுசல
குருவல்ல மாதவ மேபெறு குணசாத-

குடில்இல்ல மேதரு நாள்எது
மொழிநல்ல யோகவ ரேபணி
குணவல்ல வாசிவ னேசிவ குருநாதா;

பணிகொள்ளி மாகண பூதமொ
டமர்கள்ளி கானக நாடக
பரமெல்லி யார்பர மேசுரி தருகோவே-

படர்அல்லி மாமலர் பாணம
துடைவில்லி மாமத னூர்அனை
பரிசெல்வி யார்மரு காசுர முருகேசா;

மணம் ஒல்லை யாகி நகாகன
தனவல்லி மோகன மோடமர்
மகிழ்தில்லை மாநடம் ஆடினர் அருள்பாலா-

மருமல்லி மாவனம் நீடிய
பொழில்மெல்லி காவன மாடமை
வடமுல்லை வாயிலில் மேவிய பெருமாளே.

# 39. வயலூர்

## 294. உபதேசம் பெற

தனதன தானன தானந் தனதன தானன தானந்
தனதன தானன தானந் - தனதான

அரிமரு கோனே! நமோ! என் றறுதியி லானே! நமோ! என்
றறுமுக வேளே! நமோ! என் றுனபாதம்-
அரகர சேயே! நமோ! என் றிமையவர் வாழ்வே!
நமோ! என்
றருண சொரூபா! நமோ! என் றுனதாளை;

பரிபுர பாதா! சுரேசன் தருமகள் நாதா! அராவின்
பகைமயில் வேலா யுதாடம் பர! நாளும்-
பகர்தல் இலாதாளை ஏதுஞ் சிலதறி யாஏழை நான் உன்
பதிபசு பாசோப தேசம் பெறவேணும்;

கரதல சூலாயுதா!முன் ஜலபதி போல்ஆர வாரம்
கடினசு ராபான சாமுண் டியும்ஆடக்-
கரிபரி மேல்ஏறு வானும் செயசெய சேனு பதி என்
களமிசை தான்ஏறியேஅஞ் சியசூரன்;

குரல்விட நாய்பேய்கள் பூதம் கழுகுகள் கோமாயு காகம்
குடல்கொள வேபூசல் ஆடும் பலதோளா-
குடதிசை வார்ஆழி போலும் படர்நதி காவேரி சூழும்
குளிர்வய லூர் ஆர மேவும் பெருமானே.

## 295. எல்லாம் அவன் செயலே

தன்ன தனத்தன தன்ன தனத்தன
தன்ன தனத்தன - தந்ததான

என்னால் பிறக்கவும் என்னால் இறக்கவும்
என்னால் துதிக்கவும் கண்களாலே-
என்னால் அழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னால் இருக்கவும் பெண்டிர் வீடு;

என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்தநோயை-
என்னால் எரிக்கவும் என்னால் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் இங்குநானார்;

கன்னார் உரித்தஎன் மன்ன எனக்குநல்
கர்ண மிர்தப்பதம் தந்தகோவே-
கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
கண்ணாடி யிற்றடம் கண்டவேலா;

மன்னான தக்கனை முன்னாள் முடித்தலை
வன்வாளி யிற்கொளும் தங்கருபன்-
மன்ன குறத்தியின் மன்ன வயற்பதி
மன்ன முவர்க்கொரு தம்பிரானே.

### 296. அன்பை மறவேன்

தானன தனத்த தானன தனத்த
தானன தனத்த - தனதான

தாமரையின் மட்டு வாசமலர் ஒத்த
தாளிணை நினைப்பில் அடியேனைத்-
தாதவிழ் கடுக்கை நாகமகிழ் கற்ப
தாருஎன மெத்தி யவிராவி ;

மாமலையின் நிற்ப நீகருதி யுற்று
வாஎன அழைத்தென் மனதாசை-
மாசினை அறுத்து ஞானமுத வித்த
வாரமினி நித்த மறவேனே ;

காமனை எரித்த தீநயன நெற்றி
காதிய சுவர்க்க நதிவேணி-
கானில்உறை புற்றில் ஆடுபணி யிட்ட
காதுடைய அப்பர் குருநாதா ;

சோமனொ டருக்கன் மீன்உலவு மிக்க
சோலைபுடை சுற்று வயலூரா-
சூடிய தடக்கை வேல்கொடு விடுத்து
சூர்தலை துணித்த பெருமாளே.

## 40. (திரு) வல்லம்

### 297. திருநாமம் கூற

தனதன தானம் தனதன தானம்
தனதன தானம் - தனதான

நசையொடு தோலும் தசைதுறு நீரும்
நடுநடு வேஎன் புறநீலும்
நலமுறு வேய்ஒன் றிடஇரு கால்நன்
றுறநடை ஆரும் குடிலூடே;

விசைஉறு காலம் புலன்நெறியே வெங்
கனல்உயிர் வேழம் திரியாதே-
விழும்அடி யார்முன் பழுதற வேள்கந்
தனும்என ஓதும் விறல்தாராய்;
இசைஉற வேஅன் றசைவற ஊதும்
எழில்அரி வேழம் எனையாள்என்(று)-
இடர்கொடு மூலம் தொடர்வுடன் ஓதும்
இடம்இமை யாமுன் வருமாயன்;
திசைமுக னும் திசைபுவி வானும்
திரிதர வாழும் சிவன்மூதூர்-
தெரிவையர் தாம்வந் தருநடம் ஆடும்
திருவல மேவும் பெருமாளே.

## 41. (திரு) வலிதாயம்

### 298. திருவடி பேணும் மனம் பெற

தனதய்ய தானதன - தனதான

மருமல்லி யார்குழலின் மடமாதர்-
மருள்உள்ளி நாயடியன் அலையாமல்;
இருநல்ல வாகும்உன தடிபேண-
இனவல்ல மானமன தருளாயோ;
கருநெல்லி மேனிஅரி மருகோனே-
கனவள்ளி யார்கணவ முருகேசா;
*திருவல்லி தாயம்அதில் உறைவோனே-
திகழ்வல்ல மாதவர்கள் பெருமாளே.

## 42. (திரு) வான்மியூர்

### 299. திருவடியைப் பெற

தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன - தனதான

குசம்ஆகி ஆருமலை மறைமாநுண் நூலின் இடை
குடில்ஆன ஆல்வயிறு குழையூடே-
குறிபோகு மீனவிழி மதிமாமு காருமலர்
குழல்கார தானகுணம் இலிமாதர்;

* திருவல்லி தாயம் - 'பாடி' எனத் தற்போது வழங்கும் ஊர்.

புஜஆசை யால்மனது உனைநாடி டாதபடி
புலையேன் உலாவிமிகு புணர்வாகிப்
புகழான பூமிமிசை மடிவாய் இருதவகை
பொலிவான பாதமலர் அருள்வாயே ;

நிசநார ஞதிதிரு மருகா ! உலாஸமிகு
நிகழ்போத மானபர முருகோனே
நிதிஞான போதம்அரன் இருகாதி லேஉதவு
நிபுண ! நிசாசரர்கள் குலகாலா ;

திசைமாமு காழிஅரி மகவான் முனோர்கள்பணி
சிவநாதர் ஆலம்அயில் அமுதேசர்
திகழ்பால ! மாகம்உற மணிமாளி மாடம்உயர்
திருவான்மி யூர்மருவு பெருமாளே.

## 43. விரிஞ்சிபுரம்

### 300. திருவடியைப் பெற

தனன தந்த தானன தனன தந்த தானன
தனன தந்த தானன தனதான

நிகரில் பஞ்ச பூதமும் நினையும் நெஞ்சும் ஆவியும்
நெகிழ வந்து நேர்படும் அவிரோதம்
நிகழ்த ரும்ப்ர பாகர நிரவ யம்ப ராபர
நிருப அங்கு மாரவேள் எனவேதம் ;

சகர சங்க சாகரம் எனமு ழங்கு வாதிகள்
சமய பஞ்ச பாதகர் அறியாத ;
தனிமை கண்ட தானகிண் கிணிய தண்டை சூழ்வன
சரண புண்ட ரீகம தருள்வாயே ;

மகர விம்ப சீகர முகர வங்க வாரிதி
மறுகி வெந்து வாய்விட நெடுவான
வழிதி றந்து சேனையும் எதிர்ம லைந்த சூரனும்
மடிய இந்தி ராதியர் குடியேறச் ;

சிகர துங்க மால்வரை தகர வென்றி வேல்விடு
சிறுவ ! சந்த்ர சேகரர் பெருவாழ்வே-
திசைதொ றும்ப்ர பூபதி திசைமு கன்ப ராவிய
திருவி ரிஞ்சை மேவிய பெருமாளே'

## 44. திருவீழிமிழலை

### 301. முருகா என ஓத

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

ஒருவாய் கருவாய் தனிலே உருவாய்
இதுவே பயிராய் விளைவாகி—
இவர்போய் அவராய் அவர்போய் இவராய்
இதுவே தொடர்பாய் வெறிபோல ;

ஒருதாய் இருதாய் பலகோ டியதாய்
உடனே அவமாய் அழியாதே—
ஒருகால் முருகா ! பரமா ! குமரா !
உயிர்கா எனஓ தருள்தாராய்;

முருகா எனஓர் தரம்ஓ தடியார்
முடிமேல் இணைதாள் அருள்வோனே-
முநிவோர் அமரோர் முறையோ எனவே
முதுசூர் உரமேல் விடும்வேலா;

திருமால் பிரமா அறியா தவர்சீர்
சிறுவா ! திருமால் மருகோனே—
செழுமா மதில்சேர் அழகார் பொழில்சூழ்
திருவீழி யில்வாழ் பெருமாளே.

## 45. வேதாரணியம்

### 302. திருவடியைச் சிந்திக்க

தான்ன தத்தத் தந்தன தந்தன தனதான

சூழும் வினைக்கட் டுன்பநெ டும்பிணி கழிகாமம்—
சோரம் இதற்குச் சிந்தைநி னைந்துறு துணையாதே

ஏழையென் இத்துக் கங்களு டன்தினம் உழல்வேனோ—
ஏதம் அகற்றிச் செம்பத சிந்தனை தருவயே;
ஆழி அடைத்துத் தங்கைஇ லங்கையை எழுநாளே-
ஆண்மைசெலுத்திக் கொண்டகரும்புயல் மருகோனே;
வேழ முகற்குத் தம்பி எனும்திரு முருகோனே
வேத வனத்திற் சங்கரர் தந்தருள் பெருமாளே.

## 303. மாயை தொலைய

தான தனத்தன தந்த தான தனத்தன தந்த
தான தனத்தன தந்த தனதான

சேலை யுடுத்துந டந்து மாலைய விழ்த்து முடிந்து
சீத வரிக்குழல் கிண்டி யளிமூசத்-
தேனி லினிக்கமொ ழிந்து காமு கரைச்சிறை கொண்டு
தேச மனைத்தையும் வென்ற விழிமாதர்;

காலை மயக்கில்வி ழுந்து காம கலைக்குளு ழந்து
மாலி லகப்பட நொந்து திரிவேனோ—
வால ரவிக்கிர ணங்க ளாமென வுற்றப தங்கள்
மாயை தொலைத்திட வுன்றன் அருள்தாராய்-

பாலை வனத்தில் நடந்து நீல அரக்கியை வென்று
பார மலைக்குள கன்று. கனையாலேழ்—
பார மரத்திரள் மங்க வாலி யுரத்தையி டந்து
பால்வ ருணத்தலை வன்சொல் வழியாலே;

வேலை யடைத்துவ ரங்கனி சாடி யரக்கரி லங்கை
வீட ணருக்கருள் கொண்டல் மருகோனே-
மேவு திருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
வேத வனத்தில் அமர்ந்த பெருமாளே.

# 46. (திரு) வேற்காடு

## 304. யமன் கையிற் சிக்காதிருக்க

தானந்தா தனதான தானந்தா தனதான
தானந்தா தனதான தனதானா

ஆலம்போல் எழுநீல மேலங்காய் வரிகோல
மாளம்போர் செயுமாய விழியாலே—
ஆரம்பால் தொடைசால ஆலுங்கோ புரவார
ஆடம்பார் குவிநேய முலையாலே;

சாலந்தாழ் வுறுமால ஏலங்கோர் பிடியாய
வேளங்கார் துடிநீப இடையாலே;
சாரஞ்சார் வீலனாய் அநேகங்கா யமன்மீறு
காலந்தான் ஒழிவது உரையாயோ;

பாலம்பால் மணநாறு காலங்கே இறிலாத
மாதம்பா தருசேய வயலூரா-
பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர
பாசந்தா திருமாலின் மருகோனே;

வேலம்பார் குறமாது மேலும்பார் தருமாதும்
வீறங்கே இருபாலும் உறவீறு-
வேதந்தா அபிராம நாதந்தா அருள்பாவு
வேலங்கா டுறைசீல பெருமாளே.

## 305. அருள் மொழி பெற

தாத்தானன தானன தானன
தாத்தானன தானன தானன
தாத்தானன தானன தானன தனதான

கூர்ச்சார்குழ லார்விழி யார்அயில்
ஆர்ப்பால்மொழி யார்இடை நூல்எழு
வார்ச்சார்இள நீர்முலை மாதர்கள் மயலாலே—

காழ்க்காதல தாமன மேமிக
வார்க்காமுக னாய்உறு ஞாதக
மாப்பாதக னும்அடி யேனைநின் அருளாலே;

பார்ப்பாய்அலை யோ! அடி யாரொடு
சேர்ப்பாய்அலை யோ! உன தார்அருள்
கூர்ப்பாய்அலை யோ! உமை யாள்தரு குமரேசா;

பார்ப்பாவலர் ஓதுசொ லால்முது
நீர்ப்பாரினில் மீறிய கீரரை
ஆர்ப்பாய் உன தாம்அருளால் ஒர்சொல் அருள்வாயே;

வார்ப்பேர் அரு ளேபொழி காரண
நேர்ப்பாவச காரண மாமத
ஏற்பாடிக ளேஅழி வேஉற அறைகோப-

வாக்காசிவ மாமத மேமிக
ஊக்காதிப! யோகம தேஉறு
மாத்தா! சிவ பால!கு ஹா!அடி! யர்கள் வாழ்வே;

வேற்காடவல் வேடர்கள் மாமக
ளார்க்கார்வநன் மாமகி ழுதிரு
வேற்காடுறை வேதபு ரீசுரர் தருசேயே—

வேட்டார்மக வான்மக ளானவள்
ஏட்டார்திரு மாமண வாபொனின்
நாட்டார்பெரு வாழ்வென வேவரு பெருமானே.

## 47. வைத்தீச்வரன் கோயில்

### 306. மலம் அழிய

தனத்தன தானத் தனதான

உரத்துறை போதத் தனியான—
உனைச்சிறி தோதத் தெரியாது;
மரத்துறை போல்உற் றடியேனும்—
மலத்திருள் மூடிக் கெடலாமோ;
பரத்துறை சீலத் தவர்வாழ்வே—
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே;
வரத்துறை நீதர்க் கொருசேயே—
வயித்திய நாதப் பெருமானே.

### 307. யோகப் பேறு பெற

தானு தானன தாத்த தந்தன
தானு தானன தாத்த தந்தன
தானு தானன தாத்த தந்தன தனதான

மூலா தாரமொ டேற்றி அங்கியை
ஆறு தாரமொ டோட்டி யந்திர
மூலா வாயுவை ஏற்று நன்சுழி முனையூடே -

மூதா தாரம ருப்பில் அந்தர
நாதா கீதம தார்த்தி டும்பரம்
ஊடே பால்ஒளி ஆத்து மந்தனை விலகாமல் ;

மாலா டுனொடு சேர்த்தி தம்பெற
நாலு வேதம சாத்தி ரஞ்சொலும்
வாழ்ஞா னபுரி ஏற்றி மந்திர தவிசூடே -

மாதா நாதனும் வீற்றி ருந்திடும்
வீடே மூண்ஒளி காட்டி சந்திர
வாகாரி தேன்அமு தூட்டி என்றனை உடன்ஆள்வாய் ;

சூலாள் மாதுமை தூர்த்த சம்பவி
மாதா ராபகல் காத்த மைந்தனை
சூடோ டீர்வினை வாட்டி மைந்தர்என் எமைஆளும் -

தூயாள் மூவரை நாட்டும் எந்தையர்
வேளூர் வாழ்வினை தீர்த்த சங்கரர்
தோய்ஸா ரூபரொ டேற்றி ருந்தவள் அருள்பாலா;

வேலா ஏழ்கடல் வீட்டி வஞ்சக
மூடார் சூரரை வாட்டி அந்தகன்
வீடு டேவிய காத்தி ரம்பரி மயில்வாழ்வே !-

வேதா நால்தலை சிக்கொ ளும்படி
கோலா காலம தாட்டு மந்திர
வேலா ! மான்மக ளார்க்கி ரங்கிய பெருமானே.

# IV. பொதுப் பாடல்கள்

## 308. உபதேசம் பெற

தனதன்ன தனதன்ன தந்தந்த தத்ததன
தனதன்ன தனதன்ன தந்தந்த தத்ததன
தனதன்ன தனதன்ன தந்தந்த தத்ததன தத்ததன தான

அகரமுதல் எனஉரைசெய் ஐம்பந்தொர் அக்ஷரமும்
அகிலகலை களும்வெகுவி தங்கொண்ட தத்துவமும்
அபரிமித சுருதியும்அ டங்கும்த னிப்பொருளை
எப்பொருளு மாய..

அறிவையறி அவர்அறியும் இன்பந்த னைத்துரிய
முடிவைஅடி நடுமுடிவில் துங்கந்த னைச்சிறிய
அணுவைஅணு வினின்மலமு நெஞ்சுங்கு ணத்ரயமு
மற்றதொரு காலம்;

நிகழும்வடி வினைமுடிவில் ஒன்றென்றி ருப்பதனை
நிறைவுகுறை ஒழிவறநி றைந்தெங்கு நிற்பதனை
நிகர்பகர அரியதைவி சும்பின்புரத்ரயமெ
ரித்தபெரு மானும்;

நிருபகுரு பரகுமர என்றென்று பத்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழைய
நினதுவழி அடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது
ணர்த்திஅருள் வாயே;

தகுதகுகு தகுதகுகு தந்தந்த குத்தகுகு
டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டி குக்குடிகு
தகுதகெண கெணசெகுத தந்தந்த ரித்தகுத
தத்ததகு திதோ..

தனதனன தனதனன தந்தந்த னத்ததன
டுடுடுடு டுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு
தரரரர ரிரிரிரிரி என்றென்றி டக்கையும்உ
டுக்கையும்இ யாவும்;

மொகுமொகென அதிரமுதிர் அண்டம்பி ளக்கநிமிர்
அலைகைகர ணம்இடஉல கெங்கும்ப்ர மிக்கநட
முடுகுபயி ரவர்பவுரி கொண்டிடப்பு றப்படுக
ளத்தில் ஒருகோடி..

முதுகழுகு கொடிகருட னங்கம்பொ ரக்குருதி
நதிபெருக வெகுமுகக வந்தங்கள் நிர்த்தமிட
முரசதிர நிசிசரரை வென்றிந்தி ரற்கரசு
வித்த பெருமாளே.

## 309. ஞான பூஜை

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான

அகல நீளம் யாதாலும் ஒருவ ராலும் ஆராய
அரிய மோன மேகோயில் எனமேவி -
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம கானான
அறிவின் ஆத ராமோத மலர் தூவிச்;

சகல வேத ஞாதீத சகல வாச காதீத
சகல மாக்ரி யாதீத சிவரூப -
சகல சாத காதீத சகல வாச ஞாதீத
தனுவை நாடி மாபூஜை புரிவேனோ ;

விகட தார சூதான நிகள பர்த போதாள
விரக ராக போதார சுரர்கால -
விபுத மாலி காநீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசீல கவிநோத;

ககன கூட பாடீர தவள சோபி தாளான
கவன பூத ராரூட சதகோடி -
களப காம வீர்வீசு கரமு கார வேல்வீர !
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

## 310. கதி பெற

தனதான தந்தனத்த தனதான தந்தனத்த
தனதான தந்தனத்த தனதான

அடியார்ம னம்சலிக்க எவராகி லும்பழிக்க
அபராதம் வந்துகெட்ட பிணிமுடி -
அனைவோரும் வந்துசிச்சி எனநால்வ ரும்சிரிக்க
அனலோட மூன்றுசெத்து விடுமாபோற்;

கடையேன்ம லங்கள்முற்றும் இருநோயு டன்பிடித்த
கலியோடி றந்துசுத்த வெளியாகிக் -
கலிகூர என்றனுக்கு மயிலேறி வந்துமுத்தி
கதியேற அன்புவைத்துன் அருள்தாராய் ;

சடைமீது கங்கைவைத்து விடையேறும் எந்தைசுத்த
    தழல்மேனி யன்சிரித்தொர் புரமூணும் -
  தவிடாக வந்தெதிர்த்த மதன்ஆக மும்சிதைத்த
    தழல்பார்வை அன்றளித்த குருநாதா ;
மிடிதீர அண்டருக்கு மயிலேறி வஞ்சர்கொட்டம்
    வெளியாக வந்துநிர்த்தம் அருள்வோனே -
  மிலைநூல்ம ருங்குல்பொற்பு முலைமாதி ளங்குறத்தி
    மிகுமாலொ டன்புவைத்த பெருமாளே.

## 311. யான், எனது அற; எல்லாம் நானே ஆக

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

அமல வாயு ஓடாத கமல நாபி மேல்மூல
    அமுத பான மேமூல அனல்மூள -
  அசைவு றாது பேராத விதமு மேவி ஓவாது
    அரிச தான சோபானம் அதனாலே ;
எமனை மோதி ஆகாச கமன மாம னோபாவம்
    எளிது சால மேலாக உரையாடும் -
  எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
    இதய பாவ னாதீதம் அருள்வாயே ;
விமலை தோடி மீதோடு யமுனை போல ஓர்ஏழு
    விபுத மேக மேபோல உலகேழும் -
  விரிவு காணு மாமாயன் முடிய நீளு மாபோல
    வெகுவி தாமு காகாய பதம்ஓடிக் ;
கமல யோனி வீடான ககன கோள மீதோடு
    கலப நீல மாயூர ! இளையோனே -
  கருணை மேக மே! தூய கருணை வாரி யே!ஈறில்
    கருணை மேரு வே!தேவர் பெருமாளே.

## 312. முக்தி பெற

தத்ததன தானத் தனதான

இத்தரணி மீதிற் பிறவாதே -
    எத்தரொடு கூடிக் கலவாதே ;

முத்தமிழை ஓதித் தளராதே.
முத்தி அடி யேனுக் கருள்வாயே;
தத்துவமெய்ஞ் ஞானக் குருநாதா-
சத்தமொரு பா!புத் தமுதோனே;
நித்தியக்கு தா! நற் பெருவாழ்வே;
நிர்த்தஜெக ஜோதிப் பெருமாளே.

## 313. தீபத்தோடு வழிபட

தனந்த தானந் தந்தன தனதன தனதான

இருந்த வீடுங் கொஞ்சிய சிறுவரும் உறுசேனும்-
இசைந்த ஊரும் பெண்டிரும் இளமையும் வளமேவும்;
விரிந்த நாடும் குன்றமும் நிலைஎன மகிழாதே-
விளங்கு தீபம் கொண்டுனை வழிபட அருள்வாயே;
குருந்தில் ஏறும் கொண்டலின் வடிவினன் மருகோனே-
*குரங்கு லாவும் குன்றுறை குறமகள் மணவாளா;
திருந்த வேதம் தண்தமிழ் தெரிதரு புலவோனே-
சிவந்த காலும் தண்டையும் அழகிய பெருமாளே.

## 314. முத்தி பெற

தனதன தனதத்த தனனு தனனு
தனதன தனதத்த தனனு தனனு
தனதன தனதத்த தனனு தனனு தனதான

உமைஎனும் மயில்பெற்ற மயில்வா கனனே!
வனிதையர் அறுவர்க்கும் ஒருபா லகனே!
உளம்உரு கியபக்தர் உறவே! மறவேன் எனஓதி-
உருகுதல் ஒருசற்றும் அறியேன் வறியேன்
இருவினை இடைஇட்ட கொடியேன் அடியேன்
உணர்வினி பெறமுத்தி தருவாய்! துகிர்வாய் மடமாதர்;
அமைஎன வளர்சித்ர இருதோள் தழுவா
அமுதென மதுரித்த கனிவாய் அணுகா
அமளியில் அணைவுற்ற அநுரா கமஹோ தகிமூழ்கி-

*குரங்குலாவும் குன்று - வள்ளிமலை - எனவும் கொள்ளலாம். திருந்த வேதம் - சம்பந்தர் தேவாரம்.

அநவரத முமுற்ற மணிமா முலைதோய்
கலவியின் நலம்அற்ப சுகமா இனுமா
அநுபவம் இதுசற்றும் விடவோ இயலா தியலாதே ;
தமனிய குலசக்ர கிரியோ கடலோ
விடம்என முடிவைத்த முதுபேர் இருளோ
தனுவென முனையிட்ட கொலைமு இலைவேல் கொடுபார்வை -
தழல்எழ வரும்உக்ர எமபா தகனே
யுகஇறு தியில்மிக்க வடவா னலமோ
தனிஇவன் எனமிக்க பிசிதா சனபூ பதியாகி ;
இமையவர் அனைவர்க்கும் அறையோ அறையோ
அரிஅயன் முழுதுக்கும் அறையோ அறையோ
எழுபுவி உலகுக்கும் அறையோ அறையோ பொரவாரும் -
எனவரும் ஒருதுஷ்டன் முறையோ முறையோ
வடகுல கிரிஎட்டும் அபிதா அபிதா
எனஒரு அயில்தொட்ட அரசே ! இமையோர் பெருமாளே.

## 315. அடியரைத் தொழ

தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான

ஊனுந் தசைஉடல் தான்ஒன் பதுவழி
ஊருங் கருவழி ஒருகோடி-
ஓதும் பலகலை கீதம் ஸகலமும்
ஓரும் படிஉன தருள்பாடி ;
நான்உன் திருவடி பேணும் படிஇரு
போதும் கருணையில் மறவாதுன்-
நாமம் புகழ்பவர் பாதம் தொழஇனி
நாடும் படிஅருள் புரிவாயே;
காணும் திகழ்கதி ரோனும் சசியொடு
காலங் களும்நடை உடையோனும்-
காருங் கடல்வரை நீருந் தருகயி
லாயன் கழல்தொழும் இமையோரும் ;

வான்இந் திரன்நெடு மாலும் பிரமனும்
வாழும் படிவிடும் வடிவேலா—
மாயம் பலபுரி சூரன் பொடிபட
வாளகொண் டமர்செய்த பெருமாளே.

## 316. ஈடேற

தானா தானா தானா தானா தானா தானத் தனதான

ஊனா னாய் ஓயா நோயால் ஊசா டுசற் குடில்பேணு -
ஓதா மோதா வாதா காதே லோகா சாரத்
துளம்வேறாய்;

நானே நீயாய் நீயே நானாய் நானா வேதப் பொருளாலும் —
நாடா வீடா ஈடே றாதே நாயன் மாயக் கடமேனு ;
வானே! காலே! தீயே! நீரே! பாரே! பாருக் குரியோனே ;
மாயா மானே! கோனே! மானார் வாழ்வே! கோழிக்
கொடியோனே ;

தேனே! *தேன்நீள் கானா றாய்வீழ் தேசார் சாரற்
கிரியோனே -
சேயே! வேளே! பூவே! கோவே ! தேவே! தேவப்
பெருமாளே.

## 317. நான் ஆர்?

தானா தனந்த தானா தனந்த
தானா தனந்த தனதான

ஊனே றெலும்பு சீசீ மலங்க
ளோடே நரம்பு கசுமாலம் -
ஊழ் நோய் அடைந்து மாசான மண்டும்
ஊனே டுழன்ற கடைநாயேன் ;
நானா ஒடுங்க நானா வணங்க
நானா மகிழ்ந்து உனைஓத -
நானா இரங்க நானா உணங்கி
நானா நடந்து விழநான் ஆர் ;

*தேனாறு வீழ் சாரற் கிரி - குன்றக்குடி-எனக் கொள்ளலாம்.

தானே புணர்ந்து தானே அறிந்து
தானே மகிழ்ந்து அருள்ஊறித் -
தாய்போல் பரிந்த தேனே யுகந்து
தானே தழைந்து சிவம்ஆகித்;
தானே வளர்ந்து தானே இருந்த
தார்வேணி எந்தை அருள்பாலா -
ஸாலோக தொண்டர் ஸாமீப தொண்டர்
ஸாரூப தொண்டர் பெருமாளே.

## 318. முடிவுப் பொருளைப் பெற

தந்தந்த தனத்தன தாத்தன தன்தான

வன்பந்த வினைத்தொடர் போக்கிவி ஐயமாகி -
இன்பந்தனை உற்று மகாப்ரியம் அதுவாகி -
அன்புந்திய பொற்கிணி பாற்கடல் அமுதான;
அந்தந்தனில் இச்சைகொள் ஆற்பதம் அருள்வாயே;
முன்புந்தி நினைத்துரு வாற்சிறு வடிவாகி -
முன்திந்தி எனப்பர தாத்துடன் நடமாடித்;
தம்பந்தம் அறத்தவம் நோற்பவர் குறைதீர -
ஸம்பந்தன் எனத்தமிழ் தேக்கிய பெருமாளே.

## 319. பரமார்த்தம் பெற (பொது)

தான தாத்தன தாத்தன தான தாத்தன தாத்தன
தான தாத்தன தாத்தன தனதான

ஏக மாய்ப்பல வாய்ச்சிவ யோக மாய்த்தெளி வாய்ச்சிவம்
ஈதெ னுக்குரு வார்த்தையை உணராதே -
ஏழு பார்க்கும்வி யாக்கிரன் யானை யைப்பரி தேர்க்கரி
ஏறு மாப்பிறு மாப்புடன் அரசாகித்;
தோகை மார்க்கொரு காற்றெலை யாத்வேட் கையி னுற்கெடு
சோர்வி னுற்கொடி தாக்கையை இழவாமுன் -
ஜோதி காட்டவ ராச்சுத நாத னுர்க்கருள் போற்றிய
தாரி தாப்பர மார்த்தம தருள்வாயே;
நாக மேற்றுயில் வார்க்கய னுன பேர்க்கரி யார்க்கொரு
ஞான வார்த்தையி னுற்குரு பரன்ஆய -
நாத! நாட்டமு ருப்பல காலும் வேட்கையி னுற்புகல்
நாவ லோர்க்கரு ளாற்பத மருள்வாழ்வே;

வேக மேற்கொள் அராப்புடை தோகை மேற்கொடு வேற்கொடு
வீர மாக்குலை யாக்குல வரைசாய -
மேலை நாட்டவர் பூக்கொடு "வேல போற்றி" எனுத்தொழ
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே.

## 320. அநுபூதி பெற

தன்த்தத் தானத் - தனதானா

கருப்பற் றூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே ;
திருப்பொற் பாதத் தநுபூதி -
சிறக்கப் பாலித் தருள்வாயே ;
பரப்பற் றருக் குரியோனே -
பரத்தப் பாலுக் கணியோனே ;
திருக்கைச் சேவற் கொடியோனே -
ஜெகத்திற் ஜோதிப் பெருமாளே.

## 321. மோக்ஷம் பெற

தனன தாத்தன தன்ன் தாத்தன்
தானா தானா தானா தானா தனதான்

ஆவடு கோத்தெழும் உவரி மாத்திறல்
காய்வேல் பாடே னுடேன் வீடா னதுகூடக் -
கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல் வீழேன் வீழ்வார் கால்மீ தினும்வீழேன் ;
தவிடின் ஆர்ப்பதம் எனினும் ஏற்பவர்
தாழா தியேன் வாழா தேசா வதுசாலத் -
தரமு மோக்ஷமும் இனியென் ஆக்கைகள
தாஆ மாறே நீதான் நாதா ! புரிவாயே ;
சுவடு பார்த்தட வருக ராத்தலை
தூளா மாறே தான் 'ஆ நாரா யணனே! நற் -
றுணைவ ! பாற்கடல் வனிதை சேர்ப்ப!து
ழாய்மார் பா!கோ பாலா ! காவாய்' எனவேகைக் ;

குவடு கூப்பிட உவண மேற்கன
 கோடு தாவா வேபோ தாள்வான் மருகோனே -
குலிச பார்த்திபன் உலகு காத்தருள்
 கோவே! தேவே! வேளே! வானோர் பெருமானே.

## 322. காலனூர் புகுவோர்

‡தான தான தானான தானத் தனதான

காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோரும் -
 காசு தேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்;
மாது பாகர் வாழ்வே! எனாநெக் குருகாரும் -
 மாறி லாத மாகாலன் ஊர்புக் கலைவாரே;
நாத ரூப மாநாதர் ஆகத் துறைவோனே -
 நாக லோகம் ஈரேழு பாருக் குரியோனே;
நீதி லாத வேல்வீர! சேவற் கொடியோனே -
 தேவ தேவ தேவாதி தேவப் பெருமானே.

## 323. சீர்பாத வகுப்பாதி பாட

தந்ததன தத்த தத்த தந்ததன தத்த தத்த
தந்ததன தத்த தத்த தனதான

கிஞ்சுகம் எனச்சி வத்த தொண்டையள் மிகக்க றுத்த
 கெண்டையள் புனக்கொ டிச்சி அதிபாரக் -
கிம்புரி மருப்பை ஒத்த குங்கும முலைக்கு றத்தி
 கிங்கரன் எனப்ப டைத்த பெயர்பேசா;
நெஞ்சுருகி நெக்கு நெக்கு நின்றுதொழு நிர்க்கு ணத்தர்
 நிந்தனையில் பக்தர் மெச்சி மலர்தூவும் -
*நின்பத யுகப்ர சித்தி என்பன வகுத்து ரைக்க
 நின்பணி தமிழ்த்ர யத்தை அருள்வாயே;
கஞ்சன்வர விட்ட துஷ்ட குஞ்சர மருப்பொ சித்த
 கங்கனு மதித்தி கைக்க மதம்வீசும் -
கந்தெறி களிற்று ரித்து வென்றுதிரு நட்டம்இட்ட
 கம்பனு மதிக்க உக்ர வடிவேல்கொண்(டு);

---

* 'சீர்பாத வகுப்பு' முதலியவற்றை அருணகிரியார் பாடுதற்கு ஆதாரமாயிருந்த வேண்டுகோள் இது.

அஞ்சிய ஜகத்ர யத்தை அஞ்சலென விக்ர மித்து
அன்பர்புக ழப்பொ ருப்பொ டமராடி
அன்றவுண ரைக்க ளத்தில் வென்றுததி யைக்க லக்கி
அண்டர்சிறை வெட்டி விட்ட பெருமாளே.

## 324. அகப்பொருள் (அணைந்தருள) நற்றாய் இரங்கல்

தனனதன தானத் தனதான

கொடியமத வேள்கைக் கணையாலே-
குரைகண்நெடு நீலக் கடலாலே;
நெடியபுகழ் சோலைக் குயிலாலே
நிலைமைகெடு மானைத் தழுவாயே-
கடிஅரவு பூணர்க் கினியோனே;
கலைகள்தெரி மாமெய்ப் புலவோனே-
அடியவர்கள் நேசத் துறைவேலா;
அறுமுகவி நோதப் பெருமாளே.

## 325. துணை பெற

தனன தத்த தனத்தன தனதான

சமய பக்தி வ்ருதாத்தனை நினையாதே -
சரண பத்ம சிவார்ச்சனை தனைநாடி
அமைய ஸற்குரு சாஸ்திர மொழிநூலால்;
அருள் எனக்கினி மேற்றுணை தருவாயே;
உமை முலைத்தரு பாற்கொடு அருள்கூறி -
உரிய மெய்த்தவம் ஆக்கிநல் உபதேசத்;
தமிழ் தனைக்கரை காட்டிய திறலோனே -
சமண ரைக்கழு ஏற்றிய பெருமாளே.

## 326. திருவடி தர வர

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

சீதமலம் வெப்பு வாதமிகு பித்தம்
ஆனபிணி சுற்றி உடல்ஊடே -
சேரும்உயிர் தப்பி ஏகும்வண மிக்க
தீதுவினை விக்க வருபோதில்;

தாதையொடு மக்கள் நீதியொடுதுக்க
ஸாகரம தற்குள் அழியாமுன்;
தாரணி தனக்குள் ஆரணம் உரைத்த
தாள்தர நினைத்து வரவேணும்;
மாதர் மயலுற்று வாடவடி வுற்று
மாமயிலில் நித்தம் வருவோனே -
மாலும்அயன் ஒப்பி லாதபடி பற்றி
மால்உழலு மற்ற மறையோர்முன்;
வேதமொழி வித்தை ஓதிஅறி வித்த
நாத!விறல் மிக்க இகல்வேலா -
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே.

## 327. பெரும் பொருள் உணர

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

ஆசையும் உதிரமும் நிணமொடு செருமிய
கரும கிருமிகள் ஒழுகிய பழகிய
சடல உடல்கடை சுடலையில் இடுசிறு குடில்பேணும் -
ஸகல கருமிகள் சருவிய சமயிகள்
சரியை கிரியைகள் தவம்எனும் அவர்சிலர்
சவலை அறிவினர் நெறியினை விடஇனி அடியேனுக்(கு);
இசைய இதுபொருள் எனஅறி வுறஒரு
வசநம் உறஇரு வினைஅற மலம்அற
இரவு பகல்அற எனதற நினதற அநுபூதி -
இனிமை தரும்ஒரு தனிமையை மறைகளின்
இறுதி அறுதிஇட அரிய பெறுதியை
இருமை ஒருமையில் பெருமையை வெளிபட
மொழிவாயே;
அசல குலபதி தரும்ஒரு திருமகள்
அமலை விமலைகள் எழுவரும் வழிபட
அருளி அருணையில் உறைதரும் இறையவள் அபிராமி -

அநகை அநுபவை அநுதயை அபிநவை
அதல முதல்எழு தலமஇவை முறைமுறை
அடைய அருளிய பழையவள் அருளிய சிறியோனே ;

வசுவ பசுபதி மகிழ்தர ஒருமொழி
மவுநம் அருளிய மகிமையும் இமையவர்
மரபில் வனிதையும் வனசரர் புதல்வியும் வடிவேலும் -
மயிலும் இயல்அறி புலமையும் உபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவும் இளமையும் வளமையும் அழகிய பெருமாளே.

## 328. பிறவியற

தானான தாத்த தானான தாத்த
தானான தாத்த தனதான

நீயூதை தாத்ரி பானீயம் ஏற்ற
வானீதி யாற்றி கழுமாசைச் -
சேறூறு தோற்பை யானாக நோக்கு
மாமாயை தீர்க்க அறியாதே ;

பேய்பூத மூத்த பாரேறி காக்கை
பீறுஇ பூாத்தின் உடல்பேணிப் -
பேயோன்ந டாத்து கோமாளி வாழ்க்கை
போமாறு பேர்த்துன் அடிதாராய் ;

வேயூரு சேர்க்கை வேல்வேடர் காட்டில்
ஏய்வாளை வேட்க உருமாறி -
மீளாது வேட்கை மீதூர வாய்த்த
வேலோடு வேய்த்த இளையோனே ;

மாயூர ஏற்றின் மீதே புகாப்பொன்
மாமேரு வேர்ப்ப றியமோதி -
மாறான மாக்கள் நீறாக ஒட்டி
வானாடு காத்த பெருமாளே.

## 329. அகப்பொருள்-அணைந்தருள

தய்யதன தானத் தனதான

தூள்ளுமத வேள்கைக் கணையாலே -
தொல்லைநெடு நீலக் கடலாலே ;

மெள்ளவரு சோலைக் குயிலாலே —
மெய்யுருகு மாலைத் தழலாயே ;
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே —
செய்யகும ரேசத் திறலோனே ;
வள்ளல்தொழு ஞானக் கழலோனே —
வள்ளிமண வாளப் பெருமானே.

## 330. தான்பாடும் திறம்பெற

*தானா தானா தானா தானா தானா தானத் தனதான*

நாரா லேதோல் நீரா லேயாம் நானா வாசற் குடிலூடே —
ஞாதா வாயே வாழ்கா லேகாய் நாய்பேய் சூழ்கைக் கிடமாமுன் ;
தாரா ரார்தோள் ஈரா றூனே ! சார்வா னோர்நற் பெருவாழ்வே —
தாழா தேநா யேன்நா வாலே தான்பா டாண்மைத் திறல்தாராய் ;
பாரேழ் ஓர்தா ளாலே ஆள்வோர் பாவார் வேதத் தயனாரும் —
யாழு டேவா னூடே பாரு டேஊர் பாதத் திணைநாடாச் ;
சீரார் மாதோ டேவாழ் வார்நீள் சேஊர் வார்பொற் சடைஈசர் —
சேயே ! வேளே ! பூவே ! கோவே ! தேவே ! தேவப் பெருமானே.

## 331. நடன தரிசனம்

*தத்தனத் தனனதத்த தனதான*

நித்தமுற் றுனைநினைத்து மிகநாடி —
நிட்டைபெற் றியல்கருத்தர் துணையாக ;
நத்திஉத் தமதவத்தின் நெறியாலே —
லக்யலக் கண நிருத்தம் அருள்வாயே ;
வெற்றிவிக் ரமஅரக்கர் கிளைமாள —
விட்டநத் துகரனுக்கு மருகோனே ;
குற்றமற் றவர்உளத்தில் உறைவோனே —
குக்குடக் கொடிதரித்த பெருமானே.

## 332. பணிந்து மகிழ

தனந்த தனனந் தனந்த தனந்த தனனந் தனந்த
தனந்த தனனந் தனந்த தனதான

நிமிர்ந்த முதுகுங் குனிந்து சிறந்த முகமும் திரங்கி
நிறைந்த வயிறுஞ் சரிந்து தடிஊனி -
நெகிழ்ந்து சடலந் தளர்ந்து விளங்கு விழியங் கிருண்டு
நினைந்த மதியுங் கலங்கி மனையாள்கண்(டு);
உமிழ்ந்து பலருங் கடிந்து சிறந்த இயலும் பெயர்ந்து
உறைந்த உயிருங் கழன்று விடுநாள்முன் -
உகந்து மனமுங் குளிர்ந்து பயன்கொள் தருமம் புரிந்து
ஒடுங்கி நினையும் பணிந்து மகிழ்வேனோ;
திமிந்தி யெனவெங் கணங்கள் குணங்கர் பலவுங் குழும்பி
திரண்ட சதியும் புரிந்து முதுசூரன் -
சிரங்கை முழுதுங் குடைந்து நிணங்கொள் குடலுந் தொலைந்து
சினங் கழுகொடும் பெருங்கு ருதிமூழ்கி;
அமிழ்ந்தி மிகவும்பிணங்கள் அயின்று மகிழ்கொண்டு மண்ட
அடர்ந்த அயில்முன் துரந்து பொருவேளே -
அலங்கல் எனவெண் கடம்பு புனைந்து புணரும் குறிஞ்சி
அணங்கை மணமுன் புணர்ந்த பெருமாளே.

## 333. அகப் பொருள்—மாலை பெற

தானந்த தானத்த தனதான

*நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே -
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே;
மால்கொண்ட பேதைக்குன் மணம்நாறும் -
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே;
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே -
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா;
நாலந்த வேதத்தின் பொருளோனே -
நான்என்று மார்தட்டும் பெருமாளே.

---

* திருமணம் ஆகாத பெண்கள் இப் பாடலையும், 31-எண்ணுள்ள 'விறல்மாரன்' என்ற பாடலையும், தினமும் தவறாமல் ஓதிவந்தால் சீக்கிரமே திருமணம் ஆகும் என்று ஸ்வாமிகள் உபதேசிப்பதுண்டு

## 334. சிவபதம் பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

புகர நினைவொரு நினைஅள விலுமிலி
கருணை இலையென கருணையொ டுதணியல்
பழநி மலைகுரு மலைபணி மலைபல மலைபாடிப் —
பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி அழகிலி குலமிலி நலமிலி
பதிமை இலிபவு ஷதம்இலி மகிமைஇ லிகுணாலன் ;
திகிரி வருபொரு செலவினில் எழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருகன் உருகுதல் அழுதல் தொழுகுதல் நினையாத—
திமிரன் இயல்பிலி அருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலில் உணர்விலி சிவபதம் அடைவதும் ஒருநாளே ;
மகர ஜலநிதி முறையிட நிசிசரன்
மகுடம் ஒருபதும் இருபது திரள்புய
வரையும் அறஒரு கணைதெரி புயலகுரு நிருபதூதன் —
மடுவில் மதகரி முதல்என உதவிய
வரதன் இருதிறல் மருதொடு பொருதவன்
மதலை குதலையின் மறைமொழி இகழ்இர ணியன்ஆகம் ;
உகிரின் நுதிகொடு வகிருப ஓர் அடல்அரி
திகிரி தரமர கதகிரி எரிஉமிழ்
உரக சுடிகையில் நடம்நவில் அரிதிரு மருகோனே—
உருகும் அடியவர் இருவினை இருள்பொரும்
உதய தினகர! இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே.

## 335. காம மயக்கு அற்று, உணர

தான தனந்தன தான தனந்தன
தான தனந்தன தனதான

பார நறுங்குழல் சோர நெகிழ்ந்துப
டீர தனம்புள கிதமாகப் —

பாவையர் உந்தியில் மூழ்கி நெடும்பரி
தாப முடன்பரி . மளவாயின் ;
ஆரமு துண்டணை மீதில் இருந்தநு
ராகம் விளைந்திட விளையாடி-
ஆக நகம்பட ஆர முயங்கிய
ஆசை மறந்துனை உணர்வேனோ ;
நாரதன் அன்று ஸஹாய (ம்) மொழிந்திட
நாயகி பைம்புன மதுதேடி—
நாணம் அழிந்துரு மாறிய வஞ்சக
நாடியெ பங்கய பதம்நோவ ;
மார சரம்பட மோக முடன்குற
வாணர் குறிஞ்சியின் மிசையேபோய்—
மாமுநி வன்புணர் மானுத வும்தனி
மானை மணஞ்செய்த பெருமாளே.

## 336. திருவடி தரிசனம் பெற

தனனதன தாத்தனத் தனதான

பிறவி அலை ஆற்றினிற் புகுதாதே—
பிரகிருதி மார்க்கம்உற் றலையாதே ;
உறுதிகுரு வாக்கியப் பொருளாலே—
உனதுபத காட்சியைத் தருவாயே ;
அறுசமய சாஸ்த்திரப் பொருளோனே—
அறிவுள் அறிவார்க்குணக் கடலோனே ;
குறுமுநிவன் ஏத்துமுத் தமிழோனே—
குமரகுரு கார்த்திகைப் பெருமாளே.

## 337. பிறவி அற

தனத்த தந்தனம் தனத்த தந்தனம்
தனத்த தந்தனம் தனதான

புரக்க வந்தநம் குறக்க ரும்பைமென்
புனத்தில் அன்றுசென் றுறவாடிப்—
புடைத்த லங்க்ருதம் படைத்தெ ழுந்ததிண்
புதுக்க ரும்பைமென் புயமீதே;

செருக்க நெஞ்சகம் களிக்க அன்புடன்
திளைக்கும் நின்திறம் புகலாதிந்—
த்ரியக்க டஞ்சுமந் தலக்கண் மண்டிடும்
தியக்கம் என்றொழிந் திடுவேனோ;
குரக்கி னம்கொணர்ந் தரக்கர் தண்டமும்
குவட்டி லங்கையும் துகளாகக்—
கொதித்த கொண்டலும் த்ரியக்ஷ ருங்கடம்
கொதித்து மண்டுவெம் பகைஓடத்;
இரக்கும் விம்பகிம் புரிப்ர சண்டசித்
துரத்த னும்பிறந் திறவாத—
ஸுகத்தில் அன்பரும் ஜெகத்ர யங்களும்
துதிக்கும் உம்பர்தம் பெருமாளே.

## 338. பணிவிடையின் கணக்கு

தனத்தந் தான் தன்தன் தனத்தந் தான் தன்தன்
தனத்தந் தான் தன்தன் தனதான

புவிக்குன் பாதம் அதைநினை பவர்க்குங் கால தரிசனை
புலக்கண் கூடும் அதுதனை அறியாதே -
புரட்டும் பாத சமயிகள் நெறிக்கண் பூது படிறரை
புழுக்கண் பாவம் அதுகொளல் பிழையாதே;
கவிக்கொண் டாடு புகழினை படிக்கும் பாடு திறம்இலி
களைக்கும் பாவ சுழல்படும் அடிநாயேன் -
கலக்குண் டாகு புவிதனில் எனக்குண் டாகு பணிவிடை
கணக்குண் டாதல் திருவுளம் அறியாதோ;
சிவத்தின் சாமி மயில்மிசை நடிக்கும் சாமி எமதுளெ
சிறக்கும் சாமி ஸொருபமி தொளிகாணச் -
செழிக்கும் சாமி பிறவியை ஒழிக்கும் சாமி பவமதை
தெறிக்கும் சாமி முநிவர்கள் இடமேவும்;
தவத்தின் சாமி புரிபிழை பொறுக்கும் சாமி குடிநிலை
தரிக்கும் சாமி அசுரர்கள் பொடியாகச் -
சதைக்கும் சாமி எமைபணி விதிக்கும் சாமி சரவண
தகப்பன் சாமி எனவரு பெருமாளே.

## 339. விருப்ப

*தன்ன தனந்தன தந்தான*

பொன்னை விரும்பிய பொதுமாதர் ;
புன்மை விரும்பியெ தடுமாறும் -
என்னை விரும்பிநி ஒருகால்நின் -
எண்ணி விரும்பவும் அருள்வாயே ;
மின்னை விரும்பிய சடையாளர் -
மெய்யின் விரும்பிய குருநாதா ;
அன்னை விரும்பிய குறமானை -
அண்மி விரும்பிய பெருமானே.

## 340. ஸாரூபம் பெற

*தனதன தனன தான தனதன தனன தான*
*தனதன தனன தான தனதான*

மதிதனை இலாத பாவி குருநெறி இலாத கோபி
மனநிலை நிலாத பேயன் அவமாயை -
வகையது விடாத பேடி தவநினை விலாத மோடி
வரும்வகை இதேது காயம் எனநாடும்;

விதிஇலி பொலாத லோபி சபைதனில் வராத கோழை
வினைஇகல் விடாத கூளன் எனைநீயும் -
மிகுபரம தான ஞான நெறிதனை விசாரம் ஆக
மிகுமுனது ரூப தானம் அருள்வாயே;

எதிர்வரும் உதார சூரன் இருபிள வதாக வேலை
இயலொடு கடாவு தீர! குமரேசா -
இனியசொல் மருத சீலர் கருவழி வராமல் நாளும்
இளமையது தானும் ஆக நினைவோனே;

நதியுடன் அராவு பூணு பரமர்குரு நாதன் ஆன
நடைபெறு கடூரம் ஆன மயில்வீரா -
நகைமுக விநோத ஞான குறமின்உட னேகு லாவு
நவமணி உலாவு மார்ப! பெருமானே.

## 341. நற்கதி பெற

தனனத்த தத்த தனதான

மனைமக்கள் சுற்றம் — எனுமாயா -
வலையைக் கடக்க — அறியாதே ;
வினையிற் செருக்கி — அடிநாயேன் -
விழலுக் கிறைத்து — விடலாமோ ;
சுனையைக் கலக்கி — விளையாடு -
சொருபக் குறத்தி — மணவாளா ;
தினநற் சரித்ரம் — உளதேவர் -
சிறைவெட்டி விட்ட — பெருமாளே.

## 342. நாம விசேடம்

தாந்தான தந்தன தந்தன
தாந்தான தந்தன தந்தன
தாந்தான தந்தன தந்தன - தனதான

மாண்டார் எலும்பணி யுஞ்சடை
ஆண்டார் இறைஞ்ச மொழிந்ததை
வான்பூத மம்பவ னங்கனல் — புனலான -
வான்பூத மும்கர ணங்களும்
நான்போய் ஒடுங்க அடங்கலும்
மாய்ந்தால்வி ளங்கும் அதொன்றினை — அருளாயேல் ;
வேண்டாமை ஒன்றை அடைந்துளம்
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை — உடையேனாய் -
வேந்தா ! கடம்பு புனைந்தருள்
சேந்தா ! சரண் ! சரண் ! என்பது
வீண்போம தொன்றல என்பதை — உணராதோ ;
ஆண்டார் தலங்கள் அளந்திட
நீண்டார் முகுந்தர் தடந்தனில்
ஆண்டாவி துஞ்சிய தென்றுமு — தலைவாயுற்(று) -
ஆங்கோர் சிலம்பு புலம்பிட
ஞான்றாது துங்கச லஞ்சலம்
ஆம்பூ முழுங்கி அடங்கும்அ — ளவில்நேசம் -

பூண்டாழி கொண்டு வனங்களில்
ஏய்ந்தாளை வென்று வெறுந்தனி
போந்தோமெம் என்றுத வும்புயல் மருகோனே -
பூம்பாளை எங்கும் மணம்கமழ்
தேங்காவில் நின்றதொர் குன்றவர்
பூந்தோகை கொங்கை விரும்பிய பெருமாளே.

## 343. ஆண்டருள

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

"வாராய்! பேதாய்! கேளாய்! நீ! தாய்
மானார் மோகத் துடன்ஆசை -
மாசூ டாடா தூடே பாராய்!
மாறு ஞானச் சுடர்தானின்(று);
ஆரா யாதே ஆராய்! பேரும்
ஆறு வேதப் பொருள்காண்" என்(று)-
ஆள்வாய் நீதான் நாதா! பார்மீ
தார்வே ளுள்ளைக் குரியார்தாம்
தோரா வானோர் சேனா தாரா!
சூரா! சாரற் புனமாது -
தோள்தோய் தோள்சூ ராறு! மாதூர்
தூளாய் வீழச் சிறுதாரைச்;
சீரா வாலே வாளா லேவே
லாலே சேதித் திடும்வீரா -
சேயே! வேளே! பூவே! கோவே!
தேவே! தேவப் பெருமாளே.

## 344. அகப்பொருள்

தானனா தானன தந்ததானா

வாரிமீ தேஎழு திங்களாலே -
மாரவேள் ஏவிய அம்பினாலே;
பாரெலாம் ஏசிய பண்பினாலே -
பாவியேன் ஆவிம யங்கலாமோ;

சூரன்நீள் மார்புகொ ... ளைந்தவேலா -
ஜோதியே! தோகைஅ ... மர்ந்தகோவே ;
முரிமால் யானைம ... ணந்தமார்பா -
மூவர் தேவாதிகள் ... தம்பிரானே.

## 345. பிறவி நீங்கத் திருவடித் த்யானம்

தன்தன்ன தன்தன்ன தனதனன தனதனன
தத்தத் தனந்தனம் தத்தத் தனந்தனம் தந்ததான

விழையுமனி தரையுமுநி வரையும்அவர் உயிர்துணிய
வெட்டிப் பிளந்துள்ம் பிட்டுப் பறிந்திடும்
செங்கண்வேலும் -
விரைஅளக முகிலும்இள நகையும்ருக மதகனவி
சித்ரத் தனங்களும் தித்தித்த தொண்டையும்
புண்டரீகச் ;
சுழிமடுவும் இடையும்அழ கியமகளிர் தருகலவி
சுட்டித் திரிந்தினன் தட்டுப் படுங்கொடும்
பங்கவாழ்வும் -
தொலைவில்பிற வியும்அகல ஒருமவுன பரமஸுக
சுத்தப் பெரும்பதம் சித்திக்க அன்புடன்
சிந்தியாதோ;
எழுதரிய அறுமுகமும் மணிநுதலும் வயிரம்இடை
இட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களும்
துங்கநீள்பன் -
னிருகருணை விழிமலரும் இலகுபதி னிருகுழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக் கரங்களும்
செய்பொ(ன்)நூலும் ;
மொழிபுகழும் உடைமணியும் அரைவடமும் அடிஇணையும்
முத்தச் சதங்கையும் சித்ரச் சிகண்டியும்
செங்கைவேலும் -
முழுதும்அழ கியகுமர! கிரிகுமரி யுடன்உருகு
முக்கட் சிவன்பெறும் சற்புத்ர! உம்பர்தம் தம்பிரானே.

## 346. முருகன் பெருமையை உணர

தான்ன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன
தானன தந்தன தாத்தன தனதான

வேடர் செழுந்தினை காத்த திதண் மீதில் இருந்த பிராட்டி வி
லோசன அம்புகளாற் செயல் தடுமாறி —
மேனி தளர்ந்தருகாப் புரி தாபம் உடன்புன மேற்றிரு
வேளை புகுந்த பராக்ரமம் அதுபாடி;

நாடறியும்படி கூப்பிடும் நாவலர் தங்களை ஆர்ப்பதி
னால்உலகங்களும் ஏத்திய இருதாளில் —
நாறு கடம்பணியாப் பரிவோடு புரந்த பராக்ரமம்
நாட அருந்தவம் வாய்ப்பதும் ஒருநாளே;

ஆடக மந்தர நீர்க்கசையாமல் உரம்பெற நாட்டிஓர்
ஆயிர வெம்பகு வாய்ப்பணி கயிறாக —
ஆழி கடைந்தமுதாக்கி அமரர் பெரும்பசி தீர்த்தருள்
ஆயனும் அன்றெயில் தீப்பட அதிபார;

வாடை நெடுங்கிரி கோட்டிய வீரனும் எம்பர மாற்றிய
வாழ்வென வஞ்சக ராக்ஷதர் குலமாள —
வாஸவன் வன்சிறை மீட்டவன் ஊரும் அடங்கலு மீட்டவன்
வான்உலகும் குடி ஏற்றிய பெருமாளே.

அநுபந்தம்—1 முற்றும்

---

## திருப்புகழ்ப் பெருமை

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ(டு)
ஏறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க்(கு) ஆமேஇக் கூறு. (1)

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தம் ஜெபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முக்திஎளி தாகுமே, கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெட. (2)

# அநுபந்தம்—2

# கந்தர் அலங்காரம்

## (அருணகிரிநாதர் அருளியது)

### காப்பு

அடல்அரு ணைத்திருக் கோபுரத் தேஅந்த வாயிலுக்கு
வடஅரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு வார்தலையில்
தடபடெ னப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட தும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

### நூல்

#### 1. தன் அநுபவம் கூறினது

பேற்றைத் தவஞ்சற்றும் இல்லாத என்னை ப்ரபஞ்சமென்னும்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா!செஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை அம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே.

#### 2. உலகுக்கு உபதேசம்

அழித்துப் பிறக்கவொட் டாஅயில் வேலன் கவியைஅன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீர்!எரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடுங்கயிற்றாற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்கும்அன் றோகவி கற்கின்றதே.

#### 3. வேலின் ஆற்றல்

தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடகம் நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

## 4. தன் குறை கூறல்

ஓரஒட் டார்ஒன்றை உன்னஒட் டார்மலர் இட்டுனதாள்
சேரஒட் டார்ஐவர் செய்வதென்யான்,சென்றுதேவர் உய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோர்இமைப் போதினிற் கொன்றவனே.

## 5. முருகன் பெருமை

திருந்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மிஅழூங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்என் றோதுங் குவலயமே.

## 6. தன் ஆனந்தம் கூறினது

பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற
[பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பினால் மெல்ல மெல்லஉள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தஅன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.

## 7. பிரார்த்தனை-மயக்க அறிவு நீங்க

சளத்திற் பிணிபட் டசட்டுக் க்ரியைக்குள் தவிக்கும்என்றன்
உளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பாய்! அவுணர் உரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட வேல்தொட்ட காவலனே.

## 8. தன் அநுபவம்-உபதேசம் பெற்றது

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொர் ஆனந்த தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வா!முகம் ஆறுடைத் தேசிகனே.

## 9 உபதேசப் பெருமை

தேனென்று பாகென் றுவமிக் கொணுமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றே!
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே.

## 10. தன் அனுபவம் கூறினது

சொல்லுகைக் கில்லையென் றெல்லாம் இழந்துசும் [மாஇருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்ட வா!இகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக் [கொவ்வைச்செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோள்அண்ணல் வல்லபமே.

## 11. மயிலின் ஆற்றல்

குசைநெகி ழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்(து)
அசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடஎண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே.

## 12. சேவலின் ஆற்றல்

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகைஎன்னும்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்(து)
உடைபட்ட தண்ட கடாகம் உதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே.

## 13. முருகன் பெருமை

ஒருவரைப் பங்கில் உடையாள் குமாரன் உடை மணிசேர்
திருவரைக் கிண்கிணி ஓசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்றும் அதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.

## 14. பிரார்த்தனை ஈடேற

குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடும் ஐவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்று வாய்! இரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணோரும் உய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே.

## 15. தன் அனுபவம் கூறினது

தாவடி ஓட்டு மயிலிலுந் தேவர் தலையிலும்என்
பாவடி ஏட்டிலும் பட்டதன் றோ! படி மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்தன் சிற்றடியே.

## 16. உலகுக்கு உபதேசம்

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் [தானம் என்றும்
இடுங்கோள் இருந்த படியிருங் கோள்எழு பாரும் உய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் தொளைக்க [வைவேல்
விடுங்கோன் அருள்வந்து தானே உமக்கு வெளிப்படுமே.

## 17. நெஞ்சொடு கிளத்தல்

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்தம் அரணாக அல்லும் பகலும் இல்லாச்
சூதான தற்ற வெளிக்கே ஒளித்துச்சும் மாஇருக்கப்
போதாய்! இனிமன மே! தெரி யாதொரு பூதர்க்குமே.

## 18. உலகுக்கு உபதேசம்

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள் நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின் வெறும்நிழல்போற்
கையிற் பொருளும் உதவாது காணும் கடைவழிக்கே.

## 19. தன் ஆனந்தங் கூறினது

சொன்னக் கிரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்த வைவேல்
மன்ன! கடம்பின் மலர்மாலை மார்ப! மௌ னத்தைஉற்று
நின்னை உணர்ந்துணர்ந் தெல்லாம் ஒருங்கிய
(நிர்க்குணம்பூண்(டு)
என்னை மறந்திருந் தேன்இறந் தேவிட்ட திவ்வுடம்பே.

## 20. உலகுக்கு உபதேசம்

கோழிக் கொடியன் அடிபணி யாமற் குவலயத்தே
வாழக் கருதும் மதியிலி காள்! உங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி உண்ணஒட் டாதுங்கள் அத்தம்எல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு மோ? நும் அடிப்பிறகே.

## 21. மரண பயம்-யம பயம் இன்மை

மரணப்ர மாதம் நமக்கில்லை யாம்என்றும் வாய்த்த துணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டே:கிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர! ஞான கர! சுர பாஸ்கரனே.

## 22. முருகன் கருணை

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்
[போல்
கைதான் இருப துடையான் தலைபத்தும கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே.

## 23. பிரார்த்தனை - இறப்பதற்கு முன் காத்தருள்

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே!
வைவைத்த வேற்படை வானவ னே! மறவேன் உனை நான்
ஐவர்க் கிடம்பெறக் கால்இரண் டோட்டி அதில்இரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே.

## 24. தன் ஆனந்தங் கூறினது

கின்னங் குறித்தடி யேன்செவி நீஅன்று கேட்கச் சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது; கோடுதழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே.

## 25. யமனை வெருட்டல்

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கிஉன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாய் அடாஅந்தகா! வந்து பார்சற் றென் கைக்
[கெட்டவே.

## 26. தன் ஆனந்தம் கூறினது

நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்; குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்; மரிப் பார்வெறுங் கர்மிகளே.

## 27. தரிசனப் பாடல்

ஓலையுந் தூதரும் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்குக்
காலையும் மாலையும் முன்நிற்கு மே!கந்த வேள்மருங்கிற்
சேலையும் கட்டிய சீராவும் கையிற் சிவந்தசெச்சை
மாலையும் சேவற் பதாகையும் தோகையும் வாகையுமே.

## 28. தன் ஆனந்தங் கூறினது

வேலே விளங்கு கையான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளஇங்ஙன் காண்பதல் லால்மன வாக்குச்செய
லாலே அடைதற் கரிதாய் அருவுரு வாகிஒன்று
போலே இருக்கும் பொருளைஎவ் வாறு புகல்வதுவே.

## 29. தன் அனுபவம் கூறினது

கடத்தில் குறத்தி பிரான்அரு ளால் கலங்காத சித்தத்
திடத்தில் புணைஎன யான் கடந்தேன்; சித்ர மாதர்அல் குற்
படத்தில் கழுத்தில் பழுத்த செவ்வாயில் பணையில்உந்தித்
தடத்தில் தனத்தில் கிடக்கும்வெங் காம ஸமுத்திரமே.

## 30. நெஞ்சொடு கிளத்தல்

பால் என்பது மொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேல் என்பதாகத் திரிகின்ற நீ செந்திலோன் திருக்கை
வேல் என்கிலை கொற்ற மயூரம் என்கிலை வெட்சித்தண்டைக்
கால் என்கிலை மனமே! எங்ஙனே முத்தி காண்பதுவே.

## 31. பிரார்த்தனை-திருவடியைப் பெற

பொக்கக் குடிலில் புகுதா வகைப் புண்ட ரீகத்தினும்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள்! சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரிஉருவக் கதிர்வேல் தொட்ட காவலனே.

## 32. பிரார்த்தனை-ரக்ஷித்தருள

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி ஊடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்தனே! துறந்தோர் [உளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் [கண்ணார்க்(கு),
இளைத்துத் தவிக்கின்ற என்னை எந்நாள்வந் திரட்சிப்பையே.

## 33. முருகன் நாம விசேஷம்

முடியாப் பிறவிக் கடலிற் புகார்; முழுதுங்கெடுக்கும்
மிடியால் படியில் விதனப் படார்; வெற்றி வேற்பெருமான்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக்கிய பெருமாள் திருநாமம் புகல்பவரே.

## 34. பிரார்த்தனை-ஞான கலை பெற

பொட்டாக வெற்பைப் பொருத கந்தா! தப்பிப் போன [ தொன்றற்(கு)
எட்டாத ஞான கலைதருவாய்! இருங் காமவிடாய்ப்
பட்டார் உயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்கும்
கட்டாரி வேல்விழியார் வலைக்கே மனம் கட்டுண்டதே.

## 35. பிரார்த்தனை-புத்தி தெளிய

பத்தித் துறைஇழிந் தானந்த வாரி படிவதினால்
புத்தித் தரங்கம தெளிவதென்றே! பொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூரனை விட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமராவதி கொண்ட கொற்றவனே.

## 36. நெஞ்சொடு கிளத்தல்

சுழித்தோடும் ஆற்றில் பெருக்கானது செல்வம் துன்பம் [இன்பம்
கழித்தோடு கின்றதெக் காலம் நெஞ்சே! கரிக்கோட்டு [முத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோடன் என்கிலை குன்றம் [எட்டும்
கிழித்தோடு வேல்என்கிலை எங்ஙனே முத்தி கிட்டுவதே.

## 37. தன் உறுதி கூறல்

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல்மறவேன், முது கூளித்திரள்
டுண்டுண்ட டுடுடுடு டுடு டுடுடுடு டுண்டு டுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி ஆடவெஞ் சூர்க்கொன்ற [ராவுத்தனே.

## 38. முருகன் பெருமை-கருணை

நான் என்செயும் வினைதான் என்செயும் எனை நாடிவந்த
கோள் என்செயும் கொடுங் கூற்றென்செயும் குமரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்னே வந்து தோன்றிடினே.

## 39. பிரார்த்தனை-ஐக்கிய நிலை பெற

உதித்தாங் குழல்வதும் சாவதும் தீர்த்தெனை உன்னில் ஒன்றா
விதித்தாண் டருள்தருங் கால முண்டோ! வெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல
மதித்தான் திருமருகா! மயில் ஏறிய மாணிக்கமே.

## 40. தன் அனுபவம் கூறினது

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில், தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம், மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும், அவன்
கால்பட் டழிந்ததிங் கென்தலைமேல் அயன் கையெழுத்தே.

## 41. பிரார்த்தனை - திருவடியைப் பெற

பாலே அனைய மொழியார்தம் இன்பத்தைப் பற்றிஎன்றும்
மாலேகொண் டுய்யும் வகையறிந் யென் மலர்த்தாள் தருவாய்!
காலே மிகஉண்டு காலே இலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளும் மாலோன் மருக! செவ்வேலவனே.

## 42. தன் குறை கூறல்

நிணங்காட்டும் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்க
[நிற்கும்
குணங்காட்டி ஆண்ட குருதேசிகன் நம் குறச்சிறுமான்
பணங்காட்டும் அல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந் திதெங்கே எனக்கிங்ஙன் வாய்த்ததுவே.

## 43. தன் குறை கூறல்

கவியாற் கடல்அடைத்தோன் மருகோனைக் கணபணக்கட்
செவியாற் பணிஅணி கோமான் மகனைத் திறல்அரக்கர்
புவிஆர்ப் பெழத்தொட்ட போர்வேல் முருகனைப்
[போற்றிஅன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே எனக்கிங்ஙன் கூடியவே.

## 44. கதியின்மை கூறல்

தோலாற் சுவர்வைத்து நால்ஆறு காலிற் சுமத்திஇரு
காலால் எழுப்பி வளைமுது கோட்டிக் கைந்நாற்றி நரம்
பால்ஆர்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்
[பிரிந்தால்
வேலாற் கிரிதொளைத்தோன் இருதாள்அன்றி வேறில்லையே.

## 45. தன் அனுபவம் கூறினது

ஒருபூதரும் அறியாத் தனிவீட்டில் உரையுணர்வற்(று)
இரு! பூத வீட்டில் இராமல் என்றான்; இருகோட்டொருகைப்
பொரு பூதரம்உரித் தேகாசம் இட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவன் நிட்டூர சூர குலாந்தகனே.

## 46. பிரார்த்தனை - முருகனொடு ஒன்றுபட

நீயான ஞான விநோதம் தனைஎன்று நீஅருள்வாய்!
சேயான வேற்கந்தனே! செந்திலாய்! சித்ர மாதர்அல்குல்
தோயா உருகிப் பருகிப் பெருகித் துவளும்இந்த
மாயா விநோத மனோதுக்கம் ஆனது மாய்வதற்கே.

## 47. தன் ஆனந்தம் கூறினது

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுது கண்டேன் செயல் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனம்எற்றித்
தத்திக் கரைபுரளும் பரமானந்த ஸாகரத்தே.

## 48. தன் குறை கூறல்

புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டிஅன்பாய்
முத்தியை வாங்க அறிகின்றிலேன், முதுசூர் நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ? குவடு தவிடுபடக்
குத்திய காங்கேயனே! வினையேற்கென் குறித்தனையே;

## 49, நெஞ்சொடு கிலத்தல் - அடியார் பெருமை

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதியன்றி வேறிலை காண்! தண்டு தாவடிபோய்த்
தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வம் எல்லாம்
நீரில் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே.

## 50. பிரார்த்தனை - யம பயம் நீங்க

படிக்கும் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினல்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென்பாய்! பெரும்
[பாம்பினின்று
நடிக்கும் பிரான் மருகா!கொடுஞ் சூரன் நடுங்கவெற்பை
இடிக்கும் கலாபத் தனிமயில் ஏறும் இராவுத்தனே.

## 51. உலகுக்கு உபதேசம்

மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கி அன்பின்
நிலையான மாதவம் செய்குமினோ! நும்மை நேடிவரும்
தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையும்கண்டீர்
இலையாயினும் வெந்த தேதாயினும் பகிர்ந் தேற்றவர்க்கே.

## 52. பிரார்த்தனை-செந்தமிழாற் பாட

சிகராத்ரி கூறிட்ட வேலும் செஞ் சேவலும் செந்தமிழாற்
பகர்ஆர்வம் ஈ!பணி பாச ஸங்க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா!
குக!ராட்சஸ பட்ச விட்சோப தீர குணதுங்கனே.

## 53. உலகுக்கு உபதேசம்

வேடிச்சி கொங்கை விரும்பும் குமரனை மெய்யன்பினல்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே.

## 54. தன்குறை கூறல்

சாகைக்கும் மீண்டு பிறக்கைக்கும் அன்றித்
[தளர்ந்தவர்க்கொன்(று)
ஈகைக் கெனைவிதித்தா யிலையே; இலங்காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க் கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத்தோன் மருகா! மயில்வாகனனே.

## 55. உலகுக்கு உபதேசம்

ஆங்காரமும் அடங்கார், ஒடுங்கார், பரமானந்தத்தே
தேங்கார், நினைப்பும் மறப்பும் அறார், தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவங்கண்டு
தூங்கார், தொழும்பு செய்யார், என்செய்வார் யம
[தூதருக்கே.

## 56. உலகுக்கு உபதேசம்

கிழியும்படி அடற் குன்றெறிந்தோன் கவி கேட்டுருகி
இழியுங் கவி கற்றிடா திருப்பீர்! எரிவாய நரகக்
குழியுந் துயரும் விடாப்படக் கூற்றுவன் ஊர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர்! பகரீர்! மறந்தவர்க்கே.

## 57. உலகுக்கு உபதேசம்

பொருபிடியும் களிறும் விளையாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல, ஷண்முகவா! எனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண்டிரு! விண்ணோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணாது மாய உடம்பிதுவே.

## 58. முருகன் கருணை - பெருமை

நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்றாத் தனத்திற் கினிய பிரான் இக்கு முல்லையுடன்
பற்றாக்கையும் வெந்து ஸங்க்ராம வேளும் படவிழியாற்
செற்றார்க் கினியவன் தேவேந்திர லோக சிகாமணியே.

## 59. உலகுக்கு உபதேசம்

பொங்கார வேலையில் வேலைவிட்டோன் அருள் போலுதவ
எங்காயினும் வரும் ஏற்பவர்க் கிட்ட திடாமல் வைத்த
வங்காரமும் உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்
சங்காதமோ கெடுவீர் உயிர்போம் அத் தனிவழிக்கே.

## 60. தன் குறை கூறல்

சித்திக்கி லேனின்று சேவிக்கிலேன் தண்டைச் சிற்றடியை
வந்திக்கிலேன் ஒன்றும் வாழ்த்துகிலேன் மயில் வாகனனைச்
சந்திக்கிலேன் பொய்யை நிந்திக்கிலேன் உண்மை
[சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே.

## 61. தன் ஆனந்தம் கூறினது

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்தவா! பஞ்ச பூதமும் அற்(று)
உரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.

## 62. வேலின் பெருமை

ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை, அகிலம்உண்ட
மாலுக் கணிகலம் தண்ணம் துழாய், மயிலேறும் ஐயன்
காலுக் கணிகலம் வானோர் முடியும் கடம்பும், கையில்
வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே.

## 63. தன் அனுபவம் கூறினது

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வேலனைச் சென்று போற்றிஉய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே எனக்கிங்ஙன் சந்தித்ததே.

## 64. யமனை வெருட்டல்

பட்டிக் கடாவில் வரும் அந்தகா! உனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன், வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருத செவ்வேற் பெருமாள் திருமுன்புநின்றேன்
கட்டிப் புறப்படடா! சத்தி வாள் என்றன் கையதுவே.

## 65. பிரார்த்தனை - யமபயம் நீங்க

வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங்கூற்றன் விடுங் கயிற்றால்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டும் ; கராசலங்கள்
எட்டும் குலகிரி எட்டும்விட் டோட எட்டாதவெளி
மட்டும் புதைய விரிக்கும் கலாப மயூரத்தனே.

## 66. உலகுக்கு உபதேசம்

நீர்க்குமிழிக்கு நிகர் என்பர் யாக்கை ; நில்லாது செல்வம்
பார்க்கும் இடத்தந்த மின்போலும் என்பர் பசித்துவந்தே
ஏற்கும் அவர்க்கிட என்னின் எங்கேனும் எழுந்திருப்பார்
வேற் குமரற் கன்பிலாதவர் ஞானம் மிகவுநன்றே.

## 67. தன் குறை கூறுதல்

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்நின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்றிலேன், மத கும்ப கம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில ஸரஸவல்லி
இறுகத் தழுவும் கடகாசல பன்னிரு புயனே.

## 68. உலகுக்கு உபதேசம்

சாடும் சமரத் தனிவேல் முருகன் சரணத்திலே
ஓடும் கருத்தை இருத்தவல்லார்க் குகம்போய்ச் சகம்போய்ப்
பாடும் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்(று)
ஆடும் பொழுது பரமா யிருக்கும் அதீதத்திலே.

## 69. மரணத்தை வெருட்டல்

தந்தைக்கு முன்னம் தனிஞான வாள் ஒன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி எனைத் தேற்றிய பின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை என்செய்யலாம் சத்திவாள் [ஒன்றினால்
சிந்தத் துணிப்பன் தணிப்பரும் கோப த்ரிசூலத்தையே.

## 70. முருகன் பெருமை - உலகுக்கு உபதேசம்

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள், மெய்ம்மை [குன்றா
மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள், முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும், பயந்ததனி
வழிக்குத் துணை வடிவே லும் செங்கோடன் மயூரமுமே.

## 71. உலகுக்கு உபதேசம்

திருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்(து)
அருத்தி உடம்பை ஒறுக்கில் என்னாம் சிவயோகமென்னுங்
குருத்தை அறிந்து முகம் ஆறுடைக் குருநாதன் சொன்ன
கருத்தை மனத்தில் இருத்துங்கண்டீர் முத்தி கைகண்டதே.

## 72. உலகுக்கு உபதேசம்

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் [செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

## 73. தன் ஆனந்தம் கூறினது

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும்உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
தாக்கும்; மனோலயம் தானே தரும்; எனைத் தன்வசத்தே
ஆக்கும்; அறுமுகவா! சொல்லொணு திந்த ஆனந்தமே.

### 74. உலகுக்கு உபதேசம்

அராப்புனை வேணியன் சேய்அருள் வேண்டும், [அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டையம் தாள்தொழல் வேண்டும், [கொடியஐவர்
பராக்கறல் வேண்டும், மனமும் பதைப்பறல் வேண்டும் [என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே

### 75. நெஞ்சொடு கிளத்தல்

படிக்கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை, முருகா என்கிலை, முசியாமல் இட்டு
மிடிக்கின்றிலை பரமானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலை, நெஞ்சமே! தஞ்சம் ஏது நமக்கினியே

### 76. தன் குறை கூறல்

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றம் என்? [குன்றெறிந்த
தாடாளனே! தென் தணிகைக் குமர! நின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே.

### 77. நெஞ்சொடு கிளத்தல்

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரம் சேரஎண்ணி
மால்வாங்கி ஏங்கி மயங்காமல், வெள்ளி மலைஎனவே
கால்வாங்கி நிற்கும் களிற்றான் கிழத்தி கழுத்திற் கட்டும்
நூல்வாங்கிடாதன்று வேல்வாங்கி பூங்கழல் நோக்கு [நெஞ்சே.

### 78. உலகுக்கு உபதேசம்

கூர்கொண்ட வேலனைப் போற்றாமல் ஏற்றங்கொண் [டாடுவிர்காள்
போர்கொண்ட காலன் உமைக்கொண்டு போம்அன்று [பூண்பனவும்
தார்கொண்ட மாதரும் மாளிகையும் பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவர் ஐயோ கெடுவீர் நும் அறிவின்மையே.

## 79. பிரார்த்தனை - பெண்ணாசை அற

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையில் பட்டுழலும்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள்வாய்! செய்ய வேல்முருகா!
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றில்நிற்கும்
கந்தா! இளங்குமரா! அமராவதி காவலனே.

## 80. பிரார்த்தனை - யமபயம் நீங்க

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன் வந்தால் என்முன்னே
தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்! சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரம கல்யாணிதன் பாலகனே.

## 81. யமனை வெருட்டல்

தாரா கணம் எனுந் தாய்மார் அறுவர் திருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பாலன், அரையிற்கட்டும்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே,
வாரா தகல் அந்தகா! வந்த போதுயிர் வாங்குவனே.

## 82. பிரார்த்தனை - தாளிணையைப் பணிய

தகட்டில் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தருளாய், புண்டரீகன் அண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்ட
[வெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிஷ்டுர சூர பயங்கரனே.

## 83. முருகன் திறல்

தேங்கிய அண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளம்; தனிவேல்
வாங்கி அனுப்பிடக் குன்றங்கள் எட்டும் வழிவிட்டவே.

## 84. அடைக்கலம் புகுதல்

மைவரும் கண்டத்தர் மைந்த! கந்தா! என்று வாழ்த்தும் [இந்தக்
கைவரும் தொண்டன்றி மற்றறியேன் கற்ற கல்வியும் [போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே.

## 85. யோகிகளுக்கு உபதேசம்

காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுதல் மிகஎளிதே; விழி நாசி வைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சைஉள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே.

## 86. யம பயம் இன்மை

வேலாயுதன், சங்கு சக்ராயுதன் விரிஞ்சன் அறியாச்
சூலாயுதன் தந்த கந்தச் சுவாமி, சுடர்க்குடுமிக்
காலாயுதக் கொடியோன் அருளாய கவசம் உண்டென்
பால்ஆயுதம் வருமோ? யமனோடு பகைக்கினுமே.

## 87. யம பயம் இன்மை

குமரா சரணம் சரணம்என் றண்டர் குழாம்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுகம் ஆறுங்கண்ட
தமராகி வைகும் தனியான ஞான தபோதனர்க்கிங்(கு)
எமராஜன் விட்ட கடைஏடு வந்தினி என்செயுமே.

## 88. பிரார்த்தனை - ஈடேற

வணங்கித் துதிக்க அறியா மனிதர் உடன் இணங்கிக்
குணங்கெட்ட துட்டனை ஈடேற்றுவாய், கொடியும் கழுகும்
பிணங்கத் துணங்கை அலகைகொண் டாடப் பிசிதர் [தம்வாய்
நிணம் கக்க விக்ரம வேலாயுதம் தொட்ட நிர்மலனே.

## 89. பிரமனை வெருட்டல்

பங்கேருகன் எனைப் பட்டோலையில் இடப் பண்டுதனை
தங்காலில் இட்ட தறிந்திலனோ? தனிவேல் எடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னம் சிலம்பு புலம்பவரும்
எங்கோன் அறியின் இனி நான்முகனுக் கிருவிலங்கே.

## 90. தரிசனப் பாடல்

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டு [தொழ
நாலா யிரங்கண் படைத்திலனே அந்த நான்முகனே.

## 91. உலகுக்கு உபதேசம்

கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானம்உய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேலனைக் கன்னிப் பூகமுடன்
தருமா மருவு செங்கோடனை வாழ்த்துகை சாலநன்றே.

## 92. பிரார்த்தனை - திருவடியைப் பெற

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் குஞ்சுத்த [ஞானமெனும்
தண்டையம் புண்டரிகம் தருவாய், சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலம் கொண்டுபண் டண்டரண் டம்கொண்டு [மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட [காவலனே.

## 93. முருகன் பெருமை

மண்கமழ் உந்தித் திருமால் வலம்புரி ஓசை அந்த
விண்கமழ் சோலையும் வாவியும் கேட்டது, வேல் எடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திரு அரையில்
கிண்கிணி ஓசை பதினா லுலகமும் கேட்டதுவே.

## 94. நெஞ்சொடு கிளத்தல்

தெள்ளிய ஏனலில் கிள்ளையைக் கள்ளச் சிறுமிஎனும்
வள்ளியை வேட்டவன் தான்வேட்டிலே, சிறு வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச்
[சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே.

## 95. உலகுக்கு உபதேசம்

யான்தான் எனும்சொல் இரண்டும் கெட்டால்அன்றி
[யாவருக்கும்
தோன்றாது ஸத்தியம் ; தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன் க்ருபாகரன் கேள்வியினால்
சான்றாரும் அற்ற தனிவெளிக்கே வந்து சந்திப்பதே.

## 96. மயிலின் ஆற்றல்

தடக்கொற்ற வேள்மயிலே! இடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்தும்நின் றோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்தும் திசைக்கப் புறத்தும் திரிகுவையே.

## 97. மயிலின் ஆற்றல்

சேலில் திகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தனந்தன் பணாமுடி தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கும் மாயனும் சக்ரா யுதமும் பணிலமுமே.

## 98. கதியின்மை கூறல்

கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன் கந்த ! வேல்முருகா !
நதிதனை அன்ன பொய்வாழ்வில் அன்பாய் நரம்பால்
[பொதிந்த
பொதிதனையுங் கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கே என்றன்மனம் வேகின்றதே.

## 99. பிரார்த்தனை-திருவடியைப் பெற

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகனனே, துணை ஏதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.

## 100. தன் அனுபவம் கூறினது

இடுதலைச் சற்றும் கருதேனைப் போதம் இலேனை அன்பால்
கெடுதல் இலாத் தொண்டரிற் கூட்டியவா! [கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன், பிறவி அறஇச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

## 101. அலங்கார நூற்பயன்

சலங்காணும் வேந்தர்தமக்கும் அஞ்சார், யமன் [சண்டைக்கஞ்சார்,
துலங்கா நரகக் குழிஅணுகார், துஷ்ட நோயணுகார்,
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும், கந்தன் நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி தான் கற்றறிந்தவரே.

## 102. தரிசனப் பாடல்

திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்பூடுருவப்
பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம ஆறிரண்டும்
மருவடி வான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடிவாய் வந்தென் உள்ளம் குளிரக் குதிகொண்டவே.

## 103. பிரார்த்தனை—திருவடியைப் பெற

இராப்பகல் அற்ற இடங்காட்டி யான் இருந்தே துதிக்கக்
குராப்புனை தண்டையம் தாள்அருளாய், கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருத சங்கார பயங்கரனே.

## 104. தன் அனுபவம் கூறினது

செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கோங்கே தரளம் சொரியும் செங்கோடைக் குமரன்என
எங்கே நினைப்பினும் அங்கேஎன் முன்வந் தெதிர்நிற்பனே!

## 105. பிரார்த்தனை-வினை அற

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் அருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றிலேன் வினை தீர்த்தருளாய்!
வாவித் தடவயல் சூழும் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடையானே ! அமர சிகாமணியே.

## 106. பிரார்த்தனை—துயர் அற

கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையும்என்றன்
உள்ளத் துயரை ஒழித்தருளாய்! ஒரு கோடிமுத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்செந்தில் மேவிய சேவகனே !
வள்ளிக்கு வாய்த்தவனே ! மயில் ஏறிய மாணிக்கமே.

## 107. காலனுக்கு அஞ்சாமை

சூலம் பிடித்தெம பாசம் சுழற்றித் தொடர்ந்துவரும்
காலன் தனக் கொருகாலும் அஞ்சேன், கடல் மீதெழுந்த
ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டே நமக்கொரு மெய்த்துணையே.

(அநுபந்தம்—2 கந்தர் அலங்காரம் முற்றும்)

# அநுபந்தம்—3

# கந்தர் அநுபூதி

## (அருணகிரிநாதர் அருளியது)

### காப்பு

நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்ஷண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனை மாலை சிறந்திடவே
பஞ்சக்கர ஆனைபதம் பணிவாம்.

### நூல்

#### 1. மயில், வேல், சேவல் எனப் பாடும் பணி பெற

'ஆடும் பரி, வேல், அணிசேவல்' எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்!
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடும் தனி யானை ஸஹோதரனே!

#### 2. யான் எனது அற—உபதேசித்தருள

உல்லாஸ, நிராகுல, யோக விதச்
சல்லாப விநோதனும் நீ அலையோ?
எல்லாம் அற, என்னை இழந்த நலம்
சொல்லாய்! முருகா! ஸுரபூ பதியே!

#### 3. எது பொருள்?

வானோ? புனல் பார் கனல் மாருதமோ?
ஞானோ தயமோ? நவில்நான் மறையோ?
யானோ? மனமோ? எனை ஆண்ட இடம்
தானோ? பொருளாவது ஷண்முகனே!

### 4. மனை, மக்கள் எனும் பந்தம் அற

வனைபட்ட கைம் மாதொடு, மக்கள் எனும்
தளைபட் டழியத் தகுமோ? தகுமோ?
கிளைபட் டெழுசூர் உரமும், கிரியும்
தொளைபட் டுருவத் தொடு வேலவனே!

### 5. மாயை அற

மக மாயை களைந்திட வல்ல பிரான்
முகம் ஆறும் மொழிந்து மொழிந்திலனே!
அக மாடை மடந்தையர் என்றயரும்
சக மாயையுள் நின்று தயங்குவதே!

### 6. திருவடித் தியானம் உற

திணியான மனோ சிலமீ துனதாள்
அணியார் அரவிந்தம் அரும்புமதோ?
'பணி யா?' என வள்ளி பதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே!

### 7. கதி பெறும் வழி

கெடுவாய் மனனே! கெதி கேள்; கரவா(து)
இடுவாய்; வடிவேல் இறைதாள் நினைவாய்;
சுடுவாய் நெடுவேதனை தூள் படவே
விடுவாய் விடுவாய் வினை யாவையுமே.

### 8. மையல் நீங்க உபதேசம் பெற்றது

அமரும் பதி, கேள், அகம் ஆம் எனும் இப்
பிமரம் கெட மெய்ப்பொருள் பேசியவா!
குமரன் கிரிராஜ குமாரி மகன்
சமரம் பொரு தானவ நாசகனே.

### 9. மையல் ஒழிய

மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டூசல் படும் பரிசென் றொழிவேன்!
தட்டூடற வேல் சயிலத் தெறியும்
நிட்டூர, நிராகுல, நிர்ப்பயனே!

### 10. யமபயம் நீங்க—முருகன் எழுந்தருள

கார் மா மிசை காலன் வரிற் கலபத்
தேர் மா மிசைவந் தெதிரப் படுவாய் ;
தார் மார்ப ! வலாரி தலாரி எனும்
சூர் மா மடியத் தொடு வேலவனே !

### 11. உறவினர் அழப், போகாவகைக்கு உபதேசம் பெற்றது

'கூகா' என என் கிளை கூடி அழப்
போகா வகை மெய்ப் பொருள் பேசியவா !
நாகாசல வேலவ ! நாலு கவித்
த்யாகா ! ஸுரலோக சிகாமணியே !

### 12. மௌனோபதேசம் பெற்றது

செம்மான் மகளைத் திருடும் திருடன்,
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
'சும்மா இரு, சொல் அற' என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே.

### 13. மெய்ப்பொருள் எளிதில் அறியும் தரத்ததன்று

'முருகன், தனிவேல் முனி, நம் குரு' என்(று)
அருள் கொண் டறியார் அறியும் த்ரமோ ?
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளிஅன் றெனநின் றதுவே.

### 14. ஆசைகள் அற

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்(று)
உய்வாய் மனனே ! ஒழிவாய் ! ஒழிவாய் !
மெய் வாய் விழி நாசியொடும் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே.

### 15. 'முருகா' என்று உருக

'முருகன், குமரன், குகன்' என்று மொழிந்(து)
உருகும் செயல் தந் துணர்வென் றருள்வாய் ?
பொரு புங்கவரும், புவியும் பரவும்
குருபுங்கவ ! எண் குண பஞ்சரனே !

### 16. பேராசை அற

பேராசை எனும் பிணியிற் பிணிபட்(டு)
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் பட வேல் எறியும்
சூரா! ஸுரலோக துரந்தரனே!

### 17. அறத்தை, மெய்ம்மையைப் பற்றுக

யாம் ஓதிய கல்வியும், எம் அறிவும்
தாமே பெற வேலவர் தந்ததனல்
பூமேல் மயல் போய் அற மெய்ப் புணர்வீர்!
நாமே னடவீர்! நடவீர்! இனியே-

### 18. துதி

உதியா, மரியா, உணரா, மறவா,
விதிமால் அறியா விமலன் புதல்வா!
அதிகா! அநகா! அபயா! அமரா
பதி காவல! சூர பயங்கரனே!

### 19. வறுமையின் கொடுமை

வடிவும், தனமும், மனமும், குணமும்,
குடியும், குலமும் குடிபோ கியவா!
அடி அந்தம் இலா அயில் வேல் அரசே!
மிடி என்றொரு பாவி வெளிப்படினே.

### 20. உபதேசம் பெற்றதை நினைந்து வியத்தல்

அரிதாகிய மெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேசம் உணர்த்தியவா!
விரிதாரண! விக்ரம வேள்! இமையோர்
புரி தாரக! நாக புரந்தரனே!

### 21. திருவடி தீக்ஷை பெற

கருதா மறவா நெறிகாண எனக்(கு)
இருதாள் வனஜம் தர என்றிசைவாய்?
வரதா! முருகா! மயில்வாஹனனே!
விரதா! ஸுர சூர விபாடணனே!

## 22. தன் தவப்பேற்றை நினைந்து மகிழ்தல்

காளைக் குமரேசன் எனக் கருதித்
தாளைப் பணியத் தவம் எய்தியவா!
பாளைக் குழல் வள்ளி பதம் பணியும்
வேளைச் சுர பூபதி மேருவையே!

## 23. திருவடியை நினையாது கெடலாமோ?

அடியைக் குறியா தறியா மையினன்
முடியக் கெடவோ? முறையோ முறையோ!
வடி விக்ரம வேல் மகிபா! குறமின்
கொடியைப் புணரும் குண பூதரனே!

## 24. திருவருளைப் பெற

கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வேன் அருள் சேரவும் எண்ணுமதோ?
சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும்
போர் வேல! புரந்தர பூபதியே!

## 25. வினைவாழ்வு, அலைச்சல் அற

மெய்யே என வெவ்வினை வாழ்வை உகந்(து)
ஐயோ! அடியேன் அலையத் தகுமோ?
கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய்! மயில் ஏறிய சேவகனே!

## 26. திருவருள் பெற

ஆதாரம் இலேன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே!
வேதாகம ஞான விநோத மனோ
தீதா! ஸுரலோக சிகாமணியே!

## 27. வாழ்வை வெறுத்தல்

மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான்
என்னே விதியின் பயன் இங் கிதுவோ?
பொன்னே! மணியே! பொருளே! அருளே!
மன்னே! மயில் ஏறிய வானவனே!

### 28. பேரின்ப நிலை

ஆறு அமுதே! அயில்வேல் அரசே!
ஞானு கரனே! நவிலத் தகுமோ?
யானகிய என்னை விழுங்கி, வெறும்
தானய் நிலை நின்றது தற்பரமே.

### 29. அறியாமையைப் பொறுத்தருளுக

இல்லே எனும் மாயையில் இட்டனை நீ
பொல்லேன் அறியாமை பொறுத்திலையே;
மல்லே புரி பன்னிரு வாகுவில் என்
சொல்லே புனையும் சுடர் வேலவனே!

### 30. உணர்த்திய ஞானம் சொல்ல இயலாது

செவ்வான் உருவில் திகழ் வேலவன் அன்(று)
ஒவ்வாத தென உணர்வித் ததுதான்
அவ்வா றறிவார் அறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே?

### 31. மாயையிற் இட்டனை நீ வாழ்க!

பாழ்வாழ் வெனும் இப் படு மாயையிலே
வீழ்வாய்! என என்னை விதித்தனையே!
தாழ்வானவை செய்தனதாம் உளவோ?
வாழ்வாய்! இனி நீ மயில் வாஹனனே!

### 32. கலைஞானம் போதும் போதும்

கலையே பதறிக் கதறித் தலையூ(டு)
அலையே படுமா றதுவாய் விடவோ?
கொலையே புரி வேடர் குலப் பிடி தோய்
மலையே! மலை கூறிடு வாகையனே!

### 33. சமுசார வாழ்க்கை என்று தொலையும்?

சிந்தாகுல இல்லொடு செல்வம் எனும்
விந்தாடவி என்று விடப் பெறுவேன்?
மந்தாகினி தந்த வரோதயனே!
கந்தா! முருகா! கருணு கரனே!

### 34. கருமம் அற

சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காமல் எனக்கு வரம் தருவாய்
ஸங்க்ராம சிகாவல ! ஷண்முகனே !
கங்காநதி பால ! க்ருபாகரனே !

### 35. கதி காண

விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க் கழல் என்றருள்வாய்?
மதி வாள் நுதல் வள்ளியை அல்லது பின்
துதியா விரதா ! ஸுரபூ பதியே !

### 36. சிவபிரானுக்கு உபதேசித்தது எது ?

'நாதா ! குமரா ! நம' என் றரனார்
'ஓதாய்' என ஓதிய தெப்பொருள் தான்?
வேதா முதல் விண்ணவர் சூடு மலர்ப்
பாதா ! குறமின் பத சேகரனே !

### 37. முருகவேளின் கணங்களைக் கூட

கிரிவாய் விடு விக்ரம வேல் இறையோன்
பரிவாரம் எனும் பத மேவலையே
புரிவாய், மனனே ! பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோடும் அகந்தையையே.

### 38. ஆட்கொள்ளப்பட்டது

ஆதாளியை, ஒன் றறியேனை, அறத்
தீதாளியை, ஆண்டது செப்புமதோ ?
கூதாள கிராத குலிக்கிறைவா !
வேதாள கணம் புகழ் வேலவனே !

### 39. ஆசைகள் அற

மாஏழ் ஜனனம் கெட மாயை விடா
மூ ஏடணை என்று முடிந்திடுமோ ?
கோவே ! குறமின் கொடிதோள் புணரும்
தேவே ! சிவசங்கர தேசிகனே !

## 40. மனை மயக்கம் அற

வினை ஓட விடும் கதிர்வேல் மறவேன் ;
மனையோடு தியங்கி மயங்கிடவோ ?
சுனையோ டருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே !

## 41. சாகா வரம் பெற

சாகா தெனையே சரணங் களிலே
கா ! கா ! நமனார் கலகம் செயும்நாள்
வாகா ! முருகா ! மயில் வாகனனே !
யோகா ! சிவஞானொபதேசிகனே !

## 42. பெற்ற உபதேசத்தின் பெருமை

குறியைக் குறியாது குறித் தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலும்
செறிவற் றுலகோ டுறை சிந்தையும் அற்(று)
அறிவற் றறியாமையும் அற்றதுவே.

## 43. அநுபூதி நிலையைப் பெற்றது

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா ! முருகா ! நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே.

## 44. திருவடி தீக்ஷயின் சிறப்பு

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லுமதோ ?
வீடும் ஸுரர் மா முடி வேதமும் வெங்
காடும் புனமும் கமழும் கழலே.

## 45. மெய்ப் பொருள் வேண்டல்

கரவாகிய கல்வி உளார் கடை சென்(று)
இரவா வகை மெய்ப்பொருள் ஈகுவையோ ?
குரவா ! குமரா ! குலிசாயுத குஞ்
சரவா ! சிவயோக தயாபரனே !

## 46. கவலை தீர

எந்தாயும் எனக் கருள் தந்தையும் நீ
சிந்தாகுல மானவை தீர்த் தெனையாள்
கந்தா ! கதிர் வேலவனே ! உமையாள்
மைந்தா ! குமரா ! மறை நாயகனே !

## 47. தத்துவங்களைக் கடந்த நிலையைப் பெற

ஆறாறையும் நீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ !
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா உலகம் குளிர்வித் தவனே.

## 48. பிரானது பெற்றி

அறிவொன் றறநின் றறிவார் அறிவிற்
பிறிவொன் றறநின்ற பிரான் அலையோ !
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே !

## 49. பேரின்பப் பொருளை எடுத்துரைக்க இயலாது

தன்னந் தனிநின் றதுதான் அறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ?
மின்னும் கதிர்வேல் விகிர்தா ! நினைவார்
கின்னம் களையும் க்ருபைசூழ் சுடரே !

## 50. கேடு அற

மதி கெட் டற வாடி, மயங்கி, அறக்
கதி கெட் டவமே கெடவோ கடவேன் ?
நதி புத்திர ! ஞான ஸுகாதிப ! அத்
திதி புத்திரர் வீறடு சேவகனே !

## 51. குரு மூர்த்தி வர

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குஹனே !

(அநுபந்தம்—3 கந்தர் அநுபூதி முற்றும்)

# அநுபந்தம் — 4

# திருவகுப்பு

## 1. பெருத்த வசந வகுப்பு *

தனத்த தனதன தனத்த தனதன

அருக்கன் உலவிய ஜகத்ர யமும்இசை
அதிற்கொள் சுவைஎன அனைத்தும் நிறைவதும்
அவஸ்தை பலவையு மடக்கி அகிலமும்
அவிழ்ச்சி பெற இனி திருக்கு(ம்) மவுநமும்
அசட்டு வெறும்வழி வழக்கர் அறுவரும்
அரற்று வனபொருள் விகற்பம் மொழிவதும்
அழுக்கு மலஇருள் முழுக்கின் உழல்வதை
அடக்கி அவநெறி கடக்க விடுவதும்;
எருக்கும் இதழியு(ம்) முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத்தி கழுவதும்
இரட்டை வினைகொடு திரட்டு மலஉடல்
இணக்கம் அறஒரு கணக்கை அருள்வதும்
இருக்கு முதலிய ஸமஸ்த கலைகளும்
இதற்கி தெதிர்என இணைக்க அரியதும்
இறக்க எனஎதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை அருள்வதும்;
நெருக்கு வனஉப நிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை உடையதும்
நெருப்பு நிலம்வெளி மருத்து வனம்என
நிறைத்த நெறிமுறை கரக்கும் உருவமும்

---

* இவ் வகுப்பின் ஆங்கில மொழி பெயர்ப்பினை, சென்னை-62, வடதிருமுல்லைவாயில் - வைஷ்ணவி ஆலய ஸ்தாபகர், ஸ்ரீ ஸ்வாமி அண்வாநந்தா அவர்கள் எழுதியுள்ள "ஸெயின்ட் அருணகிரிநாதா" என்னும் நூலில், பக்கம் 118 இல் காணலாம். அந் நூலின் விலை ரூ. 10/-

நினைப்பும் நினைவதும் நினைப்ப வனும்அறு
நிலத்தில் நிலைபெற நிறுத்த உரியதும்
நிலைத்த அடியவர் மலைத்தல் அதுகெட
நிவிர்த்தி உறஅநு பவிக்கும் நிதியமும்
உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
உளத்தொ டுரைசெயல் ஒளித்து விடுவதும்
ஒளிக்கும் ஒளிஎன வெளிக்கும் வெளிஎன
உயிர்க்கும் உயிர்என நிகழ்ச்சி தருவதும்
உரத்த தனிமயில் உகைத்து நிசிசரர்
ஒளிக்க அமர்பொரு ஸமர்த்தன் அணிதழை
உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்தன் அருளிய பெருத்த வசநமே.

## 2. திருஞான வேழ வகுப்பு

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தான தானன

சடைலை பட்டலை உடல் எனப்படு
தரும சித்திர கூடம் ஆனவை
தவிர நிஷ்கள வெளியில் நிற்பன
ஸமய தர்க்கவி ரோத வாதிகள்
தகர எற்றுவ, புகர்ம னக்கிரி
தனைமு ருக்குவ, ஆசை ஆணவ
தளைஇ யற்கையை விடந டிப்பன,
ஜனனம் முற்றிய ஜாத மாமஎழு;
கடல் கடப்பன, படுகொலைச்சமர்
கடகம் அப்படி சாய மோதுவ
கருவினைத்தரும் இருவினைத்தொடர்
கழல்ப தத்தன யோக ஸாதகர்
களைப றிப்பன கிளைஎனப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ
கருணை மெய்த்தவ திருவ ருட்கன
கவளம் மொக்குவ காம ராஜனை;
அடல்கெ டுப்பன, அகில் கறுப்பனை
அரண் அழிப்பன, கோபம் ஆனவை
அவிய நற்பெற்ற ஏனும்ந திப்பிர
ளயம் இறைப்பன, லோப மோஹிதம்

அவைமு றிப்பன, மதமு மூத்தறி
அடிப றிப்பன, ராஜ தாதியின்
அதிகு ணத்ரய மதில் இடிப்பன,
அளவில் தத்துவ தூளி வீசுவ ;
திடம் உடைச்சிறை மயில் உகைத்தெழு
சிகரி குத்திய வேலே நீள்சுனே
தினமும் உற்பல மலர் திருத்தணி
இறை திருப்புகழ் பாடு நாவலர்
திரள் ப்ரியப்பட இனித ளிப்பன,
செயல் ஒழித்தநு பூதி மீமிசை
திகழும் அற்புத மவுந நிர்க்குண
சிவம யத்திரு ஞான வேழமே.

## 3. திருக்கையில் வழக்க வகுப்பு

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

திருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன
தடக்கரம் நிமிர்த்துயர் உடுக்குலம் உதிர்ப்பன,
தடித்தெழு குலப்புவி நடுக்குற அதிர்ப்பன
தழைச்செவி படைப்பன, திரட்கயிலே ஒப்பன,
சதுர்த்தச தலத்தையும் எடுத்த கடவுட்பணி
ஸஹஸ்ர பணபத்தியும் ஒடுக்குற நடப்பன,
ஸமுத்ர மதனத்தில் அமுதத்துடன் உதிப்பன,
தரத்தன, தலேச்சுர நதிப்புனல் குளிப்பன ;

அருக்கர் பதம்உட்பட மிதித்திடு பதத்தன ;
அறப்படு கொலேத்தொழில் புறப்படு முகத்தன ;
அரக்கர்படை கெட்டுமுறி யப்பொரு பதத்தன ;
அயற்கும் அமரர்க்கும் ஒருபொற்பதி அளிப்பன ;
அளித்தவ முதுக்கவள மொக்குவன ; முத்தெறி
அலேக்கடல் கலக்குவ ; குலக்கிரி குலுக்குவ ;
அடித்தெழு பொருப்பினே நெருப்பெழ விழிப்பன ;
அதிக்ரம கம்பீரவுட விக்ரம மதத்தன ;

மருக்குலவு கற்பக வனத்தலர் புறிப்பன;
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன;
மதிப்பிள வெனச்செருகி வைத்தென மணிச்சதுர்
மருப்பின; இமைப்பற விழித்த நயனத்தன;
வளைத்த கிரியைப்பொடி படுத்தி இபம் எட்டையு(ம்)
மலைத்தவன் அடிப்பட மடப்பிடி அணைப்பன;
மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன;
மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன;

திருத்திய புனத்திடை வனத்தமை உடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலச்சர வணத்துறு முக்ப்பொருள்
ஜெகத்ரய முகிழ்த்த உதரத் திரி புரைக்கொரு
திருப்புதல் வன்உற்பல கிரிப்பெயர் தரித்தருள்
திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.

## 4. சேவகன் வகுப்பு

தனதன தன்ன தனதன தன்ன
தனதன தனன தனத்தா தனனா

இருபிறை எயிறு நிலவெழ உடலம்
இருள்படு ஸொருபம் உடைக்கோ விடவே
இறுகிய கயிறு படவினை முடுகி
எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்;

அருமறை முறையின் முறைமுறை கருதி
அதர்இடை வெருவ ஒறுத்தால் வகையால்
அறிவொடு மதுர மொழிஅது குழறி
அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய்;

ஒருபது சிரமும் இருபது கரமும்
விழஒரு பகழி தொடுத்தோன் மருகா
உரமது பெரிய திரிபுரம் எரிய
உயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா;

மருவளர் அடவி வநிதையர் பரவ
மரகத இதணில் இருப்பாள் கணவா
வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சே வகனே.

## 5. புய வகுப்பு

தனதன தன்ன தன்தன தனன தனதன
தான தான தனதன தத்தன
தந்த தந்த தந்த தானத் தனந்தன

இசைதவிர் ககன சரசிவ க்ரண மகாவ்ருத
சீல சால வரமுநி சித்தரை
அஞ்சல் அஞ்சல் என்று வாழ்வித்து நின்றன

மணிவட மழலை உடைமணி தபனிய நாண்அழ
காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன

வருணித கிரண வருணித வெகுதரு ணாதப
ஜோதி ஆடை வடிவு பெறப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

வளைகடல் உலகை வலம்வரு பவுரி விநோதக
லாப கோப மயில்வத னத்துவி
ளங்கும் அங்கு சங்க டாவிச் சிறந்தன

வரைபக நிருதர் முடிபக மகர மஹோ ததி
தீயின் வாயின் மறுக விதிர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

மதிஎன உதய ரவிஎன வளைபடு தோல்வி
சால நீல மலிபரி சைப்படை
கொண்டு நின்று மன்று சாதிக்க முந்தின

மனகுண சலன மலினமில் துரியஅ தீதஸு
காநு பூதி மவுன நிரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன

வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகஸ
மூக ராக மதுபம் விழச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன;

மிசைமிசை கறுவி வெளிமுக டளவு நிசாசர
ஸேனை தேடி விததி பெறச்சில
கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன

வெருவுவ வெருவ எரிசொரி விழிஉள பூதபி
சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன

விதமிகு பரத சுரவநி தையர்கண மேல்தொறும்
லீலை யாக விமல ஜலத்தினை
விண்தி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன

விதரண தருவின் மலரிடை செருகிய கூதள
நீப மாலை விபுதர் குலக்குலி
சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன

விகஸித தமர பரிபுர முளரி தொழாஅபி
ராம வேடர் விமலை தினைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன

விதிர்தரு சமர முறிகர கமல நகாயுத
கோழி வீற விதரண சித்ரஅ
லங்க் ருதம்பு னைந்து பூரித் திலங்கின

விரகுடை என்து மனதுடன் அகில்பனி நீர்புழு
கோட ளாவி ம்ருகமத கற்புர
குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன

வினைபுரி பவனி தொழுதழு துருகிய கோதையர்
தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன

இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளித
ஞசி தேசி பயிரவி குச்சரி
பஞ்ச ரந்தெ ரிந்து வீணைக் கிசைந்தன

'இறுதியில் உதய ரவிகணம் நிகரென ஆறிரு
காது தோயும் இலகு மணிக்கன
விம்ப குண்ட லங்கள் மேவிப் புரண்டன

எதிர்படு நெடிய தருஅடு பெரிய கடாம்உமிழ்
நாக மேகம் இடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின

எழுதரும் அழகு நிறமலி திறல்இசை யாகஉ
தார தீரம் எனஉரை பெற்றஅ
டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின

இருள்பொரு கிரண இரணிய வடகுல பாரிய
மேரு ஜாதி இனம்என ஒத்துல
கங்கள் எங்க ணும்ப்ர காசித்து நின்றன

இயன்முநி பரவ ஒருவிசை அருவரை யூடதி
பார கோர இவுளி முகத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன

இபரத துரக நிசிசரர் கெட ஒரு சூரனை
மார்பு பீறி அவன்உதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி ஆடிச் சிவந்தன

எவை எவை கருதில் அவை அவை தருகொடை யால்மணி
மேக ராசி சுரபி அவற்றொடு
சங்க கஞ்ச பஞ்ச ஜாலத்தை வென்றன

அசைவற நினையும் அவர்பவம் அகலவெ மேல்வரு
கால தூதரை உடையும் அப்படி
அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன

அகிலமும் எனது செயல்அல திலைஎன யான்என
வீறு கூறி அறவு மிகுத்தெழும்
ஐம்பு லன்தி யங்கி வீழத் திமிர்ந்தன

அனல்எழு துவஜம் உடுகுலம் உதிரவி யோமமும்
ஏழு பாரும் அசலமும் மிக்கபி
லங்க ளுங்கு லுங்க ஆலித் ததிர்ந்தன

அடல்நெடு நிருதர் தளமது மடிய வலாரிதன்
வானை ஆள அரசு கொடுத்தப
யம்பு குந்த அண்டர் ஊரைப் புரந்தன

அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாடல் அளிமுரல் செச்சைஅ
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன

அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொழு தேகவி
மாலை யாக அடிமைதொ டுத்திடு
புன்சொல் ஒன்று நிந்தி யாமற் புனைந்தன

அழகிய குமரன் உமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழும் அறுவர் ப்ரியப்படு
கந்தன் எந்தை இந்த்ர நீலச் சிலம்பினன்

அநுபவன் அநகன் அனனியன் அமலன் அமோகன்அ
நேகன் ஏகன் அபிநவன் நித்தியன்
அஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே.

## 6. மயில் வகுப்பு

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தந்ததனனு

ஆதவனும் அம்புலியும் ஆசுற விழுங்கிஉமிழ்
ஆலமரு வும்பணிஇ ரண்டும் அழுதே
ஆறுமுகன் ஐந்துமுகன் ஆனைமுகன் எம்கடவுள்
ஆம்என மொழிந்தகல வென்று விடுமே—
ஆர்கலி கடைந்தமுது வானவர் அருந்தஅருள்
ஆதிபக வன்துயில் அநந்தன் மணிசேர்
ஆயிரம் இருந்தலைக ளாய்விரி பணம்குருதி
யாகமுழு தும்குலைய வந்த றையுமே;

வேதமுழு தும்புகல் இராமன் ஒரு தம்பிமிசை
வீடணன் அருந்தமையன் மைந்தன் இகலாய்
வீசும்அர வம்சிதறி ஓடவரு வெம்மகலுழன்
மேலிடி எனும்படிமு ழங்கி விழுமே—

மேதினி சுமந்தபெரு மாசுணம் மயங்கநகம்
மேவுசரணம் கொடுல கெங்கும் உழுமே
வேலின எண்டிசையில் வாழும் உர கம்தளர
வேஅழல் எனும் சினமு டன்ப டருமே;

போதினில் இருந்தகலை மாதினை மணந்தஉயர்
போதனை இரந்துமலர் கொண்டு முறையே
பூஜனை புரிந்துகொடி யாகிமகிழ் ஒன்றுதிகிர்
போல்முடி விளங்கவரும் அஞ்சம் அடுமே—
பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர்
பூரண கணங்களொடு வந்து தொழவே
போரிடுவ வென்றுவெகு வாரண கணங்கள் உயிர்
போயினம் எனும்படிஎ திர்ந்து விழுமே;

கோதகலும் ஐந்துமலர் வாளிமத னன்பொருவில்
கோலஉட லம்கருகி வெந்து விழவே
கோபமொடு கண்டவிழி நாதர்அணி யும்பணிகள்
கூடிமனம் அஞ்சிவளை சென்று புகவே—
கூவிஇர வந்தம் உணர் வாழிஎன நின்றுபொரு
கோழியொடு வென்றிமுறை யும்ப கருமே
கோலம்உறு செந்தில் நகர் மேவுகும ரன்சரண
கோகனதம் அன்பொடுவ ணங்கு மயிலே.

## 7. திருப்பரங்கிரி வகுப்பு

தான்தந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தனதானா

சாதியும் குலம் ஆவதும்குடி ஆவதும் ஜனம் ஆவதும் கிளை
தாரமும்திர பாலரும்பிர தானமும்பெரு க்காண்மையும் பெறு
தானமும்பகு மானமும்சிவ ஞானமும்பல கோலமும்புரி
தொழிலோடுமே—

தாழ்வகன்றிடு வாழ்வும் வெம்பிணி நோயும் அங்கதி
லாதுரந்தனில்
ஆவதும்தளர் சாவொழிந்திடு யோகமும் சிவ பேறும்
எந்தநி
தானமும் செய்த ராசுகண்டது போல்வரும் பொது
வாகும் என்றுன திருதாளையே ;

ஓதின்நெஞ்சய ரார்தினம்திரி காலமும்தொழு வோர்
விரும்பிய
தேறும் அன்புட னேதரும்க்ருபை யாகவந்தநு
பூதிதந்துமுன்
நூல்கடந்திட வேபுரந்தருள் கூரும் இங்கித ஸேவை
நம்பிய படிகாணவே—

ஓகை வந்தனையாய்வணங்கிய ஏழைசிந்தையுளே நினைந்திடு
வேளைவந்தினி தாய்வரம்தர வேணும் என்றக
மேவருந்தியும்
ஓதினன்தினம் நான் விளம்புதல் நீ அறிந்தும் இதேன்
இரங்கிலை அறிவேன் ஐயா ;

ஆதி அந்தம் அனுதிவிந்துவும் நாதமும்பிரி யாநிறைந்தஅ
ரூப இன்பஸொ ரூபஸுந்தர ஜோதிமுன்பொலி நீதி
அம்பொருள்
ஆகநின்ற பராபரன் கரு ணாலயன்புல வோர்இறைஞ்சிட
எதிர்காளிவா(து)
ஆடலின் செக சேகிணங்கிண சேகுடண்டம டாடமண்டம
தாகிணங்கிண தோதிணங்கின தாதிமிந்திமி தோஎனும்
தொனி
யார்சிலம்பொலி தாளமிஞ்சிட வேநடம்புரி பாத
நம்பரன் அருள்பாலனே ;

மாதிரம்திசை யாக அந்திக டாசலம் திரை மாஜலம்புவி
மாகம்அண்டக டாகமும்பொனின் மேருவின்தலையே
குலுங்கிட
வாஸம் ஒன்றிய கால்பொரும்துகள் வான்நிரம்பிடவே
வரும்கதிர் வடிவேலனே—

வானரம் கதிர் தாவுதண்டலை மேவுகொண்டலை யூடு
நின்றலை
மாஇனம்களி கூரும்நண்பொடு கோகநம்செறி
வாவி சிந்திய
பால் அருந்திய பேர்சிறந்திரு மூவர்விஞ்சையர் சூழ்
பரங்கிரி முருகேசனே.

## 8. திருச் செந்தில் வகுப்பு

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தனதானன

சந்த பந்த முந்து விந்தை செஞ்சொ லின்ப்ர பந்தம் நந்து
—சங்க மங்கலம்பொ ருந்து தமிழ்பாடியே—
தஞ்சம் என்று சென்று சென்று நஞ்சு விஞ்சு நெஞ்ச வஞ்சர்
தங்கண் முன்பு நின்று நின்று மெலிவோதியே:

சிந்தை நொந்து நொந்து நைந்து நைந்து வெம்பி வெம்பி
அங்கி
சிந்தி இந்த வெம்கு டம்பை அழிபோதுமா—
சிங்க முன்பு குந்த தந்தி யின்குலம் கலங்கு பண்பொ
சிந்த துன்பம் என்றொ ழிந்து கரைஏறுவேன்;

அந்த ரங்கள் அண்டர் அண்டம் மண்டலம் குலுங்க நின்ற
சைந்த சைந்து பந்தெ ழும்ப அஸுராதியோர்—
அம்க டங்கள் துண்ட துண்ட கண்ட பந்தி சண்டை வந்த
லைந்து ருண்டு மண்டை சிந்த அடர்கோபனே;

சந்த சந்தம் நுங்கு கும்ப கொங்கை இந்தி ரன்ம டந்தை
தங்க ணம்பு ரந்த வென்றி அணிநேயனே—
கம்பும் அஞ்ச மும்தி கழ்ந்தி ருந்திடும் திறம்செறிந்து
கஞ்சம் நன்ற லர்ந்த செந்தில் முருகேசனே.

## 9. திருப்பழநி வகுப்பு

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததன தந்ததன தனதானன

எந்த வினை யும்பவமும் எந்தவிட மும்படரும்
எந்தஇக லும்பழியும் எந்தவழு வும்பிணியும்
எந்தஇகழ் வும்கொடிய எந்தவசி யும்சிறிதும்
அணுகாமலே—

எந்தஇர வும்தனிமை எந்தவழி யும்புகுத
எந்தஇட மும்சபையில் எந்தமுக மும்புகலும்
எந்தமொழி யும்தமிழும் எந்த விசை யும்பெருமை
சிதறுமலே ;-

வந்தனைசெய் துன்சரணம் நம்புதல் புரிந்தருள்
வந்தரு தினந்தனிலும் நெஞ்சில்நினை வின்படிவ
ரந்தர உவந்தருள் இதம்பெறுவ தன்றிநெடுவல்வினையே

வஞ்சவிழி சண்டன்உறு கின்றபொழு துங்குமர !
கந்த ! என நன்கறைய வும்தெளிவு தந்துயிர்வ
ருந்துபய மும்தனிமை யும்தவிரஅஞ்சல்என
வரவேணுமே ;-

தந்தனன தந்தன்ன டிண்டிகுடி டிண்டிகுடி
குண்டமட குண்டமட மண்டமென நின்றுமுர
சம்திமில பம்பைதுடி திண்டிம முழங்கும்ஒலி
திசைவீறவே—

தண்டஅமர் மண்டஸுரர் மண்டைநிண மென்றலகை
உண்டுமிழ்தல் கண்டமரர் இந்திரன் வணங்குபத
தண்டைசிறு கிங்கிணி புலம்பிட வரும்பவனி
மயில் வாகனே ;-

செந்தளிரை முந்துபடம் என்றுள மருண்டு நிறை
சந்தன வனம்குலவு மந்திகுதி கொண்டயல்செ
றிந்தகமு கின்புடை பதுங்கிட விளைந்துதிமிர்
படல் சாடவே—

சிந்திய அரம்பைபல வின்கனியில் வந்துவிழ
மென்கனி உடைந்தகளை விண்டநறை கொண்டுசெறு
செண்பக வனங்கள் வளர் தென்பழநி அம்பதியின்
முருகேசனே.

(அநுபந்தம்—4—திருவகுப்பு முற்றும்)

## அநுபந்தம்—5

# வேல், மயில், சேவல் விருத்தங்கள்

## (அருணகிரிநாதர் அருளியவை)

### 5—அ. வேல் விருத்தம்

வெங்காள கண்டர்கைச் சூலமும் திருமால்தன்
வெற்றிபுனை சுடர்ஆழியும்
விபுதர்பதி குலிசமும் சூரன் கலங்கவலி
வெல்லா எனக் கருதியே
ஸங்க்ராம நீஜயித் தருள்எனத் தேவரும்
சதுர்முகனும் நின்றிரப்பச்
சயிலமொடு சூரன்உடல் ஒருநொடியில் உருவியே
தனிஆண்மை கொண்ட நெடுவேல்
கங்காளி சாமுண்டி வாராஹி இந்த்ராணி
கௌமாரி கமலா ஸனக்
கன்னிநா ரணிகுமரி திரிபுரை கபாலிஉமை
கௌரி காமாட்சி விஜயை
சிங்காரி யாமளை பவாநிகார்த் திகையரை
த்ரியம்பகி அளித்த செல்வன்
சிறுவன்அறு முககுமரன் நிசிசரர் குலாந்தகன்
செம்பொற் றிருக்கை வேலே. (1)

வேதாள பூதமொடு காளராத் திரிகளும்
வெகுவித பசாச கணமும்
வெங்கழு குடன் கொடி பருந்துசம் பூகமும்
வெம்பசி ஒழிக்க வந்த
ஆதார கமடமும் கணபண வியாளமும்
அடக்கிய தடக்கிரி எலாம்
அலையநடம் ஆடிவரு தானவர் நிணத்தசை
அருந்திப் புரந்த வைவேல்

தாதார் மலர்ப் பொழிற் பழநிமலை சோலைமலை
தண்பரங் குன்றே ரகம்
தணியல்செந் தூரிடைக் கழிஆவி னன்குடி
தடங்கடல் இலங்கை தன்னிற்
போதாரும் வார்வயற் கதிர்காமம் நாடொறும்
புகழுமால் நாவில் இன்பப்
புந்தியில் அமர்ந்தவன் கந்தன் முருகன் சமர
புங்கவன் செங்கை வேலே. (2)

மாமுதல் தடிந்தன்றி லங்கிரியி னூடுபோய்
வலியதா னவன்மார் பிடம்
வழிகண்டு கமலபவ னத்தனைச் சிறையிட்டு
மகவான் தனைச்சிறை விடுத்(து)
ஓமஇரு டித்தலைவர் ஆசிபெற் றுயர்வானில்
உம்பர்சொற் றுதிபெற்று நா
உடையகீ ரன்தமிழ்ப் பாமாலை பெற்றுலகில்
ஒப்பில்புகழ் பெற்ற வைவேல்
ஸோமகல சப்ரபா லங்கார தரசேட
சூடகா லாந்தக மஹா
துங்கஇட பாரோஹ ணக்கட்க சூலதர
துரிதசர சர்மாம் பரச்
சேமவடி வாம்புயக ஆபரண சங்கர
திகம்பர த்ரியம்பக மஹா
தேவஜெய நந்தன கஜானன ஸஹோதரன்
செம்பொற் றிருக்கை வேலே. (3)

## 5—ஆ. மயில் விருத்தம்

சந்தான புஷ்பபரி மளகிண் கிணி முகச்
சரணயுக ளமிர்தப் ப்ரபா
சந்த்ரசே கரமூஷி காரூட வெகுமோஹ
சக்திப்ரி யாலிங் கனச்
சிந்தா மணிக்கலச கரகட கபோலத்
த்ரியம்பக விநாயகன் முதற்
சிவனை வலம் வரும் அளவில் உலகடைய நொடியில்வரு
சித்ரக் கலாப மயிலாம்

மந்தா கினிப்ரபவ வரதுங்க விரதுங்க
வனஸரோ தயக்ருத்தி கா
வரபுத்ர ராஜீவ பர்யங்க இந்த்ர
வராசலன் குலிசாயுதத்
திந்த்ராணி மங்கல்ய தந்துரட் சாபரணன்
இகல்வேல் விநோதன் அருள்கூர்
இமயகிரி குமரிமகன் ஏறுநீ லக்ரீவ
ரத்னப் ப்ரவாள மயிலே. (1)

சக்ரப் ப்ரசண்டகிரி முட்டக் கிழிந்துவெளி
பட்டுக் க்ரவுஞ்ச சயிலம்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்பும்எழு
தனிவெற்பும் அம்புவியும் எண்
திக்குத் தடங்குவடும் ஒக்கக் குலுங்க ஒரு
சித்ரப் பதம்பெயர வே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூர்
திடுக்கிட நடக்கும் மயிலாம்
பக்கத்தில் ஒன்றுபடு பச்சைப் பசுங்கவுரி
பத்மப் பதம்கமழ் தரும்
பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்கினிய
பரமஉப தேசம் அருள்செய்
கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்த ஒரு
கந்தச் சுவாமி தனியற்
கல்லார கிரிமுருகன் வருகிரண மரகதக்
கலபகக திலக மயிலே. (2)

## 5—இ. சேவல் விருத்தம்

உலகில்அநு தினமும்வரும் அடியவர்கள் இடர்அகல
உரியபர கதிதெரியவே
உரகமணி என்உழலும் இருவினையும் முறைபடவும்
இருள்கள்மிடி கெட அருளியே
கலகம் இடும் அலகைகுறள் மிகுபிணிகள் வலிமையொடு
கடினமுற வரில் அவைகளைக்
கண்ணைப் பிடுங்கியுடல் தன்னைப் பிளந்துசிற
கைக்கொட்டி நின்றுடுமாம்

மலைகள்நெறு நெறுநெறென அலைகள் சுவறிட அஸுரர்
மடியஅயில் விடவு முருகன்
மகுடவட கிரிஅலைய மலையுமுலை வநிதைகுற
வரிசையின மகளவளுடன்
சிலைகுலிசன் மகள் மருவு பயமில்வரு சரவணச்
சிறுவன்அயில் உருவி இரவிச்
சிரமிசையில் வெகுசினமொ டடியுதவும் அறுமுகவன்
சேவற் றிருத் துவஜமே. (1)

புங்கமா கியவிட புயங்கமா படமது
பறித்துச் சிவத்த ருந்திப்
பகிரண்ட முழுதும் பறந்துநிர்த் தங்கள்புரி
பச்சைக் கலாப மயிலைத்
துங்கமாய் அன்புற்று வன்புற் றடர்ந்து வரு
தொடரும் பிரேத பூதத்
தொகுதிகள் பசாசுகள் நிசாசரர் அடங்கலும்
துண்டப்படக் கொத்துமாம்
மங்கை யாமளை குமரி கங்கைமா தவிகவுரி
வஞ்சிநான் முகிவராஹி
மலையரையன் உதவுமயில் திருமுலையில் ஒழுகுபால்
மகிழஅமு துண்ட பாலன்
செங்கண்மால் மதலையிடம் இங்குளான் என்னுநர
சிங்கமாய் இரணியன் உடல்
சிந்தஉகி ரிற்கொடு பிளந்தமால் மருமகன்
சேவற் றிருத் துவஜமே. (2)

(அநுபந்தம் 5—வேல், மயில், சேவல் விருத்தங்கள் முற்றும்)

# அநுபந்தம்—6 (அ)

# திருப்புகழ் அர்ச்சனை (108)

"நாதா குமரா நம" (கந்தரநுபூதி)

(†கொம்பனை) ஓம் உம்பர்கள் ஸ்வாமீ நமோ நம
,, எம்பெருமானே ,,
,, ஒண்டொடி மோஹா ,,
(நாதவிந்து) ,, நாத விந்து கலாதீ ,,
,, வேத மந்த்ர ஸ்வரூபா நமோ நம 5
,, ஞாந பண்டித ஸ்வாமீ ,,
,, வெகு கோடி நாம சம்பு குமாரா ,,
,, போக அந்தரி பாலா ,,
,, நாக பந்த மயூரா ,,
,, பரசூரர் சேத தண்டவிநோதா நமோ நம 10
,, கீத கிண்கிணி பாதா ,,
,, தீர ஸம்ப்ரம வீரா ,,
,, கிரிராஜதீப மங்கள ஜோதீ ,,
,, தூய அம்பல லீலா ,,
,, தேவகுஞ்ஜரி பாகா நமோ நம 15
(போதகம்) ,, போதகம் தரு கோவே ,,
,, நீதி தங்கிய தேவா ,,
,, பூதலந்தனை ஆள்வாய் ,,
,, பணி யாவும் பூணுகின்ற பிரானே ,,
,, வேடர் தம்கொடி மாலா நமோ நம 20
,, போதவன் புகழ் ஸ்வாமீ ,,
,, அரிதான வேத மந்திர ரூபா ,,
,, ஞாந பண்டித நாதா ,,
,, வீர கண்டைகொள் தாளா ,,
,, அழகான மேனி தங்கிய வேளே நமோ நம 25
,, வான பைந்தொடி வாழ்வே ,,

---

† அடைப்புக் குறிக்குள் உள்ளவை அவ்வப் பாடலின் முதற் குறிப்பு.

ஓம் வீறு கொண்ட விசாகா நமோ நம
(சத்தி) ,, சக்தி பாணீ ,,
,, முக்தி ஞாநீ ,,
,, தத்வவாதீ நமோ நம 30
,, விந்து நாத ஸத்து ரூபா ,,
,, ரத்ந தீபா ,,
,, தற் ப்ரதாபா ,,
(சரவண) ,, சரவண ஜாதா ,,
,, கருணை அதீதா நமோ நம 35
,, சததள பாதா ,,
,, அபிராம தருண கதீரா ,,
,, நிருபமர் வீரா ,,
,, சமதள ஊரா ,,
,, ஜகதீச பரம ஸ்வரூபா நமோ நம 40
,, ஸுரர்பதி பூபா ,,
,, பரிமள நீபா ,,
,, உமை காளி பகவதி பாலா ,,
,, இஹபர மூலா ,,
,, பவுருஷ சீலா நமோ நம 45
(அவகுண) ,, மன்றுளாடும் சிவசிவ ஹரஹர
தேவா ,,
,, தெரிசந ப்ரகதி ஆனாய் ,,
,, திசையினு மிசையினும் வாழ்வே ,,
,, செஞ்சொல் சேரும் *திருதரு கல்வி
மணாளா ,,
,, திரிபுரம் எரிசெய்த கோவே நமோ நம 50
(சீதள) ,, சீதள வாரிஜ பாதா ,,
,, நாரத கீத விநோதா ,,
,, சேவல மாமயில் ப்ரீதா ,,
,, மறைதேடும் சேகரமான ப்ரதாபா ,,
,, ஆகம ஸார ஸ்வரூபா நமோ நம 55
,, தேவர்கள் ஸேனை மஹீபா ,,
,, கதிதோயப் பாதகம் நீவு குடாரா ,,

* 'திணைபுன வநிதை மணாளா' எனவும் பாடம்

ஓம் மா அஸுரேச கடோரா நமோ நம
,, பாரினிலே ஜய வீரா ,,
,, மலைமாது பார்வதியாள் தரு பாலா நமோ நம 60

,, நாவல ஞாந மநோலா ,,
,, பால குமார ஸுவாமீ ,,
(வங்கார) ,, சிங்கார ரூபமயில் வாஹந ,,
,, கந்தா குமார சிவ தேசிக ,,
,, ஸிந்தூர பார்வதி ஸுதாகர நமோ நம 65
,, விருதோதை ஸிந்தான ஜோதி கதிர்வேலவ ,,
,, கங்காள வேணி குருவானவ ,,
(அரிமருகோ) ,, அரிமருகோனே ,,
,, அறுதி இலானே ,,
,, அறுமுக வேளே நமோ நம 70
,, அரஹர சேயே ,,
,, இமையவர் வாழ்வே ,,
,, அருண ஸ்வரூபா ,,
(போதநிர்க்) ,, போத நிர்க்குண போதா ,,
,, நாத நிஷ்கள நாதா நமோ நம 75
,, பூரணக் கலை ஸாரா ,,
,, பஞ்சபாண பூபன் மைத்துன பூப ,,
,, நீப புஷ்பக தாளா ,,
,, போக ஸ்வர்க்க பூபாலா ,,
,, சங்கமேறும் மா தமிழ்த்ரய சேயே ,, 80
,, வேதன த்ரய வேளே ,,
,, வாழ் ஜகத்ரய வாழ்வே ,,
(ஓதுமுத்தமிழ்) ஆதி ஸற்குண சீலா ,,
,, ஆடகத் திரிசூலா ,,
,, ஆதரித்தருள் பாலா நமோ நம 85
,, உந்தி ஆன்மை ஆனவர்க்கினியானே நமோ நம
,, ஞான முத்தமிழ் தேனே ,,
,, ஆரணற் கரியானே ,,
,, மன்றுளாடும் தோதி தித்திமி தீதா ,,

ஓம் வேத சித்திர ரூபா நமோ நம 90
,, சோபம் அற்றவர் ஸ்வாமீ ,,
,, தின்மராஜ தூதனைத் துகை பாதா ,,
,, நாத ஸற்குரு நாதா ,,
(வேதவித்) ,, வேத வித்தகா ஸ்வாமீ ,,
,, வேல்மிகுத்த மாசூரா நமோ நம 95
,, வீம சக்ர யூகாளா ,,
,, விந்துநாத வீரபத்ம சீர் பாதா ,,
,, நீலம் மிக்க கூதாளா ,,
,, மேகம் ஒத்த மாயூரா ,,
,, விண்டிடாத போதம் ஒத்த பேர்
போதா நமோ நம 100
,, பூதம் மற்றுமே ஆனாய் ,,
,, பூரணத்துளே வாழ்வாய் ,,
,, துங்கம் மேவும் பூதரத்தெலாம்
வாழ்வாய் ,,
,, ஆறிரட்டி நீள் தோளா ,,
,, பூஷணத்து மா மார்பா ,,
,, ஆர்யை பெற்ற சீராளா ,,
,, சூரை அட்டு நீள் பேரா ,,
,, ஆரணத்தினர் வாழ்வே நமோ நம 108

[அநுபந்தம்-6 (அ) திருப்புகழ் அர்ச்சனை (108) முற்றும்]

---

## திருவாரூர்த் திருப்புகழ்

தானனத் தனதான

நீதான்எத் தனையாலும்—நீடூழிக் கிருபையாகி ;
மாதானத் தனமாக—மாஞானக் கழல்தாராய் ;
வேதாமைத் துனவேளே !—வீரா ! ஸற் குணசீலா ;
ஆதாரத் தொளியானே—ஆரூரிற் பெருமாளே.

# அநுபந்தம்—6 (ஆ)

# திருப்புகழ்ப் போற்றி (16)

## "நாத! போற்றி" (1214)

(களபம்) துணைவ குணதர சரவணபவ நம போற்றி
(அகிலநறுஞ்)ஏனல் விளைவாள்தன் வளிதவிர் சிங்கார
தநமுறு ஸிந்தூர நம ,,
(கலகவிழி) அலகில் தமிழால் உயர் ஸமர்த்தனே ,,
அருணைநகர் கோபுர விருப்பனே ,,
அடல்மயில் நடாவிய ப்ரியத்தனே போற்றி 5
அவதான அறுமுக ஸுவாமி எனும்
அத்தனே ,,
அகிலதலம் ஓடிவரு நிர்த்தனே ,,
'அருணகிரி நாத!' எனும் அப்பனே ,,
அஸுரேசர் பெலம்மடிய வேல்விடு
கரத்தனே ,,
கரதல கபாலி குரு வித்தனே போற்றி 10
பெரிய குறமாதணை புயத்தனே ,,
(நாகாங்க) ஏகாந்த வீரம் ,,
நீலாங்க யாநம் ,,
ஏடார்ந்த நீபம் ,,
முகில்தாவி ஏருங்கல் ஏழும் சாய்த்த
நான்மூன்று தோளும் போற்றி 15
யார் வேண்டினாலும் கேட்ட பொருள் ஈயும்
த்யாகாங்க சீலம் போற்றி 16

[அநுபந்தம்-6 (ஆ) திருப்புகழ்ப் போற்றி (16) முற்றும்]

---

## திருப்புகழின் பெருமை

அருணகிரி நாதர்பதி ஞரு யிரமென்(று)
உரைசெய் திருப்புகழை ஓதீர் !—பரகதிக்க(து)
ஏணி ; அருட்கடலுக்(கு) ஏற்றம் ; மனத்தளர்ச்சிக்(கு)
ஆணி ; பிறவிக் (கு) அரம்.

## அநுபந்தம்—7

# அருணகிரிநாத ஸ்வாமிகளின் வரலாற்றுத் துதி

1. அடியார்செய் தவப்பயனால் நினைத்தமாத்
திரைமுத்தி அளிக்கும் சீர்த்தி
குடியாக விளங்கருணை நகர்உதித்துக்
குறிஞ்சிமகிழ் குமர வேளின்
கடியார்பூங் கழற்புணையைக் கொண்டு பவ
ஜலராசி கடந்தன் னேன்பால்
*ஒடியாநல் உபதேசம் ஜெபமாலை
இவைபெற்றே உயர்ந்தோன் யாவன் ?

2. பச்சைமயில் வாகனமும் வடிவேலும்
குக்குடமும் பாடல் தோறும்
வைச்ச திருப் புகழ்ப்பாக்கள் பதினாரு
யிரம்பாடி வாது செய்த
விச்சைநிறை வில்லிபுத்தூர்ப் புலவருளம்
மிகநாண வேண்டு வோர்தம்
இச்சையெலாம் நிறைகந்தர் அந்தாதி
எனுநூலை இசைத்தோன் யாவன் ?

3. எந்தைதிரு வடிவினெளி நினைந்துநினைந்
துருகிஅவன் எழிலின் வண்ணம்
கந்தரலங் காரமெனக் கலித்துறையாற்
பாடிஅதைக் கண்டோர் எல்லாம்
செந்தமிழின் அணிஇதுவோ கந்தபிரான்
அணிஇதுவோ தெரிகி லேம்என் (று)
அந்தமிலா அதிசயத்தை எந்நாளும்
உறச்செய்த அன்பன் யாவன் ?

---

* ஒடியா—கெடாத (அழிவில்லாத), நல்—நல்ல, உபதேசம்—ஞான போதம்.

4\. பின்னர்ஒரு நாள்சம்பந் தாண்டான்என்
பான்ஒருவன் பேச்சைக் கேட்ட
மன்னர்பிர புடதேவ மாராஜர்
உளமாட்ட மயிலின் மீதே
தன்னிகரி லாக்கந்த வேள்திருக்கை
வேல்விளங்கச் சபையில் வந்து
முன்னர்உறச் செய்தமகா தவப்புலமை
நிறைசெல்வ முன்னோன் யாவன் ?

5\. கிளியுருவிற் பொன்னுலகம் புகுந்துமலர்
கொடுவந்த கீர்த்தி உற்று
வெளியுருவிற் கல்வாது மாதேவி
திருக்கரத்தில் விளங்க நின்று
கிளியுருவிற் றிகழ்ந்தேநங் கந்தரநு
பூதிசொல்லிக் கேடில் லாத
ஒளியுருவச் சீர்பாத வகுப்பாதி
பாடியே உயர்ந்தோன் யாவன் ?

6\. அவனேஎங் குலதெய்வம், அவனேஎம்
உயிர்த் துணைவன் ஆகும் ; நாளும்
அவன்கழலே வாழ்த்துவோம் ; அவன்அருளே
நாடுவோம் ; அவன்பா தச்சீர்
நவநவமாய்ப் புகழ்ந்துமகிழ்ந் தாடுவோம் ;
பாடுவோம், நாடி நாடித்
'தவமுதல்வா ! அருணகிரி அப்பா !' என்
றழைத்திடுவோம், தவத்தைச் சார்வோம்.*

(அநுபந்தம்—7 அருணகிரியார்.....துதி முற்றும்)

---

* இறைவன் அடியர் எவரோ அவர்தம்
குறைவில் புகழே குறிக்கும் — நிறைகுணத்து
விச்சைசெறி விப்பிரனும் வேங்கடராவ் சொல்வழியே.
இச்சரித்தி ரம்பாடி னேம். — தணிகைமணி வ. சு.
செங்கல்வராய பிள்ளை, (திருத்தணி—21—1—1924)

# அநுபந்தம்—8

# வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளைப் பற்றிய பாக்கள்

### ஸ்வாமிகள் அவதரித்த நாட்குறிப்பு

1. சகம்ஆண்டில் ஏழுகுறை ஆயிரத்தெண் ணூற்றில்
சார்பிரமோ தூதிலுறு கார்த்திகைத்திங் களிலே
ஸுகம்வளர்செய் பதிமூேராம் நாள்மூல நாளில்
சுப்பிரமண் யப்பெருமான் வேற்பெருமான் கந்தன்
குகப் பெருமான் திருவருளைப் பெற்றம்கான், தவத்தின்
குன்றருண கிரிநாதன் சொன்னதிருப் புகழைத்
தகதகெனப் பரப்புதற்கே வள்ளிமலைச் சாமி
ஸச்சிதா நந்தர்இந்தப் புவியில்உதித் தனரே.

### ஸ்வாமிகள் குருவின் பதம் அடைந்த நாட்குறிப்பு

2. விக்குருதிக் கார்த்திகையில் வீறுசுக்ல பக்கபுதன்
ஒக்கவரும் அச்விநித்ர யோத்சியிற்—புக்கனரே
ஏத்தும் திருப்புகழ்சொல் எங்கள்ஸச்சி தாநந்தர்
காத்தருளுங் கந்தர் கழல்.

### ஸ்வாமிகள் ஸமாதியானதும் ஸ்ரீலஸ்ரீ ஈச்வர ஸ்வாமிகள் 8-12-1950 அன்று பாடியருளியது

3. ஞானத் தருணகிரி நாதர் கவிமழையின்
தான முகிலாந் தனிஸச்சி - தானந்தா
தேனூறுந் தெய்வத் திருப்புகழின் கீதம்இனி
வானேருங் கேட்பர் மகிழ்ந்து.

---

* 1, 2, 5, 6, 7, 10 முதல் 18, 20 முதல் 28, 30, எண்ணுள்ள பாக்கள் தணிகைமணி-ராவ் பஹதூர் வ.சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் பாடியவை.

**மஹாமஹோபாத்யாய பிரமஸ்ரீ உ.வே. ஸ்வாமி நாதையரவர்கள் பாடியருளியது—(4-5-1926)**

4. *அன்புடையார்க்கெளியன் எனும் அறுமுகன் பொற்றாளில்
அருணகிரிப் பெரியார்முன் அணிந்ததிருப் புகழில்
இன்புறுபா ராயணத்திற் கேற்றவற்றைத் திரட்டி
எவரும்நலம் உறஅளித்தான் அவன்யாவன் என்னின்
என்புருகத் திருப்புகழைப் பாடியும்பா டுவித்தும்
இலகுதிருப் புகழ்ச்சாமி எனும்பெயர்பெற் [றொளிர்வோன்
துன்பகற்று வள்ளிமலை வாழ் பனவ மணிசீர்
துன்று ஸச்சி தாநந்தா என்னுமுநி வரனே.

5. வேலவ னந்தணி கேசன் அரும்புகழ்
மேதினி எங்கணும் இனிதாக—
வீணையு டன்பல மாணவ ருந்தனை
மேவ இருந்தழ கொடுபாடி;
மேலவன் உண்டெனும் ஆசை பிறந்து கல்
மேவுமென் நெஞ்சழல் மெழுகேபோல்—
வேளை வரும்படி மேலுமென் நெஞ்சிடை
வேள்குடி கொண்டிட அருள்வோனே;

---

* "அன்புடையார்க்கெளியனெனும் அறுமுகன் பொற்றாளில்
அருணகிரிப் பெரியார்முன் அணிந்ததிருப் புகழில்
இன்புறுபா ராயணத்திற் கேற்றவற்றைத் திரட்டி
எவரும் நலம் உறஅளித்த எம்பெருமான் வாழ்க !
என்புருகத் திருப்புகழைப் பாடியும்பா டுவித்தும்
இலகுதிருப் புகழ்ச்சாமி எனும் பெரியோய் வாழ்க !
துன்பகற்று வள்ளிமலை வாழ்ந்தகுரு மணியாம்
தூயஸச்சி தாநந்த முநிவரனே வாழ்க !"

என்று இப்பாடலை வாழ்த்துப்பாவாக மாற்றியும் பாடலாம்

சீல குணன்குமரேசு நடன்சிவ
    தேசு குழந்தையு மயுரேசன்—
சீர்வர தன்சின சாமி யுடன்கலை
    சேர்மணி யுஞ்செறி கருணைக;
பாலரு முந்துஸ பாபதி என்றுள
    பாடல் வள்ம்பொலி அடியார்சீர்—
பாடு வரந்தரு வாய்! சிவ னன்றருள்
    பாலன் உளம்பொலி பெருமானே.

## (1920)

6. சின்னமாம் ஏக தாரை திருக்கையில் ஏந்தி இந்தச்
சென்னைமாகாணம் எல்லாம் திருப்புகழ் என்னுந் தேனைச்
சொன்னமாமாரிபோலச் சுவைஅமுதொழுகச்சொல்லும்
தன்னைநே ரில்லாச் சச்சி தாநந்தன் பதங்கள் போற்றி.

## (1930)

7. பச்சைமால் மருகன் கீர்த்தி பகர்திருப் புகழை நாளும்
இச்சையால் ஓது நாவன் எம்பிராற் காவி யாகும்
இச்சையாள் வள்ளி பாத இருதயன் எங்கள் ஆசான்
ஸச்சிதா நந்தன் பாத சரணமே சரண் எமக்கே.

## பச்சையப்பன் கல்லூரித் தமிழ் ஆசிரியர்
## திரு. கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்கள்
## (1935 இல்) பாடியது

8. கூரினைஒன்றேஎன்றும் கருணையின் மிக்கோர்க்கெல்லாம்
நேரென உரைப்பர் வள்ளி நெடுவரை அமர்ந்த ஒப்பில்
சீருறு புலத்தின் மிக்க திருப்புகழ்ச் சாமி உள்ளப்
பேரருள் உணரா முன்னம் பெருநிலத் திடையே மன்னே.

## லயோலா கல்லூரி ஆசிரியர்—கு. மதுரை முதலியார் அவர்கள் (1935 இல்) பாடிய பாடல்

9. துறவற நெறியில் நின்று தூயநற் குணங்கள் பூண்டே
அறநெறிவழுவா திம்பர் அனைவர்தம் மனத்தில் மன்னும்
திறமுடை இருட்டை ஓட்டுந் திருப்புகழ்ப்
*பன்னுளோனே!
புறமதும் அகமும் ஒன்ருய்ப் பொருந்திய புநித! வாழ்க!

## (1937)

10. நேசம் நிறைந்த உள்ளத்தால்
'நீல மயில்மேல் ஏறிவரும்'
ஈசன் அடியிற் பற்றுடையார்
எல்லாம் உய்யத் திருப்புகழாற்
பூஜை செய்து பேறுபெறப்,
புவியிற் சகல செல்வமுற,
ஆசை யுடனித் ‡ திருமுறைநூல்
அளித்த பெரியார் யார்என்னில்.

11. வள்ளி மலையின் சிகரத்தில்
வாய்ந்த குகையில் திருப்புகழ்த்தேன்
கொள்ளை கொண்டு தானுண்டு
கூடும் அன்பர் தமக்குதவி
வள்ளல் பாதம் மறவாது
வம்மின் உண்மின் பருகுமின்
உள்ளங் குளிர்மின் வீட்டின்பம்
உமதே என்று பறைநிகழ்த்தி.

---

* 'பன்னுதல் உள்ளோனே!' என்பொருள் கொள்க.

‡ திருமுறை—பாராயணத் தவநெறித் திருமுறை.

12\. மெய்யன் புடைய அடியாரை
விளித்து நெஞ்சம் உருக்கமுறச்
செய்யுந் திறஞ்சேர் மாவிரத
சீலர் ஸச்சி தாநந்தர்
துய்யன் முருகன் திருவடிக்கே
தொடக்குண் டிலகுந் திருவாளர்
ஐயன் அருண கிரியார்க்கே
அமைந்த வேலைக் காரரவர்.

13\. இத்துணைப் பெருமை ஏய்ந்தஇப் பெரியார்
வெள்ளி மலைநிகர் வள்ளி மலைதனில்
பல்லாண் டாகப் பயன்தரு தவத்திற்
காலம் போக்கும் சீலம் பெரிதுகொண்
டன்பர்க் கறநெறி இன்பிற் காட்டத்
திருப்புகழ்ச் சாரம் விரும்புடன் அளித்தே
ஏவருந் துதிக்கும் மேவரு நிலையில்
உள்ளனர் அவர்தவம் உரைத்தற் பாற்றே!
மற்றவர் இந்நாள் கற்றவர் கதிபெறத்
திருப்புகழ் என்னும் திருவளர் தாமரை,
திருவகுப் பென்னும் உருளிணர்க் கடம்பு,
அலங்காரம் என்னும் வலஞ்சால் வெட்சி,
அந்தாதி என்வரு நந்தியா வர்த்தம்,
அநுபூ திப்பெயர்ப் பிரணவக் குவளை
எனுமிவ் வைந்துடன், மன்மெய் வார்க்கு
ஆகிய எண்வகை மலருடன் அறுமுக
அண்ணல் இணையடி நண்ணுதற் கேற்ற
தவநெறித் திருமுறை தாந்தநந் தனரே. 4

(1939)

14\. உலகில் உள்ளோர் பெரும்பாலும்
உண்மைப் பொருளை உணராது
விலகி நின்று *பேய்த்தேரை
விளங்கும் ஓடை என்பார் அந்தோ!

*பேய்த்தேர் —கானல் நீர்.

கலகம் இதனில் யான்கலங்கேன்
காண்பீர்! ஜகத்தீர்! எனவள்ளி
இலகும் மலையில் தவம்இயற்றும்
எந்தாய்! எனைநீ ஏன்றருளே.

## ஸச்சிதாநந்தர் கலிவெண்பா (மார்ச் 1941)

15. ஸ்ரீரார் பவாநித் திருத்தலத்தின் பாங்குள்ள
ஏரார்பூ நாச்சி எனுந்தலத்திற்—பேரார்ந்த 1
மாமறையோர் தங்குலத்தில் மாஹர்த கோத்திரத்தில்
தூமறையோர் யாருந் தொழத்தக்க—நாமருவு 2
சொல்லார் சிதம்பர ஜோசியப்பேர்ச் சுந்தரனும்
எல்லாரும் மாதரசி என்றுபுகழ்—நல்லாள், சேய்ச் 3
செங்கோ டமாவாஸை திங்கள்ஈ ராறுபணிந்
தங்கே தவங்கிடந்த ஆற்றலமர்—நங்கை 4
இலக்குமிப்பேர் ஏந்திழையும் எம்மான் முருகன்
நலக்கழற்கே செய்ததவம் ஞாலத்—தலக்கணெலாம் 5
போக்குதற்கே ஓர்உருவாய்ப் பூதலத்திற் போந்ததென
ஆக்கம் அளிக்க அவதரித்துப்—பார்க்குட் 6
சிறந்த தலமாந் திருப்பழநி சென்றங்
கறந்தவரு மார்க்கம் அறிந்து—துறந்த 7
நிலைநின்ற காலை நிமலன் முருகன்
மலைநின்ற மாட்சி மகிபன்—தலைநின்ற 8
தண்ணருள் கூடுத் தருணமுற அண்ணலுக்குப்
பண்ணும் அபிடேகப் பாலுண்டு—பண்ணிரம்பச் 9
செப்புந் திருப்புகழ்த் தேன்பருகும் பாக்கியத்தால்
அப்பன் திருப்புகழே ஆரமுதாம்—தெப்பம் 10
பிறவிக் கடலுக்குப் பின்னும் மருந்தாம்
இறவித் துயருக் கென்வோர்ந்—தறமதுவாச் 11
சிக்கெனக் கைப்பிடித்துத் தேவன் திருப்புகழே
புக்கெனக் கென்று புகன்றுநிதம்—அக்கணக்காய் 12
எந்தை முருகன் எழிற்றலங்கள் சென்றுசென்
றெந்தை புகழை எடுத்தியம்பிப்—பந்தமிறாம் 13

என்றில் லறந்துறந்தே எங்கோன் திருத்தணிகைக்
குன்றைப் பரிதாபி கும்பமதி—சென்று 14
பணிந்து வடநாட்டுப் பஃறலங்கள் கண்டு
தணிந்த நிலைசேர் தவமே—துணிந்துவந்து 15
வள்ளி மலைஉச்சி வாய்த்த குகைஒன்றில்
வள்ளி கழலை வழுத்துநாள்—பிள்ளை 16
முருகன் மகிழ்ந்து முதிர்ஞானச் செல்வம்
உருகும் இசைநுணுக்கம் ஒன்றிப்—பெருகிநிற்கும் 17
பத்திரசங் கூட்டிவைத்துப் பாலாந் திருப்புகழை
ஒத்து தவருதங் கோதுதிறம்—சித்திர 18
எத்திசையுஞ் சென்றுசென் றீசன் திருப்புகழை
நத்திப் பரப்புவேன் நான் என்று—கத்துகடற் 19
சென்னைமுதற் செந்தூர் திருத்தணிகை நாற்றிசையிற்
பன்னு பிறதலங்கள் பாற்சென்று—மன்னுமுகில் 20
மாரிஎன மாமுருகன் மாசில் திருப்புகழை
யாரும் மகிழ இனிதளித்துப்—பாருள்ளோர் 21
சந்தத் திருப்புகழைச் சாற்றி இசையுடனே
கந்தன் கழலைக் கருதவைத்து—நந்து 22
தவமுதிர வள்ளிமலை சார்குகைக்கே மீண்டு
பவமொழிகோ பூஜைதினம் பற்றிச்—சிவமருவச் 23
சேயோன் திருப்புகழ்ப்பா ராயணமுஞ் செய்துநிதம்
ஓயாது சுக்கிலஆண் டொன்றுமுதற்—சாயாது 24
விக்கிரம ஆண்டளவு வீறுபெறப் பன்னிரண்டாண்
டுக்கிர மான உயர்தவஞ்செய்—தக்கிரிநின் 25
றுயிரத்தொன் பான்நூற்று நாற்பதாம் ஆண்டிறுதி
சேயவனுள் செவ்வாய்த் தினம்இழிந்து—தூயபுகழ்த் 26
தென்றணிகை நேர்வந்து சேந்தன் திருப்புகழைக்
குன்றலிலா அன்புடனே கூறிமகிழ்ந்—தன்றுமுதல் 27
நித்தம் பலஇடமும் நித்தன் திருப்புகழைச்
சுத்தப்ர சங்கமாச் சொல்லுகின்ற—வித்தகனே! 28
அர்த்தநா ரிப்பேர் அறவோய்! திருப்புகழின்
அர்த்தம் உணர்ந்தார் அடிமலரென்—அர்த்தமதாம் 29
சென்னிப்பூ வாம்என்ற செம்மலே! ஞானநிலை
மன்னிப் பொலியும் மகிபனே!—நன்னியமச் 30

சச்சிதா நந்தப்பேர்ச் சற்குருவே! நெஞ்சத்துத்
தைச்ச திருப்புகழ்ச் சாமியே!—இச்சைதரு 31
பாரா யணமுறையைப் பாருய்யத் தந்தவனே!
தேரா மனமுந் திகைப்பொழிந்து—நேராக 32
ஓர்நிலையில் நின்றேநல் உண்மைப் பொருள் உணர்ந்து
தேர்நிலையைக் காணச் சிறந்துதவும்—ஏர்நிலைகொள் 33
வேல்மாறல் தந்த விறலோனே! எந்நாளும்
பால்மாறு தோதுகின்ற பத்தருக்குத்—தேன்மாறு 34
உள்ளச் சுவைதந் துதவுகின்ற மெய்க்காவல்
கொள்ளக் கொடுத்த குணப்பெரியோய்! —உள்ளிவரும்
அன்பர் அவரவருக் காங்கே குறைதவிர்த்தங்
கின்பம் பெறச்செய்யும் ஏந்தலே!—துன்பஇருள் 36
உள்ளத் தொழிக்கவந்த ஒப்பில் மணியே! பொய்க்
கள்ளமிலா நெஞ்சர்க்குக் கற்கண்டே!—மெள்ளமெள்ள
மங்கைநல்லாள் நம்தெய்வ வள்ளி திருச்செவியில்
எங்கள் குறையை எடுத்தியம்ப—அங்கம்மை 38
எம்மான் குமரன் எழிற்செவியில் ஓதஎங்கள்
வெம்மாய வாழ்க்கைஇது வீணாகா—திம்மையம்மை 39
எல்லாச் சுகமும்அவர் எங்கட் களிப்பதற்கே
நில்லாய் பெருந்துணையாய் நீ. 40

## (1942)

16. *அவநூல் படிக்[1]கத் தரிக்காய்நீ
அஞ்சொற் றிருத்த [2]மாங்காய்வாய்
சிவநூல் படியா [3]தவரைக்காய்
சீமா னே! நம் அருணகிரி
தவநூல் பூதி அலங்காரம்
சந்தப் புகழோ டந்தாதி

---

* இப்பாடலின் சிலேடைப் பொருள் :...

1. கத்தரிக்காய்; (அவ நூல்களைப்) படிக்கத் தரிக்க (பொறுக்க) மாட்டாய்! 2. மாங்காய்; அம்சொல் திருத்தம் ஆங்கு ஆய்வாய்! 3. அவரைக்காய்; (சிவ நூல்களைப்) படியாதவரைக் (காய்) கோபிக்கும்.

பவம்வே ரறுக்கும் திருவகுப்புப்
பாட்டில் [4] ஊறு காயேநீ,

(1944)

17 *கொங்கு மலிதரு கொங்குநாட் டகத்தே
ஆனுச் சீர்பெறு பூநாச் சியிலே
செங்கோட்டு வேலர் செழுமல ரடியில்
தவங்கிடந்த மாதின் தவப்பய னாக
இறையடி மறவா மறைக்குலத் துதித்து 5
மைசூர் அரசின் மனையில் மடைக்கலைத்
தொழிலில் தலைமை எழிலுறச் செயுநாள்
சுப்பிர அரனூர் சூலைநோய் ஏவி
அப்பரை ஆண்ட அருட்டிறம் நிகர்ப்பச்
சென்மநோய் தீர்க்கும் செவ்வேற் பெருமான் 10
குன்மநோய் ஏவக் கொடுமையாற் றுதிவ்
'வேலையே வேண்டேன்; வேலையே துதிப்பேன்';
பழநியை அடைவேன்; பழவினை தொலைப்பேன்';
எனத்துணிந் தெழுந்து மனத்திருள் நீங்கப்
பழநிவந் தடைந்து பண்புடன் செவ்வேட்(கு) 15
அபிடேக நீர்கொண்டு சேர்த்தல் ஆதிய
சரியை கிரியைத் தவப்பணி செய்யச்
"சிங்கார ரூபமயில் வாகன நமோ" எனும்
"வங்கார மார்பெ' னும் வளம்பொலி திருப்புகழ்
தேவின் அடியாள் திப்பிய இசையிற் 20
பாடக் கேட்டுப் பரவசம் அடைந்து
தழலிடு மெழுகெனுந் தன்மையில் திருப்புகழ்ப்
பித்தது கொண்டு சித்தம் உருகிட
நித்தம் திருப்புகழ் நியமத் தோதுநாள் 25
பச்சிம உத்தர தக்ஷிண பூர்வ

4. ஊறுகாய்; திருப்புகழ் முதலான நூல்களில் ஊறு கின்றவன்.

*பழநித் திருப்புகழ் மகாநாட்டுக்கு (1944-இல்) தலைமை வகித்த நம் சுவாமிகளுக்கு வாசித்தளிக்கப் பட்ட வரவேற் புரையே சிறு மாற்றத்துடன் ஈண்டு வெளியிடப்படுகின்றது.

'திக்குள பத்தர்கள் நெக்குநெக் குருகத்
திருப்புகழ் பாடத் திசைதொறுஞ் செல்வேன்'
என்றோர் உணர்ச்சி எழலுங் கிளம்பிச்
சென்னையிற் சந்யாச நிலையினைச் சேர்ந்து
திருத்தணி யடைந்து கருத்துடன் போற்றி, 30
நகைமுக விநோத ஞானக் குறமின்
நினைவார் சித்தம் அகலா நிழலாள்
போக பூமி புரந்தருள் தேவி
வள்ளி ஆடிய வள்ளி மலையதே
சித்தித் தலமெனத் தேர்ந்தங் கடைந்து 35
சில்லாண் டிருக்கத் தேவி அருளால்
இசைக்கலை எல்லாம் இனிது கைவரச்
செந்தமிழ் நாடெலாம் திரிந்து பரிந்தே
எங்குந் திருப்புகழ் இன்னிசை பரப்பிக்,
கணக்கிலாச் சீடர் கதிபெற அருளி, 40
வள்ளி மலையே வாழிட மாக
வதிந்து மகிழும் மாண்பெறு தவத்தோய்!
'நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்'
என்னுநன் னோக்கால் எழுந்த இச்சையால்
குறக்குலப் பெண்முதல் மறைக்குலப் பெண்வரை 45
கைம்மா றொன்றுங் கருதா வகையில்
உய்யுமா றவர்க்கங் குவப்புடன் என்றும்
திருப்புகழ்ப் பாடஞ் செப்பிக் குளிர்வோய்!
எழுத்துகள் சிதைந்தில, இசைகள் பொலிந்துள;
சந்தஞ் சிதைந்தில தாளம் பொலிந்துள, 50
என்றுபல் லோரும் ஏத்துறு வகையில்
திருப்புகழ் என்றுஞ் செப்பும் திறத்தோய்!
நிலவுல கின்றுநீ உலவுத லாலே
மதிபொலி விசும்பென, மணம்பொலி மலரென,
நதிபொலி நாடெனச், சுதிபொலி யாழென, 55
நிதிபொலி வாழ்வென, நிஜம்பொலி வாக்கென
எழில்விளக் கம்பெற் றிலங்கும் ஆதலால்
பழநி யாண்டவர்த் தொழுபவ வாழ்க!
தணிமலை முருகனைப் பணியவ வாழ்க!
வள்ளி மலைவாழ் வள்ளால் வாழ்க! 60

அடியார் தமதடிப் பொடிகுூ டியளுஞ்
சச்சிதா நந்த சாமீ வாழ்க !
திருப்புகழ் அடியார் திருவடிச் சென்னியார்
எனப்பெயர் பூண்ட இன்பனே வாழ்க !
பத்திப் பயிரைப் பண்புற வளர்க்கும் 65
வித்தக முகிலே ! வேதிய ! வாழ்க !
திருப்புகழ்க் குபேர ! சிறப்புடன் வாழ்க !
மயிலையும் அவன்கை அயிலையுங் கடைக்கண்
இயலையும் நினைக்க எல்லீரும் வாரீர்
எனஅறை கூவும் எழில்வீர வாழ்க ! 70
திருப்புகழ் யோகீ ! திருப்புகழ் ஞாநீ !
அமர்க! அமர்க! எம் அல்லல் நோய் அறவே ;
வாழ்க ! வாழ்க ! நின் மாணவர் குழாத்துடன் !
பொழிக ! பொழிக ! புகழ்மழை மேகமே !
வழங்குக ! வழங்குக ! மயிலோன் ப்ரசாதமே. 75

## (5—12—1944)

18\. புலிக்கும் இடமாகும் வள்ளி மலையிற் பொருந்திநிதம்
செலுக்கு நிகராம் அருண கிரியின் திருப்புகழ்ப்பா
ஒலிக்கும் இசைஒலிக் குள்ளே முருகன் உருவங்கண்டு
பலிக்கும் களிப்பிற் களிக்கும் பெரியோர்ப் பரவுதுமே.

## (1951)

19\. திருவருணைத் தலத்துதித்த அருணகிரி
அருள்பெற்றுச் செம்மை சான்ற
†"செருமுகவேற் கரப்பரமன் அடியவர்ப
தாம்புயமெஞ் சென்னிப் பூஎன்
றொருமையொடு பூசித்துத் திருப்புகழ்ப்பா
ராயணஞ்செய் துலகை ஓம்பி
முருகதுறக் கம்புகுந்த சச்சிதா
நந்தர்பதம் முடிமேற்" கொள்வாம்.

† மேற்கோள் குறிக்குள் உள்ளது 'சேய்த்தொண்டர் புராண' வாக்கு.

வள்ளிமலையில் சுவாமிகளின் ஸமாதிக் கட்டிடத்தின் மேல் செய்த தக்ஷிணாமூர்த்தி ஸ்தாபனத்திற்காக 10—4—1952-ல் பாடியவை

20. திருப்புகழ் என்னும் *மருந்தினைத் தந்தெங்கள் தீவினையை
இருப்பிடம் இல்லாமல் ஓடோட வைத்த எழிற்குருவே!
விருப்புடன் எங்களை ஆட்கொண் டருளிய வித்தகரே!
குருப்புகழ்ச் சச்சிதா நந்த! நீர் எம்மைக் குறிக்கொண்மினே. (1)

21. திருப்புகழ்த் தேனைப் பருகிக் களித்த †சிலீமுகமே!
திருப்புகழ் ‡ அப்பில் திளைத்து மகிழ்ந்த செழுஞ்சுறவே!
திருப்புகழ் மாரி பொழிந்துல குய்வித்த செம்முகிலே!
திருப்புகழ்ச் சாமீ! எங்கட்குத் துணைஉன் திருவடியே. (2)

**இரண்டாவது குருபூஜைக்காக 5—10—52 இல் பாடியவை**

22. 'உள்ளல்எனும் வாழ்வைக் கருதாதே—
ஐயர்புகழ் ஓதிக் கதிதேடு;
மெள்ள' என ஞானப் பொருளேசொல்—
மெய்ய! உனை ஓதிப் புகழேனோ;
வெள்ளைநில வோடப் பது சூடும்—
மெய்யர் உபதேசக் குருவான;
வள்ளல்புகழ் ஓதிக் களிகூரும்—
வள்ளிமலை வாசப் பெருமானே.

23. பத்தியே குன்றிப் புலியாசைப்-
பற்றிலே துன்புற் றுழலாதே;
முத்திசேர் பண்புப் புகழோத—
முட்டிலா அன்பைத் தருவாயே;
சத்தியாம் விந்தைக் குறமாது-
தத்தையாள் சிந்தைக் கினியோனே;
தத்துவா னந்தப் பெருவாழ்வே—
சச்சிதா நந்தப் பெருமானே.

*மருந்து - அமுது. †சிலீமுகம் - வண்டு. ‡அப்பு - கடல்.

## மூன்றும் குருபூஜைக்காக 1953இல் பாடியது

24. புரவா திருந்த திருப்புகழைப்
பாரில் எங்கும் பரப்புதற்கே
பரமன் முருகன் அனுப்பிவைத்த
பண்பா போற்றி ! திருப்புகழை
இரவோ பகலோ எப்போதும்
இனிக்க இனிக்கப் பாடிமகிழ்
இன்பா போற்றி ! பொருட்கேற்ற
இராக தாளம் இனிதமைத்த
உரவா போற்றி ! அடியார்கள்
உவக்க உவக்கத் திருப்புகழை
ஓதிக் கொடுத்த அருமணியே !
ஒப்பி லாத குருமணியே !
கரவா உளத்தார்க் கருள்புரிந்த
கண்ணே ' சச்சி தாநந்தக் '
கனியே போற்றி ! போற்றிஎங்கள்
கருத்தே ! நின்பொற் கழல் போற்றி !

## நான்காம் குருபூஜைக்காக 18-9-54இல் பாடியவை

25. தேவாமிரு தத்தைப்பகிர் திருமால்திறம் ஒப்பப்
பாவாய் வினைப் பவமேஒழி பாலாந்திருப் புகழை
மா*வாரம தோடேபுவி மகிழப்பரப் பியசீர்க்
கோவாய்த்திகழ் மணியே! சச்சி தாநந்தஎன் குருவே.

26. பாரேன்நான் நீதந்த பாரா யணமுறையைத்
தேரேன்நான் அம்முறையின் தெய்வத் திறம்அதனை
ஓரேன் ஒருபாட லேனும் அதைஓதி
வாரேன்என் றாலும்எனை வாழ்விப்ப துன்கடனே.

* வாரம்-அன்பு.

(15—3—55)

27. திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளிஎன் சென்னியதே
இருப்பிடமாக்கொளும் என்ருெரு பக்தர்இயம்பின்தால்
திருப்புகழ்ப் பாரா யண நூல் அளித்த சிறப்புறுநீ
குருப்புகழ் பெற்று விளங்குகின் ருய்எங் குருமணியே.

(9—8—56)

28. நித்தத் தவத்தராம் பெற்றிசேர் சிந்தையொடு
' குகவேளே,
சுத்தச் சுகத்துளாம் தத்துவா ! கந்த ! நம' எனஓதும்
பத்திப் பெருக்கராம் பற்றுளார் தங்குழுவில் உறைசீலா!
சித்தப் ப்ரசித்தனும் சச்சிதா நந்த குரு ! எனை ஆள்வாய்.

## துன்முகி ஞூ கார்த்திகைமீ 1௳ (16—11—56) அச்விநி த்ரயோதசியன்று நடந்த மகாஸமாதி குருபூஜையில் அர்ச்சனையின்போது ஓதப்பெற்ற *ஸ்ரீ ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் போற்றி அகவல் (108)

29 அன்புடை அடியர்செய் அருந்தவப் பயனல்
இன்பொடு தோன்றிய இறையே போற்றி
'பரவா திருந்த திருப்புகழ்' பாரிற்
பரவுதற் கெளிவரு பண்பா போற்றி
செங்கோட்டு வேலர் திருவரு ளாலே 5
எங்கேட்டை நீக்கவந் தேய்ந்தனை போற்றி
அருணை முநிவர்தம் அருட்ப்ர காசமாம்
கருணை வடிவு கலந்தனை போற்றி
குமரவேள் குன்மநோய் ஏவிநீக் கினதால்
அப்பர்போல் ஆட்கொளப் பட்டனை போற்றி 10

---

*இப்போற்றி அகவல் சுவாமிகளுடைய அன்பர்கள் சிலர் கலந்து இயற்றியது.

பழநிப் பெருமான் பரிந்தா டுதற்குப்
புனிததீர்த் தம்பல கொணர்ந்தனை போற்றி
ஓதா துணர்ந்த உத்தம போற்றி
பேதா பேதம் கடந்தவ போற்றி
"சித்ர கவித்துவ சத்த மிகுத்த 15
திருப்புகழ்' துய்த்த விருப்பனே போற்றி
செவ்விய சேஷாத் திரிமுனி யவர்பால்
திவ்விய போதம் தெளிந்தனை போற்றி
சினமில் ரமணரால் ' திருப்புகழ் முருகா '
என அழைப் புற்ற ஏந்தலே போற்றி 20
கடல்கடந் திலங்கையிற் கதிர்கா மத்துறை
கடவுளைக் கண்டு களித்தனை போற்றி
நலவட தலங்கள் பலதரி சித்து
நிலமிசை மகிமை நிறைந்தவ போற்றி
தணிமலை முருகனைப் பணிந்தவ போற்றி 25
*வள்ளி மலையே வாழிட மாக
*வதிந்து மகிழ்ந்த வள்ளால் போற்றி
கணேச கிரியினிற் கணபதி பூஜைசெய்
குணேச போற்றி குருவே போற்றி
பொங்கி யம்மையைப் போற்றிட நிறுவி 30
வள்ளி மலையில்வாழ் வித்தனை போற்றி
நாக பூஜை நயந்தனை போற்றி
மண்மலை வள்ளி குணமலி அருளாற்
கணத்திசை ஞானங் கண்டனை போற்றி
' பெருமையை வெளிபட மொழிவாய் ' எனத்திரு 35
முருகன் வாய்க் கேட்ட மோனியே போற்றி
இசைபெற நான்கு திசையினும் இசயுடன்
கரப்பிலி திருப்புகழ் பரப்பினை போற்றி
[1] எழுபொருட் கேற்ப இராக தாளம்
திருப்புகழ்க் கமைத்த திறலோய் போற்றி 40
என்பும் உடலும் இதயமும் உருகத்
திருப்புகழ் இசைபெறச் செப்பினை போற்றி
ப்ரசித்த திருப்புகழ் ப்ரசங்க மாரியா
ரசித்தவர் பாற்பொழி ரஞ்சித போற்றி 45

1. எழு-எழுகின்ற.

மிகுத்த பலமொடு திருப்புகழ் ஓதிச்
செகுத்து வினைகளை உகுத்தவ போற்றி
கருப்பவம் அகற்றும் கன[2]மண மலையில்
திருப்புகழ் அரக செலுத்தினை போற்றி
*குறக்குலப் பெண் முதல் மறைக்குலப் பெண்வரை 50
திருப்புகழ்ப் பாடம் செப்பினை போற்றி
திருப்புகழ்ச் சபைகள் சிலபல நிறுவிக்
குருப்புகழ் மேவிய கொற்றவ போற்றி
திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா வருடந்
தொறுமவண் நடைபெறத் துவக்கினை போற்றி 55
அருண கிரியார் ஜயந்திநா ளாம் எனக்
கார்த்திகை மூலம் கருதினை போற்றி
வள்ளி மலையினிற் பன்னிரு வருடம்
ஒள்ளிய தவமிருந் துயர்ந்தனை போற்றி
[3]திருப்புகழ்ப் பாரா யணத்தவ நெறித்திரு 60
முறைதொகுத் தருளிய முனிவனே போற்றி
வேல்மாறல் தந்த விறலோய் போற்றி
மெய்க்காவல் ஈந்த விகிர்தா போற்றி
ஆவினம் பலவளர்த் தருளிமெய்த் திருப்புகழ்க்
கோபூஜை முறைநூல் கொடுத்தனை போற்றி 65
தின அநுட் டானத் திருப்புகழ் தந்த
[4]பனவனே போற்றி பண்ணவ போற்றி
சச்சிதா நந்த வல்லி சரிதம்
[5]நச்சிஆ நந்தமாய் நல்கினை போற்றி
அறிவும் மனமும் புரிதருக் கமதைக் 70
குறித்துரை யாடலாக் கொடுத்தனை போற்றி
போர்க்கஞ் சேலெனப் புத்தி புகட்டிய
பாரா யணக்குன் டளித்தனை போற்றி

---

2. மணமலை-திருமணமலை : வள்ளிமலை.

3. வரி 60 முதல் வரி 73 வரை கூறப்பட்டுள்ளன சுவாமிகள் தொகுத்த நூல்கள் முதலிய.

4. பனவன் - அந்தணன்,

5. நச்சி - நத்தி - விரும்பி.

[6]கண்ட இடமதி காதலே தரும்
வைஷ்ணவி தேவியை வழங்கினை போற்றி 75
அன்ன தான அரசே போற்றி
ஏக தாரை கை ஏந்தினை போற்றி
தண்டா யுதக்கோல் தரித்தவ போற்றி
கண்டார் களிக்கும் கனியே போற்றி 80
*திருப்புகழ்க் குபேர செல்வனே போற்றி
நேமமார் திருப்புகழ்ச் சாமீ போற்றி
வள்ளி பாதம் உளத்திடை மணக்கத்
தெள்ளிய ஞானம் தேர்ந்தனை போற்றி
*அடியார் தமதடிப் பொடிகூ டியஎம் 85
*சச்சிதா நந்த சாமீ போற்றி
*"திருப்புக ழடியார் திருவடிச் சென்னியார்"
*எனப் பெயர் பூண்ட இன்பனே போற்றி
'வேலன் வாய்த்த திருப்புகழ்' கற்றுள
சீலமார் சித்தப் ப்ரசித்தனே போற்றி 90
*திருப்புகழ் யோகீ! திருப்புகழ் ஞானீ!
விருப்புறும் அடியரை வேட்டனை போற்றி
ஆபத்தில் அஞ்சல் அருளுவை போற்றி
ஏழைக் கிரங்கும் எளியனே போற்றி
பூத தயை மிகு புண்ணிய போற்றி 95
உள்ளத் திடரை ஒழிப்பவ போற்றி
கள்ளச் சிந்தையிற் கலவாய் போற்றி
'நாள் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்'
என்னுநன் னோக்குடை எந்தாய் போற்றி
*பத்திப் பயிரைப் பண்புற வளர்த்த 100
*வித்தக முகிலே வேதிய போற்றி
அன்பர் குறைகளை ஆங்கே தவிர்த்தங்

---

6. கண்ட இடம் அதி : கண்ட — பார்த்த, இடம்—சார், இத் அதி –அதி, பார்த்த—சார் — அதி = பார்த்தசாரதி, அதிகமான தொடர் மேலுக்குப், 'பார்த்த போதே அதிகமான அன்பைத்தரும்' எனப் பொருள்படினும் (அன்பர்) பார்த்த சாரதி விரும்பும் என்ற உட்பொருளையும் காட்டும். இக் கருத்து திரு. வ. சு. செ. பிள்ளையவர்களுடையது.

கின்பம் பெறச்செயும் எழிலோய் போற்றி
உன்னிய உணர்வினும் உருவினும் ஞானம்
மன்னிப் பொலியும் மகிபனே போற்றி
இதயவா ரிதியில் எழுசுடர் வீசும் 105
உதயசூ ரியன்நேர் ஒளியோய் போற்றி
தாயே போற்றி தாதாய் போற்றி
சேயே னுக்கருள் செல்வ போற்றி
ஐயா போற்றி அண்ணல் போற்றி
பொய்யா நெஞ்சினர் புகலே போற்றி 110
துய்யா போற்றி துணைவா போற்றி
மெய்யாம் நெறியினை விளக்கினை போற்றி
ஞானா நந்தக் கடலே போற்றி
மோனா நந்த முதலே போற்றி
பத்தி வெளிப்படத் திருப்புகழ் பாடிய 115
சத்திய நித்திய தத்துவ போற்றி
நீதனே போற்றி நித்தனே போற்றி
போதனே போற்றி புனிதனே போற்றி
அருத்தனே ஒப்பில் ஒருத்தனே போற்றி
திருத்தனே எந்தம் கருத்தனே போற்றி 120
சீரிய ஞானச் செம்மலே போற்றி
ஆரிய போற்றி அற்புத போற்றி
துரியங் கடந்த சுடரே போற்றி
பெரியவ [7]பெத்தர்க் கரியவ போற்றி
சுத்தனே போற்றி சுந்தர போற்றி 125
அத்தனே போற்றி அன்பனே போற்றி
ஓங்கா ரத்துட் குகன்உருக் கண்டு
தூங்கா நின்றவண் சுகித்தனை போற்றி
பவக்கடல் கடக்கப் பதப்புணை உதவும்
தவக்கட லேஎம் தயாபர போற்றி 130
[8]"செய்வினை தீண்டப் பெறா" எனத் திருப்புகழ்
மருந்தினைத் தந்த மருத்துவ போற்றி

---

7. பெத்தர்-பாசபந்தர்கள்.
8. "செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீல கண்டம்" என்பது திருஞானசம்பந்தர் வாக்கு.

விருந்தே போற்றி மெய்த்தவ போற்றி
சகத்தவர் போற்றும் மகத்துவ போற்றி
இறைபுகழ் பாடும் இடத்தினின் நீங்கா 135
மறையவ போற்றி மகநிய போற்றி
உள்ளிய வண்ணம் உயர்ந்த ஸமாதி
வள்ளி மலையில் வாய்ந்தனை போற்றி
உருவாய்க் குருவென உதித்தனை போற்றி
அருவாய் அகன்அமர்ந் தருளுவை போற்றி 140
[9] "பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொல் மாலை கொண்டருள் போற்றி
போற்றி போற்றி" பூரண "காரண
போற்றி போற்றி சய சய போற்றி" 144

சுபம்

## ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகளின் வரலாற்று அகவல் (957)

30. செங்கோட்டு வேலர் பங்கோட்டு தவத்தால்
ஆனுச் சீர்பெறு பூநாச் சியில்வரும்
அந்தணர் குலத்தில் வந்த மகான்யார்?
பழநி யாண்டவர் அபிடே கப்பால் 5
பருகிப் படர் தரு நோய்தீர்ந் தவன்யார்?
அபிடேக நீர்க்குடம் அசைவுறத் தலையில்
வைத்த படிநதி தத்துநீர்க் கடந்து
நீந்திச் சென்ற நிறைவலத் தோன்யார்?
பழநியாண் டவர்க்குப் பாண தீர்த்தம் 10
அபிடே கஞ்செயும் ஆசை யொடுஞ்சென்

---

9. வரிகள் 141 முதல் 144 வரை திருவாசகம் போற்றி அகவலைச் சார்ந்தன. (பூரண என்ற சொல்லுக்குப் பதிலாகத் திருவாசகத்தில் புராண என்ற சொல்லைக் காணலாம்.)

இந்த அகவலில் * இக் குறியிட்ட அடிகள் 17, 19-எண்ணுள்ள பாக்களினின்று எடுத்தாளப்பட்டுள.

றெவ்விடத் துள்தோ இத்திர்த் தம்என
மயங்கும் பொழுதில் 'வாவா' எனவழி
காட்டப் பெற்ற *தாட்டிகத் தவன்யார்?
'சிங்கார ரூப மயில்வா கன'என
வருமொரு திருப்புகழ் அருமையைக் கண்டு 15
திருப்புக ழேநம் கருக்கெடச் செயும் ஒரு
மருந்தெனத் தேர்ந்த அருந்தவ முனியார்?
திகழ்வேற் பெருமான் திவ்விய சந்தப்
புகழைப் பரப்புவன் என்றே பூர்வ
பச்சிம தக்ஷிண உத்தர திக்கெலாம் 20
சென்று சென்று திருப்புகழ் பாடியும்
பாடுவித் தும்இசை பரப்பி னவன்யார்?
பகவான் ரமணரும் பரமசே ஷாத்ரியும்
தகைசால் ஈசுர சாமியும் மகிழ்ந்து
'திருப்புகழ் முருகா' என அழைத் திடும்பே 25
றுற்ற உயரிய நற்றவத் தோன்யார்?
ஈடா வாரிலாச் சேடாத் திரிமுனி
உபதே சஞ்செய் தணைதர உயர்ந்த
ஞாலம் புகழும் சீலத் தவன்யார்?
வள்ளி மலைதனில் வாசங் கொண்டு 30
வள்ளிதன் அருளால் எள்ளல் இலாவகை
இசைஞானி யான எழிற்றவத் தோன்யார்?
தணிமலை யுச்சியில் தங்கிய முருகன்
தான் சொலும் திருப்புகழ்த் தேனைப் பருகத்
தெருத்திணை வந்தமர்ந் தொருதீதஙயைக் கேட்கும் 35
பெருந்தவஞ் செய்த பெருமைசான் றோன்யார்?
ஆண்டுகள் தோறும் வேண்டி வினைகெட
ஜனவரி முதல்நாள் பஜனைக் குழுவுடன்
தணிகைக் கடவுளைப் பணிசெயும் தொண்டதைத்
தாபிதஞ் செய்து சந்தத் திருப்புக 40
ழாம்பாட் டுரைசெய் மேம்பாட் டினன் யார்?
சென்னையில் தெருவில் சிறுபெணுத் தோன்றி
'விரகற நோக்கியும் உருகியும் வாழ்த்தியும்'

---

* தாட்டிகம் - பெருமை.

எனவரு திருப்புகழ் இசைநனி விளங்க
மோஹன ராகம் முகிழப் பாடிப் 45
'பரிசதா உன்றன் வெற்றிலைப் பெட்டிதா'
எனப்பெற் றேகி வள்ளி மலையிடை
ஆசிர மத்தே அதைவைத் தொளித்த
நங்கை மங்கை பொங்கி யென்னும்
தேவியின் அருளில் திளைத்த தவன் யார்? 50
வள்ளி யம்மைபால் வெள்ளி நாணயம்
பெற்ற நற்றவம் முற்றிய தவன் யார்?
கார்த்திகை மூலம் தீர்த்தநாள் என்றே
ஏரகத் திறைவன் இயம்பக் கேட்ட
குறைவிலாச் செல்வ நிறைதவத் தோன்யார்? 55
செந்திலில் தங்கித் துஞ்சுறு போதிற்
'குகா' என மயில்கூம் குரல்கேட் டவன்யார்?
அத்தலத் திடையே பத்தியிற் பெண்கள்
விருப்புடன் செந்தூர்த் திருப்புகழ் பாடிக்
கும்மி யடிக்குங் குழுவிடை நகைபொலி 60
குழந்தையாக் குமரன் கூடிடக் கண்ட
பெருந்தவம் படைத்த அருங்குணக் கொழுந்தார்?
பாதிரிப் புலியூர் ஞானியார் போன்ற
கல்விச் செல்வரும் செல்வப் பெரியரும்
ஒருங்கே தம்மை விரும்பிடச் செய்த 65
தீதிலாச் சீல மாதவத் தோன்யார்?
அடவியின் இடையே பசியொடும் அலமந்
திரங்கும் பொழுதிற் குரங்குகள் மூலம்
உணவினைப் பெற்ற ஒருதவத் தோன்யார்?
'வேடிச்சி காவலன்' எனவரும் வகுப்பினைத் 70
தருணை மலைவலம் வரும்அப் பொழுதில்
இளைப்பது தீர இட்லியும் காபியும்
எதிர்தரப் பெற்ற இருந்தவத் தோன்யார்?
கைவிட் டொழிந்த வெள்ளிக் கமண்டலம்
கைவரப் பெற்ற கண்ணியத் தோன்யார்? 75
பிழைத்தல் அரிதெனப் பெற்றோர் மறுகும்
குழந்தைகள் நோயறக் குணஞ்செய் தவன்யார்?

வள்ளி மலையில் மாண்பார் தவநிலை
சார்ந்த பொழுதிலும் ' சாமியைக் கண்டோம்
இவ்வூ ரதனில் அவ்வூ ரதனில் ' 80
எனத்தோற் றந்தரும் எழில்யோ கியுமார் ?
உண்ண உணவும் உடுக்க உடையும்
வேண்டிய வேண்டிய வேண்டுமட் டளித்தே
ஏழைகட் கிரங்கிய இதயத் தோன்யார் ?
ஏசின எவரையும் திருப்புகழ்ச் சக்தியால் 85
ஆசிகள் கூறி அடிமைக ளாக்கிச்
சிவநெறிப் படுத்திய தேசிக மூர்த்தியார் ?
இறைபுகழ் பாடி இயன்ற வரையும்
இமய வரைமுதல் குமரி வரையிலும்
அன்ன தானஞ்செய் தறம்பல இயற்றிய 90
புண்ணிய கீர்த்தி நண்ணிய வலன்யார் ?
பாம்பின் புற்றிற் பால்வார்க் கும்நெறி
ஓம்பிக் காத்த உயர்தவத் தோன் யார் ?
திருப்புகழ்ச் செல்வம் கொள்ளைகொண் டின்னை
வாரிக் கொடுத்த வள்ளல்தான் இங்கார் ? 95
குண்டும் † பாமும் குலுக்கின ஞான்றும்
உண்டு துணைஎனப் பாரா யணப்பாக்
குண்டதை அளித்த குணநிதிக் கோன்யார் ?
வேல்மாறல் தந்த விறல்பெற் றோன்யார் ?
திருப்புகழ்ப் பாரா யணத்தவ நெறித்திரு 100
முறைதனை வகுத்த திருநிறை பவன்யார் ?
அநுட்டானத் திருப்புகழ் அநுட்டிக் கத்தரு
மநுப்பார் இவனெனும் மாண்புடை யோன்யார் ?
கோபூஜை வழியைக் குறிக்கொளக் காட்டிய
மாசீல விரத மாதவத் தோன்யார் ? 105
சென்னையில் தன்னுயிர் நீத்த தினமே
பார்த்தசா ரதியெனும் தீர்த்தனப் புண்ணிய
புமான்றன் உதவியாற் சமாதி வள்ளி
மலையிடத் தேபெறு மாண்புறு தவன்யார் ?
' திருப்புகழ் அடியார் திருவடிச் சென்னியார் 110

---

†பாம் -Bomb-குண்டு.

எனப்பெயர் கொண்டும் மன்கின்னியார் யார் ?
வள்ளி மலைச்சாமி யாரென் றிருபெயர்
சொல்ல விளங்கிய துல்லிய குணன்யார் ?
திருப்புகழ்ச் சாமியார் என்னும் திருப்பெயர்
வழங்க விளங்கிய மாதவத் தோன்யார் ? 115
'அவன்என் தலைவன்', 'அவன் என் துணைவன்'
'அவன் என் வாழ்வு', 'அவன் என் வைப்பு'
'அவன் என் கண்மணி', 'அவன் என் உயிர்த்துணை'
'அவன் என் குடிமுழு தாளுங் குருமணி'
'அவன்தான் தோன்றுங் கடவுளா வான்' என 120
உச்சிமேற் பத்தர்கொள் சச்சிதா நந்தனே.

(வரலாற்று அகவல் முற்றிற்று)

[வாகீச கலாநிதி ப்ரும்மஸ்ரீ கி. வா. ஜகந்நாத அய்யரவர்கள் (ஆசிரியர்: கலைமகள்) "வள்ளிமலை வள்ளல்" என்ற புத்தகத்துக்குத் தந்த பாராட்டுரையினின்றும் எடுக்கப் பட்டவை.]

1

31. புத்தகநல் வடிவுற்ற திருப்புகழ்ப்பா
எல்லாமும் புவியோர் வாக்கில்
சித்தமிசை நிலவும்வகை அவன்அருளே
பெருந்துணையாத் தேர்ந்து நின்ற
பத்தனுயர் ஞானிபெருந் தொண்டன்மறைப்
பேராளன் பண்பில் ஓங்கும்
சித்தன் வள்ளி மலைச்சாமி இசை கூட்டிப்
பாடிஎங்கும் திகழச் செய்தான்.

2

32. அருணகிரி மாமுனிவன் அந்நாளில்
இவைபாடி அருளினன் அப்
பெருமகனே இன்று வள்ளி மலைச்சாமி
வடிவெடுத்துப் பிறந்து மீட்டும் பாடி

கருதும்உளம் உருகும்வணம் தமிழ்நிலம்எங்
கணும்பரப்பிக் கருணை செய்தான்
அருமைமிக அருமைஎன அன்பரெலாங்
கரங்குவிப்ப அருள்பூத் தானே.

3

33. வள்ளிமலை அகம்என்ன ஆச்சிரமம்
நிறுவிஅங்கு வாழ்ந்தான், அன்னை
வள்ளிமண வாளன்அன்றிப் பிறதெய்வம்
இல்லையென வகுத்தல் செய்தான்,
வள்ளிமொழி என்னமுரு கேசன்உளம்
உருக்குகின்ற மாட்சி இந்த
வள்ளிதனை உயர்த்துதிருப் புகழ்க்குள்ள
திதுபோல மற்றொன் றில்லை.

## 1974இல் பாடப்பெற்ற பஃறொடை வெண்பா

34. அருணகிரி நாதர் அவதாரம் என்றித்
தருணமதிற் சொன்னால் தகும்அக் – *கருணைவள்ளல்
ஆறுநா றும்பிறப்பாண் $டீராயி ரத்தையைந்
தீறுகழித் தாங்கிலஆண் டிற்றமக்காம்—பேறு
ஸமாதிக் குருபூஜை வெள்ளிவிழா †ஸம்மாத்
‡தமாதி குரவர் தமக்கொத் – துமாதநயர்க்
கிட்டமதி கார்த்திகையில் ஏய்ந்தஉடு மூலத்திற்
சட்ட உதித்த தகைமைபோல்—¶நட்ட
திருப்புகழ் ஸ்வாமிவள்ளித் தெய்வமண வெற்புக்
குருப்புகழ் ஸச்சிதா நந்தர்—கருப்புகுதா
வள்ளிமலை வள்ளல்வள்ளி பாத இருதயர்எம்
எள்ளில்குரு நாதர்தமை யே.

—அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

( குறிப்பு : *கருணைவள்ளல் - அருணகிரியார். §ஈராயிரத்து ஐஐந்து ஈறு கழித்து = 2000—முடிவில் 25 நீங்க = 1975 ஆம் ஆங்கில ஆண்டு. †ஸம் = வருஷம். ‡தம் ஆதி குரவர் — தமது முதற் குரு. ¶நட்ட = விரும்பிய )

# குரு பூஜை வெள்ளி விழாப் பனுவல்

## (1975இல் பாடப் பெற்றது)

(நேரிசை வெண்பா)

35. வள்ளிமலை வள்ளலே ! மன்னுகுரு பூஜைஇன்ப
வெள்ளிவிழாக் காணும்அன்பு வெள்ளமே !-எள்ளில்அறு
நூறும் ஜயந்திவிழா நோன்பர் அருணகிரி
வேறுவா ரோ?நின்னை விட்டு. 1

36. கார்த்திகைமூ லத்திற் கருவுயிர்த்தார் நும்அன்னைமார்
கார்த்திகே யன்புகழைக் கானத்தால்—ஆர்த்திபெறப்
பாடிப் பரப்பப் பயின்ற அருணகிரீ !
ஈடில்ஸச்சி தாநந்த ஈண்டு. 2

(கருவுயிர்த்தார் - பெற்றெடுத்தார். ஆர்த்தி - ஆசை)

37. வெள்ளி மலைநிகர்த்த வள்ளிமலை மேற்றவத்தால்
வெள்ளிவிழா ஆரா தனைவிரும்பும் - வள்ளியனே !
ஸச்சிதா நந்த ! திருப்புகழ் ஸாமியே !
நச்சிதா நந்தமே ! நல்கு. 3

38. செங்கோட்டில் நீர்தொடர்பு சேரக்கொண் டீர் ! அருணைச்
செங்கோட்டிற் செக்கச் சிவந்தவெற்பாம் - செங்கோட்டில்
வந்தார் அருணகிரி நாதர்அன்று மன்னுபுகழ்
தந்தார்நீர் தாம்பரப்பி னீர் ! 4

(அருணைச் செங்கோடு - அருணாசலமாம் நல்ல மலை - செங்கோடு - அருணகிரி - அண்ணாமலை)

39. ஆரா தனைக்கோர் அரஜதம ஹோத்ஸவம்கொள்
நீரார்? நிகழ்த்தும் அருணகிரி - யாரார்?
ஆரும் பிறந்நூற் றுண்டுவிழா அன்னார்க்கோ
வேறுரும் இல்லைநீ விர். 5

(ரங்கம் - அரங்கம், ரம்பை - அரம்பை என வருவதுபோல், ரஜதம் அரஜதம் என வந்தது. ரஜதம் - வெள்ளி.)

40. அருணைவள்ளல் ஒத்துத்தேள் ஆள்மூலம் தோன்றும்
கருணைவள்ள லே! பாற் கடலே! - தருணைவள்ளி
வெற்பிற் றவம்செய்து வெள்ளிவிழாக் கொண்டாட
அற்பிற் சமாதிகண்டாய் அன்று. 6

(தேள் - கார்த்திகை மாதம், ஆள் - ஆளும்; 'ஆண் மூலம் அரசாளும்' என்பது பழமொழி. தருணை - இளம் பெண்)

—அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

41. திருமருவும் பூநாச்சித் தலத்துதித்துச்
செங்கோட்டுச் செவ்வேள் எந்தை
முருகபிரான் திருவருளால் அருணகிரிப்
பெருந்தகையார் மொழிந்த ஞானம்
பெருகுதிருப் புகழ்முழுதும் இசைகெழுமப்
பாடிஅருள் பெற்று மன்றற்
றிருமலையில் ஸமாதிபெறு ஸச்சிதா
நந்தர்பதம் சிரமேற் கொள்வாம்.

(—'வள்ளிமலை வள்ளல்'—பக்கம் 262லிருந்து)

(அநுபந்தம்—8 முற்றும்)

# பாடல் முதற்குறிப்பு அகராதி

(பாராயணத் திருமுறை, அநுபந்தம்—1, 4, 5, இவற்றிற்கு)

(எண்—பாடல் எண். ப—பக்க எண்)

# கந்தர் அலங்காரம்-முதற்குறிப்பு அகராதி

(எண்—பாடல் எண்)

# கந்தர் அநுபூதி - முதற் குறிப்பு அகராதி

(எண்—பாடல் எண்)

# திருவகுப்புகள்—அட்டவணை

(அடைப்புக் குறிக்குள் உள்ளது பாடலின் தொடக்கம்)

# தலங்களும் பாடல் எண்களும்

(பாராயணத் திருமுறைக்கும், அநுபந்தம்—1க்கும்)

# வள்ளிமலை ஸ்வாமிகள் கையாண்ட ராகங்கள்

**(அநுபந்தம்—1 இல் உள்ள பாடல்களுக்கு)**

**(எண்கள்—பாடல் எண்கள்)**

134. ஹரிகாம்போதி
135. அடாணா
136. ஹரிகாம்போதி
138. ஆரபி & தோடி
139. கல்யாணி
142. பீலு
143. ஆனந்த பைரவி
149. பீலு
151. பூர்வகல்யாணி
152. ஸஹானா
154. அடாணா
159. தன்யாசி
160. சிந்துபைரவி & மோஹநம் அல்லது புன்னாகவராளி & அடாணா
164. இங்கிலீஷ் நோட்
165. ஸஹானா
169. காம்போதி
173. சிந்துபைரவி
179. பிலஹரி
180. தன்யாசி
181. தன்யாசி
182. கரஹரப்ரியா
183. கேதாரகௌளம்
184. தோடி
185. பீலு
186. முகாரி & மோஹநம்
187. தன்யாசி
188. ஹம்ஸத்வநி
189. தன்யாசி
190. சிந்துபைரவி
191. புன்னாகவராளி
193. மோஹநம்
195. கமாஸ்
199. யதுகுலகாம்போதி
203. புன்னாகவராளி
204. ஆரபி
205. பீலு
207. காம்போதி
211. நவரோஸ்
220. கரஹரப்ரியா
224. செஞ்சுருட்டி
225. ஆனந்தபைரவி
231. ஹரிகாம்போதி
234. காம்போதி
236. காம்போதி
240. பீலு & அடாணா
242. பீலு
245. யதுகுலகாம்போதி
246. கரஹரப்ரியா
248. பூர்வகல்யாணி
249. காம்போதி
255. சிந்துபைரவி
256. புன்னாகவராளி
258. காவடிச்சிந்து
259. மோஹநம்
263. யமுனா கல்யாணி

265. ஹரிகாம்போதி
266. காம்போதி
268. காம்போதி
277. சிந்துபைரவி
281. தன்யாசி
282. பூர்வகல்யாணி
288. பீலு
293. உசேனி
296. நவரோஸ்
297. காம்போதி
304. ஹம்ஸத்வனி
310. புன்னாகவராளி
313. சாமா
314. பீலு
315. பீலு
316. காம்போதி
317. காவடிச்சிந்து
326. ஸஹானா
327. ஆரபி
330. காவடிச்சிந்து
333. மோஹனம்
335. பீலு
337. பூர்வகல்யாணி
340. மத்யமாவதி
342. காம்போதி
346. பீலு

---

# பிழை—திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 181 | 15 | தாகையை | தாக்கையை |
| ,, | 17 | பூடடிது | பூட்டிது |
| ,, | 23 | வந்த ளுவம் | வந்தாளுவம் |
| 187 | 29 | சே ம் | சேரும் |
| 197 | 3 | கொத்தளபாரை | கொந்தள பாரை |
| ,, | 4 | கெரடி கற்ெண் | கொடி கற்கண் |
| 198 | 22 | பொளுடன் | பொருளுடன் |
| 199 | 21 | சபலம் அறம் | சபலம் அற |
| ,, | 27 | ஓதுசரியை | ஓது சரியை |
| 204 | 10 | உதரில் | உதறில் |
| 205 | 27 | க்ருமைமுகில் | க்ருபைமுகில் |
| 209 | 23 | திகுக்காளத்தி | திருக்காளத்தி |
| ,, | 30 | தேன் நர | கோர்நர |
| 211 | 20 | தம்பிராேன் | தம்பிரானே |
| 212 | 21 | தக்த | தத்த |
| ,, | 24 | முண்ட்கர | முண்டகர |
| 213 | 11 | உருவாசி | உருவாகி |
| 215 | 6 | பரகுான | பரஞான |
| 216 | 13 | புரு வுனுஞ் | புருவெனுஞ் |
| ,, | 17 | செய்பேர் | செம்பேர் |
| ,, | 18 | சலனச பொன் | சலனசம்பொன் |
| ,, | 20 | புகல ல | புகலல் |
| ,, | 22 | சிலமபும் | சிலம்பும் |
| ,, | 23 | தாவரங்கம் | தாள்ரங்கம் |
| ,, | 27 | பொடியணந் | பொடிய ணிந் |
| 217 | 8 | டிண்டென்டே | டிண்டென்றே |
| 218 | 4 | இதழன் | இதழின் |
| ,, | 8 | அதசயம | அதிசயம் |
| ,, | 10 | மிட டைய | மிடறுடைய |
| ,, | 13 | இடர் விகள | இடர்கவிகள் |
| ,, | 14 | பாதனுடன | பாதனுடன் |
| ,, | 31 | உளத்டியார் | உனத்டியார் |
| 219 | 9 | புஜனே | பூஜனை |
| 220 | 14 | வடிவேல் | வடிவேல் |
| 221 | 7 | மலர்ப் பொழிற் | மலர்ப் பொழிற் |
| 222 | 14 | கொண்டலும் | கொண்டலும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 222 | 15 | கம்புவும் | சம்புவும் |
| ,, | 19 | திங் ளுங் | திங்களுங் |
| ,, | 20 | செம்லைபயுந | செம்பையுந் |
| ,, | 26 | ஒன்றிலுஞ் | ஒன்றிலுஞ் |
| 223 | 9 | தோமவன | தோழவன |
| ,, | 26 | துயற்ஆர | துயர்ஆற |
| 224 | 14 | கொம்பு டாவி | கொம்புகடாவி |
| ,, | 26 | சில பலம்ப | சிலம்பலம்ப |
| 225 | 4 | செம்பதம | செம்பதம் |
| ,, | 8 | அம் கொண்டு | அம்பு கொண்டு |
| ,, | 16 | தனத்தான | தந்ததான |
| ,, | 32 | தெரிசிறது | தெரிகிறது |
| 226 | 9 | சொரூபப் | சொருபப் |
| ,, | 19 | குமர பிர | குமரப்பிர |
| ,, | 21 | ஒற்றியூர் | ஒற்றியுர் |
| ,, | 23 | தி ழுற்றிடு | திகழுற்றிடு |
| 227 | 4 | ஏற்கும | ஏற்கும் |
| 227 | 18 | மேறபுனே | மேற்புனே |
| 228 | 17 | ப யோகத்தகுள் | பரயோகத்தருள் |
| 260 | 24 | பிணிமுடி | பிணிமூடி |
| 277 | 17 | பூதலம | பூதலம் |
| 280 | 8 | நாட்றியும | நாடறியும் |
| 325 | 26 | கிண்கீணி | கிண்கிணீ |
| 340 | 22 | கூடுத் | கூடும் |

# Certificate of Registration of Societies

**Act. XXI of 1860—S. No. 6 of 1953.**

**I hereby certify that "SRI VALLIMALAI SWAMI SATCHIDHANANDA THIRUPPUGAZH SABHA, has this day been registered under Societies Registration Act XXI of 1860.**

**Given under my hand at Madras this twentieth day of February, One Thousand Nine Hundred and Fifty Three.**

**(*Sd*). M. H. IQBAL.**
**Asst. Registrar of Joint Stock Companies,**
***Chingleput District.***